ஸ்ரீ வில்லிபுத்தூர் தேவஸ்தான வெளியீடு

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# வில்லிபுத்தூர் விளக்கு

ஆசிரியர்:
சென்னை ஸ்ரீ வைணவப் பெண்கள் சங்கத்தின்
தலைவியாரும், முன்னைய மகளிர் இல்லத் தலைவியாரும்,
சென்னை லேடி வில்லிங்டன் போதனாமுறைக் கல்லூரித்
தலைமைத் தமிழ் ஆசிரியருமாகிய
தமிழ் மூதாட்டியார்
**பண்டிதை எஸ். கிருஷ்ணவேணியம்மையார்**



**ஸ்ரீ வில்லிபுத்தூர் தேவஸ்தானம் ட்ரஸ்ட் போர்டார் சார்பில்**
எக்ஸிகியூட்டிவ் ஆபீஸர்
**ஸ்ரீ பி. சுப்பையா பிள்ளை** அவர்களால்
வெளியிடப்பட்டது.



1959

[விலை ரூ.

# முன்னுரை

இறைவன் அன்பில் தாமும் ஆழ்ந்து பிறரையும் ஆழச் செய்த ஆழ்வார் பன்னிருவர். அவருள் நம் ஆண்டாளும் ஒருவராவர். இப்பெருமாட்டியார் கண்ணன் காதலையே உருவெனக்கொண்டவர்; அவன் நிழற்படத்தை உலகினர்க்குப் பாசுரங்களால் தீட்டிக் காட்டியவர்; பிறர் நலத்தையே பேணி நின்றவர். இவர் வாழ்க்கையிலும், நூல்களிலும் பல பொற்றுகள்களும், மணிகளும், முத்துகளும் மிளிர்கின்றன. ஆயினும், பரந்த ஞானம் வாய்ந்த அறிஞரே, நம் அன்னையார் வாழ்க்கையையும், நூல்களையும் நுணுகி நோக்குதற்கும், அவற்றை ஆய்ந்தெழுதுதற்கும் தகுதி வாய்ந்தவராவர். அடியாளைப் போன்றோர் இச்செயலிற்குச் சிறிதும் அருகரல்லர். ஆனல், மக்கட்கு அறிவு அளவுபட்டதாயிருப்பினும், ஆர்வம் என்பதொன்றுளதன்றோ? அஃது அவர்களை எத்துணை அரிய காரியத்திலும் நுழையச்செய்தல் இயல்புதானே! அக்கோட்பாட்டைத்தான் அறிஞர் அடியாளிடத்தும் கொள்ளல் வேண்டும். இது நிற்க.

இவ்வன்னையாரிடம் கொண்ட அன்பு, இவர் சிறப்பியல்புகளைச் சில நூல்கள் வாயிலாக வெளியிடுமாறு அடியாளைத் தூண்டிற்று. 1933-ஆம் ஆண்டு கோதையார் என்னும் ஒரு சிறு நூல் எழுத வாய்ப்புக் கிடைத்தது. அது மூன்றும் படிவ மாணவர்க்குப் பாடமாக வைக்கப்பட்டது. 1936, 37-ஆம் ஆண்டுகளில் 'நவசக்தி' என்னும் இதழில் இவரைக் குறித்த சில பொருள்களை வெளியிட்டிருந்தேன். அவற்றை நோக்கிய 'நவ சக்தி' ஆசிரியர், சகோதரர், திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள், ஆண்டாளைக் குறித்த ஆராய்ச்சி

நூல் எழுதுமாறு என்னை அடிக்கடி தூண்டிக்கொண்டே இருந்தார்கள். ஆயினும், 1944-ஆம் ஆண்டே இவ்வரிய தொண்டில் சிறிது நுழைதற்கு ஆண்டாள் கண்ணருள் அலர்ந்தது. அம்முறையில் அவ்வமயம் வெளியிட்ட 'பெரியாழ்வார் பெண் கோடி'[1] என்னும் அந்நூலிலேயே, 'திருப்பாவை, நாய்ச்சியார் திருமொழி' ஆகிய இரண்டிலுமுள்ள அரும்பொருள்கள் பலவற்றையும் அடியாள் புல்லறிவிற்கேற்ப ஆராய்ந்து வெளியிட வேண்டும் என்னும் ஆர்வம் மிகுந்தது. இவ்வார்வம் ஒரு சிறு பூசை பாற்கடல் முற்றும் பருகிவிட நினைத்ததற்கே ஒப்பாயிற்று. தோண்டத்தோண்ட நீர் ஊறும் மணற்கேணி போன்று, அன்னையாரின் பாக்களை நோக்க நோக்கச் சில அரும்பொருள் தோன்றிக்கொண்டேயிருந்தன. யாவும் உயரிய தத்துவங்களாகவும், இலக்கியச் செறிவுடையனவாகவுமே காணப்பட்டன. ஆராய்ச்சி சிறிதுமற்ற அடியாளுக்கே இங்ஙனமாயின், அவற்றில் வல்லுநரான பேரறிஞருக்கு நம் அன்னையாரின் நூல்கள் எத்தனை நுட்பப் பொருள்களைப் புலப்படுத்துமோ அறியேன்! இது நிற்க.

அடியாளுக்குப் புலப்பட்ட சில பொருள்களையும் அவ்வமயமே வெளியிடுதற்கு அக்காலத்திருந்த காகிதப் பஞ்சம் இடந்தராமற்போயிற்று. ஆதலின், காலமும் காகிதமும் கூடுமேல் பாமாலை பாடிக்கொடுத்த பாவையார் நூல்களில் பொதிந்துள்ள வைணவத் தத்துவங்களையும், இலக்கியச் சிறப்புகளையும் இயன்ற மட்டும் வெளியிட வேண்டும் என்னும் எண்ணம் தோன்றிற்று.

1. இந்நூல் 1949-ஆம் ஆண்டு இன்றர் (F. A.) வகுப்பிற்குத் துணைப்பாடமாய் வைக்கப்பட்டது.

இவ்வெண்ணம் சில ஆண்டுகளாகத் தொழில் புரியத் தொடங்கியமையின், இருபத்தாறு தலைப்புகளோடுங் கூடிய 'அருளொளி' என்னும் ஒரு நூலும், பதினான்கு தலைப்புகளோடுங் கூடிய 'வில்லிபுத்தூர் விளக்கு' என்னும் ஒரு நூலும் முகிழ்த்தெழுந்தன. இவ்விரண்டனுள் 'வில்லிபுத்தூர் விளக்கு' என்னும் இந்நூலை, இந்து அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையாளர் திருவாளர் உத்தண்டராமப் பிள்ளையவர்கள் பேரன்பினாலும், மிக்க தூண்டுதலினாலும் ஸ்ரீ வில்லிபுத்தூர் நாய்ச்சியார் தேவஸ்தான அங்கத்தினர் மிக்க கருணையுடன் அச்சேற்றி வெளியிட முன் வந்தனர். இவர்களுக்கு நாய்ச்சியார் பல நலன்களை அளிக்க வேண்டுமென அன்னையார் அடியை இறைஞ்சுகின்றேன்.

இந்நூலை அடியாள் ஆசிரியர்கள் திருவடிகளுக்குக் காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேன்.

இதை அச்சேற்றுங்கால், பிழைகள் ஏற்படா வண்ணம் கருத்தூன்றி நோக்கி நூலை முற்றுப்பெறச் செய்த சகோதரர் மகாவித்துவான் மே. வீ. வேணு கோபாலப் பிள்ளை அவர்கள் உதவி என்றும் மறக்கற்பாலதன்று.

என் விருப்பிற்கேற்பப் பிழையின்றியும் விரைவிலும் அச்சேற்றித்தந்த லிபர்ட்டி அச்சகத்தாருக்கும் என் நன்றி உரித்தாகுக.

சென்னை,
14—3—1959

எஸ். கிருஷ்ணவேணி

## ஆண்டாளின் உயர்நிலை



## புருஷகாரத்தின் பொறுப்பு



## பாவனை



## ஆண்டாளும் அகப்பொருள் நூல்களும்

## நூலின் சிறப்பு



## திருப்பாவை



## நாய்ச்சியார் திருமொழி



## ஆண்டாளுக்கும் ஆசார்யர்களுக்கும் உள்ள தொடர்பு

# தோற்றுவாய்

திருவும், அறிவும், செப்பமும், செழுமையும் மிக்குத் திகழ்ந்த தமிழ் நாட்டின் சீர்மை ஞானிகளாலும் எடுத்துரைக்கும் இயல்புடையதன்று. உலகில் மக்கள் பெற விரும்பும் பயன்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கென்பர். இந்நான்கினையும் ஒருவர் குறைவற அடைதற்கு ஊற்றுக்களனாகத் திகழ்வது நம் தமிழ் நாடே. இதற்குக் காரணம், இங்கு அப்போதைக்கப் போது அறிஞர்களும் பத்தர்களும் தோன்றித் தங்கள் வாழ்க்கையில் செம்மை நெறிகளைக் கடைப்பிடித்தொழுகியதும், இவற்றைத் தம் காலத்தவருக்குப் போதித்ததும், பின்புள்ளாரும் அறிந்து நற்பேற்றை அடையுமாறு இவற்றை நூல்களில் பொறித்து வைத்ததுமேயாகும். இவை சின்னாட்கள் நிலவி அற்பப் பயன்களை ஈந்து அழியக் கூடிய பொருட்செல்வத்தைப் போன்றன அல்லவே! என்றும் நிலைத்து நின்று மக்கட்கு அழியாப் பயனை ஈயக்கூடிய பெருநிதிகளல்லவா இவை! இவற்றுள பல கடலாலும், பகைவராலும், கறையான் முதலியவற்றாலும் விழுங்கப்படினும், மக்கள் வாழ்க்கையை மாண்புறச் செய்தற்கு எஞ்சி நின்ற சிலவே போதியனவாகும். இவற்றுள் நீதி நூல்களும், வரலாற்று நூல்களும் பல உண்டு. இவற்றிற்கெல்லாம் தலைமையுற்று விளங்குவன இறை அன்பை ஊட்டும் பத்தி நூல்களே. உலகச் சூழலில் சுழன்றுகொண்டிருக்கும் ஒருவருக்கு அமைதியையும் ஆனந்தத்தையும் அளித்தற்கு இவற்றினும் உயரியது வேறொன்றுமிலது. இத்தகைய பெருநிதிகளை நமக்கு அளித்துச் சென்றவர்கள் ஆசாரியர்களும் ஆழ்வார்களுமே

ஆவார்கள். இச்சான்றோர் தமிழ் நாட்டையே தமக்குப் பிறப்பிடமாய்க்கொண்டு வாழ்ந்தனர்.

இத்தகைய தமிழ் நாட்டில், நூலின் முதலில் இயம்பிய பல நலங்களுக்கும் இருப்பிடமாய்த் திகழ்ந்த ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வார் என்னும் பெரியார் வதிந்து வந்தார்; எல்லை கடந்த பிரேமத்தால் திருமாலுக்கு மங்களாசாசனஞ் செய்தமையின், அவர் இப்பெயரைப் பெற்றார். அத்தகையோருக்கு நிலமகளார், புதல்வியாராய் அவதரித்து, 'கோதையார்' என்னும் திருநாமம் தாங்கி வளர்ந்து வந்தார்; இவர், தம் ஞானத்தினால் வேயர் குலத்தையும், பத்தியினால் பெரியாழ்வாரையும், வைராக்கியத்தினால் வில்லிபுத்தூரையும் விளங்க வைத்தமையின், குலத்தையும் ஆழ்வாரையும் தம்முட்கொண்டுள்ள சிறப்புடைமையினால் 'வில்லிபுத்தூர் விளக்கு' என்னும் திருநாமத்தை இந்நூலில் ஏற்று நிற்கின்றார்.

இந்நூல், கோதையார் இளமைப் பருவத்தின் இன்னலம், மங்கைப் பருவத்தில் மேற்கொண்ட அரிய செயல்கள், இறைவன் காதல், சீர்திருத்தம், அர்ச்சையில் கொண்ட ஆதரம், தம் உயரிய நிலையைக் காட்டும் அன்பு நிலை, அருட்டன்மை, சான்றோரிடம் கொண்டதொடர்பு, அடியார் தொண்டு, புருஷகாரம், பாவனை, அகப்பொருளின் கருத்துகளையும் ஓவியங்களையும் தம் நூல்களில் அமைத்துக் காட்டிய அடைவு, திருப்பாவையின் சீர்மை, திருமொழியின் தெய்வத்தன்மை, ஆண்டாளுக்கும் ஆசாரியர்களுக்கும் உள்ள தொடர்பு ஆகியவற்றைத் தெள்ளிதின் தெரிவிக்கும் பதினான்கு பகுதிகளைத் தன்னுள் கொண்டுள்ளது.

நம் அன்னையாரின் அருளிச்செயல்கள், அறியாமையைப் போக்கி, இறையன்பை ஊட்டுதற்கு ஞான விளக்

காகவும், பிறவிக்கடலை நீந்துதற்குத் தெப்பமாகவும், தமிழிலக்கணங்களுக்கு இலக்கியமாகவும், சமயக்கோட்பாடுகளை வரையறுத்தற்குத் துலாக்கோலாகவும், சங்க நூல்களின் சிறப்புகளை எடுத்துக் காட்டுதற்குத் திறவுகோலாகவும், வைணவத் தத்துவங்களைப் பரப்புதற்கு வாசகமாகவும், தீவினைகளைத் துரத்துதற்குத் தினகரனாகவும், பரமனடியைக் காட்டுதற்குப் படிகளாகவும் உள்ளன.

இத்தகைய அருட்கவிகளின் சீர்மையை யாவரும் அறிந்து இன்புறவேண்டுமென்னும் ஆர்வத்தினால் இந்நூலை இயன்ற மட்டும் எளிய நடையில் வெளியிட அடியாள் முன் வந்ததேயன்றி, நிரம்பிய ஞானத்தாலன்று. இச்சிறு ஆராய்ச்சியும் ஆண்டாள் அருளினால் உருக்கொண்டெழுந்ததாகும். இன்றேல், அடியாள் புல்லறிவிற்கு ஒரு சிறு பொருளும் புலப்பட்டிராது என்பது ஒருதலை. ஆதலின், அடியாளது அறியாமையினால் நேர்ந்திருக்கும் குற்றங்களை அடியாள்பாலாக்கி, குணங்களை ஆண்டாள்பாலாக்கக்கோருகிறேன். இதற்குத் துணை புரிந்த ஆசாரியர்களின் இன்னருள் ஓங்குவதாக.

எஸ். கிருஷ்ணவேணி

இந்து அறநிலையப் பாதுகாப்புத்துறை

ஆணையாளர் - திருவாளர்

உத்தண்டராமப் பிள்ளையவர்கள்

# பாராட்டுரை

## வில்லிபுத்தூர் விளக்கு

"கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடம் தோன்றுமூர்—நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோனூர்"

என்னும் பெருமையுடையது ஸ்ரீ வில்லிபுத்தூர் எனவழங்கும் திருப்பதி. மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் பன்னிருவருள் விஷ்ணு சித்தர் என்ற பெரியாழ்வாரும், அவரால் நந்தவனத்தில் திருத்துழாய்ப் பாத்தியில் கண்டெடுத்து வளர்க்கப் பெற்ற ஆண்டாளும் அவதரித்து வாழ்ந்த திருப்பதி. மல்லிவள நாட்டில் அரசு செலுத்தியும், மறவர் குலதிலகமாய் விளங்கியும் புகழ்பெற்ற வில்லி என்பவனால் புதுப்பிக்கப் பெற்றதால் வில்லிபுத்தூர் என்றும், திருவின் பொலிவால் ஸ்ரீ வில்லிபுத்தூர் என்றும் வழங்கும் இத்திருப்பதி 108 திவ்ய தேசங்களுள் தனிச் சிறப்புடையது.

இங்குப் பூமிப்பிராட்டியின் அவதாரமாய் விளங்கும் ஆண்டாள், அவரை ஈர்த்தாட்கொண்ட அரங்கமன்னார், பெரிய திருவடியென விளங்கும் கருடாழ்வார் மூவரும்

"ஞானச் சுடர்விளக்காய் நின்ருய் நீயே"

என்பது அப்பர் அருள் வாக்கு.

நாரணர்க்கு 'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக இன்புருகு சிந்தை யிடுதிரியா—என்புருகி ஞானச் சுடர் விளக்கேற்றினேர்' ஞானத்தமிழ்புரிந்த பூதத்தாழ்வார். ஆண்டாளோ, தாமே ஒரு ஞானச் சுடர்விளக்காய் நின்று நமக்கு மெய்ப்பொருளைக் காட்டும் பேரொளியாய்த் திகழ்ந்தார்.

"அருள்ஒளி விளங்கிட ஆணவம் எனுமோர்
இருளற என்னுளத் தேற்றிய விளக்கே!
துன்புறு தத்துவத் துரிசெலா நீக்கிநல்
இன்புற என்னுளத் தேற்றிய விளக்கே!
மயலற அழியா வாழ்வு மேன்மேலும்
இயலுற என்னுளத் தேற்றிய விளக்கே!"

என்ற திருவருட்பாவின் முழு உணர்வைப் பெறவைக்கும் தன்மையில், இந்நூலாசிரியர் 'வில்லிபுத்தூர் விளக்கு' என்ற இவ்வாராய்ச்சி நூலில் தெள்ளிய நடையில் அரிய உண்மைகளை விளக்கமாக எழுதியுள்ளனர். பண்டிதை எஸ். கிருஷ்ணவேணியம்மையார் தம் வாழ்நாள் முழுதும் இறைபணிக்கே அர்ப்பணித்துத் தம் அறிவின் பயனைத் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற அருள் நோக்குடன் எழுதியுள்ள நூல்கள் ஆஸ்திக உலகுக்கு மிக்க பயனளிப்பவை. அவ்வம்மையாருக்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

"நயனுடைய நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு"

என்றபடி அவர்களைப் பாராட்டி நன்றி தெரிவித்துக் கொள்வதல்லால்,

"கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்டு
என்னாற்றும் கொல்லோ உலகு"

என்றாற்போல அவர்களுக்கு நாம் செய்யும் கைம்மாறு வேறொன்றும் இல்லையாயினும், அவர்கள் நூலைக் கற்றுப் பயன் பெறுவோமாக.

"மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே!
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே!"

அ. உத்தண்டராமன்.

ஸ்ரீ :

# வில்லிபுத்தூர் விளக்கு

## தனியன்கள்

"அல்லிநாள் தாமரைமேல் ஆரணங்கின் இன்துணைவி
மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள்
ஆயர் குலவேந்தன் ஆகத்தாள் தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு."

"கோலச் சுரிசங்கை மாயன்செவ் வாயின் குணம் வினவும்
சீலத் தனள், தென் திருமல்லி நாடி, செழுங்குழல்மேல்
மாலைத் தொடைதென் னரங்கருக் கீயும் மதிப்புடைய
சோலைக் கிளி, அவள் தூயநற் பாதம் துணைநமக்கே."
[திருக்கண்ண மங்கையாண்டான்]

## காப்பு

கோதையார் மாயவனைக் கூடியநற் பண்புரைக்க
ஏதமிலெம் ஆரியர்கள் இன்னடியும்—ஆதரவாப்
பன்னிருவர் தாள்மலரும் பற்றுகிறேன் குற்றமறப்
பன்னவருள் கூர்ந்திடவென் பால்.
எளியவர்க் குண்டியோ ஏழைக் கறிவோ
அளியுட னீதற்கிங் காற்றல்—துளியுமிலேன்;
செம்மைசேர் நல்லார்சீர் செப்புநல மொன்றேனும்
இம்மையில் வாய்க்க எனக்கு.

**வில்லிபுத்தூர் விளக்கு** என்னும் இத்தலைப்பு இரு சொற்களைக் கொண்ட ஒரு சொற்றொடராகும். எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திவ்விய

க்ஷேத்திரங்கட்கு, வடமொழியில் ஸ்ரீ என்றும், தமிழ் மொழியில் திரு என்றும் மங்களமான அடைமொழிகளைச் சேர்த்துச் சொல்லும் வழக்கின்படி வில்லிபுத்தூர் என்பது ஸ்ரீவில்லிபுத்தூர் என வழங்கப்படுகின்றது.

## 1. வில்லிபுத்தூர்

வில்லிபுத்தூர் என்பதை நோக்குவாம்: செந்தமிழ் தழைத்தோங்கிய பாண்டி நாட்டின் சிறப்பை அறியாதார் யார்? முச்சங்கத்தையும் ஈன்று உகந்த தாயன்றோ அது! அந்நாடு, புலமையும் செல்வமும் வாய்ந்த பாண்டியர் பலரையும் வளர்த்த செவிலி எனில், வரும் குற்றம் யாது? புலமைச் செல்வியர் பலரையும் பெற்று இன்புறும் பெரும்பேற்றை அந் நாட்டுத்தாயே பெற்றனள். அறிவறிந்த இருபாலாரையும் ஈன்று இன்ப வெள்ளத்தில் திளைத்திருந்த அத்தாயை வேறு யாருக்கு ஒப்பிடக்கூடும்!

அத்தகைய நாட்டின்கண் தெய்வத்தன்மை வாய்ந்த ஸ்ரீ வில்லிபுத்தூர் என்னும் ஓர் ஊர் உண்டு. வேடுவன் **வில்லி** என்பான், அதைப் புதிதாகக் கண்டமையின், அதற்கு இப்பெயர் அமைந்தது. அது செல்வத்திற்கு இருப்பிடமெனத் திகழ்ந்தது; உயர் மாடமாளிகைகளால் பொலிவுற்றது. தமிழ் மறையும், வடமொழி வேதமும் கற்றுத்துறைபோயவர் அவண் வதிந்து வந்தனர். இப்பெருமிதங்களை,

"பொருப்பன்ன மாடம் பொலிந்து தோன்றும் புதுவை"[1]
"பொன்னியல் மாடங்கள் சூழ்ந்த புதுவை"[2]

---

1. நாச்சியார் திருமொழி—1:10 2. ஷை 3:10.

"வேதவாய்த் தொழிலார்கள் வாழ்வில்லி புத்தூர்"[1]

என்னும் ஆண்டாள் திருவாக்கால் அறியலாம்.

அவ்வூரார் பத்தியே உருக்கொண்டவரெனக் காணப்பட்டனர். அந்நகரத்தின் பரப்பும் சன்னிதானத்தின் அழகமைப்பும் காண்போர் மனத்தைக் கவராநிற்கும். மக்கள் மனத்துன்பத்தை அகற்ற அஃதொரு புகலிடமெனப் பகரலாம். இதைக் குறித்துத்தான், அவணுள்ள நீர் நிலை (தடாகம்) திருப்பாற்கடல் எனப் பெயர் பெற்றது போலும்! சன்னிதியில் மணமகன் போன்று வீற்றிருக்கும் அரங்கமன்னரின் கம்பீரமும், மனத்திற்கிசைந்த மணமகனை வாய்க்கப் பெற்ற புதுப்பெண்போன்று அளப்பரிய ஆனந்தம் முகத்தில் தவழ எழுந்தருளி இருக்கும் ஆண்டாளின் அழகும் கண் கொள்ளாக் காட்சியாகும்.

இங்ஙனம் இருவரும் வீற்றிருக்கும் ஆசனத்திலேயே பெரிய திருவடியும் (கருடன்) அமர்ந்துள்ளான். இவ்வமைவு எதைக் குறிக்கிறது? எல்லாத் தத்துவங்களையும் தன்னுள் பொதிந்துகொண்டிருக்கும் பிரணவத்தையே குறிக்கின்றது. பிரணவத்தில் உருத்தோன்றாது மறைந்துறையும் அகர உகர மகரங்களின் பொருளாகும் மூவரையும் (இறைவன், பிராட்டி, சேதனன்) ஒரே இடத்தில் நிறுத்தி யாவருக்கும் கட்புலனாகுமாறு காட்சி அளியாநிற்கும் பெருமை என்னே!

இன்றும் நாச்சியாரும் பெரியாழ்வாரும் வடபெருங்கோயிலுடையானும் கலந்து வாழும் அவ்வூர்

1. நாச்சியார் திருமொழி, 2:10.

பொன்னும், முத்தும், மாணிக்கமும் பதித்துச் செய்த அணிக்கு நிகராய் ஒளிர்கிறது. இதை,

"குறித்தொருவர் கொண்டாடும் கொள்கைத்தோ கோதை
நிறத்தலூர் விண்டுசித்தர் நீடூர்—பிறப்பிலியூர்
தாழ்வில்லி புத்தூர்என் றைவர்க்குத் தானிரந்தான்
வாழ்வில்லி புத்தூர் வளம்!"[1]

எனப் புகழ்கின்றார் திவ்வியகவி பிள்ளைப்பெருமாளையங்கார்.

அஃதன்றியும், ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்திற்கே அணியென மிளிர்கின்றது. இதன் சீர்மையையும், மேன்மையையும் உணராத வைணவர் இலரெனவே கூறலாம். மின்னனைய நுண்ணிடையார் கூந்தலில் நுழைந்த வண்டு இசை பாடும் வில்லிபுத்தூர்[2] என்று பெரியாழ்வாரும், அழகிய நடையுள்ள அன்னங்கள் எங்கும் சூழ்ந்து விளையாடும் வில்லிபுத்தூர்[3] என்று ஆண்டாளும் சிறப்பித்துக் கூறுவதைக் காண்க.

## 2. விளக்கு

விளக்கின் சிறப்பென்னை? தன்னையும் தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களையும் நன்கு தெளித்துக்

---

1. நூற்றெட்டுத்திருப்பதி அந்தாதி, 108
2. "மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு, இன்னிசைக்கும் வில்லிபுத்தூர்"
—பெரியாழ்வார் திருமொழி, 2:2:5
3. "மென்னடை அன்னம் பரந்து விளையாடும் வில்லி புத்தூர்"
—நாச்சியார் திருமொழி, 5:5

காட்டும் சீர்மையன்றே! ஆதித்தன், வெண்ணிலா, உடுக்கள் ஆகியவைகளும் விளக்கினத்தைச் சார்ந்தனவே. இவை இன்றேல், உலகியலே நடைபெருதொழியும். ஆயினும், இவை புறவிருளைப்போக்குமே அல்லாமல், அக இருளை அகற்றுதல் இல்லை. இ∴து அகன்ருலல்லவா, ஒருவர் நன்மை தீமைகளைப் பகுத்தறிந்து செவ்வனே வாழ்க்கை நடத்த இயலும்? அவர் வாழ்க்கைதானே மற்றவருக்கு வழி காட்டி, அவரையும் நல்வழிப்படுமாறு செய்யும்? மக்கள் பிறவிக்கு மாண்பளிப்பதும் அ∴தேயன்றே? இன்றேல், மானிடப் பிறவியினுல் பெறும் பயன் தான் யாது? ஆதலின், அவ்விருளைப் போக்கி விளக்கந் தருவது எ∴தோ, அ∴தே உண்மை விளக்காகும். அவ்வுண்மை விளக்கை அறிவு என்பர் அறிஞர். இவ்வறிவு ஒருவருக்குக் கல்வி கேள்வி அனுபவங்களினுல் அமையலாம். அறிவைச் செல்வம் என்பது வழக்கு. பொருட்செல்வம், கல்விச் செல்வம், அறிவுச் செல்வம் முதலிய செல்வங்கள் சிலவற்றுள் அறிவுச் செல்வம் மிகச் சிறந்ததாகும். வேறெந்தப் பொருளை அடையாதவரும் அறிவொன்றை மட்டும் பெற்றிருப்பினும், அவர் எல்லாவற்றையும் பெற்றவரேயாவர்.[1] இவ்வறிவு, மக்கட்குப் பிறப்புண்மை, வீடுபேற்றுண்மை, இவற்றிற்குரிய காரணங்கள் ஆகியவற்றை ஐயமற உணரச் செய்கிறது. இதைத்தான் மெய்யுணர்வு

---

1. அறிவுடையார் எல்லா முடையார்; அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.

— திருக்குறள், அறிவுடைமை 10

என்பர். இது வடமொழியில் தத்துவஞானம் எனப்படுகிறது. இதனுல், ஏற்படும் நலங்கள் பலப்பல. நல்லாசிரியர்பால் உயரிய பொருள்களை நன்கு கேட்டுத் தெளிந்து, அதனுல் உண்மைப் பொருள் இன்னது என்பதை உணர்ந்தவர், மீண்டும் இவ்வுலகிற்கு வாராத உயர்ந்த வழியை அடைவர் என்பது திண்ணம்.[1]

இத்தகைய மெய்யறிவைக்காட்டிலும் உயர் பொருள் எது? இதைப் பெறுதற்பொருட்டுத் தானே, தவசிகள், ஞானிகள் முதலியோர் தம் உடலையும் அறிவையுங் கொண்டு பெரிதும் முயல்கின்றனர்? ஒருவருக்குச் செல்வமும், கல்வியும், உடல் நலமும், பொது அறிவும் இருப்பினும், அறிய வேண்டுவன அறிதற்காகிய மெய்யறிவு இன்றேல், யாது பயன்? அவர் உயரிய மனிதப் பிறவியைப் பெற்றும் நலன் என்ன? அவர் துய்க்கும் இன்பந்தான் அழிவற்ற உண்மை இன்பமாகுமா? அதைத் தோன்றி மறையும் போலி இன்பமெனத்தானே கொள்ளல் வேண்டும்? இம்மெய்யுணர்வு, இவ்வுலகத் தொடர்புற்ற பொருள்களின் செயல் நிலைகளையும், அவ்வுலகத் தொடர்புற்ற பொருள்களின் செயல் இயல்புகளையும் தெள்ளத்தெளித்துக் காட்டுவதனுல், இதை எல்லாப் பொருள்களையும் விளக்கமுறத் தோன்றச் செய்யும் விளக்கு எனக் கூறுதல் பொருத்தமுடையதன்றே?

---

1. "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி."

—திருக்குறள், மெய்யுணர்தல், 5

## 3. அணி விளக்கு

முன் குறிப்பித்த தத்துவஞானத்தை மக்கட்கு உணர்த்தி, அவர்கட்கு ஆன்ம உய்வை உண்டாக்கத் தோன்றிய ஆண்டாளை விளக்கு எனத் **திருக்கண்ணமங்கையாண்டான்** உருவகப்படுத்தியதில் குற்றம் யாது? இஃது இலக்கணையாகும். இது நிற்க. நம் ஆண்டாளோ, மறங்களைத் தொலைத்து அறங்களை நிலைநிறுத்த வந்த கண்ணனை 'ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கு' என்கிருர். வேயர் (அந்தணர்) குலத்துதித்த ஆண்டாளுக்கு, ஆயர் (இடையர்) குலத்துதித்த கண்ணன் மாட்டுக் கருத்துச் செல்கிறது. அச்சோதி, ஒளி வாய்ந்த இவர் மனத்தையும் கவர்ந்துகொள்கிறது. அது தமக்கு அப்போதைக்கப்போது சிறிது வெம்மையை (ஆற்ருமையை) உண்டாக்கினும், அதனுடைய வனப்பு, வீரம், மேன்மை முதலியன அதையும் பொருட்படுத்தாமல், விளக்கை விட்டு அகலா விட்டில் போன்று, அதையே சூழ்ந்து நிற்குமாறு செய்துவிடுகிறது. அவ்வொளிப்பிழம்பின் சீர்மை தவிர, அதன் குலமோ, குறும்போ, கொடுமையோ இவர் மனத்திற்கும் கண்ணிற்கும் புலப்பட்டில. ஆதலின், இவர் நெஞ்சம் அதையே நாடுகிறது! அதை அடையவே முயல்கிறது! அப்போதைக்கப்போது அதை அடைந்தே இன்புறுகிறது! அவ்வின்பக்காலத்தில் முன்னடைந்த துன்பத்தின் சுவடும் மனத்தினின்று மறைகிறது! அக்கால் மனம் அவனோடு சேர்ந்திருந்தே ஆனந்தமடைய ஆர்வங்கொள்கிறது! அவ்வார்வத்திற்கேற்ப செயல்

புரிகிறது. கற்ருேரைக் கற்ருேரும், சான்ருேரைச் சான்ருேரும், ஞானிகளே ஞானிகளும் நாடுதல் போன்று, விளக்கை விளக்கு விரும்புதல் இயல்பு தானே! விட்டில், விளக்கை அணுகி அணுகி இறுதியில் அதனுடன் சேர்ந்து மறைந்துவிடுகின்றதன்ருே! அங்ஙனமே வேயர் பயந்த விளக்காகிய அன்னேயாரும், ஆயர் அணிவிளக்காகிய கண்ணனே அணுகி அணுகி இறுதியில் அவனுடன் சேர்ந்து விட்டமையின், இவர் செயலுக்கு விட்டிற்பூச்சியின் செயல் தக்க சான்ருகும்! இதுவேதான் இவரை ஆசாரியர் விளக்கு எனக் கூறவும், அதையே இவருக்குத் திருநாமமாகச் சூட்டவும் இடந்தந்ததெனக் கொள்க.

## 4. சுற்றும் எரியும் விளக்கு

கண்ணன் மட்டுமேயல்லாமல், ஆயர் மகளும் இவருக்கு விளக்காய்த் தோன்றுகின்ருள்: கண்ணனேயே சிந்தித்துக்கொண்டிருக்கும் ஒரு மங்கையைத் துயிலுணர்த்தச் சென்ற கோதையார், குற்றமற்ற மணிகளால் வனேயப்பட்ட அரண்மனேயில் அவள் துயில்வதையும் அங்குச் சுற்றும் விளக்கெரிவதைப்போன்று ஒளி வீசுதலேயும் காண்கின்ருர்; "இவை எண்ணெய் திரிகளினுல் ஒளிரும் செயற்கை விளக்கா!" என உற்று நோக்குகின்ருர். "அன்று; செயற்கை விளக்கிற்குச் சிறிதும் அசைவின்றியும், ஒன்றிற்கொன்று இடைவெளியின்றியும் சுடர் விட்டு ஒளிரும் நீர்மை ஏது? ஆதலின், இஃது இவருடைய ஞானத்திஞலுண்டான இயற்கை விளக்காகத்தானிருத்தல் வேண்டும்! அங்ஙனமா

யின், எத்தகைய ஞானத்திற்கு இங்ஙனம் மிளிரும் தன்மையுண்டு?'' எனச் சிறிது சிந்திக்கிருர். அப்போதுதான் இவருக்கு உண்மை புலனுகிறது; "இம்மங்கை திருமந்திரத்தில் சொல்லப்படும் பரமான்மா, சீவான்மா, உபாயம், உபேயம், பலம் ஆகிய இவ்வைந்தின் இலக்கணங்களையும் தெளியக் கற்று, அவ்வுண்மை ஞானத்திஞல், 'ஈசுவரனுக்குப் பரதந்திரப்பட்ட நாம் நம் நன்மையையே தேடுதல் குற்றமுடையது. அவனே நம்மை வந்து பற்ற வேண்டும்! அஃது அவன் காரியமும் அவனுக்கே பயனுமாகும்,' எனக் கருதி, அவனிடம் போதலைத் தவிர்த்து, மழைத்துளியை நோக்கி நிற்கும் ஒரு வகைப் பறவைபோன்று, அவன் அருளையே நோக்கிக் கொண்டிருக்கின்ருள். அவ்வுயரிய ஞானமே சுற்றும் விளக்குகளாய் ஒளிர்கின்றன,'' எனத் தெளிந்து உவகை கொள்கின்ருர். உயரிய ஞான ஒளியைப் பெற்ற விளக்காகிய ஆண்டாளுக்கு அம்மங்கையின் ஞான ஒளி புலப்படுதற்குத் தடை யாது?

இதனுல், ஒருவர் உள்ளுறையும் தத்துவ ஞானம் புறத்திலும் பரவி ஒளியை வீசும் என அறிகின்ருேமல்லவா? இதற்கு, பிறந்தவுடன் பட்டரை எதிராஜரிடம் கொணர்ந்த எம்பார், வழியில் **துவயத்தை** அநுசந்தானம் செய்துகொண்டே வந்ததாகவும், அதனுல் பட்டர் முகத்தில் ஞான ஒளி வீசியதாகவும், அதன் காரணத்தை அறிந்த எம்பெருமாஞர், "இக்குழவியை இப்போதே துவய அநுசந்தானத்திஞல் ஒளி பெறச்செய்த நீரே இதற்கு ஆசாரியஞக அமைய வேண்டும்.'' எனப்

பணித்தனர் என்று இயம்பும் சரிதமே தக்க சான்ருகும். தத்துவ ஞானத்தின் இயல்பும் பெருமையும் என்னே!

## 5. குல விளக்கு

உலகமுண்ட பெரியோனை மகனுய்ப் பெற்று, அவனுடைய தெய்வச் செயல்கள் பலவற்றையும் கண்டு கண்டு உவந்த யசோதை, பரமான்மாவையும் சீவான்மாவையும் விடாது இருவர் இடையிலும் இருந்து இருவர்க்கும் நலத்தை விளைவிக்கும் பிராட்டியைப் போன்று, தன் நாயகனை நந்தகோபனையும், மகனை கண்ணனையும் விடாது, அவர்கள் நடுவில் கிடந்து துயில்கின்ருள். தூக்கத்திலும் கண்ணன் நினைவு அவள் நெஞ்சை விட்டகன்றிலது. தன் உயிரனைய மகனுக்கு யாரால் என்ன தீங்கு நேருமோ என்னும் கலக்கம் அவளை அலைத்துக்கொண்டிருப்பினும், அப்போதைக்கப்போது புதிது புதிதாகக் கிளர்ந்தெழும் அவன் வனப்பும், அயலார் மனத்தையும் கவர்ந்து உவகை ஊட்டும் அவன் அரிய செயல்களும் அவள் நெஞ்சில் நன்கு வேரூன்றி இருத்தலின் அவளுக்கு ஆனந்தம் மிகுகிறது; அந்த ஆனந்தம் நெஞ்சுள் அடங்காது புறம் பொசிந்து காட்டுகிறது; அஃதன்றியும், அவ்வானந்தத்தின் பெருக்கு விழிப்பில் மட்டுமேயன்றித் தன்னை மறந்து கிடக்கும் துயிலிலும் மீதூர்ந்து முகத்தில் தேங்கி நிற்கிறது; அகத்தினழகு முகத்தில் தெரியுமன்ரே? மறைத்தற்கியலாத அத்தேக்கம், கண்டோர் கேட்டோர் யாவரையும் உவகையிலாழ்த்துகிறது. பரமனுக்குப் பாலூட்டித் தாலாட்டி வளர்த்த அவ்

வசோதையைத் துயிலுணர்த்தச்சென்ற நம்கோதையாருக்கு அவளைக் கண்டதும் அவள் சிறப்பு முற்றும் மனத்தில் தோன்றுகிறது. ஆகவே, அவளை 'எம்பெருமாட்டி, குலவிளக்கே' என்றழைக்கிருர். என்ன பெருமிதம் வாய்ந்த அரிய அடைமொழிகள்! புவிமகளாராகிய ஆண்டாளும் தமக்குத் தெய்வம் எனப் போற்றக்கூடிய ஏற்றம் யசோதைக்குள்ளது. 'உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்,'[1] என்றிருக்கும் கோதையாருக்கு, அப்பெரியோனை ஈன்று, தாம் இன்பந் துய்க்கத் தந்த யசோதை தெய்வமாய்த் தோன்றலில் வியப்பேது?

முன்னர்க் குறித்தவாறு விளக்கு எங்ஙனம் மற்றதன் உதவியின்றியே தன்னையும் காட்டித் தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களையும் தோற்றுவிக்கின்றதோ, அங்ஙனமே யசோதை தன்னையும், தன்னைச் சார்ந்த குலத்தையும், ஆழ்வார்களைப் போன்ற பிரபந்நர் குழுவையும் ஒளிரச் செய்யக் கூடிய சீர்மையைப் பெற்றிருந்தமையின், 'குலவிளக்கே' என்கிருர். இது தூமணி மாடத்து ஒளிர்ந்த விளக்கைக்காட்டிலும் உயரியது என்பதை எம்பெருமாட்டியார், குலவிளக்கு என்னும் அடைமொழிகளால் வற்புறுத்துகிருர். இதனல், யசோதையாகிய இவ்விளக்குச் சிறந்ததெனக் கொள்க.

தான் தோன்றியதும், உண்மை ஞானம் விளங்கப் பெற்றதுமான ஆயர் குலம், தான் ஈன்ற பரமனாகிய கண்ணனையே பற்றுக்கோடாகப் பற்றி,

1. திருவாய்மொழி, 6: 7 : 1

ஆன்ம நலனை அடையுமாறு செய்தமையின், அக் குலத்திற்கே விளக்கெனத் திகழ்ந்தாள் யசோதை.

## 6. குத்து விளக்கு

பின்னர் ஆண்டாளும் மற்ற ஆயர் மகளிரும், கண்ணனுக்கு இதவுரை (புருஷாகாரம்) சொல்லித் தம்மை அவனோடு கூட்டுபவளாகிய நப்பின்னை நங்கையிடம் போதருகின்றனர்கள். அவண் குவலயா பீடத்தின் கொம்பு பறித்து ஆக்கப்பட்ட கட்டிலின் மீது வீரனாகிய கோபாலனும், வீரமகளாகிய நப்பின்னையும், மலைக்குகையில் மாரிகாலத்தில் ஆணும் பெண்ணும் ஒன்று என்னுமாறு கலந்துறங்கும் அரிமாப் போன்று சேர்ந்து துயில்கின்றனர்கள். வீர மங்கையாகிய அவள் வீரக் கட்டில் தவிர வேறொன்றில் கண்ணுறங்குவளோ! இருவர் திருமேனியிலும் ஒளி காலுகிறது. ஆயினும், நப்பின்னையின் சோதி கண்ணனுடைய பிரகாசத்தை அடக்கிவிடுகிறது. "ஆ! என்ன வியப்பு! கதிருக்கும் மதிக்கும் ஒளி ஊட்டும் முதற்பொருளின் தேஜஸையும் மங்குமாறு செய்யும் இவளுடைய ஒளி என்னே! இத்தகைய பேரொளி இவள் திருமேனியில் காணுதற்குக் காரணம், இவள் தன் வனப்பால் எம்பெருமானைத் தன்வசப்படுத்தி, அவன் புறம்பு நோக்கா வண்ணம் செய்து, தன் இதவுரையால் அவன் உலக உயிர்களின் குற்றங்களைப் பொறுத்து, அவற்றின் மாட்டு அருள் நோக்கைப் பாய்ச்சுமாறு செய்யும் பேருதவியன்றோ! தன்னலங்கருதாது பிறர் நலங்கருதிச் செய்யும் செயல் எச்சிறப்பைத்தான் உண்டாக்காது!" என எண்ணி அந்த இடத்தைச் சிறிது

உற்று நோக்குகின்றனர். அவண் குத்து விளக்கு ஒன்று எரிந்துகொண்டிருக்கிறது! "அந்தோ! பகுத்தறிவோடுங்கூடிய கொடி விளக்குகளாகிய யாங்கள் இவண் ஒளி மழுங்கிக் கிடக்க, பகுத்தறிவற்ற குத்து விளக்கு ஒன்று இங்குச் சுடர் விட்டு எரிந்துகொண்டிருக்கிறதே! இ∴து அவ்விருவர் சேர்க்கையையுங்கண்டு களித்துக்கொண்டன்றோ உள்ளது! இது செய்த தவந்தான் யாதோ! அத்தவத்தை யாங்களும் இழைத்திலோமே! ஆ! நீங்கள் வேண்டுமிடத்தில் அதைப் பெயர்த்து வைத்துப் பணிகொள்ளலாமென அதனிடம் கூட்டுறவுகொண்டீர்கள் போலும்! உங்களுக்கே கைங்கரியஞ் செய்யக் காப்பணிந்துகொண்டிருக்கும் பரதந்திரிகளான யாங்கள், அவ்விளக்கைப் போன்றே உங்கள் விருப்பத்தின்படி தொண்டு புரிதற்குத் தடையுண்டோ? அதற்கு எங்களுடைய கூட்டுறவும் உங்களுக்கு வேண்டாவோ? உங்களை களைகணாய்ப் பற்றியிருக்கும் எங்களை இங்ஙனம் புறக்கணித்தல் உங்கள் முதன்மைக்குச் சேருமோ?" என அவண் எரிந்துகொண்டிருக்கும் குத்து விளக்கினிடம் தங்களுக்குள்ள அழுக்காறு புலப்பட அதைச் சுட்டிச் சுட்டி முணுமுணுக்கின்றார்கள்.

இம்முறையில் ஆசாரியர்களால் விளக்கென உருவகப்படுத்திச் சிறப்பிக்கப்பட்ட நம் அன்னையார், தாம் விரும்பிய கண்ணனை அழகிய விளக்கெனவும், அவனை ஈன்ற யசோதைப் பிராட்டியை ஆயர் குலத்தைத் துலங்க வைத்தற்குத் தோன்றிய குலவிளக்கெனவும் பாராட்டினர்; இன்னும் ஆயர்

மகளும் நப்பின்னையும் உறங்கும் இடங்களில் ஒளி ரும் விளக்குகளைக் குறித்துப் பேசுவது வாயிலாகப் பல தத்துவார்த்தங்களை வெளிப்படுத்தினர். இறுதியில் விளக்காகிய தமக்கு எது புகலிடம் என்பதைத் தெளித்துக் காட்டுகிறார்; "திருமலைக்குத் தலைவன் என்று சொல்லப்படுகிற வேங்கட விளக்கிலே புகுமாறு என்னை நியமித்தல் வேண்டும்,"[1] என்று மன்மதனை இறைஞ்சுகின்றார். விளக்கு விளக்கில் சேரத்தானே விரும்பும்?

ஆகவே, ஸ்ரீவில்லிபுத்தூரில் தோன்றித் தம் காலத்துள்ளார்க்கும் பிற்காலத்துள்ளார்க்கும் மெய்யுணர்வாகிய விளக்கு ஒளிருதற்கேற்ற நூல்களாகிய நிதியைத்தந்து அவ்வொளியைக் கொண்டு ஆன்மாக்கள் உய்யுமாறு செய்து, இறுதியில் பரமன் விளக்கில் சேர்ந்து இன்பந்துய்த்த ஆண்டாளாகிய நம் அன்னையார் தோன்றிய ஊரின் பெருமையையும், அன்னையார் சிறப்பியல்புகளையும், நூலின் தன்மை நூற்பொருளின் நுட்பம் ஆகியவற்றுள் சிலவற்றையும் விளக்க எழுந்த இந்நூலிற்கு **வில்லிபுத்தூர் விளக்கு** என்னும் பெயர் மிகப் பொருத்தமுடையதன்றோ! இந்நூல் அறிஞருக்கு இன்பத்தையூட்டி, அவர் தூண்டுதலால் பலரும் படிக்கும் பண்பைப் பெறுமாயின், அஃதே அடியாள் இந்நூலெழுதியதற்குத் தக்க பயன் என நினைக்கிறேன். ஆண்டாளுக்கு உவப்பை (முகமலர்த்தியை) உண்டாக்கும் இதனினும் சிறந்த தொண்டு எது?

---

1. நாச்சியார் திருமொழி, 1:6

## 7. தொகுப்புரை

இதுகாறும் கூறியவற்றல், ஆண்டாள் அருந் திறனை விளக்க வந்த இந்நூலின் பெயர் 'வில்லிபுத் தூர் விளக்கு' என்றும்; வில்லிபுத்தூரின் சிறப்பு இன்னது என்றும்; அச்சன்னிதானத்தில் ஒரே ஆச னத்தில் அரங்கமன்னர், ஆண்டாள், பெரிய திருவடி ஆகிய மூவரும் கலந்து வீற்றிருத்தல், இறைவன், பிராட்டி, சேதனன் ஆகிய மூவரையும் தன்னுள் அடக் கிக்கொண்டிருக்கும் பிரணவத்தைக் குறிப்பிக்கின் றது என்றும்; விளக்கின் தன்மை இன்னது என்றும்; ஆதித்தன், வெண்ணிலா, உடுக்கள் விளக்கினத்தைச் சேர்ந்தனவேயாயினும், அவை புறவிருளை அன்றி அகவிருளைப் போக்காமையின், அதை அகற்றும் அறிவே உண்மை விளக்காகும் என்றும்; அவ் வறிவு ஒருவருக்குப் பல வகையில் அமையுமென் றும்; மற்றெல்லாச் செல்வங்களைக்காட்டிலும் இவ் வறிவுச்செல்வம் சிறந்தது என்றும்; இது மக்கட்குப் பிறப்பு வீட்டின்பேறு முதலியவற்றைத் தெரிவித் தலால் இதை மெய்யுணர்வு என்பர் என்றும்; இம் மெய்யுணர்வைப் பெற்றவர் இனிப் பிறவார் என் றும்; இஃது இவ்வுலக இயல்புகளைத் தெளியக் காட்டுகின்றமையின், இதை விளக்கு எனக் கூறுதல் பொருத்தமுடையது என்றும்; வேயர் பயந்த விளக்காகிய ஆண்டாள், ஆயர் குலத் தில் தோன்றிய கண்ணனாகிய அணிவிளக்கின் வனப்பு, வீரம், மேன்மை முதலியவற்றல் கவரப் பட்டு, விளக்கைச் சுற்றி அதனுள் புகும் விட்டில் போன்று, அவனை அணுகி அணுகி இறுதியில் அவ

ஞேடு சேர்ந்து இன்புற்றனர் என்றும்; மழைத் துளியை நோக்கி நிற்கும் சகோரப் பறவை போன்று எம்பெருமான் அருளேயே நோக்கித் தூமணி மாடத்தில் துயிலும் ஒருமங்கையின்ஞானமே சுற்றும் விளக்கொளியாய் ஒளிர்கின்றது என்றும்; கண்ணனுக்குப் பாலூட்டித் தாலாட்டி வளர்த்த யசோதையை எம்பெருமாட்டியார் குலவிளக்கு எனப் பாராட்டுதற்குக் காரணங்கள் இன்னவை என்றும்; ஆன்மாக்களேப் பரமனிடம் கொண்டு போய்ச் சேர்த்து உய்வித்தலாகிய பிறர் நலத்தையே நாடி நிற்கும் நப்பின்னேயின் திருமேனியின் ஒளி, கண்ணன் திருமேனியின் ஒளியை அடக்கி விடுகிறதென்றும்; ஆண்டாள் அவன் எரிந்து கொண்டிருக்கும் குத்துவிளக்கின் தவத்தைப் பாராட்டி, தங்களேயும், அதைப்போன்றே அவர்கள் அருகில் வைத்து அவர்கள் விருப்பத்தின்படி பணி கொள்ள வேண்டுமென இறைஞ்சுகின்றனர் என்றும்; விளக்காகிய இவர், கண்ணன் யசோதை இவர்களே விளக்குகளாக உருவகப்படுத்தி, ஆயர் மகளும் நப்பின்னேயும் உறங்கும் இடத்தில் ஒளிரும் விளக்குகளேப் பேசுமுகத்தான் பலதத்துவார்த்தங் களே வெளிப்படுத்தினர் என்றும்; இறுதியில் வேயர் பயந்த விளக்காகிய அன்னேயார் தம்மை வேங்கடவிளக்கில் புகச் செய்யுமாறு மன்மதனே இறைஞ்சுகின்ருர் என்றும் இயம்பினும்.

# கோதையார் வாழ்க்கை

## நூலாசிரியர் சிறப்பு

### 1. தோற்றம்

வேயர் பயந்த விளக்காகிய நம் நூற்றலைவியார், சீர்மைகள் பலவும் வாய்ந்த ஸ்ரீவில்லிபுத்தூரில், ஆடித் திங்கள் பூர நட்சத்திரம் கூடிய செவ்வாய்க்கிழமையில் திருவவதாரஞ் செய்தார்.[1]

எம்பெருமானைப் பல்லாண்டு பாடி வாழ்த்திய பெரியாழ்வார் திருமாலுக்கென அன்புடன் ஆக்கிய திருநந்தவனமே இவர் தோற்றத்திற்கு இடனாய் அமைந்தது. அவண் அழகும், மணமும், தேனும் நிரம்பிய பல மலர்கள் மலர்ந்தும், தரையில் உதிர்ந்தும், தம் மகரந்தத் துகளால் நிலத்தை அலங்கரித்துக்கொண்டும் மிளிர்ந்தன; அவை கண்டோர் மனத்தையும் கண்ணையும் ஒருங்கே கவர்ந்தன. ஆயினும், அவற்றுள் ஒன்றும் அன்னையார் நெஞ்சைக் கவர்ந்திலது; அங்கு ஒரு புறம் அடர்ந்து செழித்து வளர்ந்திருந்த திருத்துளவமே இவரைத் தன்பாலீர்த்தது. அன்னையார் அதில் பச்சைப் பசுங்குழவியாய் வீற்றிருந்தார். இவர் இளமையிலேயே ஞான பத்தி வைராக்கியங்களில் சிறந்து விளங்கியதற்குக் காரணம், முளைக்கும் போதே நிறத்துடனும் மணத்துடனும் கிளம்பும் இத்துளவத்தின் தொடர்பே என ஒருவாறு யூகிக்கலாம்.

---

1. குரு பரம்பரைகளில் ஆண்டாள் அவதரித்த மாதமும், நட்சத்திரமும் காணப்படுகின்றனவே அன்றி, வருடம் காணப்பட்டிலது. நம் கோதையார், தாம

இத்தொடர்பினுற்றுன், அன்னையார் அவனை விளிக்கும் போதும், "மதுவின் துழாய் முடி மாலே! மாயனே! எங்களமுதே!"[1] என்றும், அவனைப் பிரிந்த ஆற்றுமை நீங்குதற்குத்

"தண்ணந் துழாய்என்னும் மாலை கொண்டு சூட்டத் [தணியும்"[2]

"நீலார் தண்ணந் துழாய்கொண்டென்
நெறிமென் குழல்மேல் சூட்டீரே"[3]

"அவன்மார் பணிந்த வனமாலை
வஞ்சியாதே தருமாகில்
மார்வில் கொணர்ந்து புரட்டீரே"[4]

என்றும் கூறுவாராயினர்.

நோன்பு நோற்கப் புகுந்தது, மார்கழி மாதம் பௌர்ணமியில் வெள்ளி உதித்து வியாழன் அஸ்தமிக்கும் காலம் என்று தாமே குறிப்பிட்டுள்ளார். மார்கழிப் பௌர்ணமியில் வெள்ளி வியாழன்களின் தோற்ற மறைவுகள் பதினென்று, பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நேரிடும். மற்ற ஆழ்வார் ஆசாரியர்களின் தோற்றம், அக்கால் நடைபெற்ற செயல்கள் முதலியவற்றை ஆராய்ந்து நோக்குங்கால், நம் கோதையார் தோற்றம் கி. பி. 716 ஆகவும், மார்கழி நோன்பு நடை பெற்றது இரு நட்சத்திரங்களும் அதி காலையில் தோன்றி மறையக் கூடிய காலமாகிய கி. பி. 731 ஆகவும் இருத்தல் வேண்டும் எனச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் லெக்ஸிகன் ஆபீஸ் தலைமைப் பண்டிதர், திருவாளர், இராமநாத புரம் மு. இராகவ அய்யங்காரவர்கள் எழுதிய 'ஆழ்வார்கள் கால நிலை' என்னும் நூலினுல் அறிகிறோம்.

1. நாய்ச்சியார் திருமொழி, 3 : 2;
2. 12 : 7. 3. 13 : 2. 4. 13 : 3.

கோதையார் இங்ஙனம் மலர்கள் யாவற்றையும் நீக்கித் திருத்துளவத்தில் வீற்றிருந்ததற்குச் சீரிய காரணம் ஒன்று இல்லாமற்போகவில்லை. எம்பெருமானை நீங்கி வந்த இவர், அப்பெருமானின் தொடர்பு சிறிதுமின்றி எங்ஙனம் தனித்திருத்தல் கூடும்? அஃது இவரைப் பெரிதும் வருத்துமன்றோ? அக்குறை ஒழியவே இவர், எம்பெருமான் மிக்க ஆர்வங்கொண்ட துளவத்தில் வந்து தங்கினாரெனக் கொள்ளலே தகுதியுடையது.

அங்ஙனம் திருத்துளபத்தில் வீற்றிருந்த அம்மகவின் உடல் ஒளி, மலர் வனத்தை ஒளிரச் செய்தது; அது துயில் நீங்கி வந்த பெரியாழ்வார் கண்ணையும் மனத்தையும் காந்தமென இழுத்தது. ஸ்ரீ சடகோபரது ஞான ஒளியைப் பின்பற்றிச் சென்ற ஸ்ரீ மதுரகவிகளைப் போன்று, பெரியாழ்வார் அவ்வொளியைப் பின்பற்றி நடந்தார்; அருகில் சென்ற அவர், ஆங்கு ஓர் அதிசயத்தைக் கண்டார்; ஒன்றுந் தோன்றாது தயங்கினார். அவர் சிந்தை சிந்திக்கும் தொழிலை விட்டது; அவர்தம் ஐம்பொறிகளும் செயலற்றன; கண்ணிமைகள் ஒன்றையொன்று சந்தித்தில; கண் ஒளி மழுங்கிற்று. இங்ஙனமே சில விநாடிகள் கழிந்தன. பின்னர் அவர் சிறிது உணர்வைப் பெற்றார்; முதலில், "இஃது ஓர் ஒளிப் பிழம்போ!" எனக் கருதினார்; பின்பு அப்பொருளில் சிறிது அசைவு காணப்பட்டதும் தம் மனத்தைத் தெளிவுபடுத்திக்கொண்டு அதை உற்று நோக்கினார். உறுப்புகள் பல அவருக்குக் காட்சி அளித்தன. அவ்வமயம் ஆழ்வாருக்குண்டான ஆனந்

த்தை அளந்து கூற ஒருவராலும் இயலாது. அவர் மானச அநுபவம் உடல் மாட்டுப் பாய்ந்தது. அவரை அறியாமலே அவர் கைகள் அக்குழவியின் அருகில் சென்றன. நிதிக்குவியலைக் கண்ட வறிஞரென ஆழ்வார் அக்குழவியை வாரியெடுத்து, மார்புடனணைத்து, முத்தமிட்டு, அன்பு பாராட்டினார். அவ்வமயம் அவர், கண் பெற்ற பிறவிக் குருடனுக்கு ஒப்புக் கூறவும் இயலா நிலையில் நின்றார். அன்னையார் பத்தியிற் சிறந்த பெரியாழ்வாரை நாடிச் சேர்ந்தமை, நல்லாரை நல்லாரும், புண்ணியத்தைப் புண்ணியமும், ஒளியை ஒளியும் தேடி அடைதல் போன்றிருந்தது. 'இனம் இனத்தைச் சாரும்,' என்பது பழமொழியன்றோ?

அக்குழவியைக் காணக் காண ஆழ்வாருக்கு ஆர்வம் பொங்கி எழுந்தது. "இவள் கலை மகளோ! புவி மகளோ!" என அவர் விம்மிதமுற்றார்; அம் மகவின்மேல் உதிர்ந்த மலர்களில் வண்டுகள் மொய்த்தலும், பண்பாடி எழுதலுமாயிருந்தமையின், அதற்குச் 'சுரும்பார் குழற்கோதை' எனப் பிள்ளைத் திருநாமம் சூட்டினார். மகவைக் காண வந்த மகிபன் போன்று ஆதித்தன் தன் செவ்விய கிரணங்களுடன் கீழ்த்திசையில் தோன்றினான். மலர் வனம் முற்றும் பல மாணிக்கத் தீபங்கள் வைத்தாலென மிளிர்ந்தது. பறவைகளும், மரங்களும், மலர்களும் புது ஒளி பெற்று விளங்கின. மகவின் அழகு முன்னையினும் பதின்மடங்கு மிக்கொளிர்ந்தது அக்குழவியை எங்குக் கொண்டு சென்றார்? தம் இல்லத்திற்கா? தம் சுற்றத்தினரிடமா? அன்றி

நட்பினர் அகத்திற்கா? இல்லை இல்லை, தம் ஆன்ம உறவினனாகிய வடபத்திரசாயியின் இல்லிடமாகும் சந்நிதானத்திற்கு விரைந்து ஓடி அம்மகவை அவன் திருவடியில் கிடத்தினார்; அவண் சயனித்த திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் திருவடி முதல் திருமுடி வரையும் ஒரு முறை ஊன்றி நோக்கினார்; அந்நோக்கையே தம் மகளார் மாட்டும் செலுத்தி உற்றுப் பார்த்தார். சில எண்ணங்கள் அவர் சிந்தையில் கிளர்ந்தெழுந்தன: "இம்மகவு இறைவன் இன்னருளே உருக்கொண்டு வந்தது போலும்! இவ்விறைவன் உயர் ஞானத்தையே ஒரு பிண்டமாகச் செய்தனனோ! இக்குழவியைக் கொண்டு உலகத்தையே உயர்த்தக் கருதினனோ! இம்மகவால் வைணவமே புது மணம் பெறும் என்பது திண்ணம்! இம்மகளின் மாண்புணர்ந்து மகிமைப்படுத்துதல் அவனுக்கன்றி மற்றவருக்கு ஒல்லுமோ? இச்செல்வி என்னை வந்தடைந்தது இறைவன் இன்னருளோ! அன்றி என் மூதோர் இழைத்த தவமோ! அறியேன். ஆயினும், இத்தெய்விகக் குழவியை வளர்க்கும் பொறுப்பு என்னைச் சார்ந்ததே! ஞானமே உருக்கொண்டெழுந்த இம்மகவைச் சிறிதும் ஞானமற்ற அடியேன் வளர்த்தல் யாங்ஙனம்? இக்குழவியின் பத்தியாகிற பகலவன்முன், என் பத்தி மின்மினியன்றோ? எம்பெருமான் உள்ளம் உவக்க இப்பசுங்கொழுந்தை யான் பண்படுத்த வேண்டுமே! என்ன அறியாமை! என்ன அறியாமை! இக்காரியத்திற்கு யானோ பொறுப்புடையவன்? அளித்தவன் ஆதரியானோ? சிறு கிருமியை

யும் காக்கும் பெருமான் இப்புண்ணியக் கொடியை வழிப்படுத்தாது விடுவனோ? ஓ எம்பெருமானே, இம்மகவை மாண்புறச் செய்தல் உன் பொறுப்பே ஆகும்!" எனக் கூறி இறைவனைத் தொழுது நின்றார்.

இவ்வழகுக் கொழுந்தைக் கண்ட கோயில் அதிகாரிகள் யாவரும் வியப்புற்றுப் பெரியாழ்வாரையும் குழவியையும் போற்றி நின்றனர். சிறிது போழ்து தம்மைத் தாம் மறந்து நின்ற ஆழ்வார், பின்பு தெளிந்து, மகவைக் கையிலேந்தி, இல்லம் புகுந்தார். சான்றோர் பலரும் ஆழ்வாருடன் போந்தனர்; தனித்தனியே வாழ்த்துக் கூறினர். மக்கள் வருதலும் போதலுமாகவே அன்று முற்றும் கழிந்தது. பெரியாழ்வார் திருமாளிகையில் அன்று சிறந்த திருவிழா ஒன்று நடைபெறுதல் போன்று காணப்பட்டது. ஸ்ரீ வில்லிபுத்தூர் முற்றும் இச் செய்தி பரவிவிட்டது. எங்கும் இப்பேச்சே! எங்கும் அலங்கரிப்பே! எங்கும் குதுகுலிப்பே! எங்கும் ஆசியே! எங்கும் தானமே! எங்கும் தருமமே! எங்கும் வழிபாடே! பெரியாழ்வார் பெட்பைப் பேசுவாரும், குழந்தையின் தெய்விகத்தைச் செப்புவாருமாகவே யாவரும் பொழுது போக்கினர். இவ்விருவருடைய இன்னலம் யாரைத் தான் வியக்கச் செய்யாது!

நம் கோதையார் சின்னஞ்சிறுமியார்; சிற்றுடை உடுக்கும் பருவத்தினர்; மழலை மாறா நிலையினர். பற்கள் யாவும் முளைத்தெழுந்தில, இவர் கூந்தலோ, முடி கூடிற்றிலது. விளையாட்டிலும் வேடிக்கையிலும்

பொழுது போக்கும் காலம். சிற்றில் செய்து, மண் செப்புகளையும், சிறு பதுமைகளையும் வைத்து, மண் சோறு சமைத்து, யாவருக்கும் விருந்தளிக்கும் வயது. இப்பருவத்தில் இவர் செயல்கள் யாவும் அருமையுடையனவாகக்காணப்படுகின்றன. மணற் சோற்றையும், சில போது பல விதப் பட்சணங் களையும் அடுகின்றார். அவற்றைத் தம்மொத்த மக்களுக்கு மட்டும் இடுகின்றனரா? தம் சிற்றிலில் பெருமாள் அறை தனியாக அமைகிறது. அங்கு எம்பெருமான் அமர்கிறான். அவன் மட்டுமா? சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் ஆகிய ஆயுதங்கள் யாவும் வரையப்பட்டுள்ளன. இக்காட்சியைப் பெரி யாழ்வார் நோக்குகிறார். அளவற்ற ஆனந்தம் அவ ருக்குப் பொங்கி எழுகிறது! 'என்னே என் மகளின் பத்தி! விளையாட்டிலும் மாயன் மாண் பொருள்களா!'

"செய்ய நூலின் சிற்றாடை
செப்ப னுடுக்கவும் வல்ல ளல்லள்"[1]

"பொங்கு வெண்மணற் கொண்டு
சிற்றிலும் முற்றத்து இழைக்கலுறில்
சங்கு சக்கரம் தண்டுவாள்
வில்லு மல்லது இழைக்கலுறாள்"[2]

எனப் பகர்ந்து தந்தையார் வியப்புறுகிறார்.

இங்ஙனம் தந்தையார் வியப்புறச் செயல்புரியா நிற்கும் கோதையாருக்கு நன்னெறியும், சீலமும், பத்தியும் இயல்பாகவே அமைகின்றன. இவரை

---

1. பெரியாழ்வார் திருமொழி, 3 : 7 : 1; 2. 3 : 7 : 3

உருப்படுத்தியவர் யார்? இவை யாவும் நிரம்பப் பெற்ற பெரியாழ்வாரல்லரோ! அவரிடம் பழகி வரும் நம் அன்னையாருக்கு இவை வேறொருவரால் கற்பிக்கப்பட வேண்டுமோ? பழக்கமே பண்பன்றோ! 'குலவிச்சை கல்லாமல் பாகம்படும்,' என்பதை மறுப்பவர் உண்டோ! ஆகவே, இவர் நற்குணக் குன்றெனத் திகழ்ந்தார்.

## 2. மங்கைப் பருவம்

இவருக்குச் சிறு குழவித்தன்மை மாறுகிறது. இவர் வைகறையிலேயே துயில் விட்டெழுவார்; தந்தையாருடன் மலர் வனம் புகுவார். சிறு குடங் கொண்டு செடிகளுக்குத் தண்ணீர் பரிமாறுதல், மலர் கொய்தல், எம்பெருமானுக்கென மாலை தொடுத்தல், தந்தையார் விரும்பும் உதவிகளைப் புரிதல் முதலியவற்றிலேயே இவர் காலங்கழிந்தது. இவர் உடல் இத்தூய தொழில்களைப் புரியினும், இவர் உள்ளம் எதை நினைக்கிறது? என்ன செய்கிறது? ஆயர் மங்கையர் தொட்டுத் திரட்டிய வெண்ணெயை அள்ளி அள்ளி உண்டு மகிழ்ந்த கண்ணனை அடைதற்கேற்ற வழிகளையே கோலிக்கொண்டிருக்கிறது. "அவனை என்று அடைவோம்! என்று அடைவோம்!" என்னும் விரைவு, இவர் மனத்தை ஊக்குகிறது. எம்பெருமானுக்கென வைத்தபொருள்களைக் காணில், அவை தமக்கும் உரிமையுடையன என இவர் கருதுகிறார். தாம் அவருக்கும், அவர் தமக்கும் உரிமையுடையராதலின், பொருள்களும் அங்ஙனமே ஆம் என்பது இவர் எண்ணம். இஃதன்றோ உயரிய ஞானிகளின் கொள்கை!

இம்முறையில் தந்தையார் வடபத்திர சாயிக் கெனத் தொடுத்து வைத்த மாலைகளிலும் தமக்கு உரிமையுண்டு என்னும் எண்ணம் இவருக்குத் தோன்றுகிறது. ஆயினும், 'இவற்றைச் சூட்டியக்கால், இறைவன் அழகு எங்ஙனம் மிளிரும்?' என்பதைக்காண, அவற்றைத் தாம் அணிந்துகொள்ள மனங்கொள்ளுகின்றார்; அங்ஙனமே செய்து, அவன் வனப்பைத் தம் மனக்கண்ணால் நோக்கி நோக்கி மிக மகிழ்கின்றார்; அதிலேயே ஊன்றித் தம்மை மறந்து நிற்கின்றார். "கடற்றிரை போன்று மேன்மேலும் வீசும் அவன் அழகை அற்பத்தன்மை வாய்ந்த என் கண் அளக்குந் தன்மையுடையதோ!" என எண்ணிக்கொண்டிருக்கும்போதே இவருக்குப் பெரியாழ்வார் நினைவு தோன்றும். அவர் வந்துவிடுவரே என விரைவாக மாலைகளைக் களைந்து, குடலையில் இட்டு எப்போதும் போன்று இருந்துவிடுவார். ஆதலின், இவ்வன்புச் செயலைப் பன்னாட்கள் பெரியாழ்வார் அறிதற்கே இடமில்லாமற்போயிற்று.

இங்ஙனமே நாடோறும் நடைபெற்றது. என்று அம்மாலைகளைக் கோதையார் சூட்டித் தரத் தொடங்கினரோ, அன்றிலிருந்து அம்மாலைகளில் இயற்கை மணத்துடன் ஒரு புதிய மணமும் வீசத் தொடங்கிற்று. மலர் வாடினும் அம்மணம் குறைதல்இல்லை. அஃது அர்ச்சகருக்கு ஆச்சரியத்தை விளைத்தது. பெரியாழ்வாரின் பத்தியின் வளர்ச்சியே அம்மணத்திற்குக் காரணம் என்பது அவர்தம் நினைவு. அவர் பெரியாழ்வாரிடம் முன்னினும் பன்மடங்கு மதிப்பைக் காட்டினர். இது நம் சூடிக்கொடுத்தாரின்

அன்பு மணம் என்பதை அர்ச்சகர் யாங்ஙனம் அறிவர்! ஆழ்வாருக்குத்தான் எப்படித் தெரியும்!

ஒரு நாள் இவர் தம் ஆடை அணிகளை அணிந்து, மாலைகளையும் சூட்டி "இப்போதேனும் யான் அவன் அழகிற்கு ஒத்தவளாக இருப்பேனா? எம்பெருமான் என்னை உவந்து ஏற்றுக்கொள்வானா!" என்னும் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார். இந்நிலையில் அம்மாலைகள் எம்பெருமானுக்கென அமைத்தவை என்பதையும், தம் தந்தையார் விரைவில் வந்துவிடுவார் என்பதையும் இவர் அறவே மறந்தார். இச்செய்கைக்குக் காரணம், இவர்தம் அளவு கடந்த அன்பே என்பதை மறுக்கவல்லார் யாவர்?

அன்று விரைவில் வீடு திரும்பிய ஆழ்வார் இச்செயலைக் கண்டார். அவர் உடல் பதைத்தது; நெஞ்சம் கலங்கிற்று; பேச நா எழவில்லை. சிறிது போது அவர் தம்மை மறந்து நின்றார். தாம் கனவிலும் நினையாத இச்செயல் அவரை மயக்கிவிட்டது. தம்மைத் தாம் மறந்திருந்த கோதையாரோ, அவர் வரவை அறிந்திலர். ஆழ்வார் நடுங்கிக் கொண்டே, "குழந்தாய், ஈதென்ன காரியம்! இச்செயலைச் செய்ய உன் மனம் எங்ஙனம் துணிந்தது! இளமையிலிருந்தே பாகவதரோடு பழகிவரும் உன் பண்பு மிக அழகு! உன் அறிவுடைமைக்கு என் சொல்வேன்!" எனத் தம் மகளாரைச் சிறிது சினந்தார். அவ்வமயம் இவர் கவலையை முகத்தில் தேக்கித் தலைகுனிந்தவண்ணம் வாய் பேசாது தந்தையாரின் கோபச்சொற்களை ஏற்றுக்கொண்டார். இவர் கண்களிலிருந்து நீர் துளித்தது. இவர்தம் பொறு

மையும் அடக்கமும் ஆழ்வார் திருவுள்ளத்தைக் கனி யச் செய்தன. இவர் கண்ணீர், ஆழ்வார் சினத்தீயை அணைத்தது.

உடனே ஆழ்வார் தம் மகளாரை அருகழைத்து, கண்ணீரைத் துடைத்து, "நீ இங்ஙனம் செய்ய லாமா? யாரேனும் இத்தகைய காரியத்தைச் செய் யத் துணிவரோ? எம்பெருமான் உயர்வு என்ன! அவனுக்குச் சூட்டும் மாலைகளை நாம் சூடி மாசு படுத் தலாமா? இஃது எத்துணை அபசாரம்! எதைக் கருதி இங்ஙனம் இயற்றினை என்பது எனக்குத் தோன்றவில்லையே! என் அருமைக் குழந்தாய், இத் தகைய காரியத்தைச் செய்தற்கு இனி முற்பட மாட்டாயென்று நம்புகிறேன். இம்முறை போகட் டும். பயப்படாதே! அருட்கடலாகிய எம்பெருமான், சின்னஞ்சிறுமியாகிய நீ அறியாதிழைத்த குற்றத் தைப் பொறுப்பானாக!" எனத் தேறுதல் செப்பினார். தந்தையாரின் சாந்த மொழிகளைக் கேட்ட நம் அன் னையாரும் ஒருவாறு அமைதியுற்றார்.

இதைச் சிறிது ஊன்றி நோக்குங்கால், தந்தை யாரும் மகளாரும் தத்தம் கடமையைச் செம்மை நெறியில் மேற்கொண்டனர் என்பது நன்கு புலனா கும். ஆழ்வார் அவ்வமயம் உலக வழக்கிலும், வரை யறுத்த பத்தியிலும் நின்றார். ஆதலின், அவருக்குத் தம் திருக்குமாரியார் இயற்றியது பிழையெனத் தோன்றிற்று. ஆயினும், கரை கடந்த இறை அன்பில் மூழ்கிநின்ற கோதையாருக்கு இச்செயல் குற்றமா கக் காணப்படல் யாங்ஙனம்? அளவிலடங்காத

பத்தியுடையாரிடத்தில் சாத்திரமும் உலகமரியாதையும் என் செய்யும்?

அன்னையார் கவலைக்கும், இவர் சிரம் நிலத்தை நோக்கிக் கவிழ்ந்ததற்கும், நா ஒன்றையும் புகலாதிருந்ததற்கும் வேறு காரணங்களும் உண்டு. "அந்தோ! தந்தையார் நம் அன்பின் நிலையை உணர்ந்தாரில்லையே!" என்னும் எண்ணத்தினுல் கவலையும், "இதை நாம் அவருக்கு எவ்வகையில் விளக்க வல்லோம்!" என்னும் நாணத்தினுல் தலை கவிழ்தலும், "இதை நாம் வெளிப்படையாய் அவருக்குப் புகல்வதைக்காட்டிலும் அவரே உணருமளவும் மௌனங் கொள்ளலே சால்புடைத்து," என்னும் நினைவினுல் வாய் பேசாமையும் இவர்பால் அமைந்தன. இது நிற்க.

ஆழ்வார் அம்மாலைகளைக் கொண்டுபோய் வடபத்திரசாயிக்குச் சாத்த விரும்பிற்றிலர்; மலர்வனம் சென்று புதிய மலர்களைக்கொணர்ந்து மாலைதொடுக்கத் தொடங்கினுர். மாலைகளைத் தொடுக்கும் ஆழ்வார் உள்ளத்தில், கோதையார் எம்பெருமான்பால் இழைத்த பிழையும், தலை குனிந்து நின்ற நிலையும், துளித்த கண்ணீரும் மாறிமாறிப் புலனுய்க்கொண்டிருந்தன. ஆடியில் கண்ட சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் தெய்வத்தன்மை வாய்ந்த அழகிய உருவம் அவர் மனக்கண் முன் நின்றது. இத்தன்மையில் அவர் கைகள் ஒரு காரியத்தையும், சிந்தை வேறு எண்ணங்களையும் முறையே இயற்றிக்கொண்டும் சிந்தித்துக்கொண்டுமிருந்தன.

## 3. ஆண்டாள் சீர்மை வெளிப்படல்

பொழுது சாய்தற்குமுன் ஆழ்வார் மாலைகளை வடபத்திரசாயி சந்நிதானத்திற்குக் கொண்டு சென்றார். எதிர்நோக்கி நின்ற அர்ச்சகர் அம்மாலைகளைப் பெற்றுப் பெருமாளுக்குச் சாத்தி நின்றார். அவ்வமயம் ஆழ்வார் பத்தியிலோ, அர்ச்சகர் அன்பிலோ வேறுபாடு தோன்றிலது. ஆயினும், மாலைகளில் சில மாறுபாடுகள் காணப்பட்டன. முன்பெல்லாம் பெருமாளுக்கு மாலையை இட்ட உடனே உண்டாகும் புதிய பொலிவும் மணமும் அவற்றினிடம் காணப்பட்டில. இதன் காரணம் அறியாது அர்ச்சகர் தயங்கினர். தம் மகளார் இழைத்த குற்றந்தான் இதற்குக் காரணம் என்பது ஆழ்வார் கருத்து. ஆனால், அவர் ஒன்றும் கூறிற்றிலர்: மனக்கலக்கத்துடன் வீடு திரும்பினார். அவர் சிந்தை உணவிலோ உறக்கத்திலோ சென்றிலது. இரவு படுக்கைக்குச் சென்றார். உறக்கம் அவர் அருகிலும் அணுகிற்றிலது. எழுதல், படுத்தல், இருத்தல், பெருமூச்சு விடுதல்—இங்ஙனமே பெரும்பொழுதைக் கழித்தார்; நெடுநேரம் கழித்து அவரை அறியாமலே அவர் கண்கள் மூடின. ஒரு புறம் தோன்றிய ஒளி சிறிது சிறிதாகப் பரவுகிறது. எங்கும் ஒரே பிரகாசம்! அதன் இடையில் ஓர் அழகிய உருவம், திகிரி சங்கங்களுடன் சேவை சாதிக்கிறது; அது மெல்லமெல்ல ஆழ்வார் அருகில் போதருகின்றது. ஆழ்வார் கண்கள் கூசுகின்றன. ஆயினும், அவர் உற்று நோக்குகின்றார். அவ்வுருவம் சிறிது வாய் திறந்து, "ஆழ்வாரே, இன்று ஏன் எனக்கு மணமற்ற மாலைகளை இட்டீர்?" என வினவு

கிறது. அவ்விநாடியே ஆழ்வார் கருத்து எங்குச் செல்கிறது? மகளார் செயலிலேயே. அவர் நா எம் பெருமானுக்கு உண்மையை உணர்த்திப் பொறுத் தருளுமாறு மன்றாடுகிறது.

அவ்வமயம் எம்பெருமான் பெரியாழ்வாருக்கு ஆண்டாள் அருமை பெருமைகளைத் தெரிவித்து. "இனி அவள் சூட்டிய மாலைகளையே எமக்கு அணி விக்க வேண்டும்," எனப் பணித்தனன். இச்செய்தி யை இறைவன் அர்ச்சகருக்கும் தெரிவித்தான். அன்றைக்கே ஆழ்வார் மலர் தொடுத்து, தம் மக ளார்க்குச் சூட்டி, பெருமாளுக்குக் கொண்டுபோய்ச் சமர்ப்பித்தார். அவற்றை அணிந்த வடபத்திரசாயி யின் திருமுகத்தில் குதுகுலிப்பும், புது அழகும்மிளிர் வன போன்று காணப்பட்டன; அவன் புன்னகை கொள்வது போலத் தோன்றிற்று. அர்ச்சகரும் ஆழ்வாரும் முறையே வியப்பிலும் ஆனந்தத்திலும் ஆழ்ந்தனர். ஆழ்வார் தாம் வளர்த்த பொற்கொடி யின் சீர்மையை நினைத்து நினைத்துப் பெரிதும் பெருமை கொண்டார்; தாம் பிறந்ததன் பயனை அன்றே அடைந்துவிட்டதாய்க் கருதினார். அவருக் குண்டான அகமகிழ்வை யாரால் அளந்து கூற இயலும்! வீடு திரும்பிய ஆழ்வார், தம்மை அன் புடன் வரவேற்க வந்த மகளாரை, "**என்னை ஆண் டாள்** இவளே," என இயம்பி, அன்பு ததும்பத் தழுவி முத்தமிட்டார்; பின்னர் வடபத்திரசாயி யினிடம் நிகழ்ந்த யாவற்றையும் மகளார்க்கு அறிவித்தார். அப்போதுதான் கோதையார் பரமன் தம்பாட்டு வைத்துள்ள ஆர்வத்தை உணர்ந்தார்;

உவகை கொண்டார் ; ஆயினும், அதை வெளிக்காட்டிஞரிலர்.

இச்செய்தி காற்றைப்போன்று ஊரெங்கும் பரவிற்று. சின்னுள் வரை அறிஞர் பலர் வந்து வந்து கோதையாரைக் கண்டு சென்றனர். பெரியாழ்வா திருமாளிகையில் எம்பெருமான் கலியாண குணங்களையும், திருவிளையாடல்களையும் துதிப்பவர் ஓதையும், அவனது திவ்வியமங்கள விக்கிரகத்தைப் போற்றும் ஒலியும், அவன் ஆன்ம சொரூபத்தைப் புகழும் அரவமும் பெருகின. இச்செயல்கள் நம் ஆண்டாளுக்கு ஆனந்தத்தையும், ஆற்ருமையையும் வளர்த்துக்கொண்டே வந்தன. சான்ருேர் நம் கோதையாரைச் **சூடிக்கொடுத்த நாய்ச்சியார்** எனப் போற்றினர். அன்று முதல் இவருக்கு அப் பெயர் வழங்கலாயிற்று.

ஆழ்வார் நாடோறும் அருமை மகளாரை ஆடை அணிகளால் அலங்கரித்து, மாலைகளையும் சூட்டி, அழகை நோக்குவார் ; அவ்வழகு அவர் கண்ணையும் மனத்தையும் ஒருங்கே கவரும். “ஈதென்ன சீரிய தோற்றம்! இவள் இயற்கை அழகோடு ஆடையணிகளின் செயற்கை அழகும் கலந்து ஒளிரும் இத் தெய்விகச் செம்மை யாங்ஙனம் என் ஊனக்கண்ணில் அடங்கும்! இவள் செப்பமுடைமையை நோக்கும்போதெல்லாம் எம்பெருமானையும் சேர்த்துக் காண வேண்டுமென்னும் அவா என்னைப் பிடித்து உந்துகிறதே! இவள் அழகுக்கும் அமைப்பிற்கும் அவனன்றிப் பொருத்தமுடையார் வேறு யார்? அடியேன் குடிசைக்கு இரத்தின தீபமாய் அமைந்த

இவளைப்பெற்றது என் இல்லம் இயற்றிய தவமோ? என் முன்னோர் திரட்டிய புண்ணியமோ. அறியேன்! அன்றன்று! எம்பெருமான் என்மாட்டுக்கொண்ட அருள் நினைவே இதற்குக் காரணமாகும்! ஆயினும், யான் இத்தகைய மாணிக்கப் பூங்கொடியை அடைந்தது மட்டும் போதுமா! இக்கொடியைத் தக்க கொம்புடன் யான் சேர்க்க வேண்டுமன்றோ! அன்றேல், இவள் என்னை அணுகியதற்கும், இவளை யான் வளர்த்ததற்கும் யாது பயன்? எம் இருவர் வாழ்க்கையும் பயனற்றதாகுமே! அப்பொருளை யான் ஊன்றி நோக்கின் இம்மாணிக்கக் கொடிக்கு அம்மரகதக் கொம்பன்றோ ஏற்றது? இவ்விரண்டையும் ஒன்றுபடுத்த யான் யாது புரிய வேண்டும்?" என ஆழ்வார் ஆழ எண்ணுகின்றார். ஈண்டு ஆழ்வார், நாயகி தன்மையை அடைந்து அலமருங்கால் அவரே தாயராய் இருந்து,

> "அண்ணலார் தாளிணைமேல்
> அணிதண்ணந் துழாயென்றே
> மாலுமால் வல்வினை யேன்மட வல்லியே!"[1]

எனத் தம் மகளாரைக் கொடிக்கு ஒப்பிட்டுப் பேசுவது நம் நினைவிற்கு வருகின்றது. பின்னும் ஆழ்வார், "சீச்சீ! ஈதென்ன புல்லிய எண்ணம்! யாவற்றிற்கும் அவனிருக்குங்கால் எனக்கேன் கவலை? 'களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றில்லேன்,' என அவனையே சரணடைந்த அடியேன் காரியத்திற்கு அவனல்லனோ கருத்தா! இதற்கு வழி கோலுவதற்கு யான் யார்?" எனப் பலவாறு சிந்தித்திருந்தார்.

---

1. திருவாய்மொழி, 4 : 2 : 1.

## 4. ஆண்டாள் ஆற்றுமை

நம் கோதையாரோ, நாடோறும் தாம் பூண்ட காறையைக் கண்ணாடியில் நோக்குவார்; கைவளை களைக் குலுக்குவார்; ஆடையைச் செவ்வனே உடுத்துக்கொள்வார்; கொவ்வைக் கனி போன்ற தம் அதரத்தை அழகுபடுத்திக்கொள்வார். இச்செயல்களை அருகிலிருந்து கண்டு இன்பந்துய்த்த பெரியாழ்வார்,

"காறை பூணும் கண்ணாடி காணும்தன்
கையில் வளைகுலுக்கும்
கூறை யுடுக்கும் அயர்க்கும்தன்
கொவ்வைச்செவ் வாய்திருத்தும்"[1]

எனப் பகர்கிறார்.

தந்தையார் வந்துவிடுவரோ என்னும் அச்சம் இப்போது நம் அன்னையாரை விட்டு நீங்கிற்று; உற்சாகம் ஊக்கியது. அதனால், இவர் அழகு முன்னையிலும் விஞ்சி நின்றது. இம்முறையில் தந்தையாரும் மகளாரும் இன்பக்கடலில் நீந்திக்கொண்டிருந்தனர். இவ்வுலகில் ஒருவர் காலம், முற்றும் இன்பமாகவே கழியாதன்றோ! ஆகவே, இவ்விருவருக்கும் ஒவ்வொரு சிறு கவலை மனத்தை வாட்டிக் கொண்டிருந்தது.

ஆழ்வார் எத்துணை ஞானமுடையவராய் இருப்பினும், ஒவ்வொரு சமயம் இம்மங்கையார் மாண்பிற்கேற்ற மணமகனைக் காணல் வேண்டுமே என்னும் துன்பம் அவரை வருத்திற்று. "எம்பெருமான்

1, பெரியாழ்வார் திருமொழி, 3 : 7 : 8.

எப்போது வருவான்! எப்போது வருவான்!" என்னும் துன்பம் ஆண்டாளை ஆட்கொண்டது. இவை, பெருகி ஓடும் அவர்கள் இன்ப வெள்ளத்திற்குச் சிறு அணைகளாய் இருந்தன. ஞானியையும் அஞ்ஞானத்திற்குட்படுத்தும் உலகமன்றோ இது? இச் சிறு அணைக்கட்டும் ஏற்படவில்லையேல், அவர்கள் அவ்வின்ப வெள்ளத்தில் மூழ்கி முடிவைப்பெறினும் பெறுவார்கள் என்பது இறைவன் கருத்துப் போலும்!

தாம் அணிந்த மலர் மாலைகளையே எம்பெருமான் அணிந்ததும், அதை உலகம் புகழ்ந்ததும் அன்னையாருக்கு அத்துணை மன ஆறுதலை அளித்தில. திருமாலைச் சென்றடைந்து அவனோடு இன்பந் துய்க்க வேண்டுமென்பதே அவரது ஊன்றிய எண்ணம். அவ்வெண்ணம் நிறைவேறுமட்டும் அவர் எங்ஙனம் மனந்தேறி இருத்தல் கூடும்? இது நிற்க.

எம்பெருமான் ஆயர் பாடியில் தோன்றிய போது தன் அன்பரான ஆயர் மங்கையரோடு கைகோத்துக் குரவையாடுதல், வேறு விளையாட்டுகளைச் செய்தல் முதலியவற்றில் தன் காலத்தைக் கழித்தான். அம்மங்கையர் எல்லையற்ற ஆனந்தத்தில் ஆழ்ந்தனர். அவ்வானந்தத்தின் மிகுதி அப்பெண்களுக்கு இறுதியை உண்டாக்கினும் உண்டாக்கலாம் எனக் கருதிய கண்ணன், அவர்களை விட்டுச் சிறிது போது மறைந்திருந்தான். அதைப் பொறுக்கலாற்றாத வனிதையர்கள், அவன் தங்கள் அருகிலிருப்பதாகவும், அவனோடு தாங்கள் கலந்து விளை

யாடுவதாகவும் பாவனை செய்துகொண்டு, சிறிது ஆறியிருந்தார்கள் எனவும், எம்பெருமானை அடைய விரும்புவோர், அவன் அவதாரங்களின் நீர்மையையும், அவன் கலியாண குணங்களையும், சேஷ்டிதங்களையும் நினைத்து நினைத்துப் பாடிக்கொண்டிருத்தல் அவன் அருளை அடைதற்கு உதவி புரியும் எனவும் சில பெரியோர்கள் செப்பக் கோதையார் கேட்டார். இதைச் செவியேற்ற சூடிக்கொடுத்தார், தாமும் அங்ஙனமே போது போக்கக் கருதினர். இவருக்கு ஆயர் பாடியும், கண்ணன் உருவமும் காட்சியளித்தன. அவ்வமயம் காளிங்கமடுவிற்குச் சுற்றுப்புறமுள்ள ஓரறிவுயிரையும் தன் நச்சுத்தீயினால் தீய்த்துக்கொண்டிருந்த காளிங்கனை அழித்தற்பொருட்டு அதன் உச்சியில் தன் திருவடியை நாட்டி நடித்த நடிப்பும், பல்லோரையும் வருத்திக்கொண்டிருந்த கம்ஸனைப் பாதங்களால் துவைத்த துவைப்பும், பசுக்கூட்டங்களின் பின் குழலூதி வரும் இனிமையும் ஒன்றன் பின் ஒன்றாக இவர் நினைவிற்கு வந்தன. ஈண்டு,

"நீர்க்கரை நின்ற கடம்பை ஏறிக்
காளியன் உச்சி நட்டம் பாய்ந்து
போர்க்கள மாக நிருத்தஞ் செய்த"[1]

"கஞ்சைக் காய்ந்த கருவில்லி"[2]

"தழையின் பொழில்வாய் நிரைப்பின்னே
நெடுமா லூதி வருகின்ற குழலின்"[3]

என்னும் திருமொழிகள் நினைவு கூர்தற்குரியன.

1. நாய்ச்சியார் திருமொழி, 12:5. 2. 13:3. 3. 13.

பின்பு இவர் சிந்தை ஆயர் மங்கையரிடம் சென்றது. அவர்கள் இயற்றிய மார்கழி நோன்பினைக் கருதினர். அதன் முடிவையும், பயனையும் உணர்ந்தார். தாமும் அந்நோன்பை நோற்றுக் கண்ணனை அடைய இவர் மனம் கருதிற்று. இவர், "அந்தோ! யான் அக்காலத்தில் பிறக்கவில்லையே! அவ்வாயர் மங்கையருள் ஒருத்தியாகவேனும் இருக்கப் பெற்றிலேனே! நெடுந்தொலைவில் இருக்கும் அவ்வாயர் பாடிக்குச் செல்லும் வன்மையையும் கொண்டிலேனே! யாது செய்வேன்!" என மனங்கசிந்தார்; இறுதியில் அவ்வாயர் மங்கையர் செய்கையால் செய்த மார்கழி நோன்பை இவர் பாவனையால் இயற்றிப் பயன் பெற்றார்.

## 5. ஆண்டாள் அரங்கனை அடைந்து இன்புறல்

ஆயினும், ஆண்டாள் கண்ணனைப் பிரியாது என்றும் இன்பந்துய்த்தற்கு இயலாமையின், பெரிதும் ஆற்றாமையில் ஆழ்ந்திருந்தார். புதல்வியார் நிலை இங்ஙனமிருக்க, தந்தையார், தம் மகளாரின் உயரிய ஞானத்திற்கும், ஆழ்ந்த பத்திக்கும், நற்பண்புகளுக்கும் ஏற்ற நாயகனை எங்குத் தேடுவது என்னும் கவலையில் மூழ்கியிருந்தார். முடிவாய் மண விஷயத்தில் மகளார் மனத்தை அறிதலே அறிவுடைமை எனத் தீர்மானித்து, தந்தையார் மகளாரை அருகழைத்துத் தாம் அறிய விழைந்த பொருளைத் தெரிவித்தார். நாணத்தினால் சிறிது நேரம் கோதையார் வாயினின்று சொல்லொன்றும் வெளி வந்திலது. சிறிது நகைமுகம், பாதங்களையே நோக்கும் கண்களில் ஒரு வித அனுதாபப் பார்வை,

மனத்தில் சிறிது கலக்கம்—இந்நிலையில் உள்ள கோதையாரின் அச்சத்தை ஆழ்வார் அறிந்தனர். இவரை உற்சாகப்படுத்தக் கருதிய பெரியார், "என் கண்மணீ, அச்சங்கொள்ளற்க! உன் நன்மையே நாடி நிற்கும் என்னிடம் உன் விழைவைத் தெரிவித்தற்கு நாணம் ஏன்? நீ திருமாலின் அருட் பிரசாதமன்றோ? உனக்கு உகப்பை உண்டாக்கு வது, அக்கண்ணனுக்கே களிப்பை உண்டாக்குவ தாகும் என்பதில் ஐயம் யாது? ஆதலின், உன் எண்ணத்தை முற்றுப் பெறச் செய்தலே என் கடமையாகும். உன் நல்வாழ்வன்றோ யான் நாடு வது! இவ்வுலகத்தில் அதனினும் இன்பம் எனக்கு வேறு யாது? ஆயினும், உன் வாழ்க்கையைத் தூய் மைப்படுத்தற்கு எம்பெருமான் உள்ளான். அதைக் குறித்துக் கவலைப்படுதற்கு அடியேன் யார்? யான் அவன் தூண்டிவிடும் கருவியாதலின், இங்குச் சிறிது அசைந்துகொண்டிருக்கின்றேன். எதற்கும் அஞ்சாமல் உன் நினைவைத் தெரிவிப் பாய்," என மகளாரை ஊக்கப்படுத்தினர். அது பொழுது நம் சூடிக்கொடுத்தாருக்குச் சிறிது தயக் கம் இருந்தது. சில விநாடிகள் மௌனமாயிருந் தார்; பின்பு தழுதழுத்த மெல்லிய குரலுடன், "அடியாள் உலக மக்களை நாடவில்லை! திருமால் மாட்டே என் மனங்கனிந்துள்ளது! அவன் பெரு மிதங்களே என் கண் முன் நிற்கின்றன! அவன் வீரம் என்ன! அவன் ஞானம் என்ன! சக்கர மேந்திய அவன் கரத்தின் அழகு என்ன! அவன் உறையும் இடங்களின் பெருமை செப்பற் பாலதோ! அவனிடமே சேர்ப்பிக்குமாறு உம்மை

இறைஞ்சுகின்றேன்!'' என மன்மதனை வேண்டி நின்றது போன்றே பெரியாழ்வாரையும் இறைஞ்சுகிறார்.

இச்சொற்கள் ஆழ்வார் செவியுள் நுழைந்தன. இவர் ஊன்றிய எண்ணம் அவருக்கும் மகிழ்வையும் வியப்பையும் கவலையையும் விளைவித்தது. ஏன்? எம்பெருமான் கனவில் இவரைப் பற்றிப் பகர்ந்த உயர்நிலையிலேயே இவர் ஊன்றி இருத்தலை நோக்க அவருக்கு எங்ஙனம் ஆனந்தம் உண்டாகாமலிருக்கக்கூடும்? 'மாயப் பெருமான் நம் மகளை இச் சரீரத்துடன் யாங்ஙனம் ஏற்றுக்கொள்வான்!' என நினைக்குங்கால் அவருக்கு வியப்பு ஏற்படாதோ? 'அடியார்க்கு எளியன் நம் மகளை அங்கீகரிக்கவில்லையேல், இவள் கதி என்னாகும்!' எனக் கருதும் போது அவர் கவலையுறாது என் செய்வார்?

ஆயினும், ஆழ்வார் தம் மனத்தைச் சிறிது தேற்றிக்கொண்டு, மகளாரை விளித்து, "அம்மணி, வாத்ஸல்யம் முதலிய ஆறு குணங்களும் முற்றும் விளங்க அர்ச்சாவதார மூர்த்தியாய் நூற்றெட்டுத் திருப்பதிகளிலும் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களுள் நீ யாரை அடைய விழைகின்றனை?' என்று வினவினர். ஸ்ரீமந்நாராயணனே எல்லாத் திவ்விய தேசங்களிலும் எழுந்தருளியிருப்பினும், ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வொரு குணமும், ஒவ்வொரு செயலும், ஒவ்வொரு பெருமிதமும் சிறப்பாகப் பிரகாசிக்கும் என்பது அறிஞர் அறிந்ததே! இம்முறையில் மக்கள் தங்கள் தன்மைக்கேற்ற குணஞ் செயல்களைப் பெற்றுள்ள பெருமானை விரும்புதல் இயல்பு.

இதை மனத்திற்கொண்டுதான் பெரியாழ்வார் தம் மகளாரை இங்ஙனம் கேட்கத் துணிந்தார்.

ஆழ்வார் கேட்ட கேள்வி ஆண்டாளை மிக்க ஆராய்ச்சியில் புகுத்திற்று. உடனே விடை அளிக்க இவர் மனம் இசைந்திலது. இவர் நூற்றெட்டுத் திருப்பதிப் பெருமான்களின் குணசேஷ்டிதங்களையும் தம் தந்தையாரிடமிருந்து அறிய ஆர்வங் கொண்டார். இவர் விழைந்தவாறே ஆழ்வார் ஒவ்வொருவர் சிறப்பையும் வரன்முறையாய்த் தம் மகளார்க்கு எடுத்தியம்பினர். அவ்வமயம் திருவேங்கடமுடையான், திருமாலிருஞ்சோலை நம்பிகளுடைய இனிய நலங்களை இயம்புங்கால் இவர் நெஞ்சம் உருகிற்று. கண்களில் நீர் கான்றது. அப் பெருமான்களின் செயல்களும், பெருமிதங்களும் இவர் முன் நின்றன. அவணுள்ள இயற்கைப் பொருள்களுள் சில திருமாலிருஞ்சோலை நம்பியின் நிறத்தைக் காட்டின. இவர் கூடலிழைக்கும்போது அந்நம்பியின் எண்ணமே இவருக்கு ஏற்பட்டது. அன்னையார் அப்பெருமானுக்கே எல்லா உணவுப் பொருள்களையும் கொடுத்துத் தாமும் தொண்டு புரிய விரும்புகிறார். பின்பு திருவேங்கடமுடையான் உயரிய குணங்கள் இவர் மனத்தைக் கவர்ந்தன. "அவன் குணங்களைப் பாடியேனும் என் ஆவியைக் காப்பேன்," என்றும், "அவன் ஒரு நாளேனும் என்னிடம் தங்கினற்றன் என் ஆவி தங்கும்," என்றும், "அடியாள் விண்ணப்பத்தை அவனுக்குத் தெரிவியுங்கள்," என்றும் மேகங்களை நோக்கி இயம்புகின்றார். இந்நிலையில் இவருக்குப் பல உணர்ச்சிகள் உண்டாகின்றன.

"வள்ளல் மாலிருஞ் சோலை மணாளனார்
பள்ளி கொள்ளும் இடத்தடி கொட்டிடக்
கொள்ளு மாகில்நீ கூடிடு கூடலே!"[1]

"நாறு நறும்பொழில் மாலிருஞ் சோலை நம்பிக்குநான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி [வைத்தேன்
நூறு தடாநிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்று வந்திவை கொள்ளுங் [கொலோ!"[2]

"சங்கமா கடல் கடைந்தான் தண்முகில்காள்! [வேங்கடத்துச்
செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்;
கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து [ஒருநாள்
தங்குமேல் என்னாவி தங்குமென் றுரையீரே."[3]

என்னும் பாசுரங்கள் இங்கு நினைவு கூர்தற் குரியன.

இறுதியில் ஆழ்வார் நூற்றெட்டுத் திருப்பதி களுள்ளும் உயர்வுற்றதும், பழமையானதுமான அரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனும், பெரிய பெருமாள், நம்பெருமாள், திருவரங்கன் என்னும் திருநாமங்களைப் பெற்றவனும், ஆழ்வார்கள் பலருடைய மங்களாசாசனத்திற்கு அருகனானவனும், பட்டர் முதலிய ஆசாரியர்களின் தொண்டுக்கு இலக்கானவனும், திருமங்கையாழ்வார் எடுத்த அன்பே

1. நாய்ச்சியார் திருமொழி, 4 : 1.
2. 9 : 6. 3. 8 : 7.

உருவெனக் கொண்ட அரணில் அமைந்தவனும், ஏழு அரண்களுக்குள் அரசனென வீற்றிருப்பவனும், உலகாசிரியர் எதிராஜரைக் கைங்கரியத்தில் ஈடு படுத்தியவனும், பிள்ளை உறங்கா வில்லி தாசரைத் தன் கண் அழகில் அகப்படச் செய்தவனும், இன்னும் பல சீர்மைகள் வாய்ந்தவனுமான திரு வரங்கேசனின் சிறப்பியல்புகளை எடுத்தியம்பினர். யாவர் மனத்திலும் உறையும் எம்பெருமானே அழக ராகவும், திருவேங்கடமுடையானாகவும் சேவை அளித்தபோது, அளவோடு நின்ற ஆர்வம், திருவரங் கனைத் தோன்றிய போது அணை கடந்து பாய்ந் தது. அவனுடைய நாகணை அழகு, அவனுள்ள காவிரி நதி, திண்மதில்கள் யாவும் இவருக்குக் காட்சி அளித்தன. சிறிது நேரம் இவர் தயங்கி நின்றார். இவர் வாய் துடித்தது; கண்கள் சுழன் றன; 'இப்போதே திருவரங்கேசனைச் சென்றடைய வேண்டும்!' எனக் கருதினர். ஆர்வம் பெருகிற்று. 'அந்தோ! யான் எப்போது செந்தாமரைக் கண்ண னை அவ்வெம்பெருமானைச் சென்றடைவேன்! இன்னும் எத்தனை நாட்கள் இங்ஙனம் துடிப்பேன்! கலைகண் அற்ற என் அழகு வளை முதலிய பல வற்றையும் கவர்ந்த அவன், என் உடலையும் கொள்ளை கொள்வான் போலும்!' எனப் பலவாறு கருதினர். கண்ணீர் ததும்பிற்று. இவ்வாற்றாமையை ஆழ்வார் அறியாவண்ணம் மறைக்கவும் இவரால் இயலவில்லை. தம்மாற்கூடியவரை துயரை உள்ள டக்கினர்; ஆயினும், தந்தையாருக்குத் தம் எண் ணத்தை ஒருவாறு தெரிவிக்க வேண்டுமே!

"தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்
ஆமுகத்தை நோக்காரால் அம்மனே அம்மனே !"[1]

"மச்சணி மாட மதிளரங்கர்
என்னுடைய பெய்வளைமேல்
இச்சை யுடையரேல் இத்தெருவே போதாரே."[2]

"காவிரிநீர் செய்ப்புரள வோடும் திருவரங்கச் செல்வனார்."[3]

எனத் தாம் திருவரங்கனையே அடையக் கருதுவதை அவரிடம் வெளியிட்டார்.

இங்கு வடநாட்டுச் சுயம்வர முறை நினைவிற்கு வருகிறது. ஒரு மன்னனுடைய அருமைப் புதல்வி, தன் தோழிகளாலும், அரச அவைக்குப் போதரும் தூதுவர்களாலும், அந்தந்த நாட்டின் வரலாற்றுச் சரிதங்களாலும், தன் தந்தையாராலும் வேறு நாட்டு மன்னர்களின் கல்வி, செல்வம், அறிவு, குணம், குலம், வீரம் முதலியவற்றையும், அவர்கள் முன்னோர் களின் நிலை முதலியவற்றையும் உணர்ந்திருப்பாள். அவர்களுள் சிலரே சிறந்தவராக அவளுக்குத் தோன்றுவர். அச்சிலருள்ளும் சிறந்த ஒருவரையே மணக்க உறுதி கொண்டு காலத்தை நோக்கிக் கொண்டிருப்பாள். ஒரு போது அவள் தந்தை, அவளுக்குச் சுயம்வரம் எனப் பறை சாற்றி, மன்னர் யாவரையும் தன் நாட்டிற்கழைப்பான். யாவரும் திரண்ட பின்பு, அவள் தோழி அம்மன்னர் இடையில் அவளை அழைத்துப் போந்து, ஒவ்வொருவருடைய

1. நாய்ச்சியார் திருமொழி, 11 : 1.
2. 11 : 4. 3. 11 : 6.

குணம், குலம், வீரம் முதலியயாவற்றையும் விளக்கு வாள். இங்நிலையில் தான் குறித்துள்ள மன்னர் வருங்கால், தோழி இயம்பும் செய்திகளைக் கருத்துடன் செவி ஏற்று, அவர் தம் முகவனப்பு, தோற்றம், கண்ணோட்டம் முதலியவற்றை நன்கு கூர்ந்து நோக்கி, அவருள் சிறந்தவரும் தன்னியல்பிற்கு ஏற்றவருமான ஒருவரையே வரித்து மணமாலை இடுவாள். அரசிளங்குமரி தன் மனத்திற்கிசைந்த மணாளனைத் தானே தேர்ந்து வரிப்பதால் இதற்குச் '**சுயம்வரம்**' என்று பெயராயிற்று. இதுவே வடநாட்டுப் பண்டை மண முறை. இதைத் **தமயந்தி, திரௌபதி, சந்திரமதி** என்பவர்கள் வரலாறுகள் விளக்கும்.

இங்ஙனமே பெரியாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்களைப் பற்றியும் பகரினும், அவருள் திருவேங்கடத்தான், திருமாலிருஞ்சோலை அழகன், திருவரங்கன் ஆகிய மூவரே இவருக்குச் சிறந்தவராய்த் தோன்றினர். ஆனால், மனக் கண்ணிற்குக் காட்சியளித்த இம்மூவருள் இவர் திருவரங்கநாதனையே தேர்ந்தெடுத்தார். நம் அன்னையார் திருமணம் முற்றும் வடநாட்டுக் கொள்கையையே சார்ந்ததெனக் கூறுதற்கு இடமில்லை. தமிழ் நாட்டிற்பிறந்து வளர்ந்து, வண்டு தமிழ்ப் பாட்டிசைக்கும் மலர்களையே சூடி, தமிழ்ப் பாக்களினாலேயே இறைவனை வழுத்தி, தமிழ் நாட்டு எம்பெருமானையே சேரக் கருதிய கோதையாரின் மணம், தமிழ் வாழ்க்கையையே முற்றும் பொருந்

# இளமையின் இன்னலம்

## 1. பிள்ளைத் தமிழின் பெருமை

பிள்ளைத் தமிழ் என்பது ஒரு பிரபந்தம். தமிழ் நூல்களுள் இஃது ஓர் உயரிய இடத்தைப் பெற்றுள்ளது. 'பிள்ளை' என்பது, 'மகவு', 'குழந்தை' என்பன போன்று இரு பாலாரையும் குறிக்கும் ஒரு பொதுச்சொல். பிறந்த நாள் தொடங்கிச் சில ஆண்டுகள் வரையும் குழந்தைகளுக்கு இப்பெயர் வழங்கி வருகிறது. இப்பருவத்தில் நிகழும் செயல்களை வெளிப்படுத்தும் நூலைப் 'பிள்ளைத் தமிழ்' என வழங்குகின்றனர். இதைச் சிறிது சிந்தித்தல் வேண்டும். பச்சைப்பசுங்குழவிக்குப் பிள்ளை எனப் பெயரமைந்தது பொருந்தும். ஆனால், அப்பிள்ளையின் நிகழ்ச்சிகளைத் தமிழ் எனப் பகருதல் யாங்ஙனம்? சிலர் இந்நூல் தமிழ் மொழியில் இருத்தலின் இதற்கு இப்பெயர் வாய்ந்தது எனச் செப்புவர். இக்கருத்து அத்துணைச் சுவையுடைத்தன்று. குழந்தைப் பருவத்தில் நிகழும் அசைவு, நகைப்பு, நடை, ஓட்டம், ஆட்டம், பேச்சுயாவும் இனிமை உடையன அல்லவா? அவ்வினிய செயல்களை இனிமை பொருந்திய சொற்களினாற்றானே வெளியிடுதல் வேண்டும்! அவ்வினிய சொற்கள் எம்மொழியில் அமைந்துள்ளன? தமிழிலா, வேறு மொழிகளிலா? இங்குச் "செந்திறத்த தமிழோசை", "பாலேய் தமிழர் இசைகாரர்" என்னும் ஆழ்வார்கள் அருள் வாக்குகளை நோக்குக! தமிழ் வேறு இனிமை வேறு எனப் பிரித்தற்கியலுமோ? தமிழே இனிமை.

இனிமையே தமிழன்றே? ஆதலின், பிள்ளையின் இன்செயல்களைத் தெரிவிக்கும் நூலை இனிய மொழியிலே வெளியிட்டு அக்குறிப்பு யாவருக்கும் வெளிப்படையாகப் புலப்படுதற்பொருட்டு அதற்குப் பிள்ளைத்தமிழ் எனப்பெயரிட்டனர் போலும்!

இதுமட்டுமன்று; பிள்ளைச் செயல்கள் யாவும் இயற்கையே வடிவெனக் கொண்டுள்ளன. அவற்றுள் பொய்ம்மையும் செயற்கையும் ஒரு சிறிதும் கலத்தல் இல்லை. இதனுற்றான் குழந்தை, தெய்வம் எனக் கொண்டாடப்படுகிறது. அறிஞர், குழந்தைக்கும் தெய்வத்திற்கும் வேறுபாடு காணுதல் இல்லை. 'குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில் உண்டு,' என்னும் பழமொழியும் வழங்கி வருகிறது. ஏசு கிறிஸ்து, "இளங்குழவிகளை என்னிடம் வர விடுங்கள்; பரலோக ராஜ்யம் அவர்களுடையது," எனக் கூறினர். கண்ணன் நாள் முற்றும் இடைச்சிருரோடும், இடைச்சிறுமியரோடுமே இன்பமாய்ப் பொழுது போக்கினன். இவை யாவும் எவற்றைத் தெரிவிக்கின்றன? இறையும் குழந்தைகளும் ஒன்றென்பதை அல்லவா? இத்துணைத் தெய்வத்தன்மை பொருந்திய பிள்ளைகளின் நிகழ்ச்சிகளைத் தெரிவிப்பதற்குத் தெய்வத்தன்மை வாய்ந்த மொழிதானே பொருத்தமுடையதாகும்? ஆதலினுற்றான், இளங்குழந்தைகளின்போக்கை இயம்பும் நூலிற்குத் தமிழ் என்னும் சொல்லையும் பொருத்திப் **பிள்ளைத் தமிழ்** என்னும் பெயர் சூட்டினர் போலும்!

இப்பிள்ளைத்தமிழ் ஓர் அகநூலாகும். 'அகம்' என்பது 'உள்ளம், நெஞ்சம்' எனப் பொருள்படும்.

யினும் இனிமையைத் தருகின்றன, இத்தன்மை யைப் பற்றிப் பேசுகின்றவர் யார்? மனத்துறவு கொண்ட திருவள்ளுவர் என்பதை அறியாதார் உண்டோ?

"அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்."

"மக்கள்மெய் தீண்ட லுடற்கின்பம்; மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு."

"குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்."

—திருக்குறள்

முற்கூறிய அகநூலில் உள்ளது, யாவற்றிலும் ஒத்திருக்கும் தலைவனும் தலைவியும் கலந்து நுகரும் இன்பம். பிள்ளைத்தமிழில் சொல்லப்படுவதோ, இளங்குழவியும் பெற்றோரும் இருந்து பெறும் இன்பம். முன்னதில் இருவருள் ஒருவருக்கு இன் ெனாருவரைக் காணுந்தோறும் காணுந்தோறும் இன்பம் பெருகாநிற்கும். பின்னதில் பெற்றோரைக் காணுங்கால் பிள்ளைக்கும், பிள்ளையை நோக்குங் கால் பெற்றோருக்கும் இன்பம் ஊற்றெடுத்துப் பாயா நிற்கும், இவ்விரு திறத்தினரும், தாம் பெற்ற இவ்வின்பத்தைக்காட்டிலும் சிறந்த இன்பம் வேறொன்று இருப்பதாகக் கருதார்; இஃதே உயர்ந்த பேறு என்றும், இதனினும் வீட்டின்பம் வேறு இல்லை என்றும், இஃது என்றும் அழியாததென்றும், தம் வாழ்க்கையே இன்ப வாழ்க்கை என்றும், இவ் வின்ப வாழ்க்கையை அடையப் பெறாதவர் பயனற்றவரே என்றும் மணமக்களும் பெற்றோரும்

நினைத்தலை உலகப் போக்கில் காணலாம். அவரவர்கள் நலம் அவரவர்களுக்கு மேம்பட்டதாகத் தோன்றல் உலக இயல்புதானே!

இங்ஙனம் பல தன்மைகளில் அகநூற்கும் பிள்ளைத் தமிழிற்கும் ஒப்புக் காணப்படினும், அகநூலைக்காட்டிலும் பிள்ளைத்தமிழ் சிறந்தது என்பது அறிஞர் கருத்து. இதற்குக் காரணங்கள் இல்லாமற் போகவில்லை. சின்னஞ்சிறு குழவியினிடத்தில் படிப்படியாக நிகழும் செயல்கள் இயற்கையிலிருந்து எழுவன; தம்மை அறியாமலே உண்டாவன; பிள்ளைகள் முயன்று பெறுவன அல்ல; பெற்றோருக்கு மட்டுமேயன்றி, மற்றோருக்கும் இன்பம் தருவன; துன்பங்கலவாதன; வஞ்சனையற்றன; ஒவ்வொரு குழந்தையினிடத்தும் நிகழப்பெறுவன; தன்னலமற்றன; பிறர் இன்பத்திற்கே கருவியாக உள்ளன. இது புனைந்துரைத்தலுமன்று; பொய் கலந்தது மன்று. காலம், தேசம், மொழி, குலம் முதலியன இளம்பிள்ளைகளிடம் காணப்படும் பருவச் செயல்களை வேறுபடுத்தல் இல்லை. இதனாலேயே இவை இயற்கை எனத் தோன்றவில்லையா? காகத்தின் இளங்குஞ்சினிடமும் அழகு அமைந்துள்ளது. காகத்திற்குத் தன்குஞ்சு பொன்குஞ்சன்றோ? அங்ஙனமாயின், நம் இளங்குழவிகளைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ! இளங்குழவியினிடத்து ஒரு தனி அழகு காணப்படுகிறது. அதன் செயல்களிலோ, அளப்பரிய அழகும் இன்பமும் தோன்றுகின்றன.

இன்னதன்மை வாய்ந்த பிள்ளைச் செயலில் ஈடுபட்டு இன்பந்துய்க்குங்கால், பழி கூறுவார் இல்லை;

வேண்டாவென அறிவு கற்பிப்பார் இல்லை; மேன் மேலும் செய்யத் தூண்டுவாரே உளர். அச்சமில்லை; நாணமில்லை; மறைதல் இல்லை; ஆற்றுமை இல்லை; அலர் தூற்றல் இல்லை; உறக்கமின்மை இல்லை; ஊணொழித்தல இல்லை; உடல் மெலிதலோ வெளுத் தலோ இல்லை; இங்ஙனமாயின் இவ்விரு நூல்களுள் இன்பச்சுவையில் தலைசிறந்த நூல் எஃது என்பதை விளக்கிச் சொல்லுதலும் வேண்டுமோ!

இவை மட்டுமே அல்லாமல், அகநூலில் உரைக் கப்படும் நிகழ்ச்சி கற்பனை என்றும், அஃதோர் இலக்கணமேயன்றி, இலக்கியமாகச் சான்று காட்டு தற்கு இம்முறையில் ஒருவர் வாழ்க்கையேனும் நடைபெறவில்லை என்றும், கோவை யாவும் கோத் துக் கூறியனவே என்றும், பேரின்பத்தை நாடி நின்ற ஆன்றோர்க்கும் இறைவனுக்குமே இச்செயல் கள் நிகழ்ந்திருக்கின்றன என்றும், அந்நிலையை விளக்குதற்பொருட்டே சிற்றின்பத்தைப்போன்று காணப்படும் இந்நூல்கள் எழுந்தன என்றும் சாற்றப்படுகின்றன.

ஆகவே, உலகியலில் நடைபெருத ஓர் அனுபவத் தில் இன்பம் இருப்பதாகக் கருதும் காதலரின் போக் கிற்கும், எளியவர் செல்வர் என்னும் வேறுபாடின்றி ஒவ்வோர் இல்லத்திலும் பலரும் காண நாடோறும் நடைபெறும் பிள்ளைகளின் இன்பப்போக்கிற்கும் எத்துணை ஏற்றத்தாழ்வுள்ளன! இம்முறையில் அகப்பொருள் நூலைவிடப் பிள்ளைத்தமிழ் நூல் பல வகையிலும் பெருமை வாய்ந்ததெனக் கூறவும் வேண்டுமோ! இது நிற்க.

பிள்ளைத்தமிழ் என்பது, ஆண்பாற்பிள்ளைத் தமிழ் பெண்பாற்பிள்ளைத்தமிழ் என இரு வகைப் படும்.

ஆண்பாற்பிள்ளைத்தமிழ், காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிறு பறை கொட்டல், சிற்றில் சிதைத்தல், சிறுதேருருட் டல் என்னும் பத்துப் பருவங்களை உடையது.

பெண்பாற்பிள்ளைத்தமிழ், ஆண்பாற் பிள்ளைத் தமிழில் முதற்குறித்த ஏழுடன் சிற்றில் செய்தல், கழங்காடல் (அம்மானை), ஊசலாடல் ஆகிய மூன்றும் பெறும்.

## 2. ஆண்டாளின் பிள்ளைப்பருவச் செயல்கள்

இனி ஆண்டாள் பிள்ளைப்பருவத்தைக் குறித் துக் காண்பாம்: பெரும்பான்மையும் ஒரு பிள்ளை யின் பருவத்தைப்பற்றிப் பிறர் சொல்வதுதான் வழக்கு. ஆழ்வார்களுள் குலசேகரர், சக்கரவர்த்தி திருமகனைத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டும் முகத் தான் அப்பெருமான் அவ்வவதாரத்தில் செய்த வீரச் செயல்களையெல்லாம் வெளிப்படுத்துகிறார். இதை ஒருவகையான பிள்ளைத்தமிழ் எனக் கூறலாம். பெரி யாழ்வார், கண்ணனுடைய பிள்ளைப் பருவச்செயல் ஒன்றையும் விடாமல் இருபத்தைந்து திருமொழி களால் கற்பவர் கண்ணிற்கு விளக்கமாகக் காட்சி யளிக்குமாறும், நெஞ்சம் கனிந்து உருகுமாறும் பகர்ந்துள்ளார். அஃதன்றியும், இவ்வாழ்வார் தாம் பாராட்டிச் சீராட்டி வளர்த்த நம் அன்னையாரின் இளமை விளையாட்டுகளையும் காண்கின்றார். இவ

ருடைய தெய்வத்தன்மை பொருந்திய பிள்ளைமைத் தொழில்கள் அவருக்கு வியப்பையும் உவகையையும் ஊட்டுகின்றன. அவை உள்ளடங்காமல் பாசுரங் களாக வெளிக்கிளம்புகின்றன.

"என் அருமைச் சிறுமகள், புழுதி உடலை மறைக்க, ஒன்றிற்கொன்று பொருத்தமற்ற பேச்சை யுடையவளாய், சிவந்த நூலால் செய்யப்பட்ட சிறு ஆடையைச் செம்மையுற அரையில் தங்குமாறு உடுக் கவும் தெரியாதவளாய் இருக்கின்றனள். இத்தகைய இளமை வாய்ந்த இவள், சிறு மட்கலத்தையும், சிறு முறத்தையும் கையிலிருந்து நழுவவிடாது, அரவை அணையாகக் கொண்டு பள்ளி கொள்ளும் பெருமா னோடு கலந்து வருகின்றாள்.[1]

"நுண்மையும் வெண்மையுமான மணல் கொண்டு முற்றத்தில் சிறு இல்லங்களைக் கட்டத் தொடங்கினும், சங்கு, சக்கரம், தண்டு, வாள், வில் ஆகிய எம்பெருமான் ஆயுதங்களையொழிய மற்றொன் றையும் இழைக்க ஒருப்பட்டாளில்லை. இவளுக்கு இன்றுவரையும் கொங்கை குவிந்தெழுந்திலது. இத் தகைய இவளுடைய இளமையை நோக்கின், கண்ண பிரானோடு இவள் இணக்கங்கொண்டுள்ளாள் எனச் சொல்லுதற்கியலவில்லை. இவள் செயல்களைக் காணிலோ, 'இவளுக்கு அவனோடு தொடர்புள் ளதோ!' என ஐயங்கொள்ள இடமேற்படுகிறது. இந்நிலையில் ஒன்றையும் தீர்மானிக்க முடியாமை

1. பெரியாழ்வார் திருமொழி, 3 : 7 : 1

யின், என் நெஞ்சம் தடுமாற்றமடைந்துள்ளது!" என்கிறார் பெரியாழ்வார்.[1]

இங்ஙனம் பெரியோரெல்லாம் பிறர் இளமைப் பருவத்தைப்பற்றிச் செப்பியுள்ளதையே காண்கின்றோம். ஆனால், பெரிய பிராட்டியாருக்கு ஒப்பானவரும், செல்வம் விளையும் நிலம் போன்றவரும், நல்லாரைப்போன்றே தீயாரையும் தாங்கி நிற்பவரும், உலகில் தோன்றியும் உலக மயக்கில் சிக்குண்ணாதவரும், சொல்லிலும் செயலிலும் எம்பெருமானையே ஒன்றி நிற்பவரும், தந்தையாரின் அடியொற்றி நடப்பவரும், ஞானபத்தி வைராக்கியங்களில் தலைநின்றவரும், தாம் சூடிய மாலைகளினால் வடபத்திரசாயியை அழகு பெறச்செய்தவரும் கண்ணனையே கருத்திலிருத்தியவரும், மேற்கொண்ட காரியத்தை முடிக்கும் வன்மையுடையவரும், 'வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டும்' எனப் பெரியாழ்வாரே தம் பேற்றிற்குக் காரணம் எனக் கருதியவருமாகிய நம் கோதையார், தம் பிள்ளைப் பருவத்தைத் தாமே வெளியிடுகிறார். இவர் ஆழ்வார் திருமாளிகையில் வளர்ந்த நிலை வியப்பிற்கிடமானது; ஆழ்வார் பத்தி கலந்த பாலையே தம் குழவிக்கு ஊட்டுகிறார். மகளாரின் அருட்குணங்களும், வீரச்செயல்களுமே இவருக்குத் தாலாட்டாய் அமைகின்றன. ஆழ்வார் அன்பு மணம் கமழும் நீரிலேயே கோதையார் குடைந்தாடுகிறார்.

---

1. பெரியாழ்வார் திருமொழி, 3 : 7 : 3

ஆண்டுகள் சில செல்கின்றன. சிறுமியர் தம் மழலைச்சொற்களால் தந்தையாரை மகிழ்விக்கிறார். இவர் பேசும் பேச்சுக்கள் யாவை? பெருமாள் ஆனைக்கருள் புரிந்ததும், சங்கொடு சக்கரம் ஏந்தியதும், கடல் வண்ணத்தைப் பெற்றதுமேயாகும். இனிய மழலையில், இன்பச்சுவை துன்னும் இத்தெய்விகச் சொற்களும் கலக்குமாகில், இதன் பெருமை இயம்பற்பாலதோ! இவை பெரியாழ்வாருக்குத் தேனும், பாலும், கன்னலும், அமுதும் கலந்தெனை இனித்தன.

நம் நிலமங்கையார், பெரியாழ்வார் வீட்டிற்கும், குலத்திற்கும், உள்ளத்திற்கும் விளக்கென ஒளிர்கின்றார். வேயர் பயந்த விளக்கல்லவா இவர்! ஆழ்வார், தாய் தந்தையராகிய இருவர் பொறுப்பையும் தாமே மேற்கொண்டு சிறுமியரை வளர்த்தது யாவருக்கும் மிக்கவியப்பை விளைத்தது. கோதையாருக்கு ஆழ்வார்மாட்டிருந்த அன்பும் மதிப்பும் அளக்கற்பாலனவல்ல. தேவியார் தந்தையாரிடமே கல்வி பயின்றார்.

முன்பு நிதியைத் திரட்டி வைத்தவர், பின்பு துன்பமின்றி அதை அடைதல் போன்று, தெய்வச் சிறுமியராகிய அன்னையார், சின்னாட்களிலேயே யாதொரு துன்பமுமின்றி எல்லாக்கலைகளும் நிரம்பப் பெற்றார். இது கற்றோர் கருத்தைக் கவர்ந்தது. தம் தந்தையாரும், மற்றப் பிரபன்னரான பாகவதரும் இடைவிடாது பாசுரங்களைப் பாடி எம்பெரு

மானைத் துதித்தலையும், தம்மைத்தாம் மறந்து இறையன்பில் மூழ்கி இருத்தலையும் இளமை தொட்டே நோக்கிக்கொண்டிருந்த ஆண்டாளுக்கு அப்பழக்கமே பண்பாய் அமைந்தது. இவரும் சொன்னயம், பொருள்நயம் நிறைந்த பாசுரங்களைப் பாடுவார்; அவன் லீலைகளைச் சொல்லிக்கொண்டே தம்மை அறியாமல் நடிப்பார்; கண் மூடி இருப்பார். இவை யாவும் பெரியாழ்வாரை ஆனந்தக் கடலில் ஆழ்த்தின.

ஆண்டாள் மிக்க இளம்பருவத்தினர். இவருக்குத் தம்மொத்த சிறுமியருடன் சேர்ந்து விளையாடுதலில் விருப்பம் மிகுதி. விளையாட்டில் புகுங்கால் இவருக்கு உணவிலோ, உறக்கத்திலோ மனஞ்செல்லுதல் இல்லை. கழங்கு முதலியவற்றை மிக்க ஆர்வத்துடன் ஆடுகின்றார். புழுதியினால் இவர் உடலும் உடையும் வேறு நிறத்தை அடைகின்றன. தம் பருவத்திற்கேற்ற சிற்றாடையையும் செம்மையாக உடுக்கும் வகை அறியார். பிறர் உடுத்து விடினும், அதை நழுவாமலும், குலையாமலும் பேணவும் கற்றிலர். இவர், தாமும் தம்மைச் சார்ந்தவரும் சின்னஞ்சிறுமியர் என்பதை இரு நூல்களிலும் ஆங்காங்கே தெரிவித்துள்ளார்.

"சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !"[1]

"மேய்வான் பரந்தனகாண், மிக்குள்ள பிள்ளைகளும்"[2]

"பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்"[3]

"ஆயர் சிறுமிய ரோமுக்கு"[4]

1-4. திருப்பாவை, 1, 8, 13, 16.

" அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்றன்னை "[1]
" முற்றிலாத பிள்ளைகளோம் முலைபோந்திலாதோமை"[2]
" யாதுமொன்றறியாத பிள்ளைகளோமை நீ நலிந்தென்
பயன் ?"[3].

என்பனவற்றை நோக்குக.

அவ்வமயம் நம் அன்னையாருக்குச் சிற்றி லிழைத்து விளையாடுவதில் சிந்தை செல்கிறது. தம் மொத்த சிறுமியர் பலரையும் தம்முடன் கூட்டிக் கொள்ளுகிறார். ஆனந்தம் மிகுகின்றது.

ஒவ்வொருவரும் ஓடி ஓடி ஒவ்வொரு வேலை யைச் செய்கின்றனர். மட்குடம், நீர், வண்டலில் உள்ள சிறு மணல், சிறு சுளகு (முச்சில்) இவை யாவும் அங்கு வந்து குவிகின்றன. ஒருவரை ஒருவர் அழைத்தலும், பணிக்கு ஏவுதலும் பேரொலியைக் கிளப்புகின்றன. இவர்களுக்கிருக்கும் ஊற்றம் பெரிய அரண்மனையையும் கட்டி முடித்துவிடுவார் கள் போலத் தோன்றுகிறது! இக்கூட்டத்திற்குத் தலைவியார் கோதையாரே. மற்ற யாவரும் இவர் ஏவியவாறே செயல் புரிகின்றனர். அவர்கள் மணலைச் சிறு சுளகில் இட்டுக் கொழிக்கின்றார்கள். வண்டல் மண்ணும் அதனோடு கலக்கப்படுகின்றது. நீர் விட்டு மிதித்து அழகான சிறு இல்லத்தை அமைக்கின்றார்கள். சிறுமுற்றம், நீண்ட கூடங்கள், அழகிய அறைகள் யாவும் அவ்வில்லத்தில் அமை கின்றன. அழகு நோக்கி நோக்கி வளையணிந்த தம் சிறு கரங்களால் எத்தனை நேரம் இல்லத்தை அமைப்

1. திருப்பாவை, 28.
2. நாய்ச்சியார் திருமொழி, 2 : 7; 3. 2 : 8.

பார்கள், பாவம்! முதுகும் வலிக்கின்றது. இவற்றை நம் கோதையார்,

"வட்ட வாய்ச்சிறு தூதையோடு
சிறுசுளகும் மணலுங் கொண்டு"[1]

"வண்டல் நுண்மணல் தெள்ளியாம்
வளைக்கைகளால் சிரமப்பட்டோம்"[2]

"இன்று முற்றும் முதுகு நோவ
இருந்திழைத்த இச்சிற்றில்"[3]

எனத் தெரிவிக்கிறார்.

### 3. சிற்றிலிழைக்குங்கால் ஆண்டாள் கண்ட காட்சி

இவர் இங்ஙனம் குதூகலத்துடன் இழைத்த சிற்றிலின் முடிவு என்ன? திருவின் நாயகனான கண்ணன் எதிர் பாராவண்ணம் அவண் புகுகிறான்; மெல்லென அடிமேல் அடி வைக்கிறான்; அவன் நீல நிறம் எங்கும் பரவுகிறது. இம்மகளிரின் இல்லம், ஆடை, அணிகள் யாவும் அந்நிறத்தையே கொண்டு ஒளிர்கின்றன. சிறுமிகள் ஒன்றுந்தோன்றாது தயங்குகின்றார்கள். இவர்கள் கரங்கள், இயற்றும் வேலையை விடுகின்றன. கண்கள் சுற்றும் நோக்குகின்றன. இவர்கள் நோக்கை வேறு பக்கம் திருப்பவே கண்ணன் இம்மாற்றத்தை உண்டாக்கினான் என்பதை இச்சின்னஞ்சிறுமியர் எங்ஙனம் அறியக் கூடும்? இவர்கள் நோக்கு அவ்வில்லத்தை விட்டு நீங்கியதோ இல்லையோ, உடனே நெருங்கி, அழகிய

1-3. நாய்ச்சியார் திருமொழி, 2 : 8, 3, 2.

அவ்வில்லத்தைச் சிதைத்துப் புன்முறுவலுடன் நிற்கிருன் கண்ணன். இஃது அவனுக்கு ஒரு விளையாட்டு. இவர்களுக்கோ, நிறம் தவிர, அந்நிறத்திற்குக் காரணப்பொருள் ஒன்றும் தோன்றிலது. ஆதலின், மறுபடியும் தம் இல்லத்தின்மாட்டே தம் பார்வையைச் செலுத்தினர். உடனே நீலக்குன்றில் செந்தாமரை மலர்ந்ததென ஓர் உருவம் இவர்கள் கண்ணிற்பட்டது. அதன் குறுநகை இவர்கள் மனத்தைக் கவர்ந்தது. கண்ணன் அங்ஙனம் குறும்பு செய்யினும் இவர்களுக்கு அவன்மாட்டுச் சினம் உண்டாகிறதா? இதற்கு மாருக இவர்கள் உள்ளம் அவனை நோக்கி நோக்கி உருகுகிறது! இத்தத்துவத்தை இன்னதென உணர்ந்தார்; மிக்க வியப்புக்கொண்டார். அனுதியாக அமைந்த தொடர்பிற்கு இன்று நிகழ்ந்த இச்சிறு நிகழ்ச்சி பிரிவை ஏற்படுத்தி விடுமோ? ஆயினும், அவன் குறும்பை இவரால் பொறுக்க இயலவில்லை. "ஓ கண்ணு, இச்சிறு இல்லத்தோடு எங்கள் சிந்தையையும் அழிப்பாய் போலும்! உன்மாட்டே பித்தேற்றி எங்களை மயக்குகிருய்! எங்கள் நெஞ்சம் உன்னை விட்டு அப்புறம் இப்புறம் நகரமாட்டேன் என்கிறது. இங்ஙனம் செய்ய உன் முகம் என்ன மாயமந்திரமோ! அந்தோ! நீ எங்கள் வருத்தத்தை அறிந்திலையே! உன் முகம் சிவந்த தாமரைதான். ஆயினும், உன் நோக்கம் அங்ஙனம் காணப்பட்டிலதே! என் செய்வோம்! எங்குச் செல்வோம்! உன்னையன்றி வேறு கதியும் கண்டிலோமே!" என இறைஞ்சுகிருர் கோதையார். இவை யாவும் நம் அன்னையாருக்கு வெளிக்காட்சி

யல்ல; மனக்காட்சியே! அவ்வுள்ளத்தோற்றம், பல சொற்களை உருப்படுத்தி வெளிப்படுத்துகிறது. அவையே இப்போது நமக்கு ஆதரவு.

"தெள்ளி நாங்கள் இழைத்த கோலம்
அழித்தி யாகிலும் உன்றன்மேல்
உள்ள மோடி உருக லல்லால்
உரோட மொன்று மிலோம்."[1]

"எங்களை, மைய லேற்றி மயக்க உன்முகம்
மாய மந்திரந் தான்கொலோ!
செய்ய தாமரைக் கண்ணினாய்! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே."[2]

இம்முறையில் ஆண்டாள், தம் இளமை விளையாட்டாகிய சிற்றில் செய்தலில் தம் செயலை மட்டும் காண்கின்றாரல்லர். அங்ஙனமாயின், இவர் மற்றவரினும் மாண்புடையார் எனக் கூறுதற்கு இடனேது? அக்கால் இவருக்குக் கண்ணனுடைய பிள்ளைச்செயலுமன்றோ காட்சியளிக்கின்றது! பெண்மகள் சிற்றில் செய்தலும், ஆண்மகன் அச்சிற்றிலைச் சிதைத்தலுமல்லவா இருவர் பருவச் செயல்களாக அமைந்துள்ளன? அவற்றை எத்துணைச் சிறப்புறப் பேசுகின்றார் அன்னையார்!

தாம் கண்ணனை அடைந்து இன்பந்துய்க்க வேண்டுமெனக் கருதியக்கால், அவன் விரைவில் வந்து தம் விருப்பத்தை முற்றுப்பெறச் செய்யாமல் காலந்தாழ்த்து வந்தமையின் ஏற்பட்ட சினத்தினால் ஊடி, அவனைப் பாராதவர் போன்று சிற்றிலிழைக்

---

1-2. நாய்ச்சியார் திருமொழி, 2 : 5, 4.

கும் இஃது ஊடலைச் சார்ந்ததாகும் என்பது நம் ஆசாரியர்கள் கருத்து. ஆயினும், 'ஊடலின் உரம்' என்னும் கட்டுரையில் அப்பொருள் விளக்கமாகச் சொல்லியிருத்தலின், இங்குப் பிள்ளைத்தமிழிற்கு வேண்டுவன மட்டும் காட்டப்பட்டன.

## 4. ஆண்டாள் பிள்ளைத்தமிழின் அற்புதம்

நாம் முன்னர்க் குறித்த குலசேகராழ்வாரும் பெரியாழ்வாரும் வெளியிட்ட ஸ்ரீ ராமன் கண்ணன் ஆகிய இவர்களைப்பற்றிய பிள்ளைத்தமிழில் அமைந்துள்ளவை யாவை? அவரவர் இளமைப்பருவத்தில் நிகழ்ந்த செய்திகளே அல்லவா? அஃதன்றியும், அவற்றில் ஒருவர் செயலில் மற்றொருவர் செயல் கலந்து நிற்றலோ, யௌவனப் பருவச் செயல்கள் காட்சியளித்தலோ இல்லையல்லவா? இவைகள் இடங்கொள்ளாமல் இருத்தல்தானே பிள்ளைத்தமிழ் எனப்படும்?

நம் ஆண்டாளுடைய பிள்ளைத்தமிழோ இதற்கு மாறான நிலையிலல்லவா அமைந்துள்ளது! இவர் பாசுரங்களில் சில தாங்கள் சின்னஞ்சிறுமிகள் என்பதையும், சில மங்கைப் பருவத்தினர் என்பதையும் குறிக்கின்றன. அன்றியும், கண்ணனுடைய இரு பருவச் செயல்களும் அவற்றில் அமைந்துள்ளன.

ஆண்டாள் பிள்ளைப்பருவத்தைக் காட்டுவன: "இலங்கையை அழித்த வீரனே, கொங்கை கிளர்ந்தெழாத இளம்பிள்ளைகளாகிய எங்கள் சிற்றிலை நாடோறும் சிதைப்பதாகப் பாவித்து நீ செய்யும்

செயல்களின் உட்பொருளை அறியும் வன்மை எங்கட்கில்லை. ஆதலின், எங்களைத் துன்பப்படுத்த வேண்டா.[1]

"கடலையொத்த நிறம் வாய்ந்தவனே, உன்றன் பேச்சின் பாவத்தை அறியக் கூடியவரோடு இக் காதல் ததும்பும் பேச்சைப் பேசினால், மிகவும் சுவையைத் தரும். அங்ஙனமன்றி, அவற்றின் கருத்தறிய மாட்டாத சிறுமிகளாகிய எங்களிடம் அவற்றைப் பரப்பி வருத்துவதில் யாது பயன்? உன்னுடைய பத்தினிகளின் பேரில் ஆணை! எங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டா.[2]

"ஒளி பொருந்திய சக்கரமேந்திய கண்ண பிரானே, சிறுகலம், முச்சில், மணல் இவற்றைப் பெற்றுப் பிரியத்திற்கேற்ப இல்லமைத்து விளையாடும் எங்கள் மணற்கொட்டகைகளைப் பயன்படா வண்ணம் அழிப்பதனால் உனக்கென்ன நன்மை? நீ எங்களைக் கையால் தொட்டும் அணுகியும் துன்பப் படுத்த வேண்டா. நாவானது கசந்து போயின், கருப்பங்கட்டியும் கைக்கும் என்பதை நீ அறிவாயல்லவா!"[3]

ஆண்டாள் மங்கைப் பருவத்தைக் குறிப்பன: "தெளிந்த அலைகளையும் மிக்க ஆழத்தையுமுடைய திருப்பாற்கடலில் துயின்றவனும், கஜேந்திரன் துன்பத்தைத் தொலைத்தவனுமான கண்ண பிரானே, அடியார் துயரைத் தீர்க்கவல்ல உன் மாட்டு ஆர்வங்கொள்ளும் எங்களை உன் கடைக்கண்களால் நோக்கித் துன்புறுத்த வேண்டா. நாங்களோ, இவ்

1-3. நாய்ச்சியார் திருமொழி, 2 : 6, 7, 8.

வில்லமமைக்க வளையல்கள் அணிந்த கைகளினால் சிறிய மணல்களைப் புடைத்துப் புடைத்து மிகுதியும் களைத்துள்ளோம்.[1]

"காளமேகம் போன்ற நிறம் வாய்ந்த புண்டரீகாட்சனே, உன்னுடைய நயவார்த்தைகளும், தாழ்ந்த செயல்களும் எங்களை மயக்கி அறிவு கெடுக்கைக்கு உன்னுடைய முகமானது சொக்குப் பொடியோ! (மயக்கும் மருந்தோ!)[2]

"வஞ்சனை வாய்ந்த கண்ணனே, வெளுத்துச் சிறுத்த மணல்களைக்கொண்டு யாவரும் வியக்குமாறு அழகுபட அமைத்த சிற்றிலாகிய கோலத்தை நீ அழிக்கினும், எங்கள் நெஞ்சம் உன்னிடம் பாய்ந்து உருகுகின்றதேயொழிய, உன்மாட்டுச் சிறிதும் சினத்தைக் கொண்டிலது. அங்ஙனமிருக்க, உனக்கு எங்களிடம் அன்பும், உன் முகத்தில் கருணை நிறைந்த கண்களும் இருப்பின், இச்சிற்றிலைச் சிதைக்க முற்படுவாயோ![3]

"உன் திருவடியால் மண்ணும் விண்ணும் அளந்து கொண்டவனே, நாங்கள் தனித்து விளையாடும் முற்றத்தில் புகுந்து, அழகிய முகத்தையும், புன் சிரிப்பையும் காட்டி எங்கள் சிற்றிலையும் நெஞ்சையும் கட்டுக்குலையுமாறு செய்கின்றனை! அத்துடன் அமையாமல், எங்களைப் பற்றிக்கொண்டு அலக்கழித்து நின்றால் அருகில் நின்றவர் தங்களுக்குத் தோன்றியதைச் சொல்லி இகழமாட்டார்களோ?"[4]

---

1-4. நாய்ச்சியார் திருமொழி, 2 : 3, 4, 5, 9.

இச்செய்திகளால் நம் அன்னையாருக்குச் சிற்றில் அமைத்து விளையாடும் தம் இளமைப் பருவத்திலேயே மங்கைப் பருவ உணர்ச்சிகளும் உருக்கொண்டெழுவதாக அறிகின்றோம். இதற்குக் காரணம் யாது? ஆண்டாள் தம் இளம்பருவத்தில் தாம் சிற்றிலிழைத்துக்கொண்டிருக்கிறார். ஆயினும், இவர் நெஞ்சம் கண்ணன் மாட்டே பதிந்துள்ளது. உள்ளுவார் உள்ளக் கருத்துகளை அறியும் மாயன். கோதையார் மனக் கண்ணிற்குக் காட்சி அளிக்கிறான். அக்காட்சி இவர்க்குக் காதலைப் பிறப்பிக்கின்றது! அதற்கேற்ற சொற்களை வெளிப்படுத்துகிறார். இவர் காதல், உலக மக்களைப் போன்று சின்னாட்களில் மாறுபடும் உடற்காதலன்றோ! "என்று நீ அன்று நான் உன்னடிமையல்லவோ?" என்றவாறு ஆன்மாவிற்கும் பரமான்மாவிற்கும் அடியிலிருந்தே தோன்றி, என்றும் ஒரே தன்மைத் தாய் நிகழும் அழியாத ஆன்மக் காதலன்றோ! அழியாத இவ்விரு ஆன்மாக்களின் தோற்றத்திற்கும் கால வரையறை காணிலல்லவா, இக்காதலுக்கும் இதைக் காணக்கூடும்! அன்றியும், இவர் இருவருக்கும் இளமை முதுமை ஏது? கண்ணனோ, பரமான்மா; ஆண்டாளோ, அவனை விட்டு என்றும் பிரியாத இயல்புவாய்ந்த பிராட்டிமாருள் ஒருவராகிய உயரிய சீவான்மா. இத்தகையோர் உலக நலத்தின்பொருட்டன்றோ ஒருவரை விட்டு ஒருவர் பிரிகின்றனர்! அப்பிரிவு ஆண்டாளை வருத்தாமலிருத்தலும், அவ்வமயங்களில் பகவான் தோன்றி இவர் பிரிவுத் துன்பத்தைத் துடைக்காமலிருத்தலும் யாங்ஙனம்? கண்ணனும்,

சிற்றில் சிதைக்கும் தன் பிள்ளைச் செயலை மேற்கொள் வதையும், அப்போதே தன் பேச்சினாலும், அழகினாலும், செயலினாலும் காதற்கயிற்றை வீசி, அன்னையாரைக் கட்டுப்படுத்துவதையும் நோக்குக. ஆதலின், எங்கும் என்றும் காணாத இச்சீரிய செயல்களுக்கு இவர்களுடைய தெய்வத்தன்மையும், ஆன்மிகத் தொடர்புமே காரணமெனக் கொள்க. இதற்கு வேறு காரணம் கூற யாரால் இயலும்! ஆகவே, ஆண்டாள் சிற்றிலிழைத்த பிள்ளைப் பருவச் செயலில் இங்ஙனம் நாம் காணும் காட்சிகளும் அறியும் பொருள்களும் பலப்பலவாகும்.

# மடலின் மாண்பு

## 1. மடலின் இலக்கணம்

அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி முதலிய இலக்கணங்களமைந்த தலைமகன் ஒருவன் வேட்டையாடுதலை விரும்பி, தன் தோழர்களுடன் கானகஞ் செல்லுகிறான். நாண், மடம், அச்சம், பயிர்ப்பு ஆகிய பெண்மைப் பண்புகள் நிறைந்த தலைமகள் ஒருத்தி தன் தோழியருடன் மலர் வனத்தில் கழல் விளையாடிக்கொண்டிருக்கிறாள். இந் நிலையில் தெய்வ அருளால் இருவரும் ஒன்று சேர்கின்றனர்: இருவருடைய கண்களும் ஒன்றோடொன்று உறவு கொள்ளுகின்றன; அப்போதே இருவரிடையே தெய்வக்காதல் உருக்கொண்டெழுகிறது; இருவரும் கலந்து இன்பந் துய்க்கின்றனர். (இது துஷ்யந்தன், சகுந்தலையின் கலப்புப் போன்றது) இச்சேர்க்கை, இரு பகுதியினர் குடும்பத்தினரும் அறிய ஏற்பட்டதன்று ஆதலினாலும்,ஊழ்வினையினாலும் நீடித்துச்செல்ல இடந்தருதலில்லை. ஆதலின், உடனே ஒருவரை விட்டொருவர் பிரியுமாறு நேருகிறது. இப்பிரிவினால், இருவருக்கும் ஆற்றுமை மீதூர்கின்றது. அவர்க்கு மலர் சாந்து முதலிய குளிர்ந்த பொருள்களும் நெருப்பெனச் சுட அவர் நீராடாமலும், ஊணுறக்கங் கொள்ளாமலும் பெரிதும் துடிக்கின்றனர். இத்துன்பம் அவரால் தாங்க இயலவில்லை. அவர் உள்ளத்தில் எழுந்த காதல் வேறு எவ்வகையாலும் தணிந்திலது. எங்ஙனமேனும் தாம் அன்புற்ற பொருளை அடைய வேண்டும்

என்னும் எண்ணம் தவிர வேறொன்றும் அவர் உள்ளத்தில் இடம் பெற்றிலது. இந்நிலையில் "இது தகாதது; பழிப்பிற்கிடமானது; நம் குடிக்கு ஏற்காதது," என்பவைகள் அவர்க்குத் தோன்றுதல் யாங்ஙனம்? ஆகவே, பெண்மகள் பழிப்பிற்கஞ்சிச் சிறிது பொறுத்திருப்பினும், ஆண்மகன் அதை அடைதற்பொருட்டுத் தனக்கு அடாத காரியங்கள் சிலவற்றை மேற்கொள்ளுகின்றான். அவற்றுள் ஒன்று மடலூர்தலாகும்.

மடலூர்தல் என்பது, பிரிந்த தலைவன், தலைவியின் உருவத்தை ஒரு படத்தில் சித்திரித்து, இமை கொட்டாது அதையே நோக்கிக்கொண்டு, பனை மடலால் ஆக்கிய குதிரையில் ஊர்ந்து தலை விரி கோலமாகத் தெருத்தோறும் செல்வன்.

இம்மடலேறுதலைப்பற்றி இன்னொரு முறையும் சொல்லப்படுகிறது. மடலேற விரும்பும் தலைவன், உடையின்றி உடலெங்கும் நீறு பூசித் தான் கருதிய தலைவியின் உருவத்தைத் தானே தீட்டி, அதன் தலைப்புறத்தில் அவள் பெயரை எழுதி, அக்கிழியைத் தன் கரத்தில் பிடித்து, ஊர் நடுவே நாற்சந்தியில் ஊணுறக்கமின்றி, அக்கிழியின்மாட்டே நோக்கையும் சிந்தையையும் இருத்தி, வேட்கை வயத்தனாய், வேறு உணர்ச்சியற்று இருப்பான். அக்கால் பசு அவன் மீது பாயினும், நெருப்பு அவனைச் சுடினும் உணர்ச்சியற்று, மழை, வெயில், காற்றிற்கும் அவன் உள்ளம் உலையாதிருக்கும். அவன் நிலை

யின் குறிப்பறிந்த அவ்வூரார், " நீ மடலேற விரும்பு கின்றனையோ?" என வினவுவர். அதற்கு அவன் உடன்படின், அதை மன்னனுக்குத் தெரிவித்து, பனங்கருக்காற் குதிரையும், பனந்தருவினால் வண்டி முதலியனவுஞ் செய்த மடலில் அவனை ஏறுமாறு பணிப்பர். அப்போதே அத்தலைவன் பூளை, எலும்பு, எருக்கு முதலிய மாலைகளை அணிந்து அம்மடலில் ஏறுவான். நாட்டார் அதை வீதியில் ஈர்த்துச் செல்வர். அவ்வுருளை உருண்டோடும்போது பனங் கருக்கு அத்தலைமகன் துடையைக் கீறி அறுக்கும். அவ்வறுபட்ட இடத்தில் வீரியம் தோன்றின், அவன் விரும்பிய பெண்ணை அலங்கரித்து மணஞ்செய்து தருவர் என்றும், அங்குச் செந்நீர் தோன்றின் அது பொய்க்காதல் எனத் தீர்மானித்து அவனைக் கொலை செய்வர் என்றும் சொல்லப்படுகின்றன. மடலேறு தலில் இஃதொரு முறையாகும். இதுவும் மடலெனவே கொள்ளப்படுகிறது.

இச்செயல் மானமற்றதும் கொடியதுமாயிருத் தலின், இதை மேற்கொள்ளப் பெண்கள் இயல்பு இடந்தாராது என்பது தமிழர் கருத்து. ஆயினும், " கடல்போலக் கரையற்ற காமநோயால் வருந்ினும் மடலேறாது பொறுத்திருக்கும் பெண்ணைப்போன்று மிகுந்த தகுதியுடைய பிறப்பு உலகில் வேறெதுவு மிலது"[1] எனப் பெண்ணின் மனவடக்கத்தைப் பெரிதும் பாராட்டிய தெய்வப் புலவரே, அவர்களு டைய காதலும் சிலபோது கரை கடந்து சென்று

---

1. " கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்க தில் "

பலருமறிய நிற்கிறது என்பதை, "மகளிர் காமமும், 'இம்மங்கையர் கற்புடையராதலின், நாம் இவரை மேற்பட வெல்லுதல் இயலாது,' என்று அஞ்சாமலும், 'இரக்கங் கொள்ளுதற்கு இவர் உரியர்' என்று இரங்காமலும், அவர் மறைத்தலைக் கடந்து பலரறிய வெளிப்படுவதாயிற்று,"[1] என்றும், "யான் முன் அடங்கியிருந்தமையின், எல்லாரும் என்னை அறிந்திலர். இனி அங்ஙனம் அடங்கியிராமல், யானே வெளிப்பட்டு யாவருக்கும் அறிவிப்பேன்," என நினைத்து, "என் காமம் பலர் கேவலமாகப் பேசிக் கொள்ளுமாறும், பலர் தூற்றுமாறும் இவ்வூர்த் தெருவில் நின்று மயங்கிச் சுழலா நின்றது"[2] என்றும், இரண்டு குறட்பாக்களால் தெரிவிக்கிறார். இவற்றால் கரைகடந்த காதல் மகளிரையும் நாற்சந்தியில் இழுத்து வைத்துவிடுகின்றது என அறிகின்றோம். இதுவும் பெண்மைக்கு ஏலாத செயலாதலின் இதையும் ஒரு வகை மடலெனக் கொள்வர்.

இதற்குச் சில வரலாறுகளும் சான்று பகர்கின்றன :

தம் தந்தையார் தசரதரைச் சத்தியத்தில் நிலைநிறுத்த இராமபிரானார் கானகஞ்செல்ல ஒருப்படுகிறார். இதைச் செவியேற்றதும், ஒருவர் கண்ணிலும் புலப்படாமல் அந்தப்புரத்தில் மறைந்து வாழ வேண்டிய சீதாபிராட்டி, நாயகர்மாட்டுக் கொண்ட

---

1. "நிறையரியர் மன்னளியர் என்னாது காமம்
 மறையிறந்து மன்று படும்."

2. "அறிகிலார் எல்லாரும் என்றேஎன் காமம்
 மறுகின் மறுகும் மருண்டு."

அன்பின் பெருக்கினல், அவரைப் பிரிந்திருக்க ஆற்ருராய்ப் பழியையும், பலர்தூற்றலேயும் நோக்காது• கணவருடன் கால் நடையாய்த் தெருவில் நடந்து செல்ல முற்பட்டனர்.

வனப்பிற்சிறந்த வேகவதி என்பாளொருத்தி, வீரமகன் ஒருவனைக் காதலித்திருந்தாள். அவள் தமயன், தன் தங்கை அவனேடு கூட்டுறவு கொள்ளுதல் விருப்பமின்மையின், அவள் அவனைக் காணு வண்ணம் தடை செய்தான். அதற்குச் சிறிதும் அஞ்சாத வேகவதி பதறிச்சென்று போர்க்களத்திலிருந்த தன் காதலனைப் பற்றி நகரத்திற்குக் கொணர்ந்து கலந்து இன்புற்றனள்.

பார்த்தனைப் பார்த்துக் காதல் கொண்ட உலூபிகை என்கிற நாககன்னிகை அவனைத் தனது நகரத்திற்கு அழைத்துச்சென்று அவனேடு கூடிக் குலாவிக் களித்தனள்.

வாணனுடைய மகளாகிய உஷை, கனவிற் கண்ட அநிருத்தனிடம் மிக்க அன்பு கொண்டனள். அவனைத் தான் அடைதற்கு வேறு வழியின்மையின், மஞ்சத்தில் படுத்து உறங்குகிற அவனைத் தன் தோழி சித்திரலேகையால் தன்னிடம் கொணர்ந்து அவனேடு சேர்ந்து மகிழ்ந்தனள். இவை யாவும் பெண்மைக்குச் சிறிதும் சேராத அடாத செயல்களே அல்லவா? ஆதலின், இவை யாவும் மடலைச் சேர்ந்தனவேயாகும்.

**வி௵:** மகளிருடைய இச்செயல் ஒருபுற மிருக்க, ஆடவர் இங்ஙனம் தம்மை வருத்திக்கொண்டு மடலூர்வதனல் ஏதேனும் பயன் உண்டாகுமா?

**விடை :** ஆம் ; உண்டாகும்.

இங்ஙனம் ஒருவர் மற்றொருவரைப் பெறுதற் பொருட்டு மடலூருங்கால், இச்செயலைக் கண்ட மன்னன் முதலியோர், "என்ன வியப்பு ! ஒரு பொரு ளிடத்து இவனுக்கு இத்தனை வேட்கை உண்டாயுள் ளதே ! இதை முடித்துவைத்து இவனைக் காத்தல் நம் கடமையல்லவா ?" என்று அவர்களைக் கூட்டு வித்தல்.

இதைக்கண்ட தோழிமார் முதலியோர் இவர் களைச் சேர்த்து வைத்தல்.

இவர் செய்யும் செயலுக்காக இவரை வெறுத்து, உறவினர் கைவிட, அவரிருவருமே "அலக்குப் போர் போலே"[1] ஒருவர்க்கொருவர் புகலாய் அங்ஙனே கூடுதல்.

அவர் தம் ஆற்றாமை கூட்டுதல் ?[2]

பழிக்கு அஞ்சிச் சேர்தல்.[3]

---

1. அலக்குப் போர்போலே : ஈட்டிகளின் இரண்டு முனைகளும் பொருந்துமாறு சேர்த்து நிறுத்தினால், ஒன்றை யொன்று பற்றிக்கொண்டு விழாமல் நிற்கும். அதுபோலத் தலைவன் தலைவிகள் ஒருவரையொருவர் விடாமல் சேர்ந்து பற்றிக்கொண்டிருத்தல்.

2. **ஆற்றாமை கூட்டுதல் :** மடலெடுக்கிறவருக்கு ஏற் பட்ட ஆற்றாமை, மடலெடுக்கப்படுகிற மற்றொருவருக்கும் உண்டாதலால், இருவருக்குமுண்டான இவ்வாற்றாமையே இருவரையும் கூடுமாறு செய்தல்.

3. பழிக்கு அஞ்சிச் சேர்தல் : "நமக்காக இவர் முடியாநின்றார் என உலகம் பழிக்குமே !" என்று அஞ்சித் தான் (தலைமகள்) சென்று கூடுதல்.

இங்ஙனம் இவற்றுள் ஏதாவதொன்றால் இருவரும் ஒன்று சேர்வர். இவற்றுள் ஒன்றும் வாய்த்திலதேல், தம் உயிரை மாய்த்துக்கொண்டு அத்துயரத்தினின்றும் நீங்குவர். (இதை நூல்கள் 'முடிந்து பிழைத்தல்' எனக் கூறும்.)

ஆகவே, மடலேறும் இச்செயலால் எவ்வகையிலேனும் பயன் ஏற்படுமென்பது திண்ணம்.

இஃதன்றியும், சில சமயம், தலைமகன் மடலூர்தற்கு முன்பே அவனது உண்மைக் காதலை உணர்ந்த தோழி, தலைமகளை அவனோடு இணைத்து வைத்தலுமுண்டு.

முன்னர்ச் செப்பியவாறு தெய்வ அருளால் கூட்டுவிக்கப்பட்ட தலைவனும் தலைவியும் பிரிகின்றனர். ஆனால், இப்பிரிவு இருவரையும் வருத்துகின்றது. எங்ஙனமேனும் தலைவியை அடைந்து இன்புறவேண்டும் என்னும் வேட்கையில் ஆழ்ந்த தலைவனுக்கு எப்போதும் தோழிகளால் சூழப்பட்டிருக்கும் தலைவியைத் தனித்துக் காணும் வாய்ப்புக் கிடைத்திலது. ஆதலின், அவன் தலைவியின் உயிர்த் தோழியினிடம் தன் குறைபாடுகளையும், தலைவியை அடைவதில் தனக்குள்ள அளவுகடந்த ஆர்வத்தையும் பல வகையில் எடுத்துரைக்கின்றான். ஆயினும், தோழி அவற்றையெல்லாம் மறுத்து, தன் தலைவியைப் பலரறிய வரைந்துகொண்டாலல்லாமல், களவொழுக்கத்தால் எவ்வகையாலும் அடைய முடியாது என உறுதி கூறுகின்றாள். தலைவனுக்கு அவள்மாட்டிருக்கும் காதலை, மணம் புரியுமட்டும் அடங்கி

யிருக்கும் நிலையில் இல்லை. ஆதலின், அத்தலைவன், "இன்று யான் உங்களை இரத்தற்கு உங்கள் நெஞ்சம் உருகவில்லையேல், நாளை பூளைப்பூ, எருக்கம்பூ, என்பு ஆகியவற்றின் மாலைகளை அணிந்து உன் தலைவி உருவத்தை வரைந்த கிழியொன்றைக் கைப்பிடித்து மடன்மா ஏறி வருவேன்," என மடல் ஏற மனங்கொள்கின்றான்.

**தோழி** :—இஃது இயலாத காரியம். என் தலைவியை நீர் எழுதப்புகில், அவள் ஒவ்வோர் அவயமே உம் அறிவை மயக்கும். அம்முறையில் அவள் முழு உருவத்தையும் எங்ஙனம் எழுதவல்லீர்? அதனால், மடலேறுதல் உமக்குக் கைப்புகும் காரியமன்று.

**தலைவன்** :—சித்திரம் தீட்டுவதில் யான் மிக வல்லவன். எனக்கு இஃதருமையன்று. உன் தலைவியின் உருவத்தை அறிஞர் வியக்குமாறு அழகுபடத் தீட்டுவேன்.

**தோழி** :—பனைமரத்தில் பறவைகள் கூடுகட்டி வசிக்கும். அதில் முட்டைகளும் குஞ்சுகளும் உறையும். அத்தகைய பனையை வெட்டிக் குதிரைசெய்து மடலேறுதலால், அப்பறவைகள் வாழ இடமற்று இறந்துபடும். அதனால், பாவ வினை வந்து சேரும். இஃது அருளுடையார்க்குப் பொருந்துவதன்று. ஆதலின், தலைவரே, உம் ஆற்றாமையை யான் என் தலைவியினிடம் முறையிடுகின்றேன். அதற்கு உடன்படாது அவள் மறுக்கின் பின்பு நீர் மடலேறலாம். ஆயினும், ஆம்பல் போன்ற வாயில் இன்னும் வெண்ணிறப் பற்கள் முளைத்தில. இவ்விளமைப்

பருவத்தினளாகிய என் தலைவியினிடம் உம் வேட்கையை இயம்பி இரப்பது யாங்ஙனம்?

**தலைவன்** :—மயிலனைய உன் தலைவியின் கண்கள் இளமையிலேயே கொடுமை வாய்ந்துள்ளன. நஞ்சு போன்ற அவள் விழி என் ஆவியைத் துன்புறுத்திற்று.

**தோழி** :—என் தலைவி சுனையாடல், பந்தடித்தல், பாவை விளையாடல் முதலியவற்றை அறவே மறந்தாள். அத்தகையவளிடம் யான் சென்று உம் வேட்கையை எவ்வாறு தெரிவிப்பேன்?

**தலைவன்** :—யான் வந்த செய்தியை நீ அவளிடம் செப்புவையேல், யாரென்றும் கேளாமலே தன் உறுப்புகள் மகிழ்ச்சியினுல் பூரிக்க, அவள் உன்னைத் தழுவிக்கொண்டே இவண் போதருவாள்.

இவற்றைச் செவியேற்ற தோழி, "இவ் வார்த்தைகளினுல் உங்கள் நட்பை உணர்ந்தேன். இத்தனையும் எனக்குத் தெரியாமலே நடந்தன. என்னை மறைத்துச் செய்யும் காரியமும் உங்களுக்கு நிறைவேறுமோ?" எனக் கூறி நகைத்தனள். வருந்தும் தலைவனைத் தேற்ருது வருந்தற்குக் காரணமாகிய அவள் நகை அத்தலைவனைப் புண்ணில் வேல் நுழைத்தாலென்னத் துன்புறுத்தியது. அவன் முகம் வாடி உடல் தளர்ந்து நின்ருன். இக்காட்சி தோழிக்கு இரக்கத்தை உண்டாக்கிற்று. ஆதலின், அவள் தலைவனைப் பார்த்து, "தலைவிக்கு என் மாட்டு அன்பும் அருளும் உண்டு. அவள் என் வார்த்தையை மருள். உம் எண்ணத்தை முடித்து வைக்க அவளை உப்பால் வரவிடுவேன். வாடற்க," எனப்

பகர்ந்து அவன் கொணர்ந்த கையுறையை ஏற்றுக் கொள்வாள். ஆகவே, "இவள் எங்ஙனமேனும் நம் குறையை நீக்குவாள்," எனத் தலைவன் மனந் தேறி மடலேறும் எண்ணத்தை அறவே விடுவான். ஒருகால் தோழி அளித்த வாக்கு நிகழாத போது தலைவன் முன்னர் எண்ணியபடியே மடலேற முற்படுவான் என்பது நூல்களின் துணிபு. ஒரு வேளை அங்ஙனம் நேருங்கால், முன்னர்க் கூறிய வண்ணம் மன்னன் முதலியவர்களால் அவனுக்கு நன்மை ஏற்படுமென்பது தெரிகிறது.

இவற்றுல் இலக்கியங்களில் சொல்லப்பட்ட மடலூர்தல் ஆண் மக்களிடை நிகழ்தலே அருமை யாதலின், மகளிரைப்பற்றி என் சொல்வது! அ∴தன்றியும், அத்தகைய கொடிய மடலை ஊர மகளிரின் இயல்புதான் இடந்தருமா? ஆதலினுற்றுன், மகளிர் பனைமடலை ஊரார் எனத் தமிழ் நூல்கள் உறுதிப்படுத்தின போலும்!

## 2. இலக்கியங்களின் இசைவு

### அ. திருக்குறள்

காதலர் மடலூர்தலைக் குறித்து இலக்கியங்கள் என்ன புகல்கின்றன என்பதைக் காண்பாம்:

திருக்குறளாசிரியர், காமத்துப்பாலில் 'நாணுத் துறவுரைத்தல்' என்னும் ஓர் அதிகாரத்தை வகுத் துள்ளார். இதற்கு, காதல் மிகுதியால் தம்மிடம் இயற்கையாயமைந்த நாணம் நீங்கியதைப் பிறரறிய எடுத்துரைத்தல் என்பது பொருளாகும். இப்பகுதி காதலர் மடலூர்தலைப்பற்றியே பேசுகின்றது.

முதலில் காதலின்பந் துய்த்துப் பின்னர் அது பெற இயலாமையின் பெரிதும் துன்புற்றூர்க்கு, அத்துன்பம் நீங்கி நலமடைதற்குப் பாதுகாப்பா யுள்ளது, பனைமடலால் செய்யப்பட்ட குதிரையூர்த லன்றி, வேறு உறுதியான துணை மற்றென்றுமில்லை என்கிறூர் ஒரு காதலர்.[1]

வீரம் முதலிய ஆண்மைக் குணங்கள் அமையப் பெற்ற ஓர் ஆண்மகன் தலைமகள் மாட்டுத் தனக் குண்டான காதல் மிகுதியால் தோழியை நோக்கி, "பண்டு யான் நாணத்தையும் வீரத்தையும் மிகுதி யும் உடையவனுயிருந்தேன்.[2] ஆனுல், காதலாகிய வெள்ளமோ அத்தெப்பங்கள் இரண்டையும் என்னிடமிருந்து அடித்துக் கொண்டுபோயிற்று. ஆதலின், இப்போது கரைகடந்த காதலுடையோர் ஏறும் மடலைத்தான் உடையனுயுள்ளேன்."[3] எனத் தன் வேட்கையினுல் தனக்கேற்பட்ட குறைபாடு களை எடுத்துரைக்கின்றுன். இதனுல், கரை கடந்த காதல் எத்தகையோரையும் மயக்கித் தம் இயற் கைக்கு ஏலாத காரியங்களையும் செய்யுமாறு தூண்டுமென அறிந்தாம்.

1. "காமம் உழந்து வருந்தினூர்க் கேமம்
மடலல்ல தில்லை வலி."

2. "நாணொடு நல்லாண்மை பண்டுடையேன்
காமுற்றூர் ஏறும் மடல்." [இன்றுடையேன்

3. "காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை."

## ஆ. இறையனாரகப்பொருள்

தலைவன் தலைவியர்களின் அகத்திலெழும் காதற் போக்கை விளக்கிக் களவு கற்பு என இரு வகையாகப் பிரித்துப் பரக்கப் பகரும் இறையனாரகப் பொருள் மடலைக் குறித்து எடுத்துரைக்கும் மாண்பை நோக்குதல் வேண்டும் :

உத்தமத் தலைவிக்கும் தலைவனுக்கும் முன்னர் இயம்பியவாறு தெய்வச் செயலால் கூட்டுறவு ஏற்படுகின்றது. அன்புடன் அளவளாவி இன்புறுகின்றனர். பின்பு இருவருக்கும் பிரிவு உண்டாகிறது. மறுநாள் தலைவன் தழையும் கண்ணியும் கொண்டு நென்னல் போந்த இடத்திற்கே வந்து சேருகின்றான். அவண் இருந்த தோழி இவர்கள் சேர்க்கையை முன்னரே அறிந்திருப்பினும், அவன் தன் குறையைத் தெரிவித்த பின்பன்றித் தான் அவன் காரியத்தை முடித்து வைப்பதாகக் கூறாமல் குறிப்பாகவே சில பேசுவாள். இது நாணத்தின் செயலாகும். அவள் அங்ஙனம் காலத்தை நீட்டிக்க நீட்டிக்க, அவனுக்கு ஆற்றாமை மேன்மேலும் பெருகும். அவனுக்கு ஆற்றாமை மிகமிக, இவளுக்கு நாணம் சுருங்கும். இம்முறையில் தலைவனது ஆற்றாமையின் பெருக்கத்தின் இயல்பும், தோழியினுடைய நாணச்சுருக்கத்தின் தன்மையும் துலாத்திடை இட்ட பொருள் போன்று சமநிலையை அடையும். அவ்வமயம் தலைவன் சில சொல்லத்தொடங்குவான் :

“இதுகாறும், யான் விரும்பிய காரியம் நின்னால் முடியுமெனக் கருதியிருந்தேன் ; இப்போதோ, அது நின்னால் ஆகாதென்பதை உணர்ந்தேன் ;

இன்றியமையாது அதை யான் பெறவேண்டியிருந் தலால், இழிவான செயலை மேற்கொண்டேனும் என் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வேன்," என் கிறான் தலைவன். இழிவான காரியமென்பது மட லேறுதல், வரைபாய்தல் முதலியனவாகும்.[1] இதனால், தாம் காதலித்த பொருளை அடைதற்பொருட்டுத் தம் தகுதிக்குத் தகாதவற்றையும் மேற்கொள்ளல் காதலர் இயல்பு என்பது தேறுகின்றது.

ஒரு தலைவன் தன்மனத்தைநோக்கி, "நெஞ்சமே, அமுதன்ன அழகிய சொற்களையும், காதணியைச் சென்றடையும் வேல்போன்ற விழியையும் உடைய நல்லாள் உண்டாக்கிய காதல் பிணிக்கு மடலன்றி வேறு மருந்தில்லை!"[2] என்கிறான். இன்னொரு தலை வன், "மெல்லிய இயல்புடையவரே, இன்று என் குறை வேண்டி உங்கள் முன் பணிவேன்; நாளை

---

1. "படலேறியமதில் மூன்றுடைப் பஞ்சவன் பாழிவென்ற
அடலே றயில்மன்னன் தெம்முனை போல்மெலிந்
தாடவர்கள்
கடலே றியகழி காமம் பெருகக் கரும்பனையின்
மடலே றுவர்; மற்றும் செய்யா தனஇல்லை
மாநிலத்தே"
—இறையனாகரப் பொருள், 80.

2. "திருந்தார் தொழுகழல் சேய்அன்ன
வாணன்தென் மாறைவெற்பில்
அருந்தா அமுதன்ன அம்சொல்நல்
லார்அழ கார்குழைதோய்
பெருந்தாரை வேல்விழி தந்தவெங்
காமப் பிணிதனக்கு
மருந்தா வதுநெஞ்ச மே!இல்லை
வேறு மடல்அன்றியே."
—தஞ்சைவாணன் கோவை, 101

பூளை மலர் எருக்க மலரோடு எலும்பு மாலையை அணிந்து மடலூர்ந்து வருவேன்!" என்று உறுதி கொள்ளுகிருன்.[1] இவற்ருல் இலக்கியங்களிலும் மட லெடுக்கும் செய்தி இடம் பெற்றுள்ளன என அறி கின்ருேம்.

### 3. மடலும் இறையன்பரும்

#### அ. திருமங்கை ஆழ்வார்

எங்ஙனம் உலகில் ஆணுடலேயும் பெண்ணுடலே யும் 'தாங்கி நிற்கும் இரு சீவான்மாக்களிடத்தில் காதல் பெருகுங்கால் அ∴து அவர்கள் இயல்பிற்கு அடாத காரியங்களையும் செய்யத் தூண்டுகின் றதோ, அங்ஙனமே பெண்ணியல்பு வாய்ந்த சீவான் மாவிற்கு ஆணியல்பு வாய்ந்த பரமான்மாவிடம் உருக்கொண்டெழும் கரை கடந்த காதல் தன் நிலைக்கு ஏற்காத செயல்கள் பலவற்றிலும் நுழைவிப்பது மல்லாமல், மற்றெல்லாவற்றிலும் கொடிதாகிய மடலூரவும் தூண்டுகின்றது.

அதைக் குறித்துச் சிறிது ஆராய்வோம்; ஆழ் வார்கள் பதின்மருக்கும் எம்பெருமானிடம் அன்பு அளவு கடந்திருப்பினும், **திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாருமே** இம்மடலூர முன் வந்தனர். இதை

1. "வன்பணி போல்நிலம் தாங்கிய
வாணன்தென் மாறைவெற்பில்
மின்பணி பூண்முலை மெல்லிய
லீர்! குறை வேண்டிஉங்கள்
முன்பணி வேன்இன்று ; நாளைவெண்
பூளை முகிழ்எருக்கோ
டென்பணி வேன், மடல் மேல்வரு
வேன் ; இவை என்பணியே."

—தஞ்சைவாணன் கோவை, 103.

இவர்தம் பாக்கள் தெளித்துக் காட்டுகின்றன. இவர்களுள் திருமங்கையாழ்வார் மடலூர்தலைக் குறித்துச் **சிறிய திருமடல் பெரிய திருமடல்** என இரு பிரபந்தங்கள் இயற்றியுள்ளனர். இவ்வாழ்வார் பரமனிடத்தில் மிக்க காதல் கொண்டு இப்போதே அவனை அடைந்து இன்பந்துய்க்க வேண்டுமெனப் பெரிதும் விரைகின்றார். இவரை இன்னும் சின்னாட்கள் இவ்வுலகில் வைக்கவேண்டுமென்னும் கருத்தினால், எம்பெருமான் இவர் ஆர்வத்தை முற்றுப்பெறச் செய்யாது வாளா இருக்கின்றான். அவ் விருப்பம் இவரால் பொறுக்க இயலவில்லை. ஆதலின், எங்ஙனம் சக்கரவர்த்தி திருமகன் (ஸ்ரீ ராமபிரான்) தன் விருப்பத்திற்கேற்பச் செயல் புரியாத கடலரசன் மாட்டுச் சினங்கொண்டு, "இக்கடலையே வற்றச் செய்கிறேன்!" என வீரங்கொண்டெழுந்தனனோ, அங்ஙனமே இவ்வாழ்வாரும், "நமது விருப்பத்தை நிறைவேற்றாத எம்பெருமான் ஏதுக்கு? அவனுடைய சொரூப குண விபூதிகளையும் அவன் உகந்து எழுந்தருளியிருக்கும் இடங்களையும் இப்போதே அழித்துவிடுகின்றேன்!" என அவற்றை அழிக்கப் பார்க்கின்றார் இச்சிறிய திருமடலில்.

இவர், தமக்குப் பகவானிடம் அளவு கடந்த அன்பு ஏற்பட்டு மடலூரும் நிலைக்குக் கொண்டு வந்து விட்டதைக் குறித்துத் தாமே பெரிய திருமடலில் இங்ஙனம் இயம்புகின்றார்:

"யான் ஒருகால் சோலைகள் சூழ்ந்த திருநறையூருக்குச் சென்று, அவண் சந்நிதி கொண்டு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைக் கண்களாரச்

சேவித்தேன். அப்பரமனுடைய பிராட்டியுறைமார்பும், புன்முறுவலும், திருமுடியும், திருவடிகளும், தாமரைபூத்தன்ன மற்ற உறுப்புக்களும், என் நெஞ்சம், அறிவு, வளை, மேகலை முதலியவற்றையும் என்னை விட்டு நீங்குமாறு செய்துவிட்டன. இதற்கு மேலும் கடலோதையும், சந்திரனொளியும், தென்றற் காற்றும், அன்றிற் பறவையின் குரலும் என் நெஞ்சை வாளென ஈர்கின்றன. இவற்றிலிருந்தும், அனங்கன் விடும் அலரம்புகளிலிருந்தும் தப்பிப் பிழைக்க என்ன உபாயஞ்செய்வேன்! காட்டில் மலர்ந்த மலர் ஒருவருக்கும் பயன்படாமல் போதல் போன்று, என் இளமையோடுங்கூடிய பெண்மை எம்பெருமானுக்குப் பயனளியாது நீங்குகின்றதே! இதைத் தடுக்கும் மருந்து கண்டறிவாருமில்லையே! திருத்துளபமாலையை அணிந்தவனும், காயா மலர் போன்ற நிறமுடையவனும், இராவணன், இரணியன் முதலிய அரக்கரை அழித்து உலகிற்கு நலமளித்தவனும், கடல் கொண்ட உலகை வெளிக் கொணர்ந்தவனும், கடலைக்கடைந்து அமுதமெடுத்துத் தேவர்க்கு ஈந்தவனும், தாமரையில் பிறந்த திருமகளுக்கு நாயகனும், **திருக்குடந்தை, திருக்குறுங்குடி, திருச்சேறை, திருவாலி, திருவெவ்வுளூர், திருக்கண்ணமங்கை, திருவெள்ளறை, திருப்புட்குழி, திருவேங்கடம், திருவரங்கம்** முதலிய பல திவ்விய க்ஷேத்திரங்களில் அர்ச்சையாய் எழுந்தருளியிருப்பவனும், உலகம் உய்தற்பொருட்டுப் பல அவதாரங்களை எடுத்தவனும், அளவற்ற கலியாண குணங்களையுடையவனும், என் மனத்தைக்

கவர்ந்துகொண்டவனுமான அச்சர்வேசுவரனை அந்தந்த இடத்தில் சேவித்து எனக்குள்ள துன்பங்களை (அவத்தைகளை) எல்லாம் விண்ணப்பஞ் செய்வேன். அவற்றைச் செவியேற்ற அவ்வெம்பெருமான், தன் அருளையும், திருமார்பையும் எனக்குத் தந்தருளாணுகில், அவன் செயல்களையெல்லாமறிந்த யான், அவனைப் பெண்கள் திரள்களிலும், வைதிகர் வாழுமிடங்களிலும், எல்லாத் தேசங்களிலும் சென்று அவனைப்போன்ற கொடியன், கடியன், நற்பண்பற்றவன் இவ்வுலகில் ஒருவருமில்லை என்று பறையறைந்து யாவரும் அவனைக் கைவிடுமாறு செய்துவிடுகிறேன் பாருங்கள்!" என்கிறார்.

"முற்காலத்தில் இடைச்சியர் சேரியில் வெண்ணெய் களவு கண்டு அவ்வாயர்மங்கையரால் உரலோடு பிணிக்கப்பட்டு, அதை அவிழ்த்துக்கொள்ள மாட்டாமல் கிடந்த தன்மையென்ன! இந்திரனுக்கென இட்ட மிக்க சோற்றுக் குவியலைச் சிறிதும் மீதமில்லா வண்ணம் அத்தனையும் தான் ஒருவனுகவே உண்ட நாணச் செயலென்ன! கண்டோர் பழிக்குமாறு பாண்டவர்க்குத் தூது சென்றதென்ன! தன்னை விரும்பிய பெண்ணுகிய சூர்ப்பணகையின் மூக்கையறுத்து, அதையே மிக்க பெருமையென நினைத்திருப்பதென்ன! பெண்ணுகிய தாடகையைக் கொலை புரிந்ததைப் பெரிய வீரம் எனக்கருதியதென்ன! இத்தகைய அளவிலடங்காத் தாழ்ந்த செயல்களையெல்லாம் உலகத்திலுள்ள யாவரும் அறியுமாறு வெளிப்படுத்திப் பிரசுரப்படுத்திக் கொண்டு, பரகால நாயகியாகிய யான் வளர்ந்து விளங்குகின்ற சிறந்த அழகிய பனை மடலைக்

கொண்டு மடலூரக்கடவேன்!" என்று இயம்புகிறார். இவற்றால், எம்பெருமானை அடைந்தின்பந் துய்க்க வேண்டுமென்னும் ஆர்வமே திருமங்கையாழ்வாரை மடலூரத் தூண்டிற்று என்பது தெரிகிறது.

இப்பிரபந்தங்கள் இவர் ஆண் தன்மையிலே இருந்து பேசினவல்ல. கண்ணன் அற்புதச் செயல்கள் இவர் மனத்தைக் கவர்கின்றன. அக்கவர்ச்சி இவர்க்குப் பெண்ணின் நிலையைப் பிறப்பிக்கிறது; அப்பெண்மை தான் விரும்பிய கண்ணனை அடைய விரைகிறது; அஃது இயலாமையின் வருந்தி மடலெடுக்கத் துணிகிறது. ஆதலின், இது தன் நிலைக்கு ஏற்காத காரியத்தைச் செய்ய முற்பட்ட ஒரு மகளின் தன்மையிலிருந்து வெளியிட்டனவாகும்.

இங்கு ஆழ்வார், "பெண்ணியல்பு வாய்ந்த சீவான்மா, மடலூரமுயலுதல் மரபிற்கு ஏற்காததெனத் தமிழ் நூல்கள் சாற்றும். ஆனால், அதில் எனக்கு நம்பிக்கை இல்லை. யான் வடநூலார் நெறியைப் பின்பற்ற முற்பட்டுள்ளேன்!" என்பதை,

"மானோக்கின்,
அன்ன நடையா ரலரேச ஆடவர்மேல்
மன்னு மடலூரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையிற் கேட்டறிவதுண்டு அதனை யாந்தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்."[1]

என்னும் அடிகளில் தெரிவிக்கிறார்.

---

1. பெரிய திருமடல், அடிகள், 40-44.

மடலெடுப்பது என்பது, ஒருவர்க்கு மற ருெருவர் மாட்டுண்டாகும் காதல் உணர்ச்சியால் உண்டாகும் செயலேயன்றி, பிறர் தூண்டுதலா லும், வற்புறுத்தலாலும் ஏற்படுமொன்றன்றே! காதல் இருபாலாருக்கும் ஒரு தன்மையுடையதா யிருக்குமேயன்றி, ஒருவருக்கு விஞ்சியும் குறைந் தும் இருத்தல் யாங்ஙனம்? அத்தகைய காதல் ஒருவரை மடலெடுப்பதில் நுழைவிக்கும், மற்றவரை நுழைவியாது எனச் செப்புவது எவ் வாறு பொருந்தும்? கரை கடந்து பாயும் வெள்ளம் எங்ஙனம் எத்தகைய அணைக்கும் கட்டுப்படாதோ, அங்ஙனமே கரை கடந்த காதலும் மன்னன் ஆணைக்கோ, வேலிக்கோ, மற்றெந்தத் தடைக்கோ அடங்கி நில்லாதென்பது உலகறிந்ததுதானே! அங்ஙனமாயின், 'ஆடவர் காதல்தான் மடலெடுக்க' முந்தும், பெண்டிர் காதல் அதற்கு ஒருப்படாது எனச் செப்புதல் எக்கருத்தைக்கொண்டோ அறி யோம்! இங்ஙனம் வரம்பிட்டுச் சொல்வோர் அக் காதலின் இயல்பை அறியாதவர் என்றே சொல்லல் வேண்டும்.

இங்கு நோக்கத்தக்கது இன்ஞென்றுளது. மடலூர்வது என்பது முன்னர்ப் பகர்ந்தவாறு, ஆடையின்றிப் பனை மடலை ஊர்ந்து தெருத்தெரு வாகத் திரிவது மட்டுமன்று. தம் இயல்பிற்கு மாறு பட்டனவும், பிறர் பழிப்பிற்கிடமாயினவுமான செயல்கள் யாவும் மடலூர்தலையே ஒக்கும். இத் தகைய செயல்களை மங்கையர் மேற்கொண்டுள்ளனர் என்பதற்கு மடலின் இலக்கணம் என்னும் தலைப்பில்

சில சான்றுகள் பகர்ந்துள்ளோம். ஆண்டாள் நோன் பிழைத்தல், அனங்கனடியில் விழுதல் முதலியனவும் இத்தொகுதியைச் சார்ந்தனவே.

## ஆ. நம்மாழ்வார்

ஆழ்வார்களுள் நம்மாழ்வார் தலை சிறந்தவரும், இறையன்பில் பெரிதும் ஆழ்ந்தவருமாவர். இவர் பரமனிடத்தில்கொண்ட பத்தியைக் குறித்துப் பகர எத்தகையோராலும் இயலாது. இவ்வன்பின் முதிர்ச்சி, பரமான்மாவாகிய எம்பெருமானுக்கும் சீவான்மாவாகிய தமக்கும் உள்ள தொடர்புகளையும், அவற்றுள் முதன்மையுற்ற நாயக நாயகி சம்பந்தத்தையும் புலப்படுத்துகிறது; அத்தொடர்பு இவருக்குப் பகவானிடத்தில் மிக்க வேட்கையை உண்டாக்குகிறது; அவ்வேட்கை இவருடைய ஆண் தன்மையை மாற்றிப் பெண் தன்மையைப் பிறப்பிக்கிறது. அஃது ஆழ்வார்-நாயகியாகிய இவர்க்குப் புருஷோத்தமனை நாயகனிடம் கரை கடந்த காதலைத் தோற்றுவிக்கிறது. அக்காதலினால் இவர் அடைந்த நிலைகள் பலப்பல: கடல், மேகம், பறவைகள், நெஞ்சம் முதலிய ஞானமற்ற பொருள்களையும் எம்பெருமானுக்குத் தம் ஆற்றாமையை அறிவிக்குமாறு தூது செல்ல விடுதல், பகவான் தம்மை அணுகுங்கால், அவன் மேன்மையையும் தம் தாழ்மையையும் நோக்கி விலகல், இயற்கைப் பொருள்களாகிய நாரையின் வெண்மையையும், சந்திரன் தேய்வையும், காற்றின் அலையையும் நோக்கி அவைகள் தம் போன்றே இறைவனைப் பிரிந்து இந்நிலையை அடைந்து அலமருகின்றன என்று அவற்றிற்காகவும்

சேர்த்துத் தாம் துயருறல், நித்தியசூரிகளோடு என்று கூடப்பெறுதல் எனக் கவலையுறல், மோகித் திருத்தல், அக்கால் தாயாகவும் தோழியாகவும் இருந்து தம் நிலையைத் தெரிவித்தல், பகவான் இயற்றிய விளையாடல்கள் (லீலைகள்) யாவும் தாமே செய்ததாகப் பாவித்தல், தம்மை ஏற்றுக்கொள்ளு மாறு திவ்விய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் பெருமாள்களிடம் சரணடைதல், எம்பெருமான் அன்புடன் தம்மை அணுகுங்கால், அவனை அவண் விட்டு அகலுமாறு சினந்து ஊடுதல், திருக் கோளூர் முதலிய இடங்கட்குச் செல்லத் துணிந்து போக இயலாமையின் நடுவிற்கிடந்து வருந்துதல், கேட்பார் நெஞ்சம் நீராயுருகுமாறு இரக்கக் குரலுடன் பகவானைக் கூவி அழைத்தல், அவனை அடைதற்பொருட்டு மடலெடுக்கத் துணிதல் முதலி யனவாகும்.

இங்கு இவர் ஆற்றுமையைக் குறிக்க ஒரு சான்று பகர்வாம்: இவர் இயற்கையிற் குளிர்ந்து, புழுதியோடுங் கலந்து, எங்கும் உலவும் காற்றைக் காண்கிருர்; "இதுவும் நம்மைப் போன்றே தான் விரும்பிய பொருளைப் பிரிந்தது போலும்! அதனுற் றுன் இஃது இருந்த இடத்தில் இருக்க முடியாது, மடலூருவாரைப் போன்று உடலில் தூசியை நிரப்பிக்கொண்டும் தன் உருவம் தெரியாதவாறு சன்னி என்னும் பிணியினுல் துன்புற்றவர்போன்று குளிர்ந்தும் இருக்கிறது!" எனத் தீர்மானித்து, அக் காற்றை நோக்கி, " மிகக் குளிர்ந்திருக்கும் வாடைக் காற்றே, திருப்பாற்கடலிலும், திருமலையிலும், பரம

பதத்திலும் அப்பகவானைத் தேடித் திரியும் எங்களைப்போன்றே நீயும், எங்கும் உலவி, இரவும் பகலும் உறங்குகின்றாயில்லை. ஆதலின், மிக்க ஒளி பொருந்திய திருவாழியைத் தாங்கிய அம்மானைக் காணுதற்பொருட்டுக் காலமுள்ளளவும் உடல் நோயை அடைந்தனையோ?"[1] எனப் பெரிதும் இரங்குகிறார். இதனால், மடலூர்வாரின் நிலை வெளிப்படுத்தப்படுகிறது.

இங்கு, மடலெடுத்தற்கு ஒப்பான மன்மதன் வழிபாட்டில், ஆண்டாள் காமனை நோக்கி, "எம் சுவாமியான அனங்கதேவா, மாசு படிந்த உடலோடு தலை மயிரை விரித்துக்கொண்டு, வெளுத்த உதடுகளுடன் ஒரு வேளை உண்டு, மிக்க வருத்தத்துடன் நான் நோற்கின்ற நோன்பை மனத்திற்கொண்டு, 'கேசவநம்பியைக் கால் பிடிப்பாள்' என்னும் இப் பெருஞ்செல்வத்தை எனக்கு அருள்வாயாக!"[2] என அத்தெய்வத்தை இறைஞ்சி நின்றது நினைவிற்கு வருகிறது.

---

1. "கடலும் மலையும் விசும்பும் துழாய்எம்போல்
சுடர்கொள் இராப்பகல் துஞ்சாயால் தண்வாடாய்!
அடல்கொள் படையாழி அம்மானைக் காண்பான்நீ
உடலம்நோ யுற்றாயோ ஊழிதோ றாழியே!"
—திருவாய்மொழி, 2 : 1 : 4.

2. "மாசுடை உடம்பொடு தலையுலறி
வாய்ப்புறம் வெளுத்தொரு போதுமுண்டு
தேசுடைத் திறலுடைக் காமதேவா!
நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள்கண்டாய்
கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்
என்னுமிப் பேறெனக் கருளுகண்டாய்."
—நாய்ச்சியார் திருமொழி, 1 : 8

**வினா :**—எங்ஙனமேனும் ஆழ்வாருக்கு மடலெடுக்கும் துணிவு ஏற்பட்டதற்குக் காரணம் யாது?

**விடை :**—"கலியுகமொன்று மின்றிக்கே
தன்னடியார்க் கருள்செய்யும்
மலியுஞ்சுட ரொளிமூர்த்தி
மாயப்பிரான் கண்ணன்தன்னை."[1]

என்னும் பாசுரத்தில் 'மலியுஞ்சுடரொளி மூர்த்தி' என்று பரமனுடைய வடிவழகையும், 'மாயப்பிரான்' என்று அவன் உயரிய குணங்களையும், 'கண்ணன்' என்று அவனுடைய எளிமையையும் கூர்ந்து சிந்தித்தார்; 'இத்தகையவனை இப்போதே நாம் தழுவி இன்புறவேண்டும்' என்னும் எண்ணம் தோன்ற, தம் கரங்களை நீட்டினார். அப்பரமன் இவர் கைக்கு அகப்பட்டிலன். அதனால், இவர்க்கு ஆற்றாமையும் கலக்கமும் ஏற்பட்டன. அவற்றைத் தாங்க இயலாமையின், இவர் மடலெடுக்க ஒருப்படுகின்றார். இங்ஙனம் 'மாசறுசோதி' என்னும் திருவாய்மொழிக்கும், முன் திருவாய்மொழிக்கும் பொருட்பொருத்தம் மட்டுமேயன்றி, மேற்குறித்த இறுதிப் பாசுரத்தில் செப்பிய 'மலியுஞ்சுடரொளி மூர்த்தி, மாயப்பிரான், கண்ணன்' என்னும் சொற்களுக்கேற்ப, இத்திருவாய்மொழியின் முதற்பாசுரத்தில் முறையே 'மாசறு சோதி', 'ஆசறுசீலன்', 'ஆதிமூர்த்தி' என்னும் சொற்கள் அமைந்துள்ளமையின், இவ்விரு திருவாய்மொழிகளுக்கும் சொற்கள் பொருத்தமும் உள்ளதை அறியலாம்.

---

1. திருவாய்மொழி : 5 : 2 : 11

இ∴தன்றியும், "ஏருளும் இறையோன்" என்னும் திருவாய்மொழியில், "இறைவன் என்னை விரும்பாதபோது என்னுடைய நெஞ்சினுலும், கற்பினுலும், அழகிய நிறத்தினுலும், கூர்த்த அறிவினுலும், மிக்க ஒளியினுலும், வளைகளினுலும், மேகலையினுலும், உடம்பினுலும், உயிரினுலும் எனக்கென்ன பயன்? ஆதலின், இவற்றுள் ஒன்றும் எனக்கு வேண்டா" என்று சொல்லிய இவரே, 'மாசறு சோதி' என்னும் இத்திருவாய்மொழியில், "எனக்குப் பயன்படாத அவனும் அவனுடைய உடைமையும் இருந்தும் நலமென்னே!" என்று அவற்றை ஆணிவேரோடு அழிக்க மடலெடுக்கத் துணிகின்ருர்.

இன்னும் முன்னர் இயம்பியவாறு, 'பகவான் இச்சை கொள்ளாத யானும் என்னுடைமையும் எனக்கு வேண்டா' என்று மிக்க துக்கத்திைல் அலறத் தொடங்கினவர், இவ்வனுபவத்திற்குத் தமக்கு யாரேனும் துணை கிடைப்பரோ என்று உலகத்தினரை நோக்கிஞர். இவர் இறையினிடம் எத்துணை அன்பு கொண்டிருந்தனரோ, அத்துணை அன்பை அவர்கள் உலகப்போக்கில் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் இவருக்கு மிக்க இரக்கம் பிறந்தது. அவர்களுக்கு, "பகவானைப் பற்றிக்கொண்டு உய்யுங்கள்" என உபதேசித்து, அவர்களைத் திருத்த முயன்ருர்; 'இவர்களுள் ஒருவனுகத் தோன்றிய என்னை இவர்களைத் திருத்துமாறு செய்தனனே!' என எம்பெருமான் தமக்குச் செய்த பேருதவியைப் பெரிதும் கொண்டாடிஞர்; தம்மால் திருந்திய வைணவர்கள் மாட்டு ஆனந்தங் கொண்டவராய், அவர்கட்குப்

'பொலிக பொலிக' என்னும் திருவாய்மொழியில் மங்களாசாசனம் பண்ணினர். பின்பு இவர்க்கு மறித்தும், 'ஏருளுமிறையோனில்' ஏற்பட்ட துக்கம் வந்து சூழ்ந்துகொள்ள, வழியில்லா வழியிலேனும் அவனைப் பெற வேண்டும் என்னும் ஆற்ருமை மீதூர்ந்தமையின், மடலெடுக்க நுழைகின்ருர். இங்ஙனம் வேருெரு விதமாகவும் இதற்குத் தொடர்பு காட்டப்பட்டுள்ளது. இது நிற்க,

இனி, மடலெடுப்பதைக் குறிக்கும் 'மாசறு சோதியில்' இவர் என்ன கருத்துகளை வெளியிட்டார் என்பதைக் காண்பாம் :

இத்திருவாய்மொழியில் ஆழ்வார், தாமே தலைவியும் தோழியுமாயிருந்து விஷயங்களை வெளியிடுகிருர்.

தலைவி மடலெடுக்க ஒருப்படுங்கால், தோழி, "அம்மா, நீ விரும்பிய பொருள், மிக்க அழகு, உயரிய பண்பு, சீரிய மேன்மை முதலியவற்றில் குறைவற்றதோன்ருகும். நீ செய்யப்புகும் இம்மடலெடுத்தலாகிய செயல், அத்தகைய சிறந்த பொருளுக்குப் பழியை விளைவிப்பதாகும்," எனப் புத்தி புகட்டுகிருள். இதைச் செவியேற்ற தலைவியாகிய ஆழ்வார், "யான் அப்பொருளிற்குப் பழிப்பைத் துடைக்கப் புகுகிறேனேயல்லாது, பழிப்பை உண்டாக்கவன்று. தூய திருமேனி ஒளியையும், சிவந்த திருவதரத்தையும் பெற்று, மாணிக்க மலை போன்று இன்பமளிப்பவன், உயர்ந்தவனுகிய தான் தாழ்ந்தவரோடும் வேறுபாடின்றிக் கலந்து உறவாடுபவன், தாமரை போன்ற கண்களையுடையவன், சகட

முதைத்தல் நச்சுப்பால் ஊட்டிய பூதனையின் உயிரைப் போக்கல் முதலிய பல வீரச்செயல்களைச் செய்தவன், முதலில் தானே வந்து என்னை அனுபவிப்பித்தவனை இத்தகைய என் தலைவனை எப்போதும் தேடித்தேடி யான் என் மேனி நிறத்தையும் அறிவையும் இழந்தேன்! என் செய்ய வாயும் கருங்கண்ணும் வெளுத்தன. என் பெண்மையும் குடிபோயிற்று. என்னுடைய இந்நிலையை யாவரும் அறிந்தனர். இத்தன்மையில் ஊரவர் பழிச்சொல் என்னை என் செய்யும்? யானோ, அவன் சீர்மைகளையல்லாமல் மற்றொன்றையும் பேசவும் கேட்கவும் வல்லேனல்லேன்.

"ஒருகால், ஊரவர் அலராகிய எருவை இட்டு, அன்னையின் இன்சொற்களாகிற நீரைத் தேக்கி, ஆசையாகிற நெல்லை விதைத்து முளைத்த நெஞ்சமென்னும் வயலுள் மிக்க வேட்கை கடல் புரையப் பெருகுமாறு செய்த மேகமன்ன திருமேனியையுடைய கண்ணன் இன்று உனக்குக் கடியனானானோ? உன் கருத்தின்படியே அவன் தன்னலத்தையே நாடும் கொடியனாகவும், தன் காரியம் முடிந்ததும் பிறரை நோக்கிப் பாராதவனாகவும் இருப்பினும், அவனிடமிருந்து மீட்க ஒண்ணாத கொடிய என் நெஞ்சம், அவனே தஞ்சமெனக் கிடக்கின்றதே! இதற்கு அன்னை என் செய்ய முடியும்!

"எம்பெருமானுடைய நோக்கு, புன்சிரிப்பு ஆகிய வலைக்குள்ளே யான் அகப்பட்டுவிட்டேன். இனித் தாயார் செயலினாலும், ஊரவர் சொல்லினாலும் பயனுண்டாதல் அருமை. ஆதலின், என்னை

மீட்க நினைக்கும் உங்கள் ஆசையை விட்டுவிடுங்கள்! ஆழியில் பள்ளி கொண்டவனும், திருவாழியைக் கரத்தில் தாங்கியவனுமான பிரானை நம் கண்களால் கண்டு, பழி சொல்லும் தையலார் மயங்குமாறும், அன்னை நாணுமாறும் அவனைத் தலையால் கிட்டுவதென்றோ?

"என்னுடைய நாண், கற்பு, நெஞ்சம் இவற்றைக் கவர்ந்துகொண்டு, மேலான பரமபதத்தில் இருந்து நித்திய சூரிகளுக்குத் தலைவனாயுள்ள அவ்வெம்பெருமானை எல்லா உலகமும் அறியப் பழி தூற்றிக்கொண்டு, என்னால் இயன்றளவு கொடிய மிடுக்குகளைச் செய்து, ஒருவர்க்கும் அடங்காத பெண்ணாய் மடல் ஊரக் கடவேன்!" எனப் பகர்கிறார்.

ஒருவருக்கு மற்றொருவரிடம் மிக்க காதல் உண்டாகிறது. அவர் நெஞ்சம் காதலித்தவரை இப்போதே அடையவேண்டுமென விரைந்து நிற்கிறது. ஆனால், அவரைச் செம்மையான வழியில் பெற்று இன்புறுவதற்கு இயன்றிலது. அவ்வமயம் அவரிடத்திலிருக்கும் ஊன்றிய அன்பும், அவரை இப்போதே பெறவேண்டுமென்னும் விரைவும், அவரிருக்கும் இடத்திற்கு எரிமூட்டல் முதலிய செய்யத்தகாத சில காரியங்களைச் செய்தேனும் அவரை வெளிப் புறப்பட விட்டு அவர் முகத்தைக் கண்டு ஆனந்தமடைவாரைப் போன்று, இவரும் பகவானுக்குப் பழியை விளைவித்தாகிலும் அவனைக் கண்டு களிக்க வேண்டுமென்னும் எண்ணத்தினால் மடலெடுப்பதில் தலையிடுகிறார்.

இங்கு, "ஒரோ விஷயங்களிலே ஒரொருத்தர்க்கு ஸங்கமுண்டானால், அவ்விஷயங்கள் கிடையாவிட்டால், 'அவை இப்போதே பெறவேணும்' என்னும்படியான த்வரை பிறந்தால்,' பின்னை சுவை இருந்தவிடங்களிலே புகை சூழ்ந்து புறப்பட வேண்டும்படியாயிருப்பதொரு ஸாஹஸத்தைப்பண்ணிப் புறப்பட விடுவித்து முகத்திலே விழிப்பாரைப் போலே, 'அத்தலைக்குப் பழியை விளைத்தாகிலும் முகத்திலே விழிக்குமத்தனை' என்று ஸாஹஸத்திலே யொருப்பட்டு, தமக்கு இவ்வளவாகப் பிறந்த நசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார்", என்னும் நம்பிள்ளை வார்த்தைகளை நோக்குக.

"எவ்வகையாலும் பெண்மைக்குரிய அடக்கம் சிறிதும் இன்றியே தெருவுதோறும் புக்குப் பெண்கள் இடைவிடாமல் சொல்லும் பழியைத் தூற்றி, உலகெல்லாம் அவனை விசுவசியாமல் நாத்திகம் தலையெடுக்குமாறு, நம் பெண்மைக்கு ஏலாத 'மடலை,' ஊர்தோறும் திருவாழி தாங்கிய கரத்தின் அழகைக் காட்டி, நம்மைத் தன்வசப்படுத்திய உபகாரனுடைய திருத்துளவத்தை அவன் தர வாங்கி நம் தலையிலே சூட்டிக்கொள்வோமாக," என்கிறார்.

இங்ஙனம் மிக்க துணிவைக்கொண்ட ஆழ்வார், மடலூர்ந்தனரோ என்னில், இல்லை. ஏனெனில், மடலூரப் புகுங்கால், தாம் விரும்பிய பொருளைப் படத்தில் சித்திரிக்க வேண்டுமல்லவா? அதற்கு வகையின்றி, ஆதித்தன் மறைந்தான். இருள் மிகுதியும் செறிந்து நடு இரவாய்விட்டது. அஃதன்றியும், பழி சொல்லித் தூற்றுவாரும், இனிதுரைத்து

விலக்குவாரும் உறக்கத்தேவதையின் வயப்பட்டனர். ஆதலின், ஆழ்வார் தாம் இறைவனைப் பிரிந்த ஆற்ருமை தாங்காது முன் மடலெடுக்க உறுதி கொள்ளினும், அவருடைய அப்போதைய சூழ்நிலை அதைச் செயலில் நிகழ்த்த இயன்றிலது என அறிகின்ரும்.

இனி இரு ஆழ்வார்களுக்கும் மடலூர்வதில் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை நோக்குவாம் :

திருமங்கையாழ்வாரும் சடகோபரும் மடலூர்வதாக உறுதி கொண்டனரேயல்லாமல், ஊர்ந்தனரில்லை. இருவருக்கும் வாய்ச்சொல்லோடு நிற்கின்றது. இதில் இருவருக்கும் ஒற்றுமையுள்ளது. ஆனல், திருமங்கையாழ்வார், மங்கையர் ஆடவர் மேல் மடலூரார் என்னும் தமிழிலக்கணத்திற்கு ஒரு சமாதானம் பகருகிருர். பரமன்பாலுண்டான காதலால் அவனை விரைவில் அடைதற்பொருட்டு மடலூருவதில் நுழைந்தவருக்கு, தாம் மேற்கொண்ட செயல் தவிர, வேறு ஆராய்ச்சியில் நெஞ்சம் செல்லுதல் யாங்ஙனம்? அங்ஙனமாயின், தாம் பற்றிய இடத்திலிருந்து மனம் சிறிது விலகியுள்ளது என்பது தோன்றுகின்றதன்ருே? அது தம் உறுதிப்பாட்டிற்குக் குறைவுதானே ?

இன்னும் திருமங்கையாழ்வார், சிறிய திருமடலின் தொடக்கத்தில், " அறம் பொருள் இன்பந் தவிர வீடு என்பது ஒன்றில்லை. அஃதிருக்குமாயின், அங்குச் சென்றவர் யாரேனும் வந்து நமக்குரையாரோ? இது வெறுங்கட்டுக்கதையே," என்றெல்லாம் பெரிதும் நாத்திகம் பேசி, பின்னர் அர்ச்சையில் ஈடுபட்டு, அதனிடம் உண்டான காதலால் மட

லெடுக்க முந்துகிருர். இம்முறையில், இப்பெரியா ருடைய உண்மை நிலை எது என அறிதற்கியலா மல் பலருக்கு மயக்கத்தைப் பிறப்பிக்கின்றது. அன்றியும், நாத்திகவாதம் செய்பவர்க்கு இவருடைய நூல் துணை புரியும் எனச் சிலர் கருதவும் கூடும்! இவரது மற்றப்.பாசுரங்களையும் போக்கையும் தெரிந் தவரே, இவர் ஆத்திகத்தை நிலைநாட்டவே நாத்தி கத்தை வற்புறுத்திப் பேசுகிருர் என்பதை அறிவர். இங்ஙனம் திருமங்கையாழ்வார் மடலில், சிலர் வாதிப்பதற்கிடமான சிற்சில பொருள்கள் உள்ளன என அறிகின்ருேம்,

நம்மாழ்வாருக்கோ, "நாம் மடலெடுக்கலாமா? கூடாதா?" என்னும் ஆராய்ச்சியே மனத்திற்குப் புலப்பட்டிலது. தாம் பகவானை அணுக முயன்று அது கூடாதபோது தாம் செய்ய வேண்டுவது யாது என்னும் ஒன்றிலேதான் அவர் நெஞ்சம் ஊன்றி நின்றது.

தோழி, "உனக்கு மிக்க காதலைப் பிறப்பித்து, அதனல் ஆற்ருமையில் ஆழ்ந்திருக்கும் உன்னை நோக்கிப் பாராமல் இருக்கும் அக்கண்ணன் மிகக் கடியன்," எனப் பகர்ந்ததைச் செவியேற்ற ஆழ்வார்-நாயகியார், "அவன் கொடியனுயிருப்பினும், என் நெஞ்சம் அவனிடமிருந்து மீட்க ஒண்ணுதவண்ணம் அவனிடமே பதிந்து கிடக்கிறது. அவன் கொடிய னென்ருல் அவன் கொடுமையை இப்போதே காண வேண்டும். அவன் பிறருடைய பொருளைக் கவருமவன் என்னில், அவன் என் உடைமைகளை யெல்லாம் கவர்ந்துகொள்ள யான் இழந்திருக்க

வேண்டும்; அவன் தூர்த்தன் என்னில், அவன் தீயசெயல்களை இப்போதே அறிய வேண்டும் என்று அல்லவா நெஞ்சம் ஆர்வங் கொள்ளுகிறது? அங்ஙனமாயின் என் நெஞ்சம் எத்தகைய கொடியது!" என்கிறார். இங்ஙனம் பரமனுடைய குற்றங்களையும் தம் அனுபவத்திற்கு ஏற்றனவாக (போக்கியமாய்)க் கொண்டு அவன்மாட்டு ஊன்றிய காதல் கொண்டிருந்த இவ்வாழ்வார் திருமங்கைமன்னரிலும் சிறப்புடையரல்லரா?

இ. ஆண்டாள்

ஆண்டாள் மேற்கொண்ட மடல், உலகில் தோன்றிய சாமானிய ஆண் மக்களும், பரமன் பத்தியில் பதிந்திருந்த ஆழ்வார்களும் ஊர்வதாய்த் துணிந்த மடலைப்போன்றதன்று; இது தனிப்பட்டது. மற்றவர்கள் மடல் "தோல்புரையேபோம்" என்றபடி உடலை மட்டும் தாக்கக்கூடியது! இவருடைய செயல்களோ, 'மர்மபரிசி' என்றவாறு ஆன்மாவையே அழிப்பது! அன்பர்களுக்கு அச்சம் அளிப்பது! ஞானிகளுக்கு நடுக்கந்தருவது! திருவடி தன்னும் மறந்தும் புறந்தொழா மாந்தருக்குத் தியக்கந் தருவது! வைணவ சித்தாந்தத்தின் உயிர் நாடிக்கே ஊறு விளைப்பது. ஆதலின், கொடியதும், பிறர் பழிக்கக் கூடியதுமான மடலினும், இவர் மேற்கொண்ட நோன்பு முதலியன மிக்க தீமையுடையனவாகும்.

**வினா** :— இவரும் மற்றவரைப் போன்றே மடலூராமல், நோன்பு முதலியவற்றில் நுழைதற்குக் காரணம் யாது?

*விடை* :—இதற்குச் சில காரணங்கள் உண்டு: ஒரு மன்னனது இல்லக்கிழத்தி, பிச்சையேற்றுப் பிழைக்கில், "மன்னன் இவளைக்காவாது கைவிட்டான்" என அவனுக்குப் பழிப்பிற்கிடமாதலால், உலக வசைக்கு அஞ்சிய அவ்வரசன், அவளுக்கு உதவி புரிய விரைவில் முன் வருவானல்லனோ? அதைப்போன்றே, "பகவானுக்கே நாம் உரியம்" என்னும் உறுதியுடன் வாழ்ந்த இவர், அவனைத் தவிர்த்து வேறு வழியாகத் தாம் உய்ய நினைக்கில், அது, "தம்மையே நாடிநின்ற ஒருத்தியைப் பகவான் புறக்கணித்தான்," என அப்பரமனுக்கு மிக்க பழிப்பையுண்டாக்குமாதலால், அவ்விழிவைப் பொருது பகவான் விரைந்து வந்து தம்மை ஆதரிப்பான் என்னும் எண்ணமும், அவனை அப்போதே அடைய வேண்டுமென்னும் ஆற்ருமையுமே இவரைத் தம் சொரூபத்திற்குச் சேராததும், மடலினும் கொடியனவுமான சிலவற்றை மேற்கொள்ளுமாறு செய்தன.

அஃதன்றியும், சக்கரவர்த்தி திருமகன் போன்று, கண்ணன் சிறு செயலுக்கெல்லாம் மனஞ் சோர்ந்து அதற்குக் கழுவாய் தேடிக்கொள்ளுகின்றவனல்லன். 'இவள் மடலெடுக்கில் நாமும் மடலெடுப்போம்,' எனத் துணிந்து நிற்பவனுதலாலும், "மற்றத் தருமங்கள் எல்லாவற்றையும் விட்டு என்னையே பற்று" என்றவன், அவனை அடைவதற்குச் சில தகாத செயல்களை மேற்கொள்ளில் பொருது உடனே தோன்றி அருள் புரிவானுதலாலும் இவர் மடலைவிட்டு நோன்பு முதலியவற்றை மேற்கொள்ளுகிறார்.

**விஞ :**—ஆண்டாளுடைய எந்தெந்தச் செயல்கள் மடலெனச் சொல்லப்படுகின்றன?

**விடை :**—ஆண்டாள் நோன்பிழைத்தல், அனங்கன் தாளில் விழுதல், சிற்றிலிழைத்தல், கூடலிழைத்தல் முதலியனவாகும்.

நம்மாழ்வார் இத்தகைய நோன்பைப்பற்றி என்ன கூறுகிறுர் எனக் காண்போம்: அவர் எம் பெருமானை நோக்கி, "பகவானே, என்னைக் காணும் உலகத்தவர், 'இவன் பகவானை அடைதற்குச் சில கன்மங்களைச் செய்யாநின்ருன்' என நினைத்தற்கும், அதைக் கண்டு யான் நம்மிடம் சில நன்மைகள் உள்ளன என மலைத்தற்கும், 'தன் உய்விற்காக இவன் சில செயல்களைச் செய்துகொண்டிருக்கிருன். அங்ஙனமே செய்து உய்யட்டும்' என நீ கைவிடற்கும் காரணமாயுள்ள நோன்பு முதலியவற்றை யான் நோற்றேனில்லை. வறிஞனை யான் உன்னைவிட வேறு கதியுடையேனல்லேன்! பரமஞகிய உன் திருவடிகளையே உபாயமாகப் பற்றியுள்ளேன்," எனக் கூறுகிருர். இங்ஙனம் ஆண்டாளைப் போன்ற பிரபன்னராகிய ஆழ்வார், தம் சொரூபத்திற்கு ஏலாததென்று கைவிட்ட நோன்பையன்ருே ஆண்டாள் நோற்கிருர்! அன்றியும், வைணவக் கொள்கைக்கு முற்றும்மாருன வேறு தெய்வத்தின் காலில் விழுகிற செய்கையையும் மேற்கொள்ளுகிருர்! ஞானபத்தி வைராக்கியங்களில் கரைபோய இவருடைய இச்செயல்கள் எதைத் தெளித்துக் காட்டுகின்றன? மற்றெவருக்கும் அமையாத இவருடைய பகவத் பத்தியையேயாகும். இதை அறிஞர்

நன்கு அறிவர். இங்ஙனம் தம் ஆன்ம சொரூபத்திற்கு அடாத செயல்களை இவர் மேற்கொள்ளவில்லையேல், கண்ணன் காதலில் மற்றவரைக் காட்டிலும் இவர் உயர்ந்தவர் எனப் பாராட்டுதற்கு இடனேது?

தம் கணவனைத் தவிர வேறு தெய்வத்தை மனத்திலும் கருதாத கற்புடை மகளிரும், தாம் விரும்பிய தலைவனை அடைதற்பொருட்டுப் பிற தெய்வத்தைத் தொழுதலும் அதைக் கண்ட தலைவன் மகிழ்தலும் மரபு என்பது சங்கநூல்களால் அறியப்படுகின்றன.

கற்பிற்சிறந்த ஒரு மங்கையின் தோழி அவண் வந்த தலைமகனை நோக்கி, "அண்ணலே, மாறை நாட்டைப் போல்பவளாகிய இத்தலைவி, உன்னை அடைதற்பொருட்டுத் தெய்வத்தைப் பன்முறை வாழ்த்தி வாழ்த்தி நின்று வரம் வேண்டுவதைப் பார்த்தருள்," என அவள் ஆற்றுமையைத் தலைவனுக்குக் காட்டுகின்றாள்.[1]

அக்காட்சியைக் கண்ட தலைமகன், "மான் தொகுதியும் நாணத்தக்க மென்மையான நோக்கையுடைய இம்மங்கை நம்மை மணத்தற்பொருட்டு

1. "உரவிப் பெருங்கலித் துன்பங்கள்
போய்முதல் ஊழி இன்பம்
வரவிப் படிதன்னை வாழ்வித்த
வாணன் தென் மாறை அன்னாள்
புரவிப் புனைநெடுந் தேர்அண்ண
லே! நின் பொருட்டணங்கைப்
பரவிப் பரவிநின் றேவரம்
வேண்டுதல் பார்த்தருளே."
—தஞ்சைவாணன் கோவை, 286

நறும்புகையைப் புகைத்து, மணம் நிறைந்த அழகிய மலர்களைத் தூவிச் சிறப்பாகத் தெய்வத்தை வாழ்த்துகின்றனள். இந்த ஞானம் இவட்குப் பொருந்தியது யாங்ஙனம்?'' என மகிழ்ந்து நிற்கின்றான். இதனால், தலைவனை அடையவேண்டும் என்னும் ஆர்வத்தினால் இவளியற்றும் கற்பிற்குப் புறம்பான இச்செயல் தலைவனுக்கு மிக்க மகிழ்வை யூட்டுகின்றது என அறிகின்றோம்.[1]

இம்முறையில் பரமனையே பற்றுக்கோடாகப் பற்றியிருக்கும் ஆண்டாளும், அவனை விரைவில் அடைந்து இன்பந் துய்க்கவேண்டுமென்னும் பேரவாவினால் மேற்கொண்ட செயல்கள் யாவும் அப் பரமனுக்கு ஆனந்தத்தையுண்டாக்குமெனக் கருதத் தடையாது? இத்தகைய செயல்கள் மிக்க மதிப்பு வாய்ந்தன என ஆசாரியர்கள் ஆதரிக்கின்றார்கள். ஆயினும், யாவருக்கும் இந்நிலை பிறத்தல் அரிதினுமரிதன்றோ!

ஆண்டாள் அனங்கன் தாளில் விழுந்ததைப் பொறாத பரமன் அப்போதே இவர் முன் தோன்றினான். ஆனால், தம்மைப் பெரிதும் அலக்கழித்த

---

1. ''இவ்வித் தகம்இவட் கெய்திய
தெவ்வணம்? எவ்வுலகும்
வவ்வித் திகழ்புகழ் வாணன்தென்
மாறை மணம்பொருட்டா
நவ்வித் தொகைஇனம் நாணும்மெல்
நோக்கி நறைபுகையாச்
செவ்வித் தகைமலர் தூய்த்தெய்வம்
வாழ்த்தும் திருத்தகவே.''

—தஞ்சைவாணன் கோவை, 287.

அவன்மாட்டு இவருக்குச் சினம் மிக்கெழுந்தது. தம் மனவேறுபாட்டை அவன் அறிந்துகொள்ளுமாறு அவனை நோக்காதது போன்று, தம் தோழியருடன் சிற்றில் இழைப்பதில் ஊன்றி இருந்தனர். இஃதும் அனங்கன் அடியில் விழுந்த செயல்போன்று அவனுக்குப் பிரியமற்றதாதலின், அச்சிற்றிலை அழிக்க முயன்றான். இதனால் இரு திறத்தினருக்கும் வாதங்கள் நிகழ்ந்து பின் சேர்க்கை ஏற்பட்டது. இதுவும் மடலெடுத்தலை ஒத்ததேயாகும்.

இன்னும் இவர் எம்பெருமானை அடைதற் பொருட்டு ஞானமற்ற கூடலிழைத்தலைப் பற்றுக் கோடாகக்கொண்டு, அதனை வேண்டிவேண்டி இறைஞ்சுகின்றார். தன்னைப் பெறுதற்கு அற்பச் செயலையும் விரும்பாத பரமனைச் சில செயல்கள் வாயிலாகப் பெறப் பார்த்தலும், பரதந்தரமான ஆன்ம சொரூபத்திற்கு ஏற்காத வேறு காரியத்தில் புகுதலும் தமக்கு அடாதனவாதலின் இவையும் மடலைப் போன்றனவேயாகும்.

அஃதன்றியும், சேதனர் பரமனை விரைவில் அடைய வேண்டும் என்னும் ஆற்றாமையினால் கண் சுழன்று, உடல் தளர்ந்து, தம் சொரூபத்திற்கும் ஏற்காத உபாயங்களில் நுழைந்து படும் அலமாப்பையெல்லாம் பகவான் நோக்கி, "நம்மை அடைதற்பொருட்டன்றோ இவர்கள் இத்தனையும் படுகின்றார்கள்! இவர்கட்கு நம்மாட்டு என்ன அன்பு! என்ன அன்பு!" எனப் பெரிதும் மகிழ்கிறான். இம்முறையில் இச்செயல்கள் அவன் முகம்

மலர்கைக்கு உறுப்பாகின்றன. ஆகவே, இவை அவன் முகமலர்த்திக்கெனச் செய்யும் கைங்கரியங் களைப் போன்று உபேயத்தில் (பலத்தில்) அடங்கி யிருத்தலின், இவைகள் ஈசுவரனுடைய அருளைப் பெறுதற்குத் தடையாகா.

ஒரு சேதனன் ஈசுவரனை அடைதற்கு இரண்டு முறைகள் உண்டு: ஒன்று தானே சென்று எம் பெருமானைச் சரணகப் பற்றுதல்; மற்றென்று இறைவனே வந்து தன்னை அங்கீகரிப்பது. இவற்றை முறையே **ஸ்வகத ஸ்வீகாரம்** என்றும், **பரகத ஸ்வீகாரம்** என்றும் சொல்வர். இவற்றுள் தானே சென்று அவனைப் பற்றுதல், தப்பாமல் பலிக்கும் எனக் கூறுவதற்கில்லை. தன் குற்றங்களி ஞலோ, அவனுக்கு விருப்பமின்மையிஞலோ அது கைகூடாமற்போயினும் போகலாம். ஆ ஞ ல், அவனே வந்து தன்னை அங்கீகரிப்பதற்கு மேற் காட்டிய குற்றங்கள் இன்மையின் அது தவருமல் கைகூடுமென்பது திண்ணம். இந்நிலையில் நோன்பு நோற்றல் முதலியன பரகத ஸ்வீகாரம் எனச் சொல் லப்படுகின்றன. எங்ஙனமெனின், தான் அவனை (இறைவனை) அடைதற்குச் செய்ய வேண்டிய முயற்சிகளையெல்லாம் அவனே மேற்கொண்டு· தனக்குப் பரமஞகிய அவனுடைய அன்பைப் பெருக்குவித்து, அவனை இப்போதே அடையவில்லை யேல் உயிர் வாழ இயலாது என்னும் நிலையைப் பிறப்பித்து, மடலேறுதலிலும் கொடிதான நோன் பிழைத்தல், பிற தெய்வத்தின் காலில் விழுதல்

ஆகியவற்றில் தன்னைக் கொண்டுவந்து விடுகின்றமையின், இது பரகத ஸ்வீகாரத்தின்பாற்படும். ஆகவே, இவை அவன் அருளை அடைதற்குச் சிறந்த சாதனங்களாக உள்ளன எனக் கொள்க.

உலகில் ஒருவருடைய பிணியைப் போக்குதற்கு மணி, மந்திரம், மூலிகை ஆகிய மூன்றையும் பயன்படுத்துவதுண்டு. இம்மூன்றனுள் ஒன்றினலும் பிணி நீங்கலாம். ஆயினும், இவ்விரண்டையோ மூன்றையோ கையாளினும் அவற்ருல் ஏற்படும் பயன் தடைபடுதலில்லை. அங்ஙனமே பகவானை மட்டும் உபாயமாகப் பற்றினலும் விரைவில் நலமேற்படும். மடலேறுதல் நோன்பு நோற்றல் முதலியவற்றை மேற்கொள்ளினும் பயன் கூடும். அல்லது ஈசுவரன், அடாத செயல்கள் ஆகிய இரண்டையும் பற்றினலும் ஏற்படும் நலன் தடைபடுதல் இல்லை. இவற்ருல் பகவானைப் பற்றுதற்கு ஒப்பானதே மடலெடுத்தல் முதலியன என அறிகின்ருேம். இதனல், நம் ஆழ்வார்களும் ஆண்டாளும் மேற்கொண்ட செயல்கள் பகவானை உபாயமாகப் பற்றுதற்கு ஒப்பானவையே ஆகும்.

இனி, இறைவனிடம் உண்டான அளவு கடந்த காமத்தினல், மடலூர்தலில் நுழைந்த ஆழ்வார்கட்கும் ஆண்டாளுக்கும் உள்ள வேறுபாட்டை நோக்குவாம்: உடலளவில் ஆடவராய்த் தோன்றிய ஆழ்வார்களுக்கு இறை அன்பு எப்போதும் ஒருபடித்தாய்ச் சென்றிலது. சில போதே அக்காதல் கரை கடந்து நிற்கிறது. அவ்வமயம் அவர்களிடம்

பெண்மை குடியேறுகிறது. அப்பெண்மையில் அவர்கள் தூது விடுதல், மடலேற முயலல் முதலிய காரியங்களை மேற்கொள்ளுகின்றனர். இந்நிலை அவர்கட்குமாறிமாறி உண்டாதலை அவர்கள் அருளிச் செயல்களில் காணலாம். ஆண்டாளுக்கோ, சீவான் மாவின் நிலைக்கேற்ப உடலும் பெண்ணுக அமைந்த மையின், இவருடைய இறை காதல் சிறிதும் இடையீடின்றிச் செல்லாநிற்கிறது. அஃது இடைமுறித லின்மையின் மேன்மேலும் வளர்ந்துகொண்டே போகிறது. அதை இவருடைய பிரபந்தங்களே தெளியக் காட்டுகின்றன. இவருக்குத் திருப்பாவையில் உண்டான காதலுக்கும், நாய்ச்சியார் திருமொழியில் ஏற்பட்ட காதலுக்கும் எத்துணையோ வேறுபாடுள்ளது! முன்னது காய் நிலையிலும், பின்னது கனி நிலையிலும் அமைந்துள்ளன. "உன்னலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்," என்றிருக்க வேண்டியவர் தம் திருமொழியின் தொடக்கத்திலேயேயன்றே பிற தெய்வத்தினிடம் குறையிரக்கிருர்! பரமன் இசைவின்றிச் சிறு துரும்பும் அசையாது என்னும் தத்துவத்தை நன்குணர்ந்த இவரே, இச்செயலை மேற்கொள்கிருர் என்னில், இதற்குக் காதலின் கலக்கத்தையன்றி வேறெதனைக் காரணமாகக் கூறுதல் கூடும்! இங்ஙனமே இவர் காதல், திருமொழிக்குத் திருமொழி பெருகிப் பெருகி வளர்ச்சியை அடைகின்றதேயொழிய, தளர்ச்சியையோ குறைதலையோ அடைந்திலதென்பதை அறியாதார் யார்? அங்ஙனமாயின்,

அக்காதல் தன் காரியத்தைச் செயலில் காட்டாமல் எங்ஙனம் அடங்கிக் கிடக்கும்! கட்குடித்தவனிடம் அவன் உண்ட மதுவின் அளவிற்கேற்பப் பல செயல்கள் உண்டாதல் இயல்புதானே! அங்ஙனமே இறை காதலில் ஆழ மூழ்கிய ஆண்டாளிடம் பல அடாத செயல்கள் முகிழ்த்தெழுந்தன. காதலில் ஆழ்வார்களையும் ஆண்டாளையும் ஒப்பிட்டு நோக்கில், அப்பெரியார் காதல் தடாகத்தின் கரையில் நிற்பவரும், இவர் அத்தடாகத்தின் ஆழத்தில் மூழ்கியவருமாவர். இம்முறையில் இவ்விரு திறத்தினருக்கும் வேறுபாடில்லாமலிருத்தல் யாங்ஙனம்? அதனுற்றான், அவர்கள் மடலெடுப்பதாய்க் கூறிச் செயலை மேற்கொள்ளாமலே நின்றார்கள். அந்நிலையில் நிற்க இவரது அளவிறந்த அன்பு இடந்தருமா? அங்ஙனம் நிற்பின் இவர் காதலுக்குத்தான் இத்துணை மதிப்பு ஏற்படுமா? மற்றவரினும் இறையன்பில் இவர் உயர்ந்தவர் எனச் செப்புதற்குத்தான் வழியுண்டாகுமா? உண்டாகாதென்பது உறுதி. பரமனை இப்போதே அடைய வேண்டுமென்னும் ஆற்றாமையினாலன்றோ, இவர் மற்ற எவரும் மேற்கொள்ளாததும், ஆன்ம சொரூபத்திற்குச் சிறிதும் பொருந்தாததுமான மேலியம்பிய அடாத செயல்களை மேற்கொண்டார்? இச்செயல்கள் அல்லவா இவருக்கு எம்பெருமானைச் சொப்பனத்தில் மணம் புரியவும், விருந்தாவனத்தில் கண்களாரக் கண்டு களிக்கவும் இடந்தந்தன? எத்துணை விரைவில் அவன் இவருக்கு நலமளித்துவிட்டான்! அவன்

அருளைப்பெற்று ஆனந்தித்தற்கு நூற்று நாற்பத்து மூன்று பாசுரங்களே போதியனவாயிருந்தனவே! ஒருவர் எய்யும் அத்திரத்திற்கும் எய்பவர் திறத்திற்கும் ஏற்பத்தானே பயன் கிடைக்கும்! நம் ஆண்டாள் எய்ததோ பிரமாத்திரம்! நெஞ்சமோ, மற்றெதற்கும் இடந்தாராத திண்மை வாய்ந்தது! இந்நிலையில் அது விரைவில் பயனளியாது நிற்குமோ! இம்முறையில் ஆழ்வார்களிலும் ஆண்டாள் இறையன்பில் உயர்நிலையில் நின்றவர் எனச் செப்புதற்குத் தடையுண்டோ?

# சீர்திருத்தம்

## 1. குலத்தை நோக்காத உயர்குணம்

ஒரு நாட்டில், ஓர் ஊரில் பற்பல குறைபாடு களும் குழப்பங்களும் தோன்றுங்கால், ஆங் காங்கே சில பெரியார் தோன்றிப் பல நலன்களை விளைவித்தல் இயல்பு. இயற்கையே இதற்கு வழி கோலுகிறது. இயற்கையைத் தடுக்க யாரால் இயலும்! சில போது இறைவனும் இக்கோட் பாட்டை. மேற்கொண்டு உடல் தாங்கி உலகில் இறங்குகிறான். இறையின் அருளைப் பெற்ற சீரிய ஆன்மாக்களும் உலகிற்கு வருகின்றன. அவைகள் உலகை ஒழுங்கு முறையில் நிறுத்துகின்றன. அவ் வொழுங்கு சான்றோரால் போற்றத்தக்கது; அழி வற்றது; உண்மை வாய்ந்தது; யாவர் மனத்தை யும் திருத்தக்கூடியது; சீர்மை பெற்றது. இதுவே 'சீர்திருத்தம்' என வழங்கப்படுகிறது.

நம் தமிழ்நாட்டில் தலைசுழன்றாடுவது எது? ஒற் றுமையை ஒழிப்பது எது? பல பிரிவுகளையும் உண் டாக்குவது எது? பிணக்குகளுக்குத் தாய்மை வகிப் பது எது? இன வேற்றுமையன்றோ? இதை மறுப் பவர் யார்? இதில் இறையன்பில் மூழ்கித் திளைத்த நம் ஆழ்வார்கள் கருத்து யாது? அவர்கள் பரமன் பத்தியைத் தவிர, வேறு செல்வத்தையோ, பதவி யையோ, குலத்தையோ உயர்வெனக் கொண்டார்க ளில்லை. தொண்டரடிப்பொடியாழ்வார், பகவான், எத்துணைத் தாழ்ந்த குலத்தில் தோன்றியவர்களா யினும், ஈசுவரனுக்குத் தொண்டு செய்வதையே

தாம் பிறந்ததன் பயன் எனக் கருதும் அடியாரிடம், நான்கு வேதங்களையும் நன்கு கற்ற அந்தணர் மாட்டுக் காட்டும் மதிப்பினும் மிக்க மதிப்பைக் கொள்ளுகின்றான் என்பதை,

"அடிமையில் குடிமை யில்லா அயல்சதுப் பேதி மாரில்
குடிமையில் கடமைப் பட்ட குக்கரில் பிறப்ப ரேலும்,
முடியினில் துளபம் வைத்தாய் மொய்கழற்கன்பு செய்யும்
அடியரை யுகத்தி போலும் அரங்கமா நகரு ளானே!"[1]

என்னும் இப்பாசுரத்தால் தெரிவிக்கிறார். நம்மாழ்வாரும், "**நெடுமாற் கடிமை**", "**பயிலுஞ் சுடரொளி**" என்னும் திருவாய்மொழிகளில் இதை நன்கு புலப்படுத்துகிறார்.

மக்கள் கூட்டுறவைக் கெடுப்பதற்கு நச்சுப்பூண்டாயுள்ள இதை நம் தெய்வப் பாவையார் எங்ஙனம் களைந்தெறிந்தார் என்பதை நோக்குவோம்:

நம் திருப்பாவைச் செல்வியார் அந்தணர் குலத்தில் அந்தணருக்குத் தலைமை பெற்ற பெரியாழ்வாரிடம் வளர்ந்தார்; வேதியர் குழுவிற்பயின்று வந்தார். இம்முறையில் வேறு குலத்தார் கலப்பு இவருக்கு ஏற்படுவதற்கு வழி ஏது? ஆயினும், நம் கோதையார் பரந்த உள்ளம் எங்ஙனம் செல்கிறது, என்ன இயற்றுகிறது என்பதைக் காணல் வேண்டும்.

அன்னையார், குலத்திலும், ஞானத்திலும் குறைந்த ஒரு குழுவினரிடம் செல்லுகிறார்; அவர்களோடு கூடிக் குலாவுகிறார். இவர் அம்மட்டோடு

1. திருமாலை, 39

நிற்கின்றனரா ? இல்லை இல்லை. அவர்களைப் போன்ற உடை, அவர்களைப் போன்ற நடை, அவர்களை ஒத்த பேச்சு, அவர்களனைய செயல் இவற்றுள் இவர் அவர்களாகவே மாறிவிடுகிறார்; அவர்கள் வேறு, இவர் வேறு எனப் பிரித்தற்கியலா நிலையில் நிற்கிறார். இக்குழு எது? இடம் வலம் அறியாத இடையர் குழு; அதிலும் மங்கையர் கூட்டம். அவர்கள் ஒவ்வொருவரையும் தாமே சென்று துயி லெழுப்புகிறார். இவர் நா, மங்கையர் சீர்மைகளை,

"நாயகப் பெண்பிள்ளாய் !"[1]
"கோது குலமுடைய பாவாய் !"[2]
"நற்செல்வன் தங்காய் !"[3]

எனப் பகர்கிறது.

இன்னும், "நோன்பின் பயன் கைபுகுந்து, சுகத்தை இடைவிடாமல் துய்த்துக்கொண்டிருப்ப வளே, எங்களுக்குத் தலைமையானவளே," என்னும் பொருள்பட "நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்ம னாய் !"[4] என அவர்களை உன்னத நிலையில் ஏத்து கிறார். இவர் செய்யப் புகுந்ததோ, உயரிய செயல் ; இறையருளை அடையக் கருதி இயற்றும் நோன்பு. இத்தூய செயலிற்கன்றோ, இடைக்குல மங்கை யரைத் தம்முடன் சேர்த்துக்கொள்ளுகிறார் ! அவ் வனிதையரைத் தம்மோடு ஒப்பவும் இவர் நினைத் திலர். தம்மினும் அம்மங்கையர் உயர்ந்தவர் என் பதே இவர் எண்ணம். அன்றேல், இவர் சென்று அவர்களை எழுப்புவரோ ? அத்தாழ்குலத்தவர் கூட்டு றவினால் இவர் தொடங்கிய நோன்பிற்கு ஏதேனும்

1-4. திருப்பாவை, 7, 8, 12, 10.

குறை ஏற்பட்டதோ? இல்லை இல்லை, அது கைங் கரியச் செல்வத்தைப் பெற்றன்றோ நன்கு முடிவுற் றது? இவர் நோக்கியது அவர்தம் குலத்தையா, அன்றிக் குடியையா? இவர் மனத்திற்கு இலக்காகி யது அவர்கள் பத்தியன்றோ! அம்மங்கையரின் பயன் கருதாத் தொண்டன்றோ இவர் மனத்தைக் கவர்ந்தது! மற்றவர் நெஞ்சம் அதற்கு உடன் படுமா? என்ன விரிந்த எண்ணம்! என்ன தூய நினைவு! பத்தி ஒன்றையே நோக்கும் பண் பென்னே! இஃதன்றோ உயரிய சீர்திருத்தம்? ஏன் நம் தமிழ்நாடு இத்தகைய பெருமிதத்தைத் துறந்து, வரவரக் குலக்கட்டில் குறுகிச் செல்கின்றதோ, அறியோம்!

## 2. ஆண்டாள் ஆயர் மகளிடம் அன்பு கொண்டதற்குக் காரணம்

பண்டு தமிழ்நாட்டில் நிலம் நான்காய்ப் பிரிக்கப் பட்டிருந்தது. அவற்றுள் ஒன்று முல்லை. இம்முல்லை நிலத்திற்கு உரியவர் ஆயர். இது முல்லைக் கொடி களுக்கும் மரங்களுக்கும் இருப்பிடம்; இது பசுக் கூட்டங்களை வளர்த்து வந்த செவிலித்தாய்; ஆனந் தத்தை ஊட்டும் அகம். எங்கும் பச்சைப்பசே லென்ற புற்றரை; எங்கும் நீர் நிலைகள். இவற்றை உண்டு வளரும் ஆனிரையின் ஆற்றல் என்னே! முலை பற்றி வாங்கக் குடங்களைப் பாலால் நிரப்பும் வளப் பம் என்னே! எங்கும் பால்! எங்கும் தயிர்! எங்கும் வெண்ணெய்! எங்கும் நெய்! இங்கு எச்செல்வத் திலேனும் குறைவுண்டோ! இதற்குத் தெய்வம்

மாயோன். "மாயோன் மேய காடுறை உலகம்" என்பது தொல்காப்பியம்.

இத்துணைச் செல்வம் செறிந்த ஆயர்பாடியில் அந்நிலத்திற்குரிய மாயோனாகிய கண்ணன் தோன்றுகிறான். அக்கால் ஒரு புறம் ஆடல்; ஒருசார் பாடல்; ஓரிடம் ஆடவர் ஆண்மை விளையாட்டு; ஒரு பக்கம் கன்னியர் களியாட்டம்; ஆயர்பாடி குதூகலத்தில் மூழ்கி உள்ளது.

"பாடு வார்களும் பல்பறை கொட்டநின்று
ஆடு வார்களும் ஆயிற்றாய்ப் பாடியே!"[1]

பாலும் வெண்ணெயும் படிந்து படிந்து முற்றம் முழுவதும் சேறாயுள்ளது. இக்குதுகுலத்தின் இடையில் நீலநிறக் குழவி ஒன்று மிக்க ஒளியுடன் ஒளிர்கிறது. அதன் அழகு, கொழுந்துவிட்டு வளர்கிறது. அக்குழவியை யாவரும் கண்ணன் என வழங்குகின்றனர். எளிமையுடையவன் என்னும் பொருள் தரும் அப்பெயருக்கேற்ப, அவன் யாவரிடமும் எளிமை தோன்றப் பழகி வருகிறான். ஆயினும், கன்னியரிடமே அவன் கருணை பெரிதும் காலூன்றுகிறது. கன்னியர் கலங்கா நிலையினரும் களங்கமற்றவருமல்லரோ? மங்கையர் தொட்டளைந்த வெண்ணெய் அன்றோ அவன் உணவு! அவரோடு கைகோத்தாடும் குரவைக் கூத்தன்றோ அவனுக்குப் பொழுது போக்கு! குழலோசையால் அவர்களைக் கூட்டிக் கூட்டிக் கண்டு மகிழ்தலன்றோ அவன் செயல்! அவர்களோடு வாதிடுதலன்றோ அவன் வழக்கு!

1. பெரியாழ்வார் திருமொழி, 1 : 2 : 2.

ஆயர் மங்கையர் வாழ்க்கை யாங்ஙனம் நடை பெறுகிறது? அவனது கருநிறம் அவர்கள் கண்ணைக் கவர்கிறது. அவன் மாயனல்லனோ! மாயன் என்பதற்குப் பரிமேலழகர் பரிபாடலில் "கரிய நிற முடையவன்" எனப் பொருள் கூறியுள்ளதைக் காண்க! அவன் புன்முறுவல் அவர்கள் நெஞ்சை அள்ளிக்கொள்ளுகிறது; அவன் மழலைச் சொற்களும், விளையாடல்களும், அவர்கள் உயிரை ஊசலாடச் செய்கின்றன; அவன் கூட்டுறவு அவர்கள் ஆன்மாவை அலக்கழிக்கிறது.

ஒருவரை ஒருவர் ஓரிமை நேரமும் அகல ஒருப்படார். அவர்கள் கூட்டுறவால் அவன் அடைவது ஆனந்தம். அவன் சேர்க்கையால் அவர்கள் அடைவது ஈறிலின்பம். இங்ஙனம் ஒருதலைக் காமமன்றி, இருதலையும் ஒரே இன்பவெள்ளம் பெருகிற்று. இவ்வின்ப வெள்ளத்தால் நாடும் வளமுற்றது. இவ் வளத்தால் ஆயரும் மாண்புற்று வாழ்ந்தனர். ஆயர் மகளிருக்கும் மாயோனுக்கும் இத்தகைய தொடர்பு எக்காலத்தும் உண்டு. அம்மங்கையர், தம் இன்னல் களைப் போக்குதற்கும் அவனே துணை எனக்கருதும் உறுதியுடையவர். இதற்கு,

"மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றத்
தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே!
நாராய ணாவென்னா நாவென்ன நாவே!"[1]

1. சிலப்பதிகாரம்—ஆய்ச்சியர் குரவை, படர்க்கைப் பரவல், 3.

என மதுரை ஆய்ச்சியர் கூறிக்குரவைக் கூத்தாடியதே தக்க சான்ருகும். இதனுலன்ரு அவ்வாயர் மகளிர் நம் ஆண்டாளின் மன ஆதனத்தில் சீரிய இடத்தைப் பெற்றனர் !

ஆயர்பாடியிலுள்ள கன்னியர் இங்ஙனம் கண்ணனேடு களித்திருத்தலை முதியோர் ஆற்றிலர் ; 'இச்செயல் நம் குலத்திற்கு இழிவை உண்டாக்கும்,' என அவர் கருதினர். உய்த்துணரும் நுட்பமதி யற்ற சில ஆயர், கண்ணன் இறைமையையும், கன்னியர் தெய்வக் காதலையும், ஆன்ம பரமான்மாக் களின் தொடர்பையும் எங்ஙனம் உணர்வர்? ஆதலின், அம்முதியோர் அன்புக்கயிற்ருல் கட்டுண்டுழலும் இவ்விரு திறத்தினரையும் தனித்தனி பிரித்து வைத்தனர். கன்னியர் நிலவறைகளில் அடைபட்டனர். கண்ணன் யசோதையின் கட்டுப்பாட்டில் அகப்பட்டான். அப்பெண்மணிகளின் இன்பப்பெருக்கிற்கு இஃதொரு போக்குவீடாய் அமைந்தது. இன்றேல், மங்கையர் முடியினும் முடிவர். இதைத் தடுக்கவே இறைவன் இச்சம்பவத்தை நிகழ்த்தினன் போலும்! பெருகி வரும் வெள்ளத்திற்குப் போக்கிடம் இன்றேல், நீர்க்கரை உடைந்தழியாதோ? கன்னியர் மனம் கலங்கிற்று. கணமும் கண்ணனைக் காணு திருக்கத் தரியாதார், எங்ஙனம் பன்னுட்கள் பாராம லிருப்பர்! கண்ணுங் கண்ணீருமாய்க் காலங்கழித் தனர்; அவர்தம் நெஞ்சம் அழிந்தது; உடலுரங் குன்றியது ; உயிர் ஒடுங்கியது. ஆகவே, வனிதையர் ஆற்ருெணு ஆற்ருமையினுல் அலறிக்கொண் டிருந்தனர்.

களங்கமற்ற கன்னியர், இறையன்பு வாய்ந்த இன்னலத்தோர்; நற்பண்பு வாய்ந்த நங்கையர். அத்தகையோரின் மனப்புண், நாட்டின் நலத்தைக் கெடுக்காமல் விடுமோ? குலப்பெண் வயிறெறிந்தால் கொடிச்சீலையும் பற்றி எரியாதோ? ஆயர்பாடியில் மாரி நின்றது; பைங்கூழ் வாடியது; பசுக்கள் இளைத்தன; பால் வறண்டது; உணவுப் பொருள்கள் குறைந்தன; மானிடர் உரங்குன்றினர்; பஞ்சம் எங்கும்பரந்தது; வறுமை வளமுற்றது. என் செய்வார் பாவம்! ஆயர் நிலை ஆபத்தில் அடி வைத்தது. நாட்டின் வறுமைக்குக் காரணம் கன்னியரின் கலக்கமே என்பதைச் சில முதியோர் உணர்ந்தனர். அக்கால வழக்கின்படி மழையின்பொருட்டு மங்கையர் நோன்பிழைக்க வெளிவிடப்பட்டனர்; அவர்களுக்கு வேண்டியவற்றை உதவக் கண்ணனையே கையாளாய் அமைத்தனர். உலக முதல்வன் கன்னியர் கையாளாய் அமைந்தது வியப்பினும் வியப்பன்றோ?

அவ்வமயம் இருதிறத்தினர் களிப்பின் நிலையை பாரால் அளவிட இயலும்! பிரிந்தவர் கூடினால் பேசலும் வேண்டுமோ? தம்மைத் தெரியாமலே இன்பப் பெருக்கில் இறங்கினர். மங்கையர் இவனைப் பிரிந்திருந்த துயர் நீங்கக் 'கண்ணு கண்ணு' எனப் பன்முறையும் அழைக்கின்றனர்; ஏதோ வேலை இடுபவர் போன்று நடிக்கின்றனர்; கண்ணன் அருகடைந்ததும் நகைத்து நிற்கின்றனர்; கையை நீட்டுமாறு பணிக்கின்றனர்; சிறிது புல்லைப் பிடுங்கி அவன் கையில் இட்டுத் தொலைவில்

எறியச் சொல்லுகின்றனர்; இங்கிலேயில் அவன் கை அழகு, முக அழகு, நடை அழகுகளைக் கண்டு கண்டு களிக்கின்றனர். அவனும், அவர்கள் ஏவுதலுக்குப் பணியாளன் போன்று உடன்பட்டு நிற்கிறான். அன்பரின் பேச்சும், நகையும், ஏவுதலும் அவன் உள்ளத்தில் உவகையை விளைக்கின்றன. புன்சிரிப்போடு தொழில் புரியும் கண்ணனுக்கு ஓட்டமும் நடையும் அல்லாமல் ஓய்வேது? மங்கையர் பலரல்லரோ? அவன் ஒருவன் என் செய்வான்! இவை யாவும் கண்ணனுக்கு ஆனந்த லீலையாய் அமைந்தன.

அம்மங்கையர் இங்ஙனம் கண்ணனைக் கையாளாக்கிக்கொண்டதனோடு நின்றனரா! அவன் ஒருபோது தம்மை ஏமாற்றிச் செல்லுவான் என்பதை அவ்வனிதையர் நன்கு அறிவர். அவன் மாயச்செயல்களுடையவனல்லனோ? ஆதலின், அம்மகளிர், புருஷகார பூதையான பெரியபிராட்டியாரையும், அருள் நிறைந்த ஆசாரியனையும் முன்னிட்டுக் கைங்கரியத் தன்மை வாய்ந்த இந்நோன்பைத் தொடங்கினர். ஆசாரியரின் அருட்பனி அவர்கள் மேல் பெய்தது. பகவத் பாகவத குணப்பெருக்குகள் அம்மங்கையர் முன் ஆறுகளாய்ப் பெருகின. மழைகால வெள்ளமெனப் பாயும் அதில் அத்தூயோர் மூழ்கி மூழ்கிக் குளித்தனர். அகங்கார மமகாரங்கள் அவர்களை விட்டு ஓடி ஒளித்தன. என்றும் இறைக்கு அடிமை செய்யும் கைங்கரிய நிதியைப் பெற்று மகிழ்ந்தனர். இம்முறையில் நோன்பு முடிவுற்றது. மழை பெய்து

ஆயர்பாடியும் செழித்தது. மற்ற ஆயரும் வறுமை நீங்கப்பெற்று மனமகிழ்ந்தனர்.

இங்கு ஒரு பொருளைக் குறிக்காமற்செல்ல மன மெழவில்லை. "திருமாலின் அவதாரமெனப் பகரப் படும் கண்ணன், கள்ளத்தனம் செய்தல், பெண்க ளிடம் முறையற்ற வழியில் நடந்துகொள்ளல் முத லியன தகுதியுடையனவோ? இத்துணைப் பெருந் தகைமையற்ற செயல்களைச் செய்யாநிற்கும் ஒரு வனை உயர்ந்தோன் எனக் கூறுதல் யாங்ஙனம்?" எனச் சிலர் வாதிடுவர். இவர் நுட்ப ஆராய்ச்சி அற்றவரேயாவர். இறைவனது இலக்கணம் யாது? அன்புடையாருடன் கலந்து கலந்து அவர்கள் அன் பைப் பெருக்குவித்து, அவர்கள் உள்ளத்தையும் உயிரையும் தன் வசப்படுத்துவது அன்றோ? அதை யன்றோ உலகில் தோன்றிய கண்ணன் செயலில் காட்டுகிறான்? 'என் உள்ளங் கவர் கள்வன்' என்றல் லவா இறைவனைப் பெரியோர் போற்றுகின்றனர்! ஆயர் மகளிரின் வெண்ணெயையா அவன் கவர்ந் தான்! பல்வகையிலும் பண்பட்டுத் திரண்டெழுந்த அவர்கள் அன்புத் திரட்சியையன்றோ அவன் கள வாடினன்! அப்பெண்டிர் ஒவ்வொருவரிடமும் தனித் தனியே கலந்து, ஒவ்வொரு கண்ணனாய் இருந்து இன்பந் துய்த்தனனே! அஃது எதைக் காட்டுகிறது? இறை ஒவ்வொருவரிடமும் உயிர்க்குயிராய்த் திக ழும் உயர்தத்துவம் என்பதை அன்றோ? இன்னும் அவன், பெண்களிடம் மட்டும் இப்பண்பில் பழகிய தற்கும் காரணம் இல்லாமற்போகவில்லை. உண் மையை நோக்கின், ஆன்ம தத்துவம் பெண்தானே?

அப்பெண் தத்துவம் பெண்ணுடலையும் தாங்கி, பெண்மைக் குணங்களையும் பெற்றிருக்குமேல், இறைமைக் குணம் வாய்ந்த கண்ணன் நெஞ்சம் அவண் விட்டு வேறிடம் செல்லுமோ? அவர்கள் பெண்மைக் குணத்தோடு அல்லவா, கண்ணன் புணர்ந்து புணர்ந்து மகிழ்கிறுன்! இன்னும் இவற்றைப் பொருத்தமான தத்துவங்களால் தெள்ளிதின் விளக்கி, கேட்பவர் மன அமைதியுறுமாறும், வியக்குமாறும் செய்யலாம். அதற்கு இஃது இடமன்று. சுருங்கச் சொல்லின், இவ்விஷயங்களில் வாதமிடுவோர், கண்ணன் இயற்றிய தெய்வச் செயல்கள் பலவற்றையும் அவன் உண்மை இயல்புகளையும் ஆராய்ந்தறிந்து அமைவாராக! இது நிற்க.

இங்ஙனம் அவ்வப்போது இன்பமுறினும், கண்ணன் தம்மை விட்டுப் பிரியும் இமைப்போதும் ஒரு யுகமாய்த் தோன்றலின், அதை ஆற்ருத ஆயர் மகளிர், மன்மதனை இறைஞ்சல், சிற்றிலிழைத்தல், பொய்கைக்குச் சென்று நீராடி ஆடைகளுக்காகக் கண்ணனைவேண்டி நிற்றல், அவன் வரவை அறியக் கூடலிழைத்துப் பார்த்தல் முதலியவற்றை மேற்கொண்டு, ஒவ்வொரு செயலின் இறுதியிலும் அவனை அடைந்து அடைந்து இன்பமுற்றனர். இம்முறையில் அம்மங்கையருடைய செயல்களும், அவர்கள் அவனைப்பெற்று ஆனந்தமுற்ற தன்மையும் இவர் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. இவர் அவர்கள் கண்ணன் மாட்டுக்கொண்ட அன்பை ஊன்றி ஊன்றி நோக்கினர. சிந்தையந்தி போன்ருருடைய உயரிய நிலை இவருக்கு மிக்க வியப்பை விளைத்தது! " அவர்கள்

இயல்பிற்கும் என் தன்மைக்கும் எத்துணை ஏற்றத் தாழ்வுள்ளது! யான் அவர்கட்கு எம்முறையில் ஒப்பாவேன்! அவர்களோ, பரந்த அறிவற்ற ஆயர் மகளிர்தாம்! சாத்திர ஞானத்தில் கரை போய அறிஞர்களும் அவர்கள் முன்னிற்க இயலுமோ! உலகில் மனிதராய்ப் பிறந்த ஒருவர் உய்தற்கு எந்த அறிவைப் பெற வேண்டுமோ, அந்த அறிவை யன்றோ அவர்கள் முற்றும் பெற்றுள்ளார்கள்! அவர்கள் வாழ்க்கையே வாழ்க்கை! அவர்கள் பெற்ற இன்பமே இன்பம்! கண்ணன் தோன்றிய அக் காலத்திலேயே தோன்றியதனுலேயே அவர்கள் இப்பேற்றை அடைந்தனர் எனச் செப்பற்குத்தான் இயலுமா? தாமரையுடன் வாழ்ந்தும் அதன் தேனை யுண்டு களிக்க அறியாத தவளையைப் போன்றூர் எத்தனைபேர் அக்காலத்தில் வாழ்ந்திருந்தனர்! அவனுல் அடையக்கூடிய முழு நலனும் அம்மங்கையரிடமன்றோ பாய்ந்து தங்கிற்று? அவர்கள் பெற்ற பேற்றை நித்தியசூரிகளும் பெறல் அரிதே! அவர்கள் காலத்திலேயே யானும் தோன்றியிருப்பின், அவனைப் பெற்று இன்பக்கடலில் நீந்த இப்பாடு பட வேண்டாவன்றே? அப்பேறு எனக்குக் கிடையாமற்போனது யான் செய்த தீவினையினுலேயே யாகும்! இனி அதைக் குறித்துச் சிந்திப்பதில் பயன் யாது? அவர்கள் பெற்ற பேற்றை அடைதற்கு இப்போது யான் செய்ய வேண்டுவது யாது? அவர்களே எனக்கு வழிகாட்டிகளெனக் கருதி, அவர்களிடம் ஊன்றிய அன்பு கொண்டு, அவர்கள் கண்ணனை அடைதற்கு எங்ஙெந்தச் செயல்களைப் புரிந்

தார்களோ, அவற்றை யானும் மிக்க பத்தியுடன் மேற்கொண்டொழுகுதலே யான் கருதியது கைகூடு தற்குச் சிறந்த கருவியாகும்," என இவர்க்குத் தோன்றிற்று. இஃதே அவர்கள்மாட்டு இவர்க்கு ஆழ்ந்த அன்புண்டாதற்குக் காரணமாயிற்று. இங் ஙனம் அன்னையார் அம்மங்கையரிடம் கொண்ட அன்பும் மதிப்பும் இவருக்கு நலனையும் அளித்ததல் லவா? இதனால், எதை எதைக் கருதுகின்றனரோ, அதற்கேற்றவரையே துணையாகப் பற்றி அன்பு கொள்ள வேண்டுமே தவிர, குலத்தையோ, குடி யையோ நோக்குதல் அறிவுடைமையன்று என் பதை அறிந்தோம். இஃதொரு சிறந்த சீர்திருத்த மன்றோ!

### 3. நோன்பிழைத்தல் கோதையார் நிலைக்கு ஏற்றதா?

ஒரு தெய்வத்தின் அருள் பெறுதற்பொருட்டு மேற்கொள்ளும் செயல் 'நோன்பு' எனக் கூறப் படும். நோன்பு இழைக்கப் புகுவோருக்கு ஒற்றுமை இன்றியமையாதது. அன்றியும், அவர்களுக்குப் பொறுமை, அறிவுடைமை, சினங்கொள்ளாமை, கோட்பாடுகளிலிருந்து தவறுமை, அற்ப இன் பத்தை நாடாமை, மனந்தளராமை முதலியன வேண்டற்பாலனவாகும். அன்றேல், எடுத்த காரி யம் முடிவுறுமையேயன்றிப் பழியும் பாவமும் வந்து சேரும்.

பெரும்பான்மையும், இவ்வுலகச் செல்வத் தையோ, சுவர்க்கம் முதலிய அவ்வுலகச் செல்வத் தையோ பெற விரும்புகின்றவர்கள் அல்லவா

அவற்றைப் பெறுதற்பொருட்டுத் தம் வழிபடு கடவுளை நோக்கி நோன்பிழைப்பர்! வேறெந்தப் பயனையும் நாடாது, பகவானுடைய உள்ளக் களிப்பையும் முகமலர்ச்சியையுமே பெறக் கருதும் பிரபன்னர் நோன்பிழைத்தல் உண்டா? ஆழ்வார்களுள் யாரேனும் இச்செயலை மேற்கொண்டுள்ளனரா? இல்லையே! சடகோபர், பகவானை நோக்கி' 'நோன்பு நோற்றல் முதலியவற்றைமேற்கொள்ளாமல் உன் அருளையே நோக்கி நிற்கும் என்னை நீ கைவிடுதல் தகுதியாமா?' என்றல்லவா கேட்கின்றனர்! இதனால், நோற்றல் முதலியன எம்பெருமான் கைவிடுதற்குக் காரணம் என்பது தெரிகின்றதன்றோ! அங்ஙனமாயின், பிரபன்னர்களுள் தலைநின்ற நம் கோதையார் மட்டும், தம் நிலைக்கு ஏற்காத நோன்பை மேற்கொண்டது ஏன்? இதுதான் வியப்பிற்கிடமானது! இச்செயல்தான் இவரை மற்ற ஆழ்வார்களிலும் உயரிய நிலையில் நிறுத்துதற்குக் கருவியாயிருந்தது! இவர் கொணர்ந்த சீர்திருத்தங்களுள் இது தலைசிறந்ததெனவுங் கொள்ளலாம். இவர் மார்கழித் திங்களில் இயற்றிய இந்நோன்பையன்றோ, இற்றைவரை எல்லாப் பிரபன்னரும் மேற்கொண்டு ஆற்றுகின்றனர்? எல்லாச் சன்னிதானங்களிலுமன்றோ இது நிகழ்ந்து வருகின்றது! அங்ஙனமாயின், இதற்கு எத்துணை மாண்பிருத்தல் வேண்டும்! மேலெழுந்தவாரியாய் நோக்குங்கால், இது வைணவச் சித்தாந்தத்திற்கு முற்றும் முரணாகத் தோன்றுகிறது. ஆனால், இதற்குக் குற்றங் கூறுதற்கோ, இது பயனற்றதெனக் கழித்

துத் தள்ளுதற்கோ இதுகாறும் எச்சான்றோரும் முன்வந்திலர். அதற்கு மாருக, மார்கழித் திங்களில் அந்நோன்பைப்பற்றித் தெரிவிக்கும் **திருப்பாவை** என்னும் திவ்விய நூலை அதிகாலையில் பாராயணஞ் செய்வதும், அதன் பொருளைப் பெரியோரிடம் கேட்டு உயரிய ஞானத்தை அடைய முயலலும் புருஷார்த்த மென்றன்றே ஆசாரியர்கள் வரையறுத்துள்ளார் கள்? இதற்குப் **பெரியவாச்சான் பிள்ளை, அழகிய மணவாளப் பெருமாள் நாயனார், ஆய்** முதலிய அறிஞர் பொருளுரைத்துள்ளனர். இவை யன்றியும்,

> ''பாதகங்கள் தீர்க்கும் பரம னடிகாட்டும்
> வேத மனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ்
> ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை
> வையம் சுமப்பதும் வம்பு.''

என **வேதபிரான் பட்டர்** என்பவர் அருளிச் செய்த சிறப்புரை ஒன்றுமுண்டு. வைணவக் கொள்கைக்கு மாறுபட்டதெனச் செப்பும் இதற்கா இத்துணைச் சீர் மைகள்! இதனுலேயே இதில் ஏதோ ஒரு சீரிய நுட்பம் உள்ளது எனத் தோன்றுகின்றதன்றே! அதைத்தான் நோக்க வேண்டும்.

கோதையார் கண்ணனிடம் கொண்ட காதல் மற்றவர்களைப் போன்று அளவிற்குட்பட்டதாயிருப் பின், வைணவத்திற்கும் தம் உயரிய நிலைக்கும் மாறுபட்ட இந்நோன்பில் தம் சிந்தையைச் செலுத்தி யிரார். தம் காதல் வெள்ளமோ, கரை கடந்தோடு

கிறது! தம் அன்பிற்குரிய பொருளை அப்போதே அடையவேண்டுமென்னும் ஆற்ருமை பொங்கி வழி கிறது! அதற்கு ஒப்பான பொருள் ஒன்றையும் உல கில் கண்டிலர்! தாம் காதலித்த பொருளைக் காட்டு பவரோ, கொணர்ந்து கொடுப்பவரோ, அப்பொரு ளோடு கொண்டுபோய்ச் சேர்ப்பவரோ ஒருவரு மிலர்; முயன்று முயன்று பார்த்தார்; பயனளித் திலது. ஆதலின், வழியல்லா வழியிலேனும், அவனை அடைய வழி கோலுகிருர். அதன்பொருட்டு இவர் நெஞ்சம் எதை எதையோ துருவித்துருவிப் பார்க் கிறது. அதன் பயனுய்க் கண்ணன் தோற்றம் இவருக்குக் காட்சியளிக்கிறது. அவன்பால் அளவு கடந்த அன்பு வாய்ந்த ஆயர் மகளிர் மழை பெய்தற்கென நோன்பிழைப்பதாய்ப் போக்குக் காட்டி, அதன் வாயிலாக அவனை அடைந்து இன்புற்ற செய்தி இவர் நினைவிற்கு வருகிறது. அதையே தமக்குப் பற்றுக்கோடெனப் பற்றுகிருர். அவர்கள் உடல் உழைப்பினுல் செய்த அந்நோன்பை இவர் தம் பாவனையினுல் இயற்றுகிருர்; இறுதி யில் கண்ணனை அடைந்து இன்புறுகிருர். இதை யாவ ருக்கும் வெளிப்படுத்துவது இவர் இயம்பிய முப் பது பாசுரங்கள் அடங்கிய திருப்பாவையேயாகும். இந்நோன்பு **மீமாம்ஸையில் வசந்தோற்சவம்** எனச் சொல்லப்படுகிறது. இதை, இவருக்கு முன்பிருந்த பெரியோர்கள் அனுட்டித்தமையின், இது சிஷ்டாசா ரம் எனப்படும். ஆதலினுற்ருன் இதை ஆண்டாள் 'மேலையார் செவ்வனகள்' எனத் தெரிவிக்கிருர். 'எங் ஙனமாயினும், ஆண்டாளுடைய உயரிய நிலைக்கு

இது குற்றமுடையதுதானே?' என்னில், முன்னர்க் கூறியவாறு இது பயனைக் கருதி உலகத்தார் இயற்றும் நோன்பைப் போன்றதன்றே? நோன்பு என்னும் போக்கிலே, எம்பெருமான் பக்கலிலே சென்று, "உனக்குச் சேஷமாயிருந்து தொண்டு செய்து வாழ வேண்டிய இந்த ஆன்மா வேறு வகையில் சென்று அழியாவண்ணம் காத்து, இதற்கேற்ற கைங்கரியங்களைக் கொடுத்து, இதை உய்யச் செய்ய வேண்டும்," என இறைஞ்சுவதையன்றோ தன்னுள் கொண்டுள்ளது? ஆதலின், இஃதொரு சீர்திருத்தம் எனக் கொள்க. யாங்ஙனம் ஆண்டாள் தம் ஆற்றாமையினால் மேற்கொண்ட இந் நோன்பு தம் நிலைக்கு அடாத செயல் எனச் சிலர் கருதுமாறு மேற்போக்கில் காணப்படினும், அதன் உட்பொருளை ஊன்றி நோக்குங்கால், பொருட்செல்வத்தையோ, ஆன்மச் செல்வத்தையோ இறைவனருளையோ, தமக்கு இன்பத்தையோ, பெறவெண்ணிச் செய்தனரில்லையே! அந்தப் பரமனுக்கே இன்பமுண்டாக வேண்டும் என்னும் தன்மையிலன்றோ அஃது அமைந்தது! இது யாவருக்கும் அமைவதொன்றோ! இஃது எத்துணை உயரிய சீர்திருத்தமாகும்! இஃது எத்துணை அறிவுரைகளைத் தன்னுள் அடக்கிக்கொண்டு, வைணவத்தின் ஆழ்ந்த தத்துவத்தை எடுத்துக் காட்டுகிறது! எத்தனை சோம்பருக்கு ஊக்கமளிப்பதாயுள்ளது! நம்மனோரில் எத்தனை பேர், "பகவானே எல்லாம் என நினைத்துள்ள நாம் ஒன்றும் செய்ய வேண்டுவதில்லை. செய்யில் குற்றத்தின்பாற்படும்," என யாதொரு கவலையும்

இன்றி உண்டு உடுத்து வீணில் வாணுளேக் கழிக்கின்றனர்! அத்தகையோரை நல்வழிப்படுத்த இஃதொரு சீர்திருத்தமன்ரூே!

இன்னும் நம் அன்னையாருடைய இச்செயல் எதைக் காட்டுகிறது? 'பிறர்க்கு வழி காட்டுதற் பொருட்டுக் கன்மங்களைச் செய்ய வேண்டும். ஆனல், அதற்குப் பயனைக் கருதுதல் கூடாது. அங்ஙனம் பயனைக் கருதாது செய்யும் கன்மம் கைங்கரியத்தில் சேரும்' என்பதையேயாகும். இங்கு, "**கர்மம் கைங்கரியத்திலே புகும்**" என்னும் பிள்ளை லோகாசாரியர் வாக்கை நோக்குக.

கண்ணன் கீதையில் பல அத்தியாயங்களில் பன்னிப் பன்னிச் சொல்வது யாது? நற்காரியங்களைச் செய்யுங்கால், 'இதற்கு நாம் கர்த்தா' என்று நினைத்தல், 'இதை நாம்செய்தோம்' என்னும் மமகாரம் கொள்ளுதல், 'இதற்காகிய நன்மை நமக்குக் கிடைக்க வேண்டும்' எனப் பலனைக் கருதுதல் ஆகியவற்றை அறவே விட வேண்டும் என்பதுதானே? இதனல் தேர்ந்த பொருள் யாது? நாம் புரியும் யாவற்றையும் பகவானுக்கே உரியனவாக்க வேண்டுமென்பதேயன்ரூே? அங்ஙனமாயின், நம் அன்னையார் கூற்றிற்கும் இதற்கும் என்ன வேறுபாடு? இம்முறையில் பிரபன்னரைத் திருத்துவதும், இறைவன் கருத்திற்கேற்றதுமான இதைக்காட்டிலும் மேலான சீர்திருத்தம் வேறு யாது? ஆகவே, இச்செயல் உலகைச் செம்மைப்படுத்த வந்த கோதையாரைப் போன்ரூர்க்குப் பொருத்தமுடையதெனக் கொள்க.

# அர்ச்சையின் அந்தரங்கம் (ஆழ் கருத்து)

## 1. உள்ளத்தின் மேன்மை

சான்றோர் உலக உயிர்களை, மாக்கள் மக்கள் என்னும் இரு பிரிவில் அடக்குவர். இவற்றுள், மாக்கள் என்பது நன்மை தீமையைப் பிரித்தறியும் வன்மையற்ற விலங்கு முதலியவற்றையும், மக்கள் என்பது பகுத்தறிவு வாய்ந்த மக்கட்டொகுதியையும் குறிப்பனவாகும். மக்களுள்ளும், சிலர் தெய்வத் தொகுதியுள் வைத்தெண்ணப்படும் அத்துணைச் சீரிய பண்பாடுகள் அமைந்தவராகவும், சிலர் விலங்குத் தொகுதியுள் சேர்த்தெண்ணக் கூடிய தாழ்ந்த இயல்பமைந்தவராகவும் இருக்கக் காண்கின்றோம். இவற்றிற்கு அடிப்படையான காரணம் யாது? மனத்தைச் செம்மைப்படுத்திக் கல்வி கேள்விகளினால், தன் கருத்துக்களையும் கொள்கைகளையும் பண்படுத்தலும், இவற்றை முறைப்படி மேற்கொள்ளாமல், தன் மனஞ்சென்றவாறு செல்லுதலுமே ஆகும். இவர்களுள் முன்னவன் தெய்வத்தன்மையை அடைகிறான்; பின்னவன் மிருகத்தன்மையை அடைகிறான். இவற்றிற்கு முறையே,

> "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
> தெய்வத்துள் வைக்கப் படும்."[1]

> 'விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
> கற்றாரோ டேனை யவர்." [2]

என்னும் குறட்பாக்களைச் சான்றாகக் கொள்க.

---

1-2. திருக்குறள்

நம் பண்டையோர் தத்துவநூல்களைக் கொண்டு உள்ளத்தின் உண்மையை விளக்கியுள்ளனர்; மேனாட்டார் தம் யூகத்தைக் கொண்டு இதை ஆராய்ச்சி செய்து வருகின்றனர். ஆனால், இவர்கள் ஆராய்ச்சி இன்னும் முற்றுப் பெற்றிலது. இஃது முற்றுப் பெருங்கால், இவர்கட்கு நம் முன்னோர் கண்ட பல நுட்பங்கள் விளங்கப் பெற்று, பல ஐயங்கள் நீங்கும்.

உள்ளம் என்பதற்கு, மனம் சிந்தை எனப் பல பொருள்கள் உண்டு. ஒன்றை உள்ளுங்கால் அஃது உள்ளம் எனப்படும். உள்ளுவது எது? மனமன்றோ! அம்மனத்திற்குத் தோற்றம் அழிவுகள் காணப் படுகின்றமையின், அது சடம் (அஃறிணை) எனச் சொல்லப்படுகிறது. ஒருவர் இன்பத்திற்கும் துன்பத்திற்கும் மனமே காரணமாகும். வறிஞன் ஒருவன் மன அமைதியுற்று மகிழ்வுடன் வாழ்கின்றான்; பெருஞ்செல்வன் ஒருவன் மன அமைதியற்று, கலக்க அலைகளால் அலக்கழிக்கப்பட்டு வாழ்கின்றான். காரணம் என்ன? முன்னவன் மனநிறைவும், பின்னவன் மனக் குறைவுமே என்பது வெள்ளிடை மலை.

பகுத்தறிவு வாய்ந்த மக்களுக்கு **அறம்**, **அன்பு**, **அருள்** இம்மூன்றும் உயிரணிகளாகும். இவை மூன்றும் ஆன்மாவை அழகுபடுத்தி அரண் செய்கின்றன. இவை ஒன்றையொன்று தொடர்ந்தே செல்லும். இவற்றிலிருந்தே கணக்கற்ற நலங்கள் பிறக்கின்றன. இவற்றின் சிறப்பியல்புகள் அளவிலடங்குவனவல்ல. இத்தகைய சீர்மை வாய்ந்த இம்மூன்றிற்கும் பிறப்பிடம் எது? மனமேயாகும்.

இதற்குப் பல நூல்களிலிருந்தும் சான்றுகள் சாற்றலாமாயினும், விரிவிற்கஞ்சி, இம்மனத்தைப்பற்றிய மாதானுபங்கியாரின் கருத்தை மட்டும் இங்குச் சுருக்கிக் காட்டுவாம்:

**அறம்**: இது சுருங்கிய ஒன்றில் அடங்குவதன்று. இது பரந்து பரந்து செல்வது. இல்லறத்தார் துறவறத்தார் ஆகிய இரு பகுதியினர் மேற்கொள்ள வேண்டிய யாவும் அறத்திலடங்கும். இதற்குத் தெய்வப்புலவர் அறத்துப்பால் என வகுத்து அதில் முப்பத்தெட்டு அதிகாரங்கள் செய்திருத்தலைக் காண்க. சிலர் அறத்திற்கு ஈகை முதலிய சில பொருள்களைக் கூறுவர். ஈகை என்பது அறத்தின் ஒரு பகுதியாகும். அறத்தின் இலக்கணம் யாது? மனத்தின்கண் குற்றமற்றவராதலே. அறம் எதைப் பற்றிக்கொண்டு நிற்கிறது? எதிலிருந்து தோன்றுகிறது? மனத்தினிடமேயன்றோ?

**அன்பு**: அன்பினாற்றான் உலகம் வாழ்கிறது! அன்பின்றேல் உலகம் ஏது? ஓருயிரேனும் நிலைபெறக் கூடுமோ? ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிரீறாக உள்ள ஒவ்வொரு பொருளினிடமும் இஃதுண்டு. இதைப் பெற்றிராத உயிரே இல்லையென உறுதியாகக் கூறலாம். இஃதின்றேல், பறவையின் பார்ப்பு ஏது? பசுவின் கன்றேது? காதலன் காதலி எங்கே? அவர்களால் உருப்பெற்றுத் தோன்றும் மழலை மக்கள் எங்கே?

இவ்வன்மையை மக்கள் வலிந்து கொள்ளுகின்றனரா? இல்லை இல்லை. பச்சைப் பசுங்குழவியிலிருந்தன்றோ இது முளைத்தெழுகிறது! தாய்ப்பசுவைக்

கண்ட இளங்கன்றும், தானீன்ற கன்றை நோக்கிய தாய்ப் பசுவும் ' அம்மா அம்மா ' என்றழைக்கும் ஒலி எதைப்பற்றியது? இளங்குழவி தாயைக் கண்டதும் தாவிக்குதித்துப் புன்னகை கொள்வது எதனால்? இவ்வன்பின் ஊற்றினாலன்றோ! இவ்வியற்கை ஊற்றிற்கு வற்றுதல் ஏது? உடலுறுப்புகள் தளர்ச்சியடையலாம்; முதுமை மேலிடலாம்; கட்புலன் செவிப்புலன்களின் வன்மை குறையலாம். இவ்வன்பூற்றுச் சுருங்குமோ? சுருங்காது என்பது திண்ணம்! ஆனால், ஒருவருக்கும் மற்றொருவருக்கும் இவ்வன்பில் வேறுபாடு தோன்றலாம். சிலருக்குச் சுற்றத்தினரிடம் அன்பு; சிலருக்குப் பொருளில் அன்பு; சிலருக்குக் கல்வி கேள்வி ஆராய்ச்சிகளில் அன்பு; சிலருக்கு இறைவன்பால் அன்பு என அவரவர் அன்பு வெவ்வேறு துறைகளில் செல்லக்கூடும்; ஆயினும், இவை யாவும் அன்பின் செயல்கள்தாமே! அவரவர் கொள்ளும் அன்பின் வேறுபாடுகளைப் பற்றிப் பேசுதற்கு இஃதிடமல்லவாதலின், அதில் செல்லாமல் விடுத்தாம். உடலிற்கு எலும்பு எங்ஙனம் இன்றியமையாததோ, அங்ஙனமே உயிருக்கு அன்பும் இன்றியமையாததாகும். என்பற்ற புழு முதலியவற்றை ஆதித்தனொளி எங்ஙனம் சுட்டுக் கொல்லுகிறதோ, அங்ஙனமே அன்பற்ற உயிர்களை அறக்கடவுள் துன்புறுத்தி அழிக்கும் என்பது சான்றோர் உறுதி.[1]

---

1. "என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்." —திருக்குறள்

இத்துணை நலமமைந்த அன்பிற்குப் பிறப்பிடம் உள்ளமே. இதற்கு 'அன்பு நிறைந்த இருதயம்' என இருதயத்தையும் இருப்பிடமாகச் சொல்வதுண்டு. குறைந்த அன்புடையவரை இருதயமற்றவர் எனப் பேசப்படுகிறதை நோக்குக.

**அருள் :** தமக்குத் தொடர்புடையார் மாட்டுச் செலுத்துவது அன்பு என்றும், தமக்குத் தொடர்பற்ற மற்றெல்லா உயிர்கள் மாட்டும் செலுத்துவது அருள் என்றும் சொல்லப்படுகின்றன. அருளுக்கு இரக்கம் கருணை என்னும் பல பெயர்கள் உண்டு. பொதுப்பட இல்லறத்தாருக்கு அன்பும், துறவறத்தாருக்கு அருளும் இன்றியமையாதனவெனக் கூறப்படினும், இஃது இருதிறத்தவருக்கும் இருக்க வேண்டிய ஒரு சீரிய பண்பாகும். முன்னர் இயம்பிய அன்பைக்காட்டிலும், அருள் சிறந்ததெனப்படும். பொருளற்றவர் எங்ஙனம் இவ்வுலக இன்பங்களைப் பெற முடியாதோ, அங்ஙனமே அருளற்றவர் அவ்வுலக இன்பங்களை அடைய இயலாது'[1] என்பர். இதனுல், பெரும்பான்மையும் பொருள், உடல் நலங்களைத் தருவது என்றும், அருள் ஆன்ம நலங்களை அளிக்க வல்லது என்றும் அறிய வேண்டும். ஆனல், பொருளிற்கு மிகுதல் குறைதல் என்பன இயல்பாதலின், அது குறைந்த காலத்தில் பொருளினுலாய இன்பம் இல்லாதொழிவது மட்டுமேயன்றி, முந்திய செல்வ நிலையை நினைத்து நினைத்துத் துன்

---

1. ''அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு.'' —திருக்குறள்

புறவும் இடந்தரும். அருளோ, ஒருவர் மனத்தில் குடி புகுமாயின், பெரும்பான்மையும் அது மேன் மேலும் வளருமேயன்றிக் குறைதல் இல்லை. ஒரு கால் அருளினலாய செயல்களைத்தாம் மேற்கொள்ள இயலாவிடினும், தாம் முன்னியற்றிய அருட்காரியங் களை நினைத்து நினைத்து ஆனந்தமுற இடமேற்படும் என்பது திண்ணம். இவ்வருளுக்கும் வைணவருக் கும் மிக்க தொடர்புள்ளது. ஒரு வைணவர் மேற் கொள்ள வேண்டிய தருமங்கள் பல உள. அவற் றுள் தலை சிறந்தன சில. அச்சிலவற்றுள் இவ்வரு ளும் ஒன்ருகும். ஒருவர் தாம் உண்மை வைணவர் தாமா என்பதை அறிய வேறு அளவு கோலோ, பிறர் சான்ருே வேண்டுவதில்லை. அவர் தம் மன உணர்ச்சியே அதைத் தெளித்துக் காட்டிவிடும். யாங்ஙனம்? எப்போது ஒருவர்க்குப் பிறர் படும் துன்பத்தைக் காணுங்கால், அவர் மாட்டு இரக்கமும், அதை நீக்க வழி யாது என்பதில் சிந்தனையும் உண் டாகின்றனவோ, அப்போதுதான் அவர் உண்மை வைணவர் ஆகிருர் எனத் தத்துவம் வரையறுக்கிறது. ஆதலின், ஒரு வைணவருக்கு இவ்வருள் இன்றி யமையாது வேண்டாற்பாலதென அறிகின்ருேம்.

அருளுள்ளம் கொண்டோர், தமக்குத் துன்பம் நேரினும், பிறர்க்குத் துன்பமிழைக்க ஒருப்படார். அவர்கள் பிறர்க்குச் செய்யும் உதவிகள் பலப்பல. உலகிற்கு நலம் புரிதலே தம் கடமை எனக் கருது வர். அவர்களுடைய இரக்க எண்ணம் பிற உயிர் களுக்கு ஏற்படும் சிறு துன்பத்தையும் தாங்குதல் இல்லை. அதன்பொருட்டுத் தம் உயிரைக் கொடுக்

கவும் முன் வருவர். இங்கு, ஒரு சிறு புருக் காரண மாய்த் தம் உடற்றசையையும் அறுத்துத் தந்த சிபிச்சக்கரவர்த்தியின் இரக்கப் பண்பு, நினைவிற்கு வருகிறது. இத்தகையவரை உலகம் தெய்வத் தினும் மேலாகக் கருதுகிறது. இவர்கட்கு உலகம் வசப்பட்டு, இவர்தம் அடியைப் பணிந்து வருகிறது. இவர் புகழ் என்றும் மறைதல் இல்லை; நாட்பட நாட்பட உயர்ந்தோங்குகிறது. இக்காரணங்களினுல் இவர்கள் மறுமையில் அருள் வெள்ளத்தாளுகிய இறையை அடைந்து இன்பந் துய்த்தற்குத் தடை யாது?

இன்னணமாகிய பல நலன்களும் பெற்ற இவ் வருட்பிழம்பு, எங்கிருந்து தோன்றுகிறது? எங்கு ஒளிர்ந்துகொண்டிருக்கிறது? 'அருள் நிறைந்த உள்ள முடையவர் இருள் நிறைந்த துன்ப உலகத்தில் (நரகத்தில்) புகுதல் இல்லை'[1] எனக் குறளாசிரியர் ஊன்றிக் கூறியிருத்தலின், இஃது உள்ளத்தையே தனக்குப் பிறப்பிடமாகக் கொண்டு, அதனிடமே ஒளிர்ந்துகொண்டிருக்கிறதென்பதை உணர்ந்தாம்.

இவற்ருல், உலக உயிர்களை உய்வித்தற்கு அடி கோலிகளாயுள்ள அறம், அன்பு, அருள் ஆகியவை தோற்றுதற்குக் காரணமாயுள்ளது உள்ளமே என அறிந்தோம். இன்னும் ஆழ்வார், '**ஊனில் வாழ் உயிரே**'[2] என்னும் பாசுரத்தில் இம்மனத்தை

1. "அருள்சேர்ந்த நெஞ்சினுர்க் கில்லை இருள்சேர்ந்த உலகம் புகல்." —திருக்குறள்

2. திருவாய் மொழி, 2: 3: 1.

'உயிரே' (ஆன்மாவே) என விளித்து இதன் சீர்மையைத் தோன்ற வைக்கிறார்.

**வினா:** ஞானமற்ற மனத்திற்கும், ஞானத்தையே உருவெனப் பெற்று ஞானத்திற்கு இருப்பிடமாயுள்ள உயிருக்கும் எத்துணை வேற்றுமையுள்ளது? அங்ஙனமிருக்க, ஆழ்வார் மனத்தை உயிர் என விளித்தது யாங்ஙனம் பொருந்தும்?

**விடை:** நீங்கள் பகருவது போன்று, மனம் ஞானமற்றதும், சடப் பொருளுமாய் இருப்பினும், உலகப் பொருள்களிடம் பற்றை உண்டாக்கி, நரகத்தில் ஆழ்த்துதற்கும், அப்பற்றை அறவே போக்கி வீட்டின் பேற்றில் உய்ப்பதற்கும் காரணமாயிருத்தலின், இதன் சிறப்பை நோக்கி, இதை 'உயிரே' என்கிறார் ஆழ்வார்.

இதற்கு, "ஆத்மாவிற்குத் தர்ம பூதஜ்ஞானம் நித்யமாயிருக்கச் செய்தே, பந்தமோக்ஷங்களுக்கு ஹேது மங்ஸென்கிற ப்ராதாந்யத்தைப் பற்ற 'உயிரே' என்று ஆத்மாவை ஸம்போதிக்குமாபோலே, ஸம்போதிக்கிறார்," என்னும் ஈட்டின் வாக்கியம் சான்றாகும்.

இன்னும், இராமநுஜ நூற்றந்தாதியை அருளிச் செய்த திருவரங்கத்தமுதனார், தம் நெஞ்சை நோக்கி, "பெருந்தன்மை வாய்ந்த என் மனமே, அறியாமையும், அகங்கார மமகாரங்களும் நிறைந்த மக்களுடைய தொடர்பை நீக்கி, ஒப்பற்ற பண்புகளும், சாத்திரத் தேர்ச்சியும், தம்மை அடைந்தவர் பக்குவத்திற்கேற்பத் தம்மை அமைத்துக்கொள்ளும் இயல்

பும் வாய்ந்த எம்பெருமானாரிடம் அன்பு செய்யும் உயரிய புருஷார்த்தப் பேற்றைப் பெற்றவர்களுடைய திருவடிகளில் என்னைச் சேர்த்த இப்பேருதவிக்கு உன்னை வணங்கினேன்,'' எனப் பகருகின்றார்.[1] இதனாலும் மனத்தின் மாண்பு புலப்படுகின்றதன்றோ? இங்ஙனம் அறிஞர் தம் நெஞ்சைப் போற்றும் இடங்கள் பல உண்டு.

ஆயினும், எவ்விதையை இடினும் செழித்தோங்கக் கூடிய வளமுள்ள நிலம் ஒருவருக்குரித்தாயிருப்பினும், அதற்கேற்ற செயல்களை மேற்கொள்ளாவிடின், எங்ஙனம் அதனால் பயனடைய இயலாதோ, அங்ஙனமே நல்லியல்புகளுக்கு நிலைக்களனாய் உள்ள மனம் மக்கட்கு அமைந்திருப்பினும், இதைத் தக்க முறையில் பண்படுத்தவில்லையேல், மேற்கூறிய நல்லியல்புகளை இதனிடம் காண முடியாதெனக் கொள்க. இது நமக்கு இறைவனால் கொடுக்கப்பட்ட ஒரு பெருநிதியாகும். நன்மை தீமைகளை ஊகித்தறிந்து நம் வாழ்க்கையைச் செம்மைப்படுத்துதற்கு உறுதுணையாயுள்ள இவ்வூன்று கோலை நமக்குத் தந்த இறையை நாம் மறத்தற்கியலுமோ? மறந்தால் பிறவிப் பயனை எய்த முடியுமோ? ஆதலின், உயர்ந்த உள்ளம் பெற்ற ஒவ்வொருவரும் தம் நன்றியறிதலைச் செலுத்து முகத்

---

1. "பேரியல் நெஞ்சே யடிபணிந் தேனுன்னைப்பேய்ப்பிறவிப்
பூரிய ரோடுள்ள சுற்றம் புலற்றிப் பொருவருஞ்சீர்
ஆரியன் செம்மை இராமா நுசமுனிக் கன்புசெய்யும்
சீரிய பேறுடை யாரடிக் கீழென்னைச் சேர்த்ததற்கே!"
—இராமாநுஜ நூற்றந்தாதி, 3.

தான் இறை வழிபாட்டை இன்றியமையாது கைப் பற்ற வேண்டும். ஒவ்வொருவரும் மனத்தின் இயல்பையும் பெருமையையும் அறிவது நலமுடையதென்றும், இதை விளக்குதற்கு இந்த இடமே பொருத்தமானதென்றும் தோன்றியமையின் இது சிறிது விரித்தெழுதப்பட்டது.

## 2. வழிபாட்டின் வகைகள்

இனி வழிபாட்டைக் குறித்து நோக்குவோம்: இறை வழிபாடு பல வகைப்படினும், இது அருவ வழிபாடு உருவ வழிபாடு என்னும் இரண்டனுள் அடங்கும்.

**அருவ வழிபாடு:**—எள்ளுக்குள் எண்ணெய் போன்றும், பாலுள் நெய் போன்றும் எப்பொருளினும் கலந்தும், ஆகாயத்தைப் போன்று எங்கும் பரந்தும் உள்ள இறைவனை உருவமற்ற பொருளாகக் கொண்டு வழிபடுதல் அருவ வழிபாடாகும்.

**உருவ வழிபாடு:**—முற்கூறிய இலக்கணத்தின் படி அமைந்துள்ள கடவுளுக்குத் தாம் விரும்பிய ஏதாவதோர் உருவத்தை அமைத்து வழி படுதல் உருவ வழிபாடாம்.

உருவம் என்றதும் சிலருக்குச் சினம் மூண்டெழுகிறது. அவர், "எங்கும் நிறைந்த இறைவனுக்கு உருவத்தைக் கற்பித்தல் அஞ்ஞானம்! மனம் வாக்குக் காயங்கட்கு எட்டாத பரம்பொருளுக்கு ஓருருவத்தையும், ஓரிடத்தையும் நிலை நாட்டி வழிபடுதல் யாங்ஙனம் பொருந்தும்? உருவங் கடந்த ஒன்றே தேவை. இதுவே ஞானச் செயல்," எனப் பகர்வர்.

'இங்ஙனம் இறைவனுக்கு உருவம் இல்லை எனக்கூறு பவர், உருவத்திலிருந்து பேசுகின்றனரா, அருவத்தி லிருந்து பேசுகின்றனரா? இவர் பேச்சுக்கும் எண் ணங்களுக்கும் உருவம் உண்டா, இல்லையா?' எனக் கேட்கின்றோம். ஒருவர், முன்பென்றோ பார்த்த பொருளைத்தான் இன்று சிந்திக்க முடியுமேயன்றி, என்றும் பாராத ஒரு பொருளை அவரால் சிந்திக்க இயலுமா? நம் மனமும், புலன்களும், செயல்களும் வரையறைக்குட்பட்டன. ஆதலின், அவற்றிற் கேற்ப எல்லாவற்றையும் கடந்து நிற்கும் கடவுளை வகுத்துக்கொண்டாலல்லாமல், நாம் அக்கடவுளிடம் அன்பு செலுத்தவோ, அவன் அருளைப் பெறவோ இயலாது. பரந்து செல்வதும், கட்டுக்கடங்காத தும், காற்றினும் விரைந்து ஓடுவதுமான மனத்தை, ஓரிடத்தில் நிறுத்தித் தியானிக்க ஓர் உருவம் இன்றி யமையாதது. உருவம் இன்றேல், மனம் ஒருப்படு தல் இல்லை. நாம் காணாத ஒன்றைத் தெரிந்து கொள்ளுதற்கு எதை நாடுகிறோம்? கண்ட ஒரு பொருளை அன்றோ? அன்றேல், விஷயத்தை எளிதில் விளங்கிக்கொள்ள இயலுமோ? அங்ஙனமே, காணாத கடவுளிடம் மனத்தைக் குவியச் செய்து தியானத் தில் நுழைக்க உருவம் இன்றியமையாது வேண்டற் பாலதாகும். இவற்றால் தேறுவது யாது? உள்ளத் தினால் ஒன்றை நினைத்தல், போற்றல், வழிபடல் செய்யவேண்டுமாயின், உருவம் இன்றியமையாது வேண்டும்; உருவமற்ற ஒன்றில் மனம் பதியாது என்பதேயன்றோ!

ஒருவர் அருவ வழிபாட்டையே மேற்கொள்ளு கின்றனர் என வைத்துக்கொள்வோம். அவர் ஓரி

டத்தில் இருந்துகொண்டு பகவானை மனத்தில் சிந்தித்து, சில துதிகளை வாயினுற் பாடித்தானே இறைஞ்ச வேண்டும்? அங்ஙனமாயின், இடம், சிந்தனை, துதிகள் இவற்றிற்கு உருவங்கள் இல்லையா? உண்டு என்பதை, விஞ்ஞானம் தலை தூக்கி நிற்கும் இக்காலத்தில் விளக்கவும் வேண்டுமா?

ஒலியுள், கேட்கப்படும் ஒலி, கேட்கப்படாத ஒலி என இருவகையுண்டு. கேட்கப்படாத ஒலியின் கூட்டமே எண்ணம். அவ்வொலியின் அலைகள் இஞ்ஞான்று விஞ்ஞானிகளால் படம் பிடிக்கப்படுகின்றன. இதனுல், ஒலிக்கும் உருவம் உண்டு என்பது பெறப்படவில்லையா?

**வினு :**—எண்ணம், சிந்தனை, ஒலி முதலியவற்றை ஏன் அருவமாகக் கொள்ளுதல் கூடாது?

**விடை :**—அருவம் என்பது உருவம் அற்ற ஒன்றன்று. உருவின் நுண்மையே அருவமெனப்படும். பனிக்கட்டி, நீர் இவ்விரண்டனுள் பனிக்கட்டி பருமை; நீர் நுண்மை. நீர், ஆவி இவ்விரண்டனுள் நீர் பருமை; ஆவி நுண்மை. இவற்றுள் பருமைப் பொருள் உருவம் என்றும், நுண்மைப் பொருள் அருவமென்றும் வரையறுக்கப்படுகின்றன. ஆதலின், எண்ணம், சிந்தனை, ஒலி முதலியனவும் நுட்ப உருவங்களைப் பெற்றுள்ளன என்றும், இம்முறையில் எத்தகைய வழிபாடும் உருவ வழிபாட்டைச் சேர்ந்ததே என்றும் தெளிக.

முன் தலைப்பில் குறித்தவாறு, பல சீர்மைகள் வாய்ந்த உள்ளம் பற்பல உருவங்களில் பதிகின்

றது. அவை யாவும் உள்ளத்தின் உள்ளுணர்வை எழுப்புவதில்லை. எஃது உள்ளுணர்வை எழுப்பும் வன்மையுடையதோ, அதுவே வழிபாடு எனப்படும். வழிபாடு என்னும் பெயரை வைத்துக்கொண்டு, கண்ட உருவங்களிலெல்லாம் மனத்தைச் செலுத்தல் ஆகாது. வழிபாட்டிற்கு விழுமிய உருவத்தையே குறிக்கோளாகக் கொள்ளுதல் வேண்டும். எல்லா வற்றையும் கடந்து எல்லையற்றதாகவுள்ள ஒரு பரம் பொருள் இருத்தல் வேண்டும். இதற்கு எல்லே காண ஒருவராலும் இயலாது. முடிவு இருந்தாலன்றோ முடிவு காணுதல்? இதைத்தான், 'உயர்வற உயர் நல முடையவன்' என்னும் சொற்களால் ஆழ்வார் குறிக்கின்றார். இதையே உலகம், எல்லாவற்றையும் கடந்து நிற்பதெதுவோ அதுவே கடவுள் என்கிறது. இதுவே விழுமிய பொருளாகும். இதனினும் சிறந்தது வேறொன்றுமிலது. இத்தகைய சீரிய பொருளில் உள்ளத்தைப் பதித்து வழிபடுவதே உயரிய வழிபாடாகும். இதுவே கடவுள் வழிபாடு எனப் படும்.

இம்முறையில், உள்ளம் ஓர் உருவத்தைப் பற்றிக்கொண்டே நிற்கும் இயல்புடைமையானும், உருவங்களுள் விழுமியது கடவுள் உருவமாதலாலும் அதைப் பற்றி நிற்பதே மக்கள் உய்விற்குத் தக்க தென அறிகின்றோம். ஆனால் இங்கு, 'கடவுள் உருவமுள்ளவரா, உருவமற்றவரா?' என்னும் வினா எழும். இதற்குத் தக்க விடை இறுத்தல் சிறிது கடினமே. கடவுள் உருவமுள்ளவராயின், அவர் எல்லே யுடையவராயும், அழியுந் தன்மையுடையவராயுமிருத்

தல் வேண்டும். அவர் உருவமற்றவராயின், உருவத்தையே பற்றும் இயல்புடையதும், வரையறைக்குட்பட்டதுமான மனம் அவரை எவ்வாறு நினைக்கக் கூடும்? வாயால் வாழ்த்தலும், கைகளால் அஞ்சலி செய்தலும் எப்படி? ஆதலின், கடவுள் நிலை இத் தன்மையது என அளந்தறிதல், எத்தகைய ஞானிகளுக்கும் இயலாததொன்றே! இவ்வருமைப் பாட்டை ஆழ்வார்,

"உணர்ந்துணர்ந் திழிந்தகன்று உயர்ந்துரு
வியந்தஇந் நிலைமை,
உணர்ந்துணர்ந் துணரிலும் இறைநிலை
உணர்வரிது உயிர்காள்!
உணர்ந்துணர்ந் துரைத்துரைத்து அரியயன்
அரனென்னும் இவரை
உணர்ந்துணர்ந் துரைத்துரைத்து இறைஞ்சுமின்
மனப்பட்ட தொன்றே."[1]

என்னும் பாசுரத்தால் தெரிவிக்கின்றார். ஆயினும், இத்தகைய பகவான், மக்கள் இயல்பிற்கேற்ப உருவம் பெற்றுள்ள சில பொருள்களின் மூலம் ஒளிருகின்றான். ஆதலின் நாம் அவ்வுருவத்தைப் பற்றுதல் வேண்டும். அவ்வுருவத்தில் ஒன்ற ஒன்ற, கடவுள் உண்மை நமக்குப் படிப்படியே விளக்கமுறும். இம்முறையில் உருவ வழிபாடு இன்றியமையாது என அறியலாம்.

### 3. சன்னிதிகளின் சால்பு

இவ்வுருவத்தைத்தான் வைணவர் **அர்ச்சை** என்கின்றனர். இதை அமைத்திருக்குமிடம் கோவில்

1. திருவாய்மொழி, 1 : 3 : 6.

எனப்படும். இதற்கு ஆலயம், சன்னிதி முதலிய சில பெயர்களுமுண்டு. கோவிலைச் சன்னிதி என்றே வழங்குவர் வைணவர். மற்றச் சில சமயத்தினரைக் காட்டிலும், வைணவர்களுக்கு உருவ வழிபாட்டில் ஊற்றம் அதிகம். எம்பெருமானுக்குள்ள பரமபதம், பாற்கடல், அவதாரம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை ஆகிய ஐந்து நிலைகளுள், அர்ச்சையே பூரணமான தென்பதும், **வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தி** ஆகிய ஆறு குணங்களும் நிரம்பப் பெற்றதென்பதும், இதுவே பிரபத்தி செய்வதற்குப் பொருத்தமான தென்பதும், இதில் செய்யும் பிரபத்தியே தவறுமல் விரைவில் பயனளிக்கக் கூடியது என்பதும் அவர்கள் உறுதி. ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அர்ச்சையிலேயே பிரபத்தி செய்துள்ளார்கள். இதைப் பின்னர்க் காண்போம். இங்கு, கேட்கும் வன்மையற்ற காதும், பேசும் வன்மையற்ற வாயும் எங்ஙனம் பயனற்றன எனக் கருதப்படுமோ, அங்ஙனமே கடவுளுடைய தாளை வணங்காத்தலையும் பயனில்லை என்னும் பொய்யாமொழியார் வாக்கை நோக்குக.

> "கோளிற் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
> தாளை வணங்காத் தலை."[1]

இதனுல், இவரும் உருவவழிபாட்டையே அல்லவா வற்புறுத்துகிறுர்? எம்பெருமானுக்கு அர்ச்சையில் அமர்ந்துள்ள மேற்குறித்த ஆறு குணங்களின் பொருளையும் காண்பாம்:

---

1. திருக்குறள்

**வாத்ஸல்யம் :** இது கன்றினிடம் பசு இருக்கும் இருப்பு. சிறிது மலங்கலந்த புல் முதலியவற்றையும் தீண்டாத தாய்ப்பசு, தான் ஈன்ற கன்றின் உடலிலுள்ள வழும்பை விருப்புடன் தன் நாவினால் நக்கி, அக்கன்றைத் தூய்மைப்படுத்துகிறது. அஃது அத்துடன் நிற்கிறதா? தன் இனிய பாலையும் அதற்கீந்து, அதை வளர்ப்பதுடன், அதன் எதிரில் வருபவரைக் கொம்பினால் முட்டித் தள்ளியும், அதற்குமுன் தான் முன்பு ஈன்ற கன்று வரினும் அதை உதைத்துத் துரத்தியும் அவ்விளங்கன்றைக் காக்கின்றது. இங்ஙனமே பகவானும், தன்னை வந்தடைந்த சேதனர் குற்றங்களைப் பாராமல், அவற்றைப் போக்கியமாகக்கொண்டு இன்னருளாகிய பாலைச் சுரந்து காக்கின்றான். அஃதன்றியும், தன்னைப் பற்றின சேதனனுக்கு ஒரு குறைவு நேரின், என்றும் தன்னை விட்டுப் பிரியாமல் கூடியிருக்கும் பிராட்டியாரையும் வேண்டாவென வெறுத்து, அவனுக்குப் பல நன்மைகளைச் செய்யும் இயல்புடையவனாயுமிருக்கின்றான். இங்ஙனம் செய்வதற்குப் பசுவிற்குக் கன்றினிடமும், பகவானுக்குச் சேதனனிடமும் இருக்கும் அன்பே காரணமாகும்.

**ஸ்வாமித்வம் :** இஃது உடையனாயிருக்குமிருப்பு. சேதனன் ஈசுவரனைக் கருதாமலும் நோக்காமலும் பராமுகமாயிருக்கும் நிலையிலும், ஈசுவரன் இவனை விடாமல் நின்று, இவனுடைய சொரூபத்தையே நோக்கிக் கொண்டு போவதற்குக் காரணமாயுள்ள ஒரு தொடர்பே ஸ்வாமித்துவமாகும். சேதனன் உலகப் பற்றிலேயே இச்சை வைத்து

உழன்று திரிகின்றுன். இங்ஙனம் சேதனன் பயனற்ற வழியில் தன் காலத்தைக் கழிக்கினும், தன் உடைமையான இவனை அங்ஙனமே நலமற்ற வழியில் விட்டுவிடுவதற்கு அவன் ஸ்வாமித்துவமாகிற இத்தொடர்பு இடந்தருதல் இல்லை. ஆதலின், அவன் தன் உடைமையான சேதனனை விடாது மறைந்திருந்து, இச்சேதனனுக்குத் துவேஷம் அற்றிருக்கும் நிலை தொடங்கி, கைங்கரியம் புரியும் நிலை ஈருக உள்ள பல நன்மைகளையும் உண்டாக்குகின்றுன். இதற்குக் காரணம் பகவானுக்கும் சேதனனுக்கும் உள்ள தொடர்பேயாகும்.

**ஸௌசீல்யம்:** உயர்ந்தவன் தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கை. இந்த ஸௌசீல்யம் இரு வகைப்படும்: இவ்வுலகம் அவ்வுலகம் (பரமபதம்) இவற்றிற்குச் சுவாமியாய், பெரிய பிராட்டியாரைப் பிரதான மகிஷியாய்க் கொண்டவனுய், தடை சிறிதுமற்ற ஸ்வாதந்தரியமாகிய தேஜஸையுடையவனுய் இருக்கும் பரம புருஷன், தன் பெருமையையும், தன்னோடு கலக்கும் சீவான்மாவின் சிறுமையையும் நோக்காது, தன் பேருக இவனுடன் புரையறக் கலத்தல் ஒரு வகை. சேதனன் விருப்பமின்றி இருப்பினும், பகவானே வந்து இவனோடு கலந்து உறவாடுதல் ஒரு வகை.

முந்தியதற்குப் பாத்திரமானவர்கள் ஞானிகள்; பிந்தியதற்குப் பாத்திரமானவர்கள் சாமானிய மக்கள்.

**ஸௌலப்யம்:** இஃது எளியனுயிருக்கும் இருப்பு, இது, கண்ணிற்கு விஷயமாகாதிருக்கும்

ஈசுவரன், தன் திவ்விய மங்கள விக்கிரகத்தை, சேதனன் தன் கண்களாலே கண்டு பற்றுதற்கேற்ப எளியனுயிருத்தல். இறைவன் தான் இருக்கும் பரமபதத்தை விட்டு உலக மக்களிடையில் வந்தவதரித்துத் தன்னை எளியனுக்குகிருன். இஃது, "ஈசுவரன் நம் ஊனக் கண்களுக்கும் புலனுகாதவன். நாம் அவனைப் பற்றுதல் யாங்ஙனம்?" எனச் சேதனன் பின்னிடாதவாறு எம்பெருமானை நேருக்கு நேரே கண்டு பற்றுமாறு செய்கிறது. இங்ஙனம் செய்வன இராமகிருஷ்ணுவதாரங்களும், அர்ச்சைகளுமாகும்.

**ஞானம்:** இஃது அறிவு. சேதனனுக்குப் போக்க வேண்டிய துன்பங்களையும், ஈயவேண்டிய இன்பங்களையும் அறிகைக்குத் தகுதியாய் எல்லாப் பொருள்களையும் ஒரே காலத்தில் நேராய்க் காணவல்ல அறிவு. சேதனனுக்குப் போக்க வேண்டுவன சமுசாரம் கன்மம் முதலியன. ஈயவேண்டுவன பரமபதம் கைங்கரியம் முதலியன.

**சக்தி:** இது சாமர்த்தியம். ஈசுவரன் மாறுபட்ட இரு பொருள்களையும் ஒன்று சேர்க்கக் கூடிய தனக்குண்டான இச்சக்தியினுல், இரும்பைப் பொன்னுக்குவாரைப்போன்று, தாழ்ந்த நிலையிலுள்ள நம் போன்ற சமுசாரிகளை, உயர்நிலையிலுள்ள நித்திய சூரிகளோடு சேர்த்து ஒரு கோவையாக்குகிருன். இது சாமர்த்திய காரியமாகும்.

இவை ஆறனுள், முதலில் குறிப்பிட்ட வாத்ஸல்யம், ஸ்வாமித்துவம், ஸௌசீல்யம், ஸௌலப்பியம் ஆகிய நான்கும் சேதனன் பகவானைப் பற்றுதற்கு உதவி செய்யக்கூடியவை. ஞான சக்திகள் இரண்

டும் பகவான் தன்னை வந்தடைந்த சேதனன் காரியத்தைச் செய்தற்குப் பயன்படுபவை.

சன்னிதி என்பது சாமானிய இடமன்று. தத்துவங்களின் அமைப்புத்தான் சன்னிதியின் உருவம். இதன் தத்துவ முறைகளை அறிந்தவர்க்கு வழிபாட்டின் நுட்பங்கள் நன்கு விளங்கும். கோவில் வழிபாடு மனத்தின் மாசை அகற்றி நல்லெண்ணத்தைப் பெருக்கி, உயிரை ஒளி பெறச் செய்யும். இவ்வுண்மையைஉணர்ந்துவழிபாடியிற்றுவோர்பெறும் பயன்கள்பலவாகும். இதை அறியாதார், கோவிலையும், அதனுள் வீற்றிருக்கும் பகவானின் திருவுருவத்தையும், வழிபாட்டையும் இகழ்ந்து பேசுகின்றனர். கோவிலில் மக்கள் மனத்தைக் கவர்ந்து ஈர்ப்பதற்கு எத்தனை பொருள்களுள்ளன! உள் நுழையும் போதே தலையை நிமிர்ந்து பார்க்குமளவில் உயர்ந்த கோபுரம்—அதில் எத்தனை அழகிய ஓவியங்கள்! சிறிது உட்புகுந்தவுடன் பலி பீடத்தையும், கொடித்தம்பத்தையும் காணலாம். முன்னது, கோவிலிற்குள் நுழையும் மக்கள் தங்கள் அகங்காரமமகாரங்களைப் பலியிட வேண்டுமென்பதையும், பின்னது, பகவான், தன்னை வந்தடைந்தவர் துன்பங்களைத் துடைத்து இன்பங்களை ஈதற்பொருட்டுக் கொடி நாட்டிக் கொண்டிருக்கின்ருன் என்பதையும் குறிப்பிப்பன வாகும். பகவானுடைய அருள் மிகுதியும் நிறைந்திருக்கும் இடம் மூலக்கிருகமாகும். பெரும்பான்மையும் அது சிறிய இடமாகவே இருக்கும். அதில் இறைவன் நின்றுகொண்டோ, இருந்துகொண்டோ, சயனித்துக்கொண்டோ இருக்கும் நிலையை உற்று

நோக்கில், சேதனர் உய்வதன்பொருட்டு, அவன் ஒரே இடத்தில் இருந்துகொண்டு இங்குமங்கும் அசையாமல் தவஞ் செய்வது போன்று காணப்படும். அதனை அடுத்து எத்தனையோ சிறுசிறு சன்னிதிகள் உண்டு. ஒவ்வோரிடமும் பொருளுடனேயே அமைக்கப்பட்டிருக்கும். சுற்றிலும் எத்தனை மண்டபங்கள்! ஒவ்வொரு மண்டபத்திலும் எத்தனை தூண்கள்! ஒவ்வொரு தூணிலும் எத்தனை சித்திரங்கள்! அச்சித்திரங்களுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வரலாற்றையும் தெய்வத் தன்மையையும் காட்டுவதுடன், பண்டைய சிற்பிகளின் நுட்பமதியின் திறத்தையுமன்றோ தெளித்துக் காட்டுகிறது! இறையன்பு மிகுதியும் குறைந்திருக்கும் இக்காலத்திலும் அங்குச் சென்று பகவான் உருவத்தைக் கண்டவுடன் சிறிது பத்தி தோன்றும். சாத்திர முறைப்படி அமைக்கப்பட்ட கோவிலின் ஒவ்வோர் உறுப்பிற்கும் வெளிப் பொருள் ஒன்றும், உட்பொருள் ஒன்றும் உள்ளன. அவற்றை விரித்தற்கு இஃதிடமல்லவாதலின் விடுத்தாம்.

**வின :**—நீங்கள் கூறியபடியே கோவில்கள் சாத்திர முறைப்படியே அமைக்கப்பட்டனவாயும், ஒவ்வொன்றும் ஒவ்வொரு தத்துவத்தைக் குறிப்பதாயும் இருக்கலாம். ஆனல், இந்நாளில் கோவில் நிலை எப்படி இருக்கிறது? அதில் எத்தனை குறைபாடுகள் ஏற்பட்டிருக்கின்றன? இவை பிறர் வசைக்கு இடனுகவல்லவா உள்ளன?

**விடை :**—கோவில் நிலை பல்லாயிரம் ஆண்டு முன் எப்படி இருந்ததோ, அங்ஙனமேதான்

இன்றும் உள்ளது. அதில் எவ்வாறு மாறுதல் நிகழக் கூடும்? கோபுரம் மாறுமா? மூலத்தானத்திலுள்ள இறையின் அருள் மாறுமா? சித்திரக்கலை மாறுமா? பின்னை மாறுதல் எங்கே உள்ளது? மக்கள் மன நிலையிலும், அங்குள்ளார் மேற்கொண்டுள்ள செயல்களிலுமே என்பதை மறுப்பவர் யார்?

இக்காலக் கல்வியிலும், நாகரித்திலும், சுற்றுமுள்ள சூழலிலும் பெரிய குற்றங்களும் மாறுபாடுகளுமுள்ளன. இவை சன்னிதானங்களிலும் நுழைந்துள்ளன என்பது உண்மையே. கோவிலில் வழிபாட்டிற்குச் செல்வோரிடத்தும், கோவில் தொண்டுகளைப் புரிபவரிடத்தும் சில குறைகள் இருக்கின்றன. அவற்றைக் கோவிலதிகாரிகள் நுணுகி நோக்கி நீக்குதல் வேண்டும். கோவிலும், அதில் எழுந்தருளியிருக்கும் பகவானும் யாவருக்கும் பொது; ஒருவருக்கும் அங்குத் தனி உரிமை இல்லை. செல்வர், வறிஞர், பொருள் தருவோர், பொருள் தாராதவர் என்னும் வேறுபாடு, மற்ற இடங்களைப் போன்றே கோவில்களிலும் குடியேறுமாயின், அவற்றிற்கும் கோவில்களுக்கும் வேறுபாடு யாது? கோவில் தொண்டு புரிபவருக்குச் சமம் தமம் முதலிய ஆன்மக் குணங்கள் அமைந்திருத்தல் வேண்டும். இன்றேல், அத்தொண்டு புரிவதற்குத் தகுதியற்றவராயிருக்கும் மற்றவருக்கு இறையருளைப் பாய்ச்சும் தெய்வத்தன்மை அவர்களிடம் எப்படி அமையும்? அங்கு வம்பளப்புகள் எத்தனை! பயனற்ற பேச்சுகள் எத்தனை! சிறு சிறு பூசல்கள் எத்தனை!

தீர்த்த பிரசாத வினியோக காலங்களில் ஒழுங் கற்ற முறைகள் எத்தனை ! சாமானிய இடங்களிலும் நடை பெறுத இவைகள் மாசற்ற மனத்திஞல் பரம னிடம் அன்பு செலுத்தி அவன் அருளைப் பெறச் செல்லுமிடத்திலா இடங்கொள்ளல்? தீர்த்த பிர சாதங்கள் பகவானுக்குக் கண்டருளச் செய்தமை யின், அவை அவன் அருள் நோக்குப் படிந்தன அல்லவா? அவற்றைக் கொடுப்போரும், பெறு வோரும் எத்துணைப் பயபத்தியுடன் நடந்துகொள் ளுதல் வேண்டும்! இச்செயல்களுள் சில சீர்திருத் தங்கள் ஏற்படுதல் வேண்டும். கோவில் தலைவர்கள், இதற்குத் தக்க முறைகளை வகுத்துள்ள இடங் களில், மேற்கூறிய குறைகள் கூடிய மட்டும் ஏற்படா மலிருக்கின்றன என்பதைப் பலர் அறிவர். ஆதலின், இக்குறைகளை நீக்க அதிகாரிகள் முயல்வாராக.

இனி, முன்விட்ட சன்னிதி விஷயத்திற்குச் செல் வாம்! எங்கும் நிறைந்த பரமனை ஒன்றின் மூல மாகக் கொள்ளுதல் எளியதும், இன்றியமையாததது மாகும். பசுவிற்குப் பால் உடல் முற்றும் பரவி யிருப்பினும், அதை எங்ஙனம் அதன் ஓர் அவயவத் தின் (மடியின்) மூலமாகவே கொள்ள வேண்டியிருக் கிறதோ, அங்ஙனமே கடவுள் அருள் உலகமெங்கும் பரவி இருப்பினும், அதை அர்ச்சையின் மூலமாகவே பெற வேண்டியுள்ளது. அதற்குக் காரணம் என்ன? தங்கத்திஞலோ, வெள்ளியிஞலோ, ஐந்து உலோகங் களிஞலோ, சாந்திஞலோ, கல்லிஞலோ செய்யப் பட்ட கடவுள் உருவங்களை, கேவலம் குழந்தைகள் வைத்து விளையாடும் பதுமைகளைப் போன்றன என

நினைத்தல் கூடாது. அவற்றின் பெருமை மிகப் பெரிது! அவற்றின் சிறப்பு மக்கள் மனத்திற்கு எட்டியதன்று; நாவிற்கு அடங்கியதன்று. அவற்றின் உயர்வை அறியாதார் பலப்பல பகருவர். அவை பயனில் சொற்களேயாகும்.

இன்னும் ஆலயங்களில் அர்ச்சையை அமைக்கும் (ஸ்தாபனம் செய்யும்) போது நடைபெறும் செயல்களை ஊன்றி நோக்குவார்க்கு இதன் காரணம் நன்கு புலனாகும். ஒரு புறம் வடமொழி மறையும், மற்றொரு புறம் தென்மொழி மறையும் (ஆழ்வார்கள் அருளிச் செயல்), இன்னொரு புறம் மந்திரமொழிகளும் ஒலியாநிற்கும். அவ்வமயம் அவ்வர்ச்சைக்குச் செய்யப்படும் வழிபாடுகளும், ஆராதனைகளும் கணக்கிலடங்குவனவல்ல. அர்ச்சையை இருத்தும் இடத்தில் நவமணிகளும் இடப்படுகின்றன. அந்நாட்களில் ஞானிகளும் பத்தர்களும் திரண்டிருப்பார்கள். யாவருடைய நெஞ்சும், பாராயணங்களிலும் பகவானிடத்திலுமே பதிந்திருக்கும். அன்று தொடங்கி நாடோறும் மூன்று காலங்களிலும் மந்திரமொழிகளும் மறைமொழிகளும் அக்கோவில்களில் ஒலித்துக்கொண்டிருக்கும். இடையிடையே எத்தனை திருவிழாக்கள், எத்தனை திருநட்சத்திரங்கள்! அக்காலங்களிலெல்லாம் விசேட வழிபாடு முதலியன நடைபெறும். நாடோறும் சன்னிதிக்குப் போதரும் அன்பர்கள் தங்கள் உயரிய பத்தியை அவ்வர்ச்சையினிடம் பதியவைத்துச் செல்லுகின்றனர். தொண்டர்கள் நெஞ்சுருகிப் பாடும்பாடல்களின் ஒலியும், அந்தணர்கள் எம்பெருமானை அர்ச்சிக்கும் மந்

திர ஒலியும் அவண் நிரம்பி இருக்கின்றன. இத் தகைய தூய செயல்கள் பல அங்குக் குடி கொண்டிருக்கின்றன. அவற்ருல் மற்ற இடங்களைக் காட்டிலும், கோவில்களில் ஆண்டவனுடைய அருட் பிழம்பு மிகுந்திருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா? அவ்விடத்திற்குப் பத்தியற்ற நம் போன்ருர் செல்லினும், அங்கு நிரம்பியுள்ள தெய்வத் தன்மை நம்மையும் பத்தி வலையிற்படுமாறு செய்யுமன்ருே?

இஃதன்றியும், முற்கூறிய சீர்மைகள் நிறைந்த கோவில்களில்மட்டுமன்றி, அன்பர்கள் இல்லங்களில் அமைக்கப்பட்டிருக்கும் அர்ச்சைகளிலும் பகவான் அமர்ந்து, அவரவர் வேண்டும் வரங்களை ஈந்து அருள் புரிகின்ருன் என்பது சாத்திரக்கருத்து. பகவான் இடம் பொருள் முதலியவற்றை நோக்குகிறதில்லை; மக்கள் அன்பு ஒன்றையே நாடி நிற்கிருன். அன்பு உள்ள இடமெல்லாம் அவன் உறைவிடமே. ஆதலின், அன்பர்கள் இல்லங்களில் வைத்து வழிபடும் உருவவழிபாடும் அருள் பெறுதற்குத் தகுதியுடையதேயாகும்.

இங்ஙனம் திருமால் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் சன்னிதானங்களுள் ஒன்ருகிய திருமாலிருஞ்சோலையைக் குறித்துப் பரிபாடல் சிறப்பித்துக் கூறுவதை இப்பாசுரத்தால் அறியலாம்.

"கல்லறை கடலுங் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம், வேறுவே றுருவின் ஒருதொழில் இருவர்த்
தாங்கு நீணிலை யோங்கிருங் குன்றம்

நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை
ஏறுதல் எளிதோ வீறுபெறு துறக்கம் ?
அரிதிற் பெறுதுறக்கம் மாலிருங் குன்றம்
எளிதிற் பெறலுரிமை யேத்துகஞ் சிலம்ப
அராவணர் கயந்தலைத் தம்முன் மார்பின்
மராமலர்த் தாரின் மாண்வரத் தோன்றி
அலங்கு மருவி யார்த்திமிழ் பிழியச்
சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற்
சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றம்
தாம்வீழ் காமம் வித்துபு விளைக்கும்
நாமத் தன்மை நன்கனம் படியெழ
யாமத் தன்மையிவ் வையிருங் குன்றத்து
மன்புனல் இளவெயில் வளாவவிருள் வளர்வெனப்
பொன்புனை யுடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே
நினைமின் மாந்தீர்! கேண்மின்: கமழ்சீர்ச்
சுனையெலாம் நீலம் மலரச் சுனைசூழ்
சினையெலாஞ் செயலை மலரக் காய்கனி
உறழநனை வேங்கை யொள்ளிணர் மலர
மாயோ னொத்தவின் னிலைத்தே
சென்றுதொழு கல்லீர்! கண்டுபணி மின்மே;
இருங்குன் றென்னும் பெயர்பரந் ததுவே
பெருங்கலி ஞாலத்துத் தொன்றியல் புகழது ;
கண்டுமய றறுக்குங் காமக் கடவுள்
மகமுயங்கு மந்தி வரைவரை பாய
முகிழ்மயங்கு முல்லை முறைநிகழ்வு காட்ட
மணிமருள்நன் னீர்ச்சினை மடமயில் அகவக்
குருகிலை யுதிரக் குயிலினங் கூவப்
பகர்குழல் பாண்டில் இயம்ப அகவுநர்
நாநவில் பாடல் முழவெதிர்ந் தன்ன

*சிலம்பிற் சிலம்பிசை யோவா தொன்றூர்க்*
*கடந்தட்டான் கேழிருங் குன்று.*
*தையலவரொடுந் தந்தா ரவரொடுங்*
*கைம்மக வோடுங் காத லவரொடும்*
*தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்;*
*புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்*
*வெளவற் காரிருள் மயங்குமணி மேனியன்*
*எவ்வயின் உலகத்துந் தோன்றி யவ்வயின்*
*மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்*
*அன்பது மேஎ யிருங்குன் றத்தான்*
*கள்ளணி பசுந்துளவினவை கருங்குன் றனையவை*
*ஒள்ளொளியவை யொருகுழையவை*
*புள்ளணி பொலங்கொடியவை*
*வள்ளணி வளைநாஞ்சிலவை*
*சலம்புரி தண்டேந்தினவை*
*வலம்புரி வயநேமியவை*
*வரிசிலை வயவம்பினவை*
*புகரிணர்சூழ் வட்டத்தவை புகர்வாளவை*
*எனவாங்கு,*
*நலம்புரீஇ யஞ்சீர் நாம வாய்மொழி*
*இதுவென வுரைத்தனெம் உள்ளமர்ந் திசைத்திறை*
*இருங்குன்றத் தடியுறை யியைகெனப்*
*பெரும்பெய ரிருவரைப் பரவுதுந் தொழுதே!"*

—*பரிபாடல்: 15 : 11-66.*

## 4. உருவ வழிபாட்டின் உயர்வு

*மக்கள் உள்ளத்திற்கும் உருவத்திற்கும் உள்ள தொடர்பையும், உருவ வழிபாட்டின் இன்றியமை யாமையையும் "வழிபாட்டின் வகைகள்" என்*

னும் தலைப்பில் பேசியுள்ளோம். இங்கு உருவ வழிபாட்டில் எத்தகைய உயர்வுகள் அமைந்துள்ளன என்பதை நோக்குவோம்:

ஏகலைவன் யாங்ஙனம் சிறந்த வில் வித்தைகளைக் கற்றான்? ஓர் ஆசிரியரிடமா? இல்லையே! துரோணரைப் போன்ற ஓர் உருவத்தை அமைத்து, அதைத் தன் உண்மைக் குருவெனவே பாவித்து, குருவினிடம் காட்டும் முழுப்பத்தியையும் அதனிடம் காட்டியதனாலல்லவா, அவன் துரோணரும் வியக்குமாறு அரிய கலைகளைத் தெளிவுறக் கற்றான்?

உருவ வழிபாட்டினால் அடையும் நலனுக்கு இதைக்காட்டிலும் சான்று வேறொன்று வேண்டுமோ? ஒரு சிறுவனால் யாதொரு முறையுமின்றி அமைக்கப்பட்ட உருவ வழிபாடே இத்தகைய நலனை அளித்தது என்னில், ஞானம் நிறைந்த பெரியோரால் சாத்திரக் கோட்பாட்டின்படி அமைக்கப்பட்ட அர்ச்சையின் பெருமையைப் பற்றியும், அதனாலெய்தும் பயனைப் பற்றியும் பேசுதற்கியலுமோ! இது நிற்க.

ஒரு மன்னனுடைய முடி சூட்டு விழாவோ, அன்றிப் பிறந்த நாள் கொண்டாட்டமோ நடைபெறுகிறது. மன்னனை நேராகக் கண்டு வணங்குதற்கு வசதியற்றவர் என் செய்கின்றனர்? அவன் உருவப் படத்தை வைத்துத்தானே வந்தனை வழிபாடுகளைப் புரிகின்றனர்? திருவள்ளுவர், கம்பர், பாரதியார் முதலிய பெரியோர்களின் நினைவு நாள் விழா எதன் மூலம் நடைபெறுகின்றது? இறைவனடியை அடைந்த தன் தந்தையாரின் பிறந்த நாளையோ, இறந்த நாளையோ போற்றுகின்றவன் எதைக் கருவி

யாகக் கொள்ளுகிறன்? அவர் உருவப் படத்தையே யன்றே? இங்ஙனமே ஒவ்வொருவர் வழிபாடும் உருவத்தின் மூலம் நிகழ்ந்துகொண்டிருக்க, இறைவன் வழிபாட்டிற்கு மட்டும் உருவத்தை உதறித் தள்ளுவது எக்கருத்தைக் கொண்டோ! 'உருவ வழிபாட்டை மேற்கொள்பவர் அறிவற்றவர். அவர்கட்கு வீட்டின்பேறு ஏற்படாது,' எனச் சிலர் இழித்தும் பழித்தும் கூறுவது எதன்பொருட்டோ! இவர்களே நடுவு நிலைமையில் ஊன்றி நோக்குவாராயின் உண்மை விளங்கும்.

எம்பெருமான் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் திருவரங்கத்தில் வாழும் பெரியவர்கள், அரங்கநாதனுடைய அனுபவத்தைக்காட்டிலும், பரமபத அனுபவம் சிறந்ததன்று என நினைப்பவர்களாயும், "பரமபதம் வந்தால் என் செய்வோம்!" என நடுங்குகின்றவர்களாயும் உள்ளனர் என்பதை ஆண்டாள், "நல்லார்கள் வாழும் நளிரரங்கம்" என்னும் அடியால் தெரிவிக்கிறார்.

ஒரு கால் **பட்டர்**, தம் முதுகில் உண்டான புண்ணுல் பெரிதும் நொந்திருக்க, பெருமாள் அசரீரியாய் அவரை விளித்து, "என்ன இவ்வுலகை விட்டுப் பிரிவதற்கு அஞ்சுகின்றனையோ!" என வினவினராம். அதைச் செவியேற்ற பட்டர், பெருமாளை நோக்கி, "தேவரீர் அடியேனுக்கு எல்லா அருளையும் புரிந்துள்ளீர்! இந்த உலகத்தில் வதியும்போதே, அந்த உலகமாகிய பரமபதம் அடியேன் கட்டளையின்படியே நடைபெறுமாறு செய்தருளினீர்! இம்முறையில் சிறியேன் அங்குச் செல்லுங்கால், அடையும் பேறு

களுக்கு அளவுண்டாகுமோ? அவை அளவற்றன என்பது திண்ணம். ஆயினும், அப்போது அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் உம்மிடம் காணும் இக்குளிர்ந்த முகத்தையும், புன்னகையையும் இழக்க வேண்டி வருமே என நினைக்குங்கால், எங்ஙனம் அஞ்சாமலிருக்க முடியும்!" என விடை இறுத்தனராம்.

**ஆளவந்தாருடைய** திருக்குமாரராகிய **சொட்டை நம்பி**யின் இறுதிக் காலத்தில், அவருடைய நெஞ்சுறுதியைச் சோதித்தற்பொருட்டுச் சிலர் அவரிடம் போந்து, "நீர் இப்போது நினைத்திருப்பது யாது?" எனக்கேட்டனர். அவர், "ஸ்ரீ ஆளவந்தாருடைய திருப்பாதத்தின் தொடர்பு, அடியேனுக்கும் பரமபத பிராப்தியைக் கொடாமல் விடாது. அதைக் குறித்து அடியேனுக்குச் சிறிதும் கவலை இல்லை. ஆனால், அங்குச் சென்ற பின்பு, ஸ்ரீ வைகுண்டநாதன் திருமுகம், நம்பெருமாள் திருமுக மண்டலம் போன்று குளிர்ந்திருக்கவில்லையேல், வானத்தைப் பிளந்துகொண்டு இங்கு வந்துவிடுவதாக நினைத்துள்ளேன். ஆயினும், பரமபதம் சென்றவர் திரும்பி இவ்வுலகிற்கு வருவதில்லை என்னும் ஒரு முறையைத் தவிர்க்க நேருமே என்பதுதான் என் கவலை," என்றாராம்.

இவற்றால், நம் ஆசாரியர்கள் யாவரும் பரமபத அனுபவத்திலும், அர்ச்சையின் அனுபவமே சிறந்ததெனக்கொண்டு, அதை ஆசரித்து வந்ததுமல்லாமல், நம்மனோர்க்கும் அதை வற்புறுத்தினர் என அறிகின்றோம்.

இங்ஙனம் நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் ஈருக உள்ள நம் பூர்வாசாரியர்கள் யாவரும் திவ்விய க்ஷேத்திரங்களில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களையே வழிபட்டனர் என்பது தெளிவு. எதிராஜர் திருக்கச்சியில் கோவில் கொண்டெழுந்தருளியிருக்கும் வரதராஜப்பெருமாள் திருமஞ்சனத்திற்கு நாளும் தீர்த்தம் முகந்து தரும் கைங்கரியத்தைப் புரிந்து வந்தனர் எனவும், திருவரங்கத்துப் பெரிய பெருமாளுக்கு இப்போது நிகழ்ந்து வரும் தொண்டுகளும் திருவிழாக்களும் பாஷ்யகாரர் ஏற்படுத்திய முறையைப் பின்பற்றியனவே எனவும் சொல்லப்படுகின்றன.

இவற்றுல் ஆசாரியர்கள் உருவ வழிபாட்டையே சிறந்தது என்றும், அதில் அநுபவிக்கும் இன்பமே பரமபதத்தில் துய்க்கும் இன்பத்திலும் மேலானது என்றும் கருதிஞர்கள் என்பதும் உறுதி. ஆயினும், அவர்களைக்காட்டிலும், ஆழ்வார்கள் அர்ச்சையினிடம் கொண்ட மதிப்பு மிகப் பெரிதாகும். அச்சீரியோர், பகவானுடைய அருளை அடைதற்கும், பிறவிப் பயனை எய்துதற்கும் அர்ச்சையே சிறந்த கருவி என்றும், குணபூர்த்தியுடைய இதுவே சேதனன் பிரபத்தி செய்தற்கு ஏற்ற இடமென்றும், எல்லாரும் கண்டு பற்றுதற்குரிய எளிமையாகிய ஸௌலப்பிய குணத்திற்கு முடிவான இடம் அர்ச்சையே என்றும் உறுதிப்படுத்தி, அத்தகைய தங்கள் உறுதிப்பாட்டைச் சிலையிலெழுத்துப்போன்று, தங்கள் பாசுரங்களினுல் பொறித்து வைத்துள்ளனர். இஃது எக்

காலத்திலும் அழிவதன்று. எங்கும் எப்போதும் எல்லாரிடையும் புகுந்து பின்புள்ளார் யாவரையும் உருவ வழிபாட்டில் ஊன்றச் செய்யும் என்பது ஒரு தலே. இத்தன்மையில் ஆசாரியரைக்காட்டிலும் ஆழ்வார்கள் அர்ச்சையில் கொண்ட பேரன்பும் மதிப்பும் அளவிடற்பாலனவல்ல எனக் கொள்ளல் வேண்டும்.

## 5. அர்ச்சையின் அற்புதங்கள்

மக்கள் தம்மைப் பற்றுதற்கும், பற்றிய பின்பு அவர்கட்கு நலமிழைத்தற்கும் வேண்டுவனவாகிய வாத்ஸல்யம் முதலிய ஆறுகுணங்களையும் பெற்றுச் சன்னிதிகளில் திகழும் எம்பெருமான்களிடம் பல அற்புதங்கள் நிகழ்கின்றன. அவை பல வகைப் பட்டனவாகும்.

உயர்ந்த வைரத்தின் மதிப்பும், சிறந்த கவியின் சொற்பொருள்களின் நயங்களும் தெரியாதவருக்கு அவை எங்ஙனம் முறையே சாமானியக் கல் போன் றும், சொற்றொடர் போன்றும் தோன்றுமோ, அங்ஙனமே அர்ச்சையின் மகிமை உணராதார்க்கு, அஃது ஒரு சாமானிய பிம்பம் போன்றே தோன் றும். அதன் உண்மைத் தத்துவங்கள் எவ்வளவுக் கெவ்வளவு மனத்திற்படுகின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு அதன் சிறப்பியல்கள் மக்கட்குப் புலனு கின்றன.

அர்ச்சையில் அமைந்திருக்கும் இறைவன், தன் பரதத்துவ நிலேயை அறிந்த ஞானிகட்கும் பத்தருக் கும் தன் உண்மை இயல்பைக் காட்டி, அவர்கள்

மனத்தை ஈர்க்கின்றான். அவற்றை அறியும் வன்மை யற்ற நம் போன்றார்க்கு அத்தகைய சீரிய சேவை கிடைத்தலில்லை. ஆதலின், அர்ச்சையின் பெருமை நாம் யாங்ஙனம் அறியக் கூடும்!

**உறங்காவில்லி தாசர்** என்னும் ஒருவர், தம் இல்லாளின் கண்ணழகில் ஈடுபட்டு, அதைக்காட்டி லும் இன்பந்தருவது வேறொன்றுமில்லையெனச் சிற் றின்பத்தில் மயங்கிக் கிடந்தார். அவரை அச்சிற் றின்ப வெள்ளத்திலிருந்து கரையேற்றிப் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கச் செய்ய வேண்டும் என்னும் அருளுள்ளங் கொண்ட எம்பெருமானார், அவரைத் திருவரங்கநாதன் சன்னிதிக்கு முன் கொண்டுபோய் நிறுத்தி, "எம்பெருமானே, உம் கண்ணழகைக் காட்டி, இவனைத் திருத்திப் பணி கொள்ளல் வேண் டும்," என இறைஞ்சினார். அங்ஙனமே பெரிய பெரு மாள் தம் அழகிய கண்ணாகிற வலையினால் அவ் வுறங்காவில்லி தாசரைத் தம்பாலீர்த்துச் சிறந்த பத்தராக்கினார். அப்போதே அத்தாசர் உலகப் போக்கில் முற்றும் நசையற்றுத் தம் இல்லக்கிழத்தி யார் பொன்னாச்சியாருடன் பகவானுக்கும் பாக வதருக்கும் கைங்கரியம் புரிதலையே தம் உயிரெனக் கொண்டு வாழ்ந்தனர் என அறிகின்றோம். அர்ச்சை யில் அமைந்திருந்த பரமன் எத்தகைய காட்சியை அளித்திருந்தால், தாழ் நிலையிலிருந்த அத்தாசர் ஒரே முறையில் மேல் நிலையை அடைந்திருக்கக் கூடும்! இஃதோர் அற்புதமன்றோ!

**பிள்ளை திருநறையூரரையர்** என்பவர், ஒருகால் திருநாராயணபுரத்தில் எழுந்தருளியிருக்கும் வேத

நாராயணப் பெருமாளைச் சேவிக்கத் தம் குடும்பத்துடன் சென்றனர். அவ்வமயம் யாரோ அச்சன்னிதியில் நெருப்பிட்டனர். உள்ளிருந்த யாவரும் விரைவில் வெளிச் சென்றனர். ஆனால், நறையூரரோ, அங்குள்ள பெருமாள் திருமேனிக்கு அழிவு உண்டாதலைப் பொறாராய் அவ்வர்ச்சையைத் தழுவிக் கொண்டு நின்று, தம் ஆவியைத் துறந்தனர் என அறிகின்றோம். அவருக்கு அவ்வர்ச்சையினிடம் எத்துணைக் கெழுமிய அன்புண்டாயிருத்தல் வேண்டும்! அங்ஙனம் உண்டாதற்கு அப்பெருமான் எத்தகைய காட்சியை நறையூரருக்குக் காட்டியிருத்தல் வேண்டும்! இஃதோர் அற்புதமன்றோ!

**திருமழிசையாழ்வார்:** இவர் ஒருகால் தம் ஆசிரியர் தோன்றிய திருக்கச்சியைச் சார்ந்த திருவெஃகாவை அடைந்து, அவண் பன்னகத்தில் பள்ளி கொண்ட பெருமாளைச் சேவித்துக்கொண்டு யோகத்தில் அமர்ந்திருந்தார். அவ்வமயம் **கணிகண்ணர்** என்பவர் இவருக்குச் சீடர் ஆகிப் பல தொண்டுகளைப் புரிந்து வந்தார்.

இவ்வாழ்வாரின் பெருமையுணர்ந்த பொது மகள் ஒருத்தி, "கடைத்தலை சீக்கப் பெற்றால் கடுவினை களையலாமே" என்பதை மனத்திருத்தி, அவர் எழுந்தருளியிருக்கும் இடத்தை நாடோறும் தூய்மைப்படுத்திக் கோலமிட்டு, அலங்கரித்து வந்தனள். அவள் விருப்பப்படியே, ஆழ்வார் தம் அருளால் அவளுக்கு என்றும் மாறாத அழகு வாய்ந்த யௌவனத்தைத் தந்தருளினர். அவ்வூர் மன்னன் **பல்லவராயன்** என்பவன் அவள் அழகிலீடுபட்டு

அவளைத்தன்பாலாக்கி இன்புடன் வாழ்ந்து வந்தான் நாட்கள் கழியக் கழியத் தனக்கு முதுமை உண்டாவதையும், அப்பொதுமகள் சிறிதும் மாறுதலின்றி என்றும் இளமையோடிருத்தலையும் கண்ட அரசன், அதற்குக் காரணம் என்னவென அவளைக் கேட்டு உணர்ந்தான். அரசனும் அவ்வாழ்வார் அருளைப் பெறக் கருதி, தன் இல்லத்திற்கு நாடோறும் பிச்சைக்கு வரும் கணிகண்ணரை வணங்கி, ஆழ்வாரைத் தன் அரண்மனைக்கு அழைத்து வருமாறு வேண்டினன். அவர் எங்கும் வாரார் என்பதை அறிந்த அரசன், கணிகண்ணரையேனும் தன் மீது ஒரு பாட்டுப் பாடுமாறு பெரிதும் இறைஞ்சினன். மக்களைப் பாட மனமற்ற அவர், மன்னன் ஊரையும், அதிலுள்ள எம்பெருமானையும் குறித்து ஒரு பாவைப் பாடினர்.[1] தன்னைப் பாடாமைக்குச் சினங் கொண்ட அரசன் கணிகண்ணரை அன்றே தன் நகரை விட்டுச் செல்லக் கட்டளையிட்டான்.

அப்போதே கணிகண்ணர், திருமழிசையாழ்வாரிடம் சென்று வணங்கி, அரசன் கட்டளையைத் தெரிவித்துத் தமக்கு விடை தருமாறு வேண்டி நின்றனர். "நீர் செல்வதாயின், யாமும் இங்கிரோம். எம்பெருமானையும் எழுப்பிக்கொண்டு வருகிறோம்," என ஆழ்வார் பகர்ந்து, சன்னிதிக்குள் சென்று,

1. "ஆடவர்கள் எங்ஙன் அகல்வார்? அருள்சுரந்து
பாடகமும் ஊரகமும் பாம்பணையும்—நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் பொழிற்கச்சி மாண்பு?"

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீகிடக்க வேண்டா—துணிவுடைய
செந்நாப் புலவனியான் செல்கின்றேன்; நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்."

என விண்ணப்பஞ் செய்தனர். அங்ஙனமே பெருமாள் எழுந்து ஆழ்வார் பின் தொடர்ந்தனர். மற்றத் தெய்வங்களும் அவர்களைப் பின் பற்றின. ஆதலின், அந்நகர் பொலிவற்று எல்லா வளங்களும் குறைந்தன. அதற்குக் காரணத்தை ஒற்றராலும் அமைச்சராலும் அறிந்த அரசன், அப்பெரியோர்களைத் தேடிச் சென்று, "அடியேன் அறியாமையால் செய்த பிழையைப் பொறுத்தருளிக் கச்சியம்பதிக்கு எழுந்தருள்க!" என வேண்டிக்கொண்டனன். கணிகண்ணர் திருமழிசைப் பிரானை வேண்ட, அவர் திருமகள் கொழுநனை நோக்கி,

"கணிகண்ணன் போக்கொழிந்தான்; காமருபூங் கச்சி
மணிவண்ணா! நீகிடக்க வேண்டும்;—துணிவுடைய
செந்நாப் புலவன் செலவொழிந்தேன்; நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்விரித்துக் கொள்."

என விண்ணப்பித்தனர். பின்பு யாவரும் திருவெஃகாவை அடைந்தனர். நகரமும் செழித்தது. அன்று முதல் அப்பெருமானுக்குச் '**சொன்ன வண்ணம் செய்த பெருமாள்**' என்றும், அவ்வெம்பெருமான் ஆழ்வார் முதலியவர்களுடன் சென்று ஓர் இரவு தங்கிய இடத்திற்கு **ஓரிரவிருக்கை** என்றும் பெயர் வழங்கி வருவதை இன்றும் காணலாம். பேசுதல் நோக்குதல் முதலியவற்றை மேற்கொள்ளாத அர்ச்சை நிலையிலும், அன்பர்கள் சொல்லிய

வண்ணம் செய்தல் ஒரு சீரிய அதிசயம் என்பதைப் பகரவும் வேண்டுமா?

விபீஷணாழ்வார் அயோத்தியிலிருந்து ஏளப் பண்ணிக்கொண்டு வந்த அர்ச்சா உருவத்திலிருந்த அரங்கநாதனை, தடுக்க முடியாத ஒரு காரணத்தால் காவிரி கொள்ளிடம் ஆகிய இரண்டாற்றின் நடுவில் வைக்க நேர்ந்ததென்றும், தம் காரியத்தை முடித்துக்கொண்டு வந்த அவரால் அதைப் பெயர்க்க முடியவில்லை என்றும், அவ்வமயம் அப்பெருமான் தான் அங்கிருக்கவே விரும்புவதை அசரீரியாய்த் தெரிவித்தானென்றும், தன்னை மிக்க ஆர்வத்துடன் கொண்டுவந்த அவ்விபீஷணருக்கு அருள் புரிதல் பொருட்டே அரங்கநாதன் இலங்கை நோக்கி இருந்தான் என்றும் சொல்லப்படுகின்றன அல்லவா? இதைத்தான் தொண்டரடிப்பொடியார்,

"குடதிசை முடியை வைத்துக்
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித்
தென்திசை இலங்கை நோக்கிக்
கடல்நிறக் கடவுள் எந்தை
அரவணைத் துயிலு மாகண்டு
உடலெனக் குருகு மாலோ
என்செய்கேன் உலகத் தீரே!"[1]

எனச் சித்திரித்துக் காட்டியுள்ளார். அர்ச்சையில் நிகழ்ந்த அதிசயங்களுள் இஃதும் ஒன்றாகும்.

எதிராசர் காலத்திலிருந்த திருக்கச்சி நம்பி என்னும் சீரிய பத்தர், திருக்கச்சியில் கோயில் கொண்

1. திருமாலை, 16

டெழுந்தருளியிருந்த பேரருளாள (வரதராச)ப் பெருமாளுக்கு இடைவிடாமல் ஆலவட்டக் கைங்கரியம் செய்துகொண்டிருந்தார். அவருடைய கெழுமிய அன்பிற்குப் பெரிதும் உவந்த பெருமான், அப்போதைக்கப்போது அவர் எண்ணும் எண்ணங்கட்குத் தன் திருவாய் மலர்ந்து விடையளிப்பானும், அர்ச்சையாய் வீற்றிருக்கும் இறைவன் தம்மோடு வார்த்தையாடும் பெரும்புண்ணியத்தைப் பெற்றிருந்த அந்நம்பிகளை, தம் ஆசாரியராகக் கொண்டு உய்ய வேண்டுமென்பது எம்பெருமானர் கருத்து. ஆனல், அது கூடாமற்போயிற்று. அதனல், நெஞ்சம் நைந்த எதிராசர், அவரைக்கொண்டு பேரருளாளனிடம் சிலவற்றைக் கேட்டுணரத் தீர்மானித்து, "அடியேன் மனத்தில் சிலவற்றை எண்ணியுள்ளேன். எம்பெருமான் அவற்றைக் குறித்து அருளிச் செய்யும் செய்திகளைத் தேவரீர் கேட்டு வந்து அடியேனுக்கு இயம்பியருளி அடியேனை ஆட்கொள்ள வேண்டும்," எனக் கேட்டுக்கொண்டனர். அங்ஙனமே நம்பிகள், அவர் கருத்துகள் இன்ன என்பதையும், அவற்றின் பொருள் இன்ன என்பதையும் பெருமாளைக் கேட்டு வந்து இயம்பியதாய்ச் சொல்லப்பட்டுள்ளது. இஃதொரு சிறந்த அற்புதமே என்பதற்குத் தடை யாது!

திருவரங்கம் பெரிய கோவிலில் வீற்றிருக்கும் அரங்கநாதன், திருப்பாணாழ்வாரையும், ஆண்டாளையும் அவரவருடைய உடலோடு ஏற்று அங்கீகரித்துக்கொண்டதை அறியாதார் யார்? இஃதும் அர்ச்சையில் நிகழ்ந்த பேரதிசயச் செயலன்றோ!

இதைப் போன்ற இன்னும் எத்தனையோ வியப்பிற்கிடமான செயல்கள் உண்டு. அவையெல்லாம் விரிக்கிற்பெருகும்.

உலகத்தை உண்டும் உமிழ்ந்தும் காத்தும் வரும் முழுமுதற்பொருளாகிய இறைவன், உலோகங்கள் முதலியவற்ருல் அமைக்கப்பட்ட அர்ச்சையில் அமைந்து ஆன்ம உய்விற்கு வழி காட்டிக்கொண்டும், அவரவர் விரும்பியதை அளித்துக்கொண்டும், அதனையே சரண் எனப் பற்றியவரின் பிறவித் தளையை அறுத்துக்கொண்டும் உள்ளான் என்பதற்கு இவற்றிலும் வேறு சான்றுகள் வேண்டுமோ? ஆதலின், அப்போதைக்கப்போது மாறும் இயல்புடைய நாம், என்றும் இறையன்பிலிருந்து வழுவாது அர்ச்சையின் மூலம் அவனை அன்புடன் தொழுது அவன் அருளைப் பெற்று உய்வோமாக.

## 6. உருவ வழிபாடும் ஆழ்வார்களும்

உருவ வழிபாட்டில் ஆழ்வார்களைப் பற்றி உரைக்கவும் வேண்டுமோ? அதையே உயிரெனக் கொண்டவர்களல்லரோ அவர்கள்! கோவில்களில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சைகள் வெறுஞ்சாந்திலும் உலோகங்களினுலும் செய்யப்பட்டன என்று அவர்கள் கருதினர்கள்? இல்லை இல்லை. உலக முழுதும் பரவியிருக்கும் ஒலி அலைகள் மின்சாரக் கருவியின் மூலம் வெளிப்படுதல் போன்று, எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருளின் அருளொளி அதற்கென அமைக்கப்பட்ட உருவம் வழியாகவே வெளிப்படுகின்றது என்பதும், அதன் மூலமாகவே மக்கள்

அதைப் பெற வேண்டும் என்பதும், அவ்வுருவங்களை உண்மை அன்புடன் வழிபடுகின்றவர்களே பிறவிப் பயனை அடைவார்கள் என்பதும் அவர் தம் கருத்து.

திருமால் அர்ச்சாவதாரமாய் எழுந்தருளியிருக்கும் இடங்கள் கணக்கிலடங்குவன அல்ல. ஆயினும், அவற்றுள் நூற்றெட்டே சிறப்புடையனவாகக் கொள்ளப்படுகின்றன. இதற்குக் காரணம் என்ன? இங்குள்ள பெருமாள்களைத்தாம் ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளார்கள். ஆழ்வார்களுடைய திருப்பாசுரங்கள் எந்தெந்தப் பெருமாளை அலங்கரித்தனவோ, அந்தந்தப் பெருமாளே சீரியராகவும், அந்த இடமே திவ்விய க்ஷேத்திரமாகவும் கொண்டாடப்படுவதனால், அர்ச்சைக்கும் ஆழ்வார்களுக்கும் எத்துணைத் தொடர்பு உள்ளது என்பதையும், அர்ச்சை ஆழ்வார்களால் எத்தகைய மதிப்பைப் பெற்றுள்ளதென்பதையும், ஆழ்வார்கள் அரச்சையினிடம் எவ்வளவு ஆர்வங் கொண்டிருந்தார்கள் என்பதையும் அறிகின்றோம்.

பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய முதலாழ்வார் மூவரும் பரம பதத்தில் வீற்றிருக்கும் வைகுண்டநாதனிடமே தம் சிந்தையை மிகுதியும் செலுத்தியவர். இப்பெரியோர், இடியும் மின்னலும் மழையும் மிகுந்த ஓரிரவில் ஓர் இல்லத்தின் சிறிய இடைகழியில்[1] நின்றுகொண்டிருந்தனர். இப்பத்தருடைய தொடர்பைப் பெறுவதில் பெரிதும் விருப்புற்று இறைவனும் இவருள் புகுந்து மிக்க நெருக்

1. இடைகழி - வாயிலைச் சேர்ந்த உள் நடை

கத்தை உண்டாக்கினன். இதன் காரணத்தை அறியப் பொய்கையாரும், பூதத்தாரும் ஞானச்சுடர் விளக்கேற்றி மனக் கண்ணுல் நோக்கினர். அவர்கட்குத் திருமால், சங்கு சக்கரங்கள் பொலிய, மார்பில் திருமகள் ஒளிர, புள்ளின் மேலிருந்து ஆயிரம் ஆதித்தர்கள் உதித்தது போன்று காட்சியளித்தான். அக்காட்சியைப் பேயார், "திருக்கண்டேன்"[1] என்னும் பாசுரத்தால் துதித்துக் களித்தார். இதை இம் மூவர் முதற்பாசுரங்களும் தெரிவிக்கின்றது. திருக்கோவலூரில் நிகழ்ந்த இச்செய்தியைப் பொய்கையாழ்வார்,

"நீயுந் திருமகளும் நின்ருயால், குன்றெடுத்துப்
பாயும் பனிமறைத்த பண்பாளா!—வாயில்
கடைகழியா உள்புகாக் காமர்பூங் கோவல்
இடைகழியே பற்றி யினி."[2]

என்னும் பாசுரத்தில் குறித்துள்ளார்.

இங்ஙனம் திருமாலைக் கண்ணுரக் கண்டு இன்பந்துய்க்கும் பேற்றைப் பெற்ற மூவருள் முதல்வராகிய பொய்கையாழ்வார், "ஆழி முதலிய திவ்விய ஆயுதங்களைத் தாங்கி இருக்கும் எம்பெருமான், தன்னுடைய அன்பர்களால் விரும்பப்பட்ட உருவம் எதுவோ, அவ்வுருவமாகவே தான் வேறுபாடடைந்து நிற்பான்; அவர்கள் தனக்கு இட்ட திருநாமத்தையே தன் திருப்பெயராகக் கொள்வான்; அவர்கள் எவ்வகையில் தன்னைச் சிந்தித்திருப்பரோ, அவ்வகையி

1. மூன்ருந்திருவந்தாதி, 1
2. முதற்றிருவந்தாதி, 86.

லேயே அவர்கட்குக் காட்சியளிப்பான்," எனப் பகவான் அர்ச்சையில் அடியார்களிடம் பரிமாறும் முறையைத் தெளியக் கூறுகிருர்.[1]

சக்கரவர்த்தி திருமகனுகிய ஸ்ரீராமபிரானிடமே அன்பு கொண்ட குலசேகரர், "உன்னைப்பற்றிய அடியார்க்குச் செடி போன்று அடர்ந்துள்ள தீவினைகளை நீக்கியருளுகின்ற .திருவோடுங் கூடிய பெருமானே, பெரியோனே, திருவேங்கடத்தைக் கோவிலாக உடையவனே, உன் சன்னிதியின் வாயிலில், பாகவதர், தேவர், அரம்பையர் முதலிய தேவமகளிர் முதலியோர் இடைவிடாது நடையாடும் படியாகக் கிடந்து உன் பவளம் போன்ற திருவதரத்தைக் காணும் பேற்றைப் பெறுவேனுக!"[2] எனத் திருவேங்கடத்து எழுந்தருளியிருக்கும் அர்ச்சையை இறைஞ்சி நிற்பதைக் காண்க.

தொண்டரடிப்பொடியாழ்வாரோ, முன்னர்ச் செப்பிய ஆழ்வார்களைப் போன்றே அர்ச்சையில் ஊன்றிய அன்புடைராய்த் திகழ்ந்தார்; அவர் திருவரங்கநாதனைச் சேவிக்கின்ருர். அப்பெருமானுடைய

---

1. "தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே;
தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்;—தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே
அவ்வண்ண மாழியா னும்."— முதற்றிருவந்தாதி, 44

2. "செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியானே! வேங்கடவா! நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன் பவளவாய் காண்பேனே!"
—பெருமாள் திருமொழி, 9

திருமேனியின் அழகும், உயரிய பண்பும் அவருக்குப் புலஞகின்றன. அந்நாதனை விட்டுப் புறம் போக எண்ணிலர். அவனை அனுபவித்தல் தவிரப் பேரின்பம் வேருென்றுமில்லை என்பது அவர் கருத்து. ஆதலின், அச்சீரியர் அப்பண்பாளனை நோக்கி, “மரகதமலையன்ன திருமேனியையும், பவளமன்ன திருவதரத்தையும், தாமரை மலரன்ன சிவந்த திருக்கண்களையும் வாய்க்கப்பெற்று, உன்னைப் பற்றிஞரை ஒருகாலும் நழுவவிடாதவனே, அமரர்களுக்குத் தலைமையானவனே, இடையருக்கும் ஆவினங்களுக்கும் கொழுந்து போன்று தலைமையுற்றவனே என்று உன்னை வாயார வாழ்த்தி வாழ்த்தித் துய்க்கும் இந்த இன்பத்தை விட்டுப் பிரபன்னர் அடைய விரும்பும் பரமபதத்தை ஆளுகிற அந்த இன்பத்தைப் பெறுவதாயிருப்பினும், யான் விரும்ப மாட்டேன்!”[1] என யாவரும் பெரிதும் விரும்பிநிற்கும் வீட்டின் பேற்றையும் வேண்டாது நிற்கிருர்.

கன்மம், ஞானம், பத்தி, பிரபத்தி ஆகிய நான்கனுள் இறுதியாகிய பிரபத்தியையே தமக்கு உபாயமாகப் பற்றுமவர் பிரபன்னர் எனப்படுவர். இவர்கள் பரமனையே உபாய உபேயமாகக் கொள்வார்கள். இத்தகைய பிரபன்னர்களாகிய ஆழ்வார்கள் யாவருமே அர்ச்சையில் அளவு கடந்த ஆர்வமுடையவர் என்பது உலகறிந்த விஷயம். அவர் ஒவ்வொரு

---

1. “பச்சைமாமலைபோல்மேனிபவளவாய்கமலச்செங்கண்
அச்சுதா அமர ரேறே ஆயர்தம் கொழுந்தே என்னும்,
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகரு ளானே” —திருமாலை, 2

வரையும் பற்றிக் கூறிக்கொண்டே செல்லின் நீளு மாதலின், மற்ற ஆழ்வார்களுக்கு அங்கிஸ்தானத்தில் (உயிர்நிலையில்) அமைந்துள்ள நம்மாழ்வார் உருவ வழிபாட்டில் கொண்ட அன்பை மட்டும் சிறிது விளக்குவாம் :

இவர், திருக்குடந்தை திருவேங்கடம் முதலிய இடங்களில் உருக்கொண்டெழுந்தருளியிருக்கும் அர்ச்சைகளிடமே பிரபத்தி பண்ணுகிறார் ; இவ்வாழ்வார், ஆழ்வார் திருநகரிச் சன்னிதானத்தின் ஒரு புறத்துள்ள புளிய மரத்தின் பொந்திலிருந்து வேறெங்கும் சென்றவரல்லர். ஆனால், எல்லாத்திவ்விய க்ஷேத்திரப் பெருமாள்களும் இவர்க்குச் சேவை அளிக்கின்றார்கள். இவரோ, தாம் இருந்த இடத்திலிருந்தே அப்பெருமாள்கள் எல்லாரையும் தம்மனக் கண்ணால் சேவித்து மங்களாசாசனஞ் செய்கிறார். இம்முறையிலேதான், அந்தந்தப் பெருமாள்களிடம் இவர் பண்ணும் பிரபத்தியும் அமைகிறது. இது நிற்க.

இவர் ஒருகால் திருவேங்கடத்தில் தம் மனப் பார்வையைச் செலுத்துகிறார். மணமும், மென்மையும், அழகும் வாய்ந்த தாமரை மலரைத் தனக்குப் பிறப்பிடமாக உடையவளும், என்றும் இளமையும் வனப்பும் மாறாது மங்கைப் பருவத்தையே வாய்த்திருப்பவளுமாகிய திருமகள், 'இறைப் பொழுதும் உம்மை நீங்கியிருக்கப் பொறேன்,' என்று சொல்லிக் கொண்டே எப்போதும் வதியும் திருமார்பையுடைய எம்பெருமான், இவருக்குச் சேவை அளிக்கிறான். அந்த அலர்மேல் மங்கை மார்பனைச் சேவித்ததும்,

அவனுடைய ஒப்பற்ற புகழ், உயரிய நிலை, சீரிய பண்புகள் முதலியன இவருக்குக் காட்சியளிக்கின்றன. இவர் இதுவே தாம் சரணடைதற்குத் தகுந்த இடமென்றும், தம் உய்விற்கு இப்பெருமானே ஊன்றுகோலென்றும் உறுதிப்படுத்துகிறார். ஆதலின், அப்பெருமானைப் பார்த்து,

"அகல கில்லேன் இறையுமென்று
அலர்மேல் மங்கை யுறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகமூன்று
உடையாய்! என்னை யாள்வானே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகலொன் றில்லா அடியேன்உன்
அடிக்கீ ழமர்ந்து புகுந்தேனே!" [1]

எனப்பகர்ந்து திருவேங்கடத்தானிடம் சரணடைகிறார். அங்ஙனமானால், இவர் அர்ச்சையினிடம் கொண்ட மதிப்பையும் நம்பிக்கையையும் சொல்லக் கூடுமோ? இவற்றால் ஆழ்வார்கள் அர்ச்சையினிடம் கொண்ட அன்பு புலனாகிறது.

### 7. அர்ச்சையில் ஆண்டாளின் ஆதரம்

இனி ஆண்டாள் மேற்கொண்ட உருவ வழிபாட்டை நோக்குவோம்: இவர், முதல் நூலாகிய திருப்பாவையில், கைங்கரியமாகிற பயனைப் பெறுதற்பொருட்டு ஒருகால் இவ்வுலகில் தோன்றிய கண்ணனை வழிபட்ட போதிலும், நம்மாழ்வாரைப் போன்று, தாம் இருந்த இடத்திலிருந்தே

1. திருவாய்மொழி, 6 : 10 : 10.

ஆயர் மகளிர் இல்லங்கள், அவர்களுடைய நிலைகள் நந்தகோபனுடைய திருமாளிகை, கண்ணன் துயிலு மிடம், நப்பின்னையும் கண்ணனும் சேர்ந்திருக்கும் தன்மை, சீரிய சிங்காசனத்தில் கண்ணன் இருக்க வேண்டிய இருப்பு முதலியவற்றைத் தம் மனத்தி னல் பாவித்தே செயல் புரிகின்றுராதலின், இஃதும் உருவ வழிபாடே ஆகிறது.

இரண்டாம் நூலாகிய நாய்ச்சியார் திருமொழி யின் முதல் பாசுரத்தில், "திருவேங்கடத்தில் எழுந் தருளியிருக்கும் எம்பெருமானுக்கு யான் அந்தரங்கக் கைங்கரியஞ் செய்யுமாறு என்னை விதிக்க வேண் டும்," என்றும், மூன்ரும் பாசுரத்தில் "சதுரப்பாடு உடையனுய், திருமலையை ஆட்சி புரிபவனுய் உள்ள திருவேங்கடநாதன் என்னும் விளக்கினில் என்னைப் புகுமாறு (அவனேடு சேர்ந்து இன்பந்துய்க்குமாறு) நியமிக்க வேண்டும்," என்றும் மன்மதனிடம் விண் ணப்பித்துக்கொள்ளுகிருர். இவர் பகவானை அடை தற்பொருட்டுக் கூடலிழைத்துப் பார்க்குங்கால், "கூடலே, திருமாலிருஞ்சோலைப் பெருமான் திருவடி களைப் பிடித்தற்கும், திருவேங்கடவன், திருக்கண்ண புர சௌரிராஜன் இவர்கள் வந்து என் கையைப் பற்றித் தழுவிக்கொள்ளுதற்கும் எனக்குப் புண் ணியமிருக்குமாயின், நீ கூடுவாயாக!" என ஞான மற்ற கூடலின் காலில் விழுகின்ருர்.

இன்னும், ஒரு தலைவி தலைவனை அடைவதற்கு மேற்கொள்ளும் இன்றியமையாத முயற்சிகளுள் தூது விடலும் ஒன்ருகும். இம்முறையில் பகவா னிடம் மேகத்தைத் தூது அனுப்பும் கோதையார்

அதைத் திருவேங்கட அர்ச்சைப் பெருமானிடமே செல்ல விடுகிறார். இயற்கையை உடலாகக் கொண்டு ஒளிரும் இறையை, அவ்வியற்கையின் மூலம் வழிபடுதல் ஞானிகளின் கொள்கையாகும். இது பத்தியில் முதிர்ந்த விற்பன்னருக்கல்லால், மற்றவருக்குக் கைகூடுதல் இயலாததே! இச்செயலை மனங்கொண்ட ஆண்டாள், எங்கமைந்த இயற்கையின்மூலம் யாருக்குத் தம் வழிபாட்டைச் செலுத்துகிறார்? எவருக்கு நூறு தடா வெண்ணெயையும், நூறு தடா அக்காரவடிசலையும் உண்பிக்கிறார்? திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கும் அழகருக்கேயாகும்.

முற்குறித்தவாறு நம் ஆசாரியர்களும், தொண்டரடிப்பொடியாழ்வாரும் ஈடுபட்ட திருவரங்கன் திவ்வியமங்கள விக்கிரகத்தின் அழகில் ஆண்டாளும் ஈடுபடுகிறார். அவ்வழகிய மணவாளனது திருவுருவம் இவர் மனக் கண்ணிற்குக் காட்சியளிக்கின்றது. அவன் முழு அழகும் இவர் மனத்தைக் கவர்ந்து, இவரை ஆனந்தத்தில் ஆழ்த்துகின்றது. அந்த ஆனந்தத்தைத் தம்முள்ளே அடக்கிக்கொள்ள இவரால் இயலவில்லை. அது சொற்களாய் வெளிக்கிளம்பிற்று. அவ்வமயம் தம் அருகில் நிற்கும் அன்னைமாரை நோக்கி, ''என்னை உய்விக்கும் பொருட்டுக் கோவிலில் சாய்ந்தருளியவரும், தாம் கடலைக் கடைந்து தந்த அமுதம் கோது எனச் சொல்லுமாறு மிக்க சுவையமைந்த அமுதமானவரும், அழகிய மயிர் முடியையும் சிவந்த திருப்பவளத்தையும் அருளழகு வாய்ந்த கண்களையும்

திருநாபியில் பூத்த வனப்புடைய கமலத்தையும் அதற்கு மேலும் "இவர் இத்துணை அழகு வாய்ந்தவர்" என அளவிட்டுச் சொல்ல முடியாத தன்மையையும் பெற்றவரான திருவரங்கர், எக்காரணத்தினாலும் கழலா வண்ணம் இட்ட என் வளைகளைக் கழலுமாறு செய்துவிட்டனர்"[1] என்றும், "காவிரி நீர் வயல் புரண்டோடும் திருவரங்கச் செல்வத்தை உடையவரும், நான்கு வேதங்களின் சொற்களுக்கும் பொருளாய் நிற்பவருமான அரங்கர் என்னுடைய உடலையும் உயிரையும் கைக்கொண்டனர்,"[2] என்றும் பகர்கின்றார்.

இவருடைய இவ்வழிபாட்டில் இன்னொரு பெருமையும் உள்ளது. அஃது என்ன? இவர் வரலாற்றில்! "யான் மானிடவரை மனத்தினாலும் நினையேன், எம்பெருமானையே மணப்பேன்! இன்றேல் உயிர் துறப்பேன்!" என இவர் உறுதி கொண்டனர் எனவும், இவருடைய உறுதிப்பாட்டை அறிந்த பெரியாழ்வார் "நூற்றெட்டுத் திருப்பதிகளில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் பெருமான்களுள் யாரை மணக்கப் போகின்றனை?" எனத் தம்

1. "எழிலுடைய வம்மனைமீர் என்னரங்கத் தின்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
எழுகமலப் பூவழகர் எம்மானார், என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்வளையே ஆக்கினரே.

2. "செய்ப்புரள ஓடும் திருவரங்கச் செல்வனார்

சொற்பொருளாய் நின்றாரென் மெய்ப்பொருளும்
கொண்டாரே.
—நாய்ச்சியார் திருமொழி, 11 : 2, 6.

மகளாரைக் கேட்டனர் எனவும், மகளார் அப்பெருமான்களுடைய நிலை அழகு இயல்புகளை அறிய விரும்பினர் எனவும், அங்ஙனமே ஆழ்வார் அவைகளை விளக்கமாக்குங்கால், அவ்வப்பெருமாள்கள் தனித்தனியே இவருக்குச் சேவையளித்தனர் எனவும், சின்னுட்களுக்குப் பின்பு ஆற்ருமையினுல் அலறிக்கொண்டிருந்த தம் மகளாரை, பெரியாழ்வார் அரங்கத்திற்குக் கொண்டு சென்று அரங்கனுடைய சன்னிதானத்தில் விட்டவுடன், அவன் ஆண்டாளை அங்கீகரித்துக்கொண்டான் எனவும் இயம்பப்பட்டுள்ளன. இச்செய்திகளுக்கு இவ்வரங்கன் வழிபாடு அகச்சான்ருய் நிற்கும் பெருமையைப் பெற்றுள்ளது. இதனுல், பெறப்படுவன யாவை? ஆண்டாள் மணக்க விரும்பியதும், தம் சரீரத்தோடு கலந்து இன்பப்பேற்றை அடைந்ததும் அரங்கனேயே என்பதாகும். இங்ஙனமே செப்பிச் செல்லின் இவருடைய உருவ வழிபாடு விரிந்து செல்லும். இவற்ருல் உருவ வழிபாட்டிற்கும் ஆண்டாளுக்கும் உள்ள தொடர்பை அறிகின்ருேம், முன்பு உருவ வழிபாட்டில் ஆசாரியர்களைக்காட்டிலும் ஆழ்வார்கள் மேம்பட்டவர்கள் என்பதற்குச் சில சான்றுகளைச் செப்பினேம். இப்போது அத்தகைய ஆழ்வார்களிலும் ஆண்டாள் அவ்வன்பில் தலை நின்றவர் என்பதற்குச் சிலவற்றைக் காட்டுவோம் :

ஆண்டாளைப் போன்று ஆழ்வார்கள் நூற்றெட்டுத் திருப்பதித் திருவுருவங்களையும் மனக்கண்ணினுல் கண்டு மங்களாசாசனஞ்செய்தல், தாம் அணிந்த மாலைகளை அர்ச்சைப் பெருமாளுக்குச்

சூட்டி, அதனால் சூடிக்கொடுத்தாள் என்னும் திரு நாமத்தைப் பெறுதல், "திருவேங்கடத்தில் எழுந் தருளியிருக்கும் பெருமாளுக்குக் கைங்கரியம் புரிந்து அவனோடு சேருமாறு செய்." எனப் பிற தெய்வத் தின் காலில் விழுதல், அர்ச்சையை இயற்கையின் மூலம் வழிபட்டு, அதற்கு வெண்ணெயையும், அக் காரவடிசலையும் சமர்ப்பித்தல், 'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்!' என்னும் உறுதியைக் கொண்டு, அவ்வர்ச்சையிலேயே ஐக்கியமடைந்து இன்பந்துய்த்தல் முதலியவற்றில் நுழைந்திலராத லின், ஆண்டாளினுடைய உருவ வழிபாடு ஆழ்வார் கள் வழிபாட்டினும் உயரியதென அறியலாம்.

இங்கு இன்றியமையாத இன்றொன்றைச் சொல்லாமல் செல்ல மனமெழவில்லை. மற்றவரினும் ஆண்டாள் எங்ஙனம் பகவானுடைய உருவ வழி பாட்டை மாண்புடையதெனக் கொண்டனரோ, அங்ஙனமே பின்புள்ள ஆசாரியர்களும் அறிஞர் களும், ஆழ்வார்கள் வழிபாட்டினும், இவருடைய உருவ வழிபாட்டை விழுமியதாகக் கொள்ளுகின்ற னர் என்பது பலரும் அறிந்ததே. சில சன்னிதானங் களில் ஆழ்வாராசாரியர்களின் உருவச் சிலைகள் இல் லாமலிருப்பினும் இருக்கலாம். ஆனால், ஆண்டாள் உருவச்சிலை இல்லாத சன்னிதானமே இல்லை எனக் கூறலாம். பல கோவில்களில் ஆழ்வார்களை எல்லாம் ஒரே இடத்தில் அமைத்திருப்பர். ஆனால், ஆழ்வார் களுள் ஒருவராகிய இவர்க்கோ, எங்கும் தனிக் கோவில் உண்டு. திருமகளைப் போன்றே புவிமக ளாராகிய இவரும் தனியே வீற்றிருந்து சேதனருக்கு அருள் பொழிகிறார். ஆயினும், திருமகளைக்காட்டி

லும் இவருக்குச் சில சிறப்புகள் உண்டு. அவை யாவற்றையும் செப்புதற்கு இஃதிடமல்லவாதலின், ஒன்றை மட்டும் குறித்துச் செல்வாம்: ஒன்றிரண்டு இடங்கள் தவிர, மற்றெல்லா இடங்களிலும், எப் பெரிய உற்சவத்திலும் பெரிய பிராட்டியார் வீதி யில் எழுந்தருளிப் பலருக்கும் அருள் பொழிந்து, அந்த இடங்களையும், அவணுள்ள மக்களையும் உய்யச் செய்தல் இல்லை, ஆண்டாளோ, சிறிய திருவிழா விலும் வெளிப்போந்து யாவரையும் கடாட்சித்து யாவற்றையும் புனிதமாக்குகிறார். சிறு சிறு சன்னி தானங்களும் ஆண்டாள் திருநட்சத்திரத்தைக் கொண்டாடாமலிருத்தல் இல்லை. இவருடைய அர்ச் சைக்கு, மற்றத் திருநாமங்களை விட்டு 'உலகை ஆளுந் தன்மையுடையவள்' என்னும் பொருளைக் கொண்ட 'ஆண்டாள்' என்னும் இனிய செந்தமிழ்த் திரு நாமமே அமைந்திருத்தலைக் காண்க. இதனால், இவர் தம் இனிய அருளைப் பெய்து உலகை ஆளுகின்றார் எனக் கொள்ள வேண்டும். இதனாலும் இவர் அர்ச் சையின் பெருமை விளங்குகின்றது. இன்னும் விரிக் கிற் பெருகும்.

இவர் செய்தியால், சன்னிதானங்களில் எழுந் தருளியிருக்கும் எம்பெருமான்களின் திவ்விய மங் களவிக்கிரகத்தில் இவர் எத்துணை அன்பு பூண்டி ருந்தாரென்பதும், மற்றையோர் இவர் திவ்விய மங் களவிக்கிரகத்தில் எத்துணைப் பத்தி கொண்டுள்ளா ரென்பதும் நன்கு விளங்குகின்றனவல்லவா? இது நிற்க. அர்ச்சை வழிபாடே மக்கள் உய்விற்கு ஊன்று கோல் என்பதே இக்கட்டுரையின் தேர்ந்த பொரு ளாகும்.

# ஆண்டாளின் உயர்நிலை

## அன்பும் அருளும்

'மானிடராதல் அரிது' என்பதற் கேற்ப, உல கில் மக்களாய்ப் பிறத்தலே மாண்புடையதாகும். அங்ஙனம் பிறந்தவர்களின் உயர் நிலை ஒரு தன்மைத் தன்று. பொருட்செல்வம், கல்விச் செல்வம், அன்புச் செல்வம், அருட் செல்வம் முதலியவற்றுள் ஏதாவதொன்றில் ஆக்கம் பெற்றிருப்பினும், அவர்களை உயர்நிலை வாய்ந்தவரென்றே உரைக்கின்றோம். முன்னைய இரண்டும் எவ்வகையினும் பிறருக்குத் தீங்கிழையாது நலமளிக்கும் போதே, அவை சீர்மை பெற்று அவற்றைப் பெற்றவரை உயர்த்துகின்றன. இஃது உலகறிந்ததொன்றாதலின், இதற்கு விரிவுரை வேண்டற்பாலதன்று, பின்னைய இரண்டைப் பற்றியே இங்கு ஆராய்வோம்,

**அன்பு :—** அன்பு என்பது நமக்குத் தொடர்புடையார் மாட்டுச் செல்லும் விருப்பமாகும். இது பெருபான்மையும் நம்மைச் சார்ந்த உற்றார் உறவினரிடமே உண்டாகிறது. இதனுற்றான் பெற்றோரும், பிள்ளைகளும், மற்றோரும் ஒன்றுபட்டு வாழ்கின்றார்கள். இவ்வன்பு இன்றேல், உலகமே இல்லையாய் விடும். இது நிற்க.

தம் தவப்பயனால் சிலருக்கு இவ்வன்பு இறைவனிடம் செல்கின்றது. அஃது அவர்கட்குப் பற்றற்ற தன்மையையும், மன அமைதியையும், ஆனந்தத்தையும், இன்னும் பல நலங்களையும் அளிப்பதுடன், இறைவன் அருளையும் கூட்டுவிக்கின்றது. இன்னும்

சிலருடைய அன்பு பரமனேடு நிற்றல் இல்லை. அஃது அவன் தொண்டர் மாட்டும் செல்கிறது. அப் போதுதான் அஃது ஊன்றியதும் உயர்வுடையது மாகும். உலகில் தமக்குத் தொண்டாற்றுவதைக் காட்டிலும், தம் குழந்தைகளுக்கு அன்புடன் தொழில் புரியும் போதல்லவா பெற்றேர் மிக்க மகிழ்வடை கின்றனர்? அங்ஙனமே, ஈசுவரனும் தன் அடியார்க் குத் தொண்டு புரியும் போதே பூரணமான முகவுல் லாசத்தை அடைகிருன்.

பாகவதர்களை முன்னிட்டே பரமனிடம் செல்ல வேண்டும் என்பது வைணவத்தின் வழக்கு. இது மற்றையோருக்கு ஒவ்வோரிடத்தில் உருக்கொண் டுள்ளது. நம் சூடிக்கொடுத்த சுடர்க்கொடிக்கோ, இத்தத்துவம் திருப்பாவை முதற்பாசுரந்தொடங்கி நாய்ச்சியார் திருமொழி இறுதிப் பாசுரம் வரையும் பொருந்தியிருத்தலைக் காணலாம். இவர் நூலை ஆராய்பவருக்கு இவர் இறை அன்பு, படிப்படியாய் வளர்ந்து உச்ச நிலையை அடைவது நன்கு புலனுகும். இது விரிக்கிற் பெருகும்.

**அருள் :**—இனி அருளைக்காண்பாம் : அருள் என் பது அன்பைப் போன்று தொடர்புடையாரிடத்து மட்டும் செல்லுவதொன்றன்று. இயல்பாக எல்லா உயிர்களிடத்தும் பிறக்கும் இரக்கமே அருளெனப் படும். அன்பென்னும் காய் முதிர்ந்து அருளென் னும் கனியாகிறது. அன்பு நீர் பெருகப் பெருக, அருள்வெள்ளம் பாய்ந்து அண்மையிலும் சேய்மை யிலும் உள்ள அனைத்தையும் வளமுறச் செய்கிறது. அதற்கு அணைகோலயாரால் இயலும்! தன்னலத்தை

மட்டும் கருதிச் செயல் புரியும் ஒரு மங்கை தக்க பருவம் அடைந்து ஒரு குழவியை ஈன்றெடுக்கின்ருள். அதன் பின்னர் அவளுக்குத் தன்னை மட்டும் நோக்கும் குறுகிய எண்ணமேது? அது தன் மகவினிடம் சென்று, பின்னும் வளர்ந்து வளர்ந்து மற்றவரிடமும் செல்லுமன்ரே! இதனுற்ருன் நம் தெய்வப்பாவலர், 'அருளென்னும் அன்பீன் குழவி' என அன்பைத் தாயாகவும், அருளைக் குழவியாகவும் உருவகப்படுத்தியுள்ளார். உலகில் அருளைப் போன்று உயரிய பொருள் வேறென்றுளதோ? இவ்வுலக இன்பத்திற்குப் பொருளும், அவ்வுலக இன்பத்திற்கு அருளும் ஊன்றுகோல்கள் என இயம்பப்படினும், இருமை நலத்திற்கும் அருளே வழி காட்டும் ஒளி விளக்கு எனல் மிகையாகாது. பெருகிய அருளினுல் எச்சிற்றுயிருக்கும் தீமை புரியாது நலங்களையே இழைத்து வரும் ஒருவருக்குத் தம் உயிர் அஞ்சுதற்குக் காரணமான பாவங்கள் உண்டாகா என்பது அறிஞர் கருத்து.[1] ஆதலின், அவர் குற்றங்களிலிருந்து நீங்குவது மட்டுமேயல்லாமல், தம் நன்மையைப் பெற்ற அவ்வுயிர்கள் இன்பத்தினுல் குதுகலிப்பதையும், அவற்றின் மலர்ந்த முகத்தின் இனிமையையும் கண்டு கண்டு உவகை எய்துகிருர். இம்முறையில் ஒருவருக்கு இதனினும் இன்பந்தருவது வேறென்றுளதோ? இதை இவ்வுலகில் பெறும் இன்பம் எனில் குறை யாது? அருள் நிறைந்த நெஞ்சுடையவர் அங்குத் துன்பந்தரும் உலகத்தைச் சார்ந்து இன்னலுறுதல் இல்லை என நூல்கள் அறை

1. "அருள்சேர்ந்த நெஞ்சினூர்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னு உலகம் புகல்." —திருக்குறள்

கின்றன. இவற்ருல், அருளுடையார்க்கு இருமையிலும் இன்பமே பொங்கி வழியுமென அறிகின்ருேமல்லவா? இத்தகைய இவ்வருள் அறிஞரிடம் குறுகிய நிலையில் நில்லாமல் பரந்து பரந்து செல்கிறது; ஓரறிவுயிர் முதல் எல்லா உயிர்களிடமும் பாய்கிறது; எவ்வுயிர்க்கும் தம்மாலான உதவியைப் புரிய முந்துகிறது; அவற்றின்பொருட்டுத் தம் நலங்களையும் தம் உயிரையும் ஈதற்குத் துணிகிறது. இதற்கு ஒரு சிறு பறவையைக் காக்கத் தன் தசையையும், ஒரு முல்லைக் கொடியின் அலைப்பைப் போக்கத் தன் தேரையும் அளித்த **சிபிச்சக்கரவர்த்தியும் பாரி**யுமே தக்க சான்ருவார்கள்.

மேற்குறித்தவர்களுடைய அருள் மேம்பட்டதே. அவ்வருள் அவ்வுயிர்கட்கு உடலளவில் நின்று அவ்வமயத்தில் நன்மையை ஈந்ததுண்மையே. ஆயினும், சிறு பொழுது கழித்து, அவற்றுக்கு வேருென்றினுல் தீமை ஏற்படவும் கூடும்! அதை நீக்குவதற்கு இவர்களோ, இவர்களைப் போன்ற அருளுள்ளம் படைத்த வேருெருவரோ தோன்றி அதைத் துடைப்பர் எனச் சொல்லுதற்கில்லையே! அஃதன்றியும், இவர்கள் உதவி இன்ருே நாளையோ அழியும் உடலளவில் நின்றதேயன்றி, என்றும் அழியாது நிலைபேறுடைய உயிரளவும் சென்று அதற்கு யாதொரு நலத்தையும் இழைத்திலதே! ஆதலின், இதை அத்துணைச் சிறப்புடையதென அறிஞர் கருதுதற்கில்லை.

இனி, மக்களுடைய ஆன்ம உய்விற்கேற்ற அருட் செயல்களைப் புரிந்த சான்ருேரை நோக்குவோம்;

அவர்கள் அறிஞர், பத்தர், ஆசாரியர், ஆழ்வார் ஆகிய பல்லோராவர். அவர்களுள், ஆழ்வார்கள் அருளைக் குறித்துச் சிறிது பகர்வாம்:

ஆழ்வார்கள், பரமன் அருளினால் அறியாமை நீங்கி, உயரிய ஞானத்தோடுங் கூடிய பத்தியைப் பெற்று, உலகப் பொருள்களின் பற்றை அறவே துறந்து, "உண்ணுஞ் சோறு பருகும் நீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம்"[1] எம்பெருமானே என அவன் மாட்டே நெஞ்சிருத்தி வாழ்ந்தார்கள். அவர் கட்குத் தாங்கள் பெற்ற இன்பம் மற்றவரும் பெற வழி கோல வேண்டுமென்னும் அருள் பெருகிற்று. அவ்வருளுள்ளம், தங்கள் மன நிலை, போக்கு, தங்களுக்கு வளர்ந்தெழுந்த இறை காதலின் இயல்பு முதலியவற்றை அன்பு கனிந்த பாசுரங்களால் வெளிப்படுத்துமாறு செய்தது. அன்றியும், பிறர் தம்மை அணுகிக் கேளாதிருந்தும், தாமாகவே நல்லன தீயன இன்னவை என்றும், உயிர்க்கு உறு துணை இன்னதென்றும் இரும்பு போல் வலிய நெஞ்சமும் உருகும் வண்ணம் எடுத்தியம்பி, உலகை வாழ்விக்குமாறு செய்தது. அச்சான்றோர்களின் அருளிச் செயல்கள், அவர்களுடைய வாழ்க்கையையும், ஒருவர் துன்பமே உருவெனக் கொண்டுள்ள உலகப் பற்றிலிருந்து நீங்குந் தன்மையையும், இறைவனைப் பற்றி இன்பந்துய்க்கும் வழியையும் தெள்ளிதின் காட்டுகின்றன என்பது வெள்ளிடை மலை. அவை மக்களின் உயிர் உய்தற்குச் செம்மை வாய்ந்த நெறிகளென்னலாம். அவர்கள் காட்டிய வழிகள்

1. திருவாய்மொழி, 6: 7: 1.

எவையோ அவற்றைப் பின் பற்றிச் செல்பவர், பிற விக்கடலில் வீழ்ந்து இன்னல்களென்னும் திரைக ளால் அலைப்புறார் என்பது உறுதி. இத்தகைய பேறுகளுக்குக் காரணம் அருளேயன்றோ? இடை யறாது பெருகும் அருவி வெள்ளத்தைத் தன்னிடம் தேக்கிக்கொண்டு உலகம் முற்றும் வாழுமாறு உத வும் நீர்த்தேக்கம் போன்று, என்றும் மாறாது பாயும் இறையருளைத் தம்மிடம் நிறைத்துக்கொண்டு, அப் பெருக்கை, உலகெங்கும் வாழுமாறு பாயச் செய்த ஆழ்வார்கள் அருளுள்ளத்தின் சீர்மை, செப்புந்தர முடையதோ! தாங்கள் பெற்ற இன்பம் உலகெல் லாம் பெறக் கருதிய ஆழ்வார்கள் அருளுள்ளத்தின் பெற்றி என்னே! பரம்பொருள், மழை வாயிலாகப் பைங்கூழை வாழ்வித்தல் போன்று, ஆழ்வார்கள் வாயிலாக ஆன்மாக்களை உய்விக்க நினைத்தது போலும்!

## ஆண்டாள் அருள்

நம் அன்னையாரின் அருட்செயலைக் கூர்ந்து நோக்கின், அதன் முன் ஆழ்வார்களின் அருட்செயல் பகலவன்முன் பனிமதி போன்று ஒளி மழுங்கிக் காணப்படும். இவர் இந்நிலவுலகில் தோன்றிய தற்கே காரணம் அருளுள்ளந்தானே! மற்றைய ஆழ் வார்களோ, நம் போன்ற சீவான்மாக்கள். அவர் கள் இவ்வுலகில் பிறந்தே இறைவன் அருளைப் பெற்று உயர வேண்டும்! அம்முறையில் அவர்கள் தோன்றி, இறையன்பினால் உயர்ந்து, அவன் அரு ளைத் தாங்கள் பெற்று, அவ்வருளை இவ்வுலகிற்கும் பாக்கள் உருவில் அருளிச் சென்றார்கள். அஃதன்றி

யும், தங்கள் காலத்தில் நற்பொருளைப் பலருக்கும் எடுத்தோதினர்கள்; ஆயினும், அவர்கள் காலத்திலேயே சிலரையேனும் செம்மைப்படுத்தி நலம் பெறச் செய்தார்கள் என இயம்புதற்கோ இடமில்லை.

ஆண்டாளோ, நிலமகள். இவர் இவ்வுலகில் தோன்றக் காரணம் என்ன? இத்தோற்றத்தினல் இவர் அடையக் கூடிய பயன் யாது? பன்றிவடிவோடு வந்த எம்பெருமானல் அரக்கனிடமிருந்து மீட்கப்பட்ட இவர், அவனை அடைந்து இன்புற வேண்டியிருக்க, அதற்கு மாருக அவனைப் பிரிந்து உலகில் தோன்றக்கருதினரே! இ∴து எதைக் காட்டுகிறது? இவர் ஊன்றிய அருளுள்ளத்தையன்றோ! தாமே விரும்பி வந்தல்லவா இங்குப் பிறந்தனர்? "கடலிலிருந்து யான் கரையேறினது போன்று, என்மக்களும் பிறவிப் பெருங்கடலிலிருந்து கரையேற வேண்டும்," என்று எண்ணியல்லவா இவர் தோற்றம் செய்தார்? இக்கருத்தோடு தோன்றியவர் எம்பெருமானைத் தவிர வேறு யாரேனும் உளரோ? அப்பெருமானும், உலகை நல்வழிப்படுத்தி யாவருக்கும் வீடுபேற்றை அளிக்கவேண்டுமென்னும்எண்ணத்துடன் உதித்திருப்பினும், அவனல் ஒருவரையும் திருத்த இயலாமல், இறுதியில் மனத்தாங்கலுடன் தனியனுய் அல்லவா தன்னிடம் போந்தான்! இம்முறையில் தன் அருளினல் கருதிய பயன் காணுத இறைவன் பிறவியையும்

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்."

என்னும் குறளின்படி உன்னிய பயனைப் பெற்றுக் களித்த ஆண்டாள் தோற்றத்தையும் ஒப்பிட்டுக் கூறுதல் யாங்ஙனம்? ஆதலின், பரமன் தோற்றமும், இவர் தோற்றத்திற்கு ஒப்பாகாதெனை அறிகின்றேமல்லவா? அங்ஙனமாயின், வேறுயார் பிறப்புத்தான் இவர் பிறப்பிற்கு நேர்நிற்கும்! இதற்குக் காரணம் யாது? இவர் ஆழ்ந்த அருளுள்ளமேயன்றோ?

வேறெவருக்கேனும் இத்தகைய வெற்றிபெற இயலுமெனச் சொல்லுதற்கில்லை. இவர் நிலமகளாராகவும், உலகஉயிர்க்கு அன்னையாராகவும், பரமனுக்குக் காதலியாராகவும் இருத்தலின், இஃது இவருக்குக்கைகூடிற்று. இங்கு, "இவள் தாயாய், இவர்கள் கிலேசம் பொறுக்கமாட்டாதே, அவனுக்குப் பத்தினியாய் இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்றபுருஷகாரம்," என்னும் பிள்ளை லோகாசாரியர் வாக்கு நினைவிற்கு வருகிறது. இவ்வாக்கியம் பெரிய பிராட்டியாரைக் குறித்ததேயாயினும், எம்பெருமானுடைய தேவிகளுள் ஒருவராகிய இவருக்கும் பொருந்தும். இவர் தம் அன்பை இரு பகுதியினரிடமும் செலுத்துதற்கும், தம் அருளுடன், அவன் அருளையும் பெற்று, தன் குழவிக்குப் பாலையும் கற்கண்டையும் கலந்து ஊட்டுந்தாயைப் போன்று, சேதனருக்கு ஊட்டுதற்கும் வாய்ப்புண்டாயிற்று. இந்நிலை வேறு யாரிடத்திலேதான் நோக்க முடியும்! இஃது இயலாததொன்றே! இது நிற்க. இவர் உயர்நிலைக்குக் காரணத்தைக் கூர்ந்து நோக்கின், நிலமகளே இவண் வந்து அவதரித்ததும், அணை கடந்த அன்பையும் அருளையும் பெற்றுத் திகழ்ந்ததுமே என்பது புலனாகும்.

சான்ஞேர் தொடர்பு

நற்குணங்கள் நிறைந்து உண்மை ஞானம் வாய்ந்தவர் சான்ஞேர் எனப்படுவர். ஒருவர் எத்துணை உயர்ந்தவராயிருப்பினும், அவர்க்கு நற் கூட்டுறவு இன்றியமையாததாகும். ஒருவர் அணிந்த கண்ணுடிக்கேற்பப் பொருள்களின் நிறம் வேறு படுதல் போன்று, ஒருவர் கொள்ளும் கூட்டுறவிற் கேற்ப அவர் குணமும் செயல்களும் வேறுபடும். ஒருவருடைய நட்பினரைக் கொண்டே அவர் குணங்கள் இத்தகையவையென அறியலாம். ஒருவர் வாழ்க்கையை உயர்த்துதற்கும் குறைத்தற்கும் அக் கூட்டுறவே காரணம் என்பது அறிஞர் அறிந்ததே. இதனுற்ருன், மற்றவற்றை ஓரிரண்டு அதிகாரங் களால் விளக்கிப் போந்த தெய்வப்புலவர், நட்பிற்கு ஏழு அதிகாரங்களை வகுத்துள்ளனர். இதனுலேயே இதன் சிறப்புப் புலப்படுகிறதன்ருே!

இக்கூட்டுறவு, பிறப்பு, வளர்ப்பு, சூழ்நிலை முதலியவற்றில் தொடர்புறுகின்றது. ஆழ்வார் களுள் சிலர் தவிர மற்றவர்க்கு மேற்கூறியன எங் கெங்கோ அமைந்திருந்தன. அவற்றிற்கேற்ப அவர் கள் வாழ்க்கையும் மாறுபட்ட நிலையில் நிகழ்ந்தன. அதைக் குறித்துத் தாங்களே பிற்காலத்தில் அனு தாபப்படுதலை அவர்கள் பாசுரங்களால் அறியலாம்.

**ஆண்டாள் தொடர்பு:**—ஆண்டாள் எங்குத் தோன்றினர்? பெரியாழ்வார் தம் தூய கரத்தால் வளர்த்து வந்த மலர் வனத்தில் திருத்துளபச் செடி யின் கீழ் அல்லவா! எங்கு வளர்ந்தார்? யாரால் ஆழ்வார்கள் குடிக்கு '**அஞ்சுகுடி**' என்னும் சிறப்

புப் பெயர் வாய்ந்ததோ, யாரால் வைணவ சித்தாந் தம் உயரியதென நிலை நாட்டப்பட்டதோ, யாரால் பகவான் பல்லாண்டுகள் தீங்கின்றி வாழும் வரம் பெற்றனரோ, அத்தகைய பெரியாழ்வாரிடம் வளர்ந் தனர் என்பது யாவரும் அறிந்ததே. இங்கு நோக்க வேண்டுவது வேறொன்றுமுளது: பெரியாழ்வார் கோதையாரைக் கண்டெடுத்து வளர்த்தவர் என நூல்கள் நுவலினும், நம் ஆசாரியர்கள் அவர் உரி மையை அத்துடன் நிறுத்தினர்களில்லை. அவருக்குக் கோதையாரை ஈன்றவரென்றே பட்டமளித்துள்ள னர். "பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளை வாழியே!" என்னும் சொற்றொடரை நோக்குக. இம் முறையில் அவர் ஈன்ற தந்தையாராய் அமைந்த துடன் ஆசாரியராயுமல்லவா அமைந்தனர்? இத்த கைய தந்தையாரைப் பெறும் புண்ணியம் யாவருக் கும் அமைவதொன்றோ? இதனால் ஏற்படும் நலங் கள் பலவாகும் என்பதை அறிஞர் அறிவர். ஒருவர் உயர்நிலையை அடைதற்கு இதனினும் வேறொன்று வேண்டற்பாலதோ?

இவருக்குக் கூட்டுறவாளர் யாவர்? ஆழ்வா ரோடு, சீவான்மா, பரமான்மா, விரோதி, உபாயம், பலம் ஆகியவற்றின் இலக்கணங்களை ஆராய்ச்சி செய்து பொழுது போக்கும் ஞானிகளான பரமபாக வதரே. இவர் செயல் யாது? எம்பெருமானுக்கென மலர் பறித்தல், மாலை தொடுத்தல், அவனுக்குச் சூட்டி மகிழ்தல். இவற்றினும் ஒருவர் உயர்ச்சிக்கு வேறு என்ன வேண்டும்? இவை எத்தகைய தாழ்ந்த வரையும் உயர்த்தும் என்பது திண்ணம். அங்ஙன

மிருக்க, நில மகளாராகிய இவரை இவ்வுலகச் சுழல் பற்று தூய்மைப்படுத்தச் சொல்லவும் வேண்டுமா ?

பாக்களைப் புனைபவர் ஒவ்வொரு பதிகத்தின் இறுதியிலும் தம் பெயரைப் பொருத்திக் கற்பவருக்குத் தம்மை அறிமுகப்படுத்துதல் வழக்கு. ஆண்டாளோ, தம் பெயரைப் பெரியாழ்வார் திருநாமத்தோடு சேர்த்து முடிக்கும் பெருந்தகைமை வாய்ந்த ஒரு புத்தம்புதிய வழியை மேற்கொண்டனர். இம்முறையில் திருப்பாவையிலும், நாய்ச்சியார் திருமொழியில் இரண்டு திருமொழிகளிலும் தவிர மற்ற யாவற்றிலும் பெரியாழ்வார் திருநாமத்தோடு இவர் பெயரும் கலந்துள்ளதைக் காணலாம். இவற்றுள் இன்றியமையாத இரண்டிடங்களில் ஆழ்வாரை மட்டுமே இயம்பிப் போந்தனர், அவற்றின் சிறப்பும் போற்றத்தக்கதாகும். அதைச் சிறிது காண்பாம்:

'நல்ல என்தோழி'[1] என்னும் பாசுரத்தில், "யாவரிலும் பெரியவனை அப்பரமனை, யாவரிலும் குறைவுடைய நம்மால் வருவிக்க இயலாது. ஆனல், நம் ஆசாரியரான பெரியாழ்வார் பூச்சூட்டவும், நீராட்டவும், திருவந்திக் காப்பிடவும் அப்பெருமானை அன்புடன் அழைப்பர். அவர் வார்த்தைக்குக் கட்டுப்பட்ட அவன் விரைந்து போதருவான். அவ்வழியாலே நாம் அவனைக் காணக்கடவோம்," என்று பகர்ந்துள்ளார். இதனல் நம் அன்னையார் பெரியாழ்வாரை ஆசாரியரெனவே கொண்டிருந்தனர் என்பது நன்கு புலனுகின்றது.

---

1. நாய்ச்சியார் திருமொழி, 10 : 10.

இங்ஙனம் ஆசாரியர் வாயிலாகவே பரமனை அடைய வேண்டுமென்னும் உறுதி கொண்டு அதற் கேற்ற செயல்களை மேற்கொண்டதும், இவர் உய ரிய நிலைக்கு ஒரு காரணமன்றோ! மற்ற எந்த ஆழ்வார் இம்முறையைக் கடைப்பிடித்தனர்! ஆத லின், இவர் மற்றவரினும் சீரியர் எனக் கூறுதற்குத் தடை யாது?

இன்னும் ஆழ்வார் பதின்மருக்கும் இவர் ஒரே மகளாராய் அவதரித்தனர் என்பது 'அஞ்சுகுடிக் கொரு சந்ததி' என்னும் சொற்றொடர் தெரிவிக் கின்றது. பல குடும்பங்களுக்கு ஒரே மகளாகத் தோன்றுங்கால், எங்ஙனம் அவர்கள் செல்வம்யாவும் அம்மகளிடம் வந்து குவியுமோ, அங்ஙனமே ஆழ் வார்களுடைய ஞான பக்தி வைராக்கியங்களாகிற மதிப்பற்ற செல்வங்கள் யாவும் ஒரே புதல்வியா ராகிய இவரிடம் வந்து வெள்ளமிட்டன. அவரவர் கட்கு வாய்ந்த இறையன்பில் மூழ்கிய ஆழ்வார்கள் போக்கே வியப்பிற்கிடமானதாயும், எக்காலத்தவ ராலும் போற்றற்குரியதாயும் இருப்பின், அவர்கள் யாவருடைய இறையன்பும் தம்மிடம் பாயப்பெற்ற ஆண்டாளின் போக்கைக் குறித்து என்ன இயம்பு வது! இதை உய்த்துணருதற்கோ, பாராட்டுதற்கோ சொற்கள் கிட்டுமா? ஒன்று அளவிற்குட்பட்டதாயி ருப்பினன்றோ வார்த்தைகளால் வகுத்தற்கும், நெஞ் சால் நினைத்தற்கும் இயலும்? எங்ஙனம் எம்பெரு மானுடைய ஆனந்தகுணமொன்றை அளவிட்டறியச் சென்ற வேதம் தோல்வியுற்றுத் திரும்பியதோ, அங்ஙனமே அன்னையார் ஞான பக்தி வைராக்கியங்

களை அளவிடச் செல்பவரும் தோல்வியுறுவர் என்பது திண்ணம்.

## கல்வியறிவு ஒழுக்கங்கள்

**உண்மை உயர்ச்சி:**—உண்மை என்பதன் பொருள் வெள்ளிடை மலை. உயர்ச்சி என்பது ஏற்றம் மேன்மை என்னும் சில பொருள்களைத் தரும். பெரும்பான்மையும் உயர்வை விரும்பாத மக்கள் இல்லை எனவே கூறலாம். ஆனால், அதற்காவனவற்றை மேற்கொண்டு வெற்றி பெறுபவர் மிகச் சிலரே. ஒருவர் ஏற்றமடைதற்குக் கல்வி அறிவு ஒழுக்கங்களும் துணைபுரிவனவே. இவை வாய்க்கப் பெருதவரை உலகம் பழித்தலையும், இவை அமையப் பெற்றவரை உலகம் பாராட்டுதலையும் காண்கின்றோம். ஒருவர் வாழ்க்கை செவ்விய முறையில் நிகழ்தற்கு இவை இன்றியமையாதனவே. இவற்றால், அவர்கள் மட்டுமேயல்லாமல், அவர்கள் குடி, குலம், பின் தோன்றும் சந்ததி ஆகியவையும் முன்னேறுகின்றன. அவர்கள் உலகிற்கே முன்னணியில் நின்று பலருக்கும் செந்நெறியைக் காட்டும் செம்மல்களாக ஒளிருகின்றார்கள். அவர்களுடைய சிறப்பியல்புகள் நூல்களிலும் இடம் பெற்று என்றும் அழியாப்புகழுடம்பு வாய்ந்து திகழ்கின்றன. இன்னும்,

> "ஒருமைக்கண் தான்கற்ற கல்வி யொருவற்கு
> எழுமையும் ஏமாப் புடைத்து."[1]

> "ஒழுக்கம் இலான்கண் உயர்வுஇல்லை."[2]

> "அறிவுடையார் எல்லாம் உடையார்."[3]

---

1—3. திருக்குறள்

என்னும் இவற்ருல், ஒருவர் இம்மை மறுமைப்பயன் களைப் பெறுதல் மட்டுமேயல்லாமல், இவை உயிர்க் கும் உறுதுணையாகும் என்றும் அறிஞர் கூறுவர்.

**இறையன்பு :**—ஆயினும், இத்துணை நலங்களை அளிக்கும் இவற்றை உற்று நோக்கின், இவை உட லிற்கும் உயிர்க்கும் உயர்ச்சியைத் தருவனவே அல்லாமல், என்றும் அழியாததும், இறைவனேடு சேர்ந்து இன்பந்துய்ப்பதுமான ஆன்மாவிற்கு நேரே உயர்வை அளிக்கும் எனச் செப்புதற்கில்லை. "அங்ஙனமாயின், எ∴து ஆன்மாவை ஒளிரச் செய் யும்? எ∴து அதற்கு அணியாகும்? எ∴து அதற்கு அரணுகும்? அதன் ஞானத்திற்குப் பயன் யாது?" என ஆராயின், அ∴து இறையன்பே என ஓர்க. கல்வி அறிவு ஒழுக்கங்களும், இன்ன பலவும் இறையன் பிற்கு அடிகோலிகளாய் உள்ளனவே அல்லாமல், அவற்ருலேயே ஆன்மா பயன் பெற இயலும் என் பது வெறுமயக்கே! பொருட்செல்வம் எங்ஙனம் அறிவுச் செல்வத்திற்குக் காரணமாகாதோ, அங்ஙனமே மேற்கூறியவைகளும் இறையன்பிற் குக் காரணங்களாகா! இங்கு,

"கற்றதனுல் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்?"

என்னும் குறள் நினைவிற்கு வருகிறது. இறையன் பினுல் தம் ஆன்மாவை அழகு செய்தவர் யாரோ, அவரையே ஞானிகள் என்றும், பத்தர்கள் என்றும், பிரபந்நர்கள் என்றும் பகர்கின்ருேம். அவர்களா லேயே உலகியல் நடைபெறுகிறது. அவர்கட்கே உலகம் கட்டுப்பட்டுள்ளது. இறையன்பால் ஆன்

மாவை அழகு படுத்தினவருள் நம்முடைய ஆழ்வார் கள் சிறந்தவர்கள். அவர்களுள்ளும் நம் கோதையார் தலை சிறந்தவராவர்.

**அடியார் அன்பு:—** ஆயினும், ஆன்மாவின் அன்பு இத்துடன் நின்றுவிடுகின்றதா? இல்லை இல்லை. இவ்விறை அன்பு ஆன்மாவிற்குப் புறவித ழாகும். இதை ஆன்மாவாகிற மலருக்குப் புற விதழ் என்பர். இதற்கு அகவிதழன்ன உள்ளழகு ஒன்றுள்ளது. அஃது, எம்பெருமானுக்குத் தொண்டு பூண்டொழுகும் பாகவதர்க்கு (அடியார்க்கு) அன் புடையராய், அவர்கட்குச் சேஷபூதராய் ஒழுகுதலே. இஃதே ஆன்மாவிற்கு உரிய இலக்கணம். ஆன் மாவிற்கு வடிவமும் இஃதே. அகவிதழ் இன்றேல், எங்ஙனம் அலர் இல்லையோ, அங்ஙனமே அடியார் தொண்டு இன்றேல் ஆன்மா இன்றெனக் கூறலாம். ஆன்மா இன்று என்னில், அது முற்றும் இல்லாமல் அழிந்துவிட்டதென்பது கருத்தன்று. அஃது இருந் தும் சத்தற்று உள்ளது என்பதே கருத்து. இன்னும் ஊன்றி நோக்கின், அடியார் அன்புதான் ஆன்மா; ஆன்மாதான் அடியார் அன்பு. இரண்டும் தனித் தனி பொருள்கள் அல்ல எனக் கூறலாம். இதனால், ஆன்மாவிற்குப் புற அழகு இறை பணி என்பதும், உள்ளழகு தொண்டர் பணி என்பதும் உணர்ந்தாம். இப்பணியைத்தான் ஆழ்வார்களும் மேற்கொண் டார்கள். இங்கு, **விப்பிரநாராயணர்** தம்மைத் **தொண்டரடிப்பொடி** எனச் செப்புவதும், பதின் மருக்கும் உயிராய்த் திகழும் சடகோபர்,

"பொன்னு ழிக்கை என்னம்மான்
நீக்க மில்லா அடியார்தம்
அடியா ரடியா ரடியார்எம்
கோக்கள்; அவர்க்கே குடிகளாய்ச்
செல்லும் நல்ல கோட்பாடே."[1]

எனக் கூறுவதும் நோக்கத்தக்கன. ஆயினும், இவர்கள் இப்பாகவதர் தொண்டை ஆங்காங்கே வெளிப்படுத்தியுள்ளார்களே அன்றித் தங்கள் நூலில் அதையே போக்காகக் கொண்டார்களில்லை. நம் ஆண்டாளோ, முதலில் தெரிவித்தவாறு, தம் நூலின் தொடக்கத்திலிருந்து முடிவு வரையில் பாகவதரையே பின்பற்றுகிறார்; முதலிலும் பாகவதரை முன்னிட்டே கண்ணனிடம் செல்கிறார்; பாகவதரையே தெய்வங்களெனக் கொள்கிறார்; அவரே தமக்குச் சரண் எனக் கருதுகிறார்; பயன் பெறும் போதும் அவர்களோடு கலந்தே பண்படைகிறார்; இடையிலும் இயற்கைப் பொருள்களைக் காணுங்கால், அவை இறையைத் தங்களுக்குள் பொதித்துகொண்டிருக்கும் தொண்டர் எனவே உறுதி கொள்கிறார்; அவைகளிடம் அடைக்கலம் புகுகிறார்; இறுதியிலும் இறைவனைக் கண்டு வந்த பாகவதரையே அணுகி, அவர்களால் உண்மை உணர்ந்து, எம்பெருமானோடு கலந்து இன்பந்துய்க்கிறார். ஆன்மா, பரமான்மா, கைங்கரியம் இவற்றைக் குறித்து அலசி அலசி இயம்பும் திருமந்திரத்தின் தேர்ந்த பொருள் யாது? அஃது எத்தத்துவத்தை உயிரெனக் கொண்டுள்ளது? பாகவத சேஷத்துவத்தையேயாகும்! இதை, "நின்றிருவெட்

1. திருவாய் மொழி, 8 : 10 : 10.

டெழுத்தும் கற்றும் நானுற்றதும் உன்னடியார்க் கடிமை" என்பதனுல் அறியலாம்.

உண்மை உயர்ச்சி என்பது எது? ஆன்மாவிற்கு அகவிதழாகிய அடியார் தொண்டை மேற்கொண்டு பரமனுக்கு முகமலர்ச்சியைப் பிறப்பித்தலேயன்ருே? இத்தகைய உண்மை உயர்ச்சிக்குக் காரணமான ஆன்மாவின் அக அழகையே முற்றும் கொண்ட நம் கோதையார், மற்ற ஆழ்வார்களைக்காட்டிலும் பல வகையிலும் உயர்வைத் தரும் உண்மையான ஆன்ம அழகு வாய்ந்தவர் எனக் கூறுதற்குத் தடை யாது? இதுதான் உண்மை உயர்ச்சி என்பது! இஃதும் இவர் உயர்ச்சிக்குக் காரணமாய் நின்றது என்பது மிகையாகாது.

இங்கு இதற்குத் தொடர்புடைய ஒன்றைக் குறிக்காமல் செல்ல மனமெழுந்திலது. **ஸ்ரீராமபிரான் சபரி**க்கு வீடு பேற்றையளித்த வரலாறு யாவரும் அறிவர். அவன், வேடுவன், பறவை, வேடுவச்சி, வானரம், அரக்கன் முதலியவர்களிடம் நட்புக் கொண்டு உறவு பாராட்டினன். அவர்களுள் அப் பெருமான் வேடுவர் குலத்தில் பிறந்த **குகன்**, **சபரி** ஆகிய இருவரிடமும் நடந்துகொண்ட முறையைச் சிறிது நோக்க வேண்டும். குகன், பெருமாள் வருகையை அறிந்து, அச்சீரியனிடம் ஏற்பட்ட மிக்க அன்பானது தன்னை உந்த, தேன் திணைமா முதலிய சில பொருள்களைக் காணிக்கையாய்க் கொண்டு அவனைக் காண வருகின்ருன்; பெருமானைக் கண்டதும் அடியற்ற மரமென அவன் கால்களில் விழுந்து வணங்கி, தான் அன்புடன் கொணர்ந்த

பொருள்களை உண்ணுமாறு இறைஞ்சுகின்றான். ஆயினும், பெருமான் அவற்றை உண்ண விரும்பிற்றிலன். "பிறருக்குக் கொடுத்தலன்றி, பிறரிடமிருந்து பெற்றுக்கொள்ளுதல் க்ஷத்திரியனுக்குத் தருமமன்று. அன்றியும், தவ நிலையிலுள்ள இவ்வமயம் யான் தாமதகுணப் பண்டங்களை உட்கொள்ளுதல் கூடாது" என இயம்பி, அவற்றை மறுத்து விடுகின்றான்; அவனே, சபரி சுவைத்துப் பார்த்து இனிமை உடையனவாகத் தேர்ந்தெடுத்து வைத்த கனிகளை மிக்க ஆதரத்துடன் உண்டுகளிக்கின்றான். இம்முறையில் இருவரும் ஒரே குலத்தில் பிறந்தவர்களாயும், கெழுமிய அன்புடையவர்களாயும் இருந்தும், பெருமான் இவ்விருவர் பொருள்களிடமும் ஒரே தன்மையான மதிப்பைக் கொண்டானில்லை.

இன்னும் இவற்றைக் கூர்ந்து நோக்கின், குகன் கொணர்ந்தவை புதியன; விழுமியன. சபரி ஈந்தனவோ, பன்னாட்களாய்த் திரட்டி வைத்த பழையன; தன் பற்களால் கடித்துச் சுவைத்துப் பார்த்து விழுப்புற்றன. இம்முறையில் முன்னவற்றை மறுத்தற்கும், பின்னவற்றை ஏற்றுக்கொள்ளற்கும் காரணம் யாது? அவர்களுடைய பத்தியின் நிலையேயாகும். குகன், பெருமானிடம் அன்பு கொண்டவன். சபரியோ, அப்பெருமான் அடியார்களாகிய பாகவதர்களிடம் அன்பு கொண்டவள்; அவண் வதிந்த மதங்கரிஷியின் சிஷ்யர்களை அவள் வழிபட்டனள்; அவர்களிடம் மிக்க ஆதரம் கொண்டிருந்தனள்; அவர்கள் காட்டிய வழியிலேயே நடந்து வந்தனள்.

அவர்கள் வைகுண்டத்திற்குச் செல்லுங்கால், "இராமர் சின்னுட்களில் இவண் எழுந்தருளப் போகின்ருர். அவரை வரவேற்பதற்காக நீ இவண் தங்கியிருந்து, அவரை அன்புடன் உபசரித்து, அவருக்குச் **சுக்கிரீவன்** வதியும் இடத்தைக் குறிப்பிட்டு, பின்னர் அவரருளால் யாங்கள் செல்லும் உலகிற்கு வருவாயாக," எனக் கட்டளை இட்டனர். ஆகவே, சபரி தன் ஆசாரியர்களாகிய பாகவதர் கட்டளையைத் தலை மேற்கொண்டு அவ்வாறே நடந்துகொண்டனள். இஃதே அவள் பேற்றிற்குக் காரணமாகும்.

இவ்விருவர் வரலாற்றினுல், பெருமான், தன்னிடம் அன்பு கொண்டவர்களைக்காட்டிலும், தன் தொண்டர்களிடம் அன்பு காட்டுமவர்களைப் பெரிதும் விரும்புகின்ருன் என்பதை அறிகின்ருேமல்லவா? இத்தொண்டரன்பினுற்ருன் ஆண்டாள், மற்ற ஆழ்வார்களைக்காட்டிலும் உயர் நிலையைப் பெற்றனர் எனக் கொள்க. இங்கு, "ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சி நின்ற தன்மையள்" என மணவாள மாமுனிகள் பகர்தலைக் காண்க.

இவற்ருல், ஆண்டாளின் உயர்நிலைக்குக் காரணம், இவருக்கமைந்த அன்பு, அருள், பெரியாழ்வார் போன்ற சான்ருேர் தொடர்பு, இறையன்பு, அடியார் அன்பு ஆகியவையே என அறிகின்ருேம்.

# புருஷகாரத்தின் பொறுப்பு

## 1. புருஷகாரம் என்பது என்ன?

புருஷகாரம் என்னும் இவ்வடசொல் ஆண்மை, முயற்சி என்னும் சில பொருள்களைத் தரினும், இவற்றைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும் கடகத்துவம் என்பதனையே இங்குப் பொருளாகக் கொள்ளுதல் வேண்டும். மாறுபட்ட இயல்புடைய இருவரை ஒன்றுபட இணைப்பவரைக் **கடகர்** என்றும், அச்செயலைக் கடகத்துவம் என்றும் இயம்புவர். இம்முறையில் சிற்றறிவு வாய்ந்து, கன்மத்தால் கட்டுப்பட்டு, இன்ப துன்பங்களில் உழன்றுகொண்டிருக்கும் சீவாத்துமாவையும்; பேரறிவு வாய்ந்து, கன்மத்திலும் இன்ப துன்பங்களிலும் கட்டுப்படாமல், அவற்றைக் கடந்து நிற்கும் பரமாத்துமாவையும் தம் இதவுரைகளால் ஒருசேர விட்டு இன்பந்துய்க்கச் செய்பவர் எவரோ, அவரே புருஷகாரி எனப்படுவர்; அச்செயலே புருஷகாரம் எனப்படும்.

## 2. புருஷகாரத்திற்கு உரியவர் யார்?

இச்செயலிற்கு முன்னணியில் நிற்பவர் பெரிய பிராட்டியாரேயாவர். இவருக்கு **இலக்குமி, கமலை, அரிப்பிரியை, ஸ்ரீ** என்னும் பல திருநாமங்கள் வாய்ந்திருப்பினும், இவற்றுள் 'ஸ்ரீ' என்னும் திருநாமமே சிறந்ததாகும். ஈசுவரனுக்கு எங்ஙனம் **'அ'** என்னும் பதம், சீரியதாய் அவனுடைய காத்தல் தொழிற்கு இன்றியமையாத இயல்புகளைத் தெரிவிக்கின்றதோ, அங்ஙனமே **'ஸ்ரீ'** என்னும் இதுவும்

பெரிய பிராட்டியாருக்குச் சிறப்புடையதாய் இவருடைய புருஷகாரத்திற்கு இன்றியமையாத இயல்புகளைப் புலப்படுத்துகின்றது. இது நிற்க.

சேதனனுக்கும் ஈசுவரனுக்கும் உள்ள மகன் தந்தை, உடைமை உடையவன், சேஷன் சேஷி என்னும் பல வகைத் தொடர்புகளினால் சேதனன் தானே ஈசுவரனைத் சென்றடைதற்கு உரிமை பெற்றிருக்க, பிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்ற வேண்டுவது ஏன்? பகவான் மிக்க அருள் நிறைந்த திருவுள்ளத்தனயிருப்பினும், சேதனன் செய்யும் அளவு கடந்த குற்றங்கள், குளிர்ந்த நீரில் நெருப்புப் பிறத்தல் போன்று, அவனுக்குச் சீற்றத்தைப் பிறப்பிக்கின்றன. அச்சீற்றத்தை மாற்றிக்கொண்டு சேதனனுடைய குற்றங்களைப் பொறுப்பது பிராட்டியாருக்காகவேயாகும்.

பல பிறவிகளிலும் கணக்கற்ற குற்றங்களைச் செய்து போந்த ஒரு சேதனனுக்குச் சிறிது நல்லறிவு பிறந்து, பகவானிடம் சென்று, தன் தவறுகளைத் தெரிவித்து, தன்னைப் பொறுக்குமாறு இறைஞ்சுகிறான். எம்பெருமானுக்கு அச்சேதனனிடம் ஏற்பட்ட வெறுப்பினால், அவனை நோக்கவும் மனமற்று, மன அமைதியின்பொருட்டு, பெரிய பிராட்டியார் பக்கம் திரும்புகிறான். அவ்வமயம் பிராட்டியார் பகவானை நோக்கி, "தன் உய்வை நாடி உம்மிடம் வந்த இவனை நீவிர் இங்ஙனம் புறக்கணிப்பின் இவனுக்கு வேறொரு புகலிடமுண்டோ? இவனுக்கும் உமக்கும் உள்ள தொடர்பு, 'உறவேல் நமக்கிங்கொழிக்க ஒழியாது' என்கிறபடி எக்காரணத்

திலும் நீங்காததொன்றன்றே? எனவே, நீர் இவனைக் கை விட முறையுண்டோ? இவனைப் பெறுதல், உரியவரான உமக்குத்தாமே பேறாய் உள்ளது! நீர் இங்ஙனம் உறுதியுடனிருப்பின், இவ்வுலகில் ஒருவனேனும் உமக்குக் கிடைப்பனோ? உயிர்களைத் திருத்தி அவைகளைப் பெறுதற்பொருட்டே பல அவதாரங்களையும் எடுத்து உழலும் உமக்கு யான் அறிவுறுத்தல் வேண்டுமா? உம்மை இரட்சகப் பொருளாய் நாடி வந்த இவனைக் காக்கவில்லையேல், உம்முடைய சர்வ இரட்சகத் தன்மைக்குக் குறைவு ஏற்படாதா? உம் அருட்குணந்தான் நிலைப்பது எவ்வாறு? 'இவனைத் தண்டிக்கவில்லையேல், சாத்திரம் நிலையாதே!' எனக் கருதுவீரேல், உம்மைச் சிறிதும் நோக்கிப் பாராது தன்னிச்சையில் செல்பவனிடம் சாத்திரத்தைப் பயன் படுத்தும்; தேவரீரிடம் அன்புடன் வந்த இவனைப் பாவங்களிலிருந்து நீக்கி இரட்சியும். அப்போது சாத்திரமும் பழுதுபடாது; உமது அருட்குணமும் உயிர் பெற்றுத் துலங்கும்," எனப் புருஷகாரஞ் செய்கிறார்.

இங்ஙனம் ஏற்ற பற்பல இனிய சொற்களைப் பகர்ந்து, பரமன் சினத்தை மாற்றி, அவனுக்குச் சேதனனிடம் அருள் பிறக்குமாறு செய்பவர் பிராட்டியாரேயாவர். இவ்வினிய சொற்களாலும் ஈசுவரனது நெஞ்சம் இளகவில்லையேல், பிராட்டியார் தம் அழகைக் காட்டி அவனைத் தம் வசப்படுத்திச் சேதனனை அங்கீகரிக்குமாறு செய்வர்.[1] ஆதலின், சேதன

1. "உபதேசத்தாலே மீளாதபோது..........ஈசுவரனை அழகாலே திருத்தும்."
ஸ்ரீவசனபூஷணம், வாக்கியம், 13

னுக்குப் பெரிய பிராட்டியாரின் புருஷகாரம் இன்றி யமையாததென்றும், பகவான் சேதனனுடைய குற்றங்களைப் பிராட்டியாருக்காகவே பொறுக்கின்றான்[1] என்றும் அறிதல் வேண்டும்.

மேலே குறித்தவண்ணம், பரமனையும் சேதனனையும் சேர்த்துவைக்குந்தொழில் சிறப்பாகப் பெரிய பிராட்டியாரிடமே நிகழினும், ஆசாரியர், சித்து (ஆன்மா), அசித்து (ஞானமற்றவை), ஈசுவரன் ஆகிய மூன்று தத்துவங்களின் இலக்கணங்களையும் சேதனருக்கு உபதேசித்து, அவர்கள் பரமான்மாவோடு சேரும் நெறியைக் கற்பித்து, அவர்களை உய்விக்கின்றமையாலும், பாகவதர் அவர்களுக்குத் தம் ஞான அனுஷ்டானங்களால் நல்லறிவுச் சுடர் கொளுத்தி, அவர்கள் வாழ்க்கையைச் செம்மைப் படுத்திப் பரமனோடு சேர வழி கோலுகின்றமையாலும், மற்றப் பிராட்டிமாரும், அப்போதைக்கப் போது இச்செயலை நிகழ்த்துகின்றமையாலும், பொதுவாக இவர்களிடமும் இச்செயல் உருக் கொள்ளுகின்றமையின், இவர்களும் புருஷகாரத்திற்கு உரியவர்களாகின்றார்கள்.

---

1. "நீரிலே நெருப்புக் கிளருமாப் போலே, குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக; இவள் தாயாய், இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய், இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்"

துவயம், வாக்கியம், 12, 13.

### 3. புருஷகாரத்தில் ஆண்டாளின் ஆண்மை :

முன்னர்ப் பகர்ந்தவண்ணம் இறைவனுக்கு இதவுரை இயம்பிச் சேதனனை ஏற்றுக்கொள்ளுமாறு செய்யும் பேருபகாரச் செயல், மற்றவரைக்காட்டிலும் பெரிய பிராட்டியாருக்குச் சிறப்புடையதாக இருப்பினும், எம்பெருமான் மாறு உரையாமலும், தாமதியாமலும் வந்தவனை ஏற்றுக்கொள்ளுமாறு செய்யும் சொற்சாதுரியமும், நயமும் நிலமகளிடமே பெரிதும் அமைந்திருக்கின்றன என்பது நூல்களிலும், ஆசாரியர்கள் வாக்கிலும் அறியக்கிடக்கின்றது.

யாங்ஙனம்? பெரிய பிராட்டியார் பகர்ந்த வண்ணம், தன்னை வந்தடைந்தவனை ஏற்றுக்கொள்ள மனமற்ற ஈசுவரன், "இவளும் நமக்குத் தொல்லையைத் தருகிறாள்," எனக் கருதி, புவிமகள் பக்கம் நோக்குகிறான். இதுதான் தக்க சமயம் எனக் கருதிய நிலமகள், "உம்மை அடைந்து உய்யக் கருதி உம்மைச் சரணடைந்துள்ள இச்சேதனனிடம் குற்றம் குடி கொள்ள வகையேது? எப்போது உம்மை நாடி வந்தனனோ, அப்போதே ஆதித்தன் முன் இருள் இரிதல் போன்று, இவன் தீவினைகள் யாவும் பறந்தோடாவோ! அதன் பின்பு இவனுக்குப் பாவமும் பழியும் உண்டோ? அன்றேல், உம் அருளுக்குப் பயன்தான் யாது? ஆதலின், இவனை நீர் ஏற்று உய்வித்தல் உமது கடமையாகும் என்பதை யான் சொல்ல வேண்டுவது மிகையன்றோ?" என்னும் இதவுரையால் பகவானுக்குப் புருஷகாரஞ் செய்கிறார். அதற்கு மாறு கூற வன்மையற்ற எம்பெருமான், சேதனனை

அங்கீகரிக்கிருன் என நூல்கள் நுவலுகின்றன. ஆத லின், நிலமகளாகிய ஆண்டாளின் புருஷகாரம் பெரிய பிராட்டியாரின் புருஷகாரத்தினும் வன்மை வாய்ந் தது எனக் கூறுவதில் குறை யாது? இது நிற்க.

## 4. புருஷகாரத்தில் ஆண்டாளின் உயர்ச்சி:

பெருமாளும் பிராட்டியாரும் கானில் தனித்து வதியுங்கால் பெருமாள் பிராட்டியாரின் மடியில் சாய்ந்து உறங்கிக்கொண்டிருந்தார். அவ்வமயம் காகாசுரன் தோன்றி மூக்கால் கொத்திப் பிராட்டி யார் உடலில் புண்ணுண்டாக்கினுன். அதினின்றும் பெருகிய செந்நீர் பெருமாள் மேல் துளிக்க, அவர் திடுக்கிட்டெழுந்து, நடுங்கிக்கொண்டிருந்த பிராட்டி யாருக்கு நேர்ந்த துன்பத்தை அறிந்து, சினங்கொண் டாராய், அவ்வரக்கன் மீது தம் பாணத்தை ஏவிஞர். அந்த இராமபாணம் அவனை விடாது தொடர்ந்தது. எத்தேவதையும் அவனைக் காக்கும் வன்மை பெற் றிலது.எங்குச் சென்ருலும் அவனுக்குச் சரண்கிடை யாமையின், இறுதியில் அவன் சக்கரவர்த்தி திரு மகனிடமே வந்து வீழ்ந்தான். அவன் கதியற்ற நிலை யைப் பொருத பிராட்டியார், அவன் குற்றத்தைப் பொறுத்துக் காக்குமாறு பெருமாளை வேண்டிக் கொண்டார். அங்ஙனமே பகவான் அவனுக்குச் சரண் தந்து அவனைக் காத்தருளிஞர். இங்கு, "முன் னர்ப் பெருமாளைச் சினத்திஞல் அம்பெய்யுமாறு செய்து, பின்னர் அவனைக் காக்குமாறு வேண்டும் பிராட்டியின் இச்செயல், வைக்கோல் போரில் தீயிட்டுவிட்டு, அது பற்றி எரியுங்கால், அணைக்கு

மாறு பிறரைக் கூவியழைப்பது போன்றுள்ளது,'' என நிலமகள் பெரிய பிராட்டியைப் பரிகசிக்கிருள் என்று நம்பிள்ளை பகரும் வாக்கியத்தை நோக்குக.

திருமால் உலகில் தோன்றுங்காலத்திலெல்லாம் திருமகளும் உடன் தோன்றல் வழக்கு. அம்முறையில் சக்கரவர்த்தி திருமகனுருடன் தோன்றிய சீதா பிராட்டியார், இராவணனுல் சிறையிலிடப்பட்ட தெய்வமகளிரை மீட்பதற்கென்றே பத்து மாதங்கள் உயிரினுமினிய காதலரைப் பிரிந்து, உணவையும் உறக்கத்தையும் ஒழித்து, சிறையிலிருந்து அம்மகளிருக்கு நலமேற்பட்ட பின்னரே, அவணிருந்து வெளிப் போந்தனர் என்பது யாவரும் அறிந்ததே. பிற ஆன்மாக்களைப் பீடுறச்செய்த இஃது, அருள் நிறைந்த காரியமேயாகும். இதனுற்றுன், இராமாயணம் எத்தனையோ அரிய பொருள்களை வெளிப்படுத்தியிருப்பினும், அவற்றையெல்லாம் புறக்கணித்து, ''இராமாயணம் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது,'' எனப் பிள்ளைலோகாசாரியர் பிராட்டியார் ஏற்றத்தைப் பாராட்டியுள்ளார்.

இனி மக்களை உய்விக்கும் செயலில் ஆண்டாள் போக்கை நோக்குவாம்: இரணியனுல் கவரப்பட்ட நிலமகளாரைப் பகவான் வராகவதாரங்கொண்டு அவ்விரணியனை அழித்து, தம் கோட்டால் இவரைத் தாங்கி வெளி வந்த போது, இவர் சிறிதும் உவப்பின்றித் துயருடனிருந்தார். இதன் காரணத்தைப் பெருமான் வினவ, ''என் குழந்தைகள் யாவரும் சமுசாரக் கடலில் ஆழ்ந்து துன்புற்றுக் கிடக்க, யான் ஒருத்தி மட்டும் நீர்க்கடலினின்றும் கரை

யேறியதால் நலமென்ன? அவர்கள் உய்விற்கு என்னால் ஒன்றும் செய்வதற்கில்லையே!" என விடையிறுத்தனர். அவ்வமயம் பகவான், "அங்ஙனமாயின், நீ உலகில் பெரியாழ்வாருக்கு மகளாகத் தோன்றி மக்களைத் திருத்திக் கரையேற்ற வழிகோலுவாய்," எனப் பணித்தனர். அவ்வமயம், 'இத்தோற்றத்தால் பகவானைப் பிரிய நேருமே!' என்னும் கவலையைச் சிறிதும் கொள்ளாதவராய், ஆன்மாக்கள் உய்விலேயே உள்ளம் பதித்து, இவர் பெரியாழ்வாரிடம் தோன்றி, மக்கள் நலத்தின்பொருட்டுச் செய்த செயல்கள் பலவாகும். இதை இவர் அருளிய திருப்பாவையே தெள்ளிதின் தெரிவிக்கின்றதன்றோ! இந்நூல் நுவல்வன யாவை? இவர் மற்றச் சேதனரைக் கொண்டுபோய்ப் பகவானிடம் சேர்ப்பதற்கு முயல்வதும், அவர்களை அங்கீகரித்துக் கொள்ளுமாறு எம்பெருமானுக்கு அறிவுறுத்துவதுமேயல்லவா? இவைதாமே புருஷகாரத்தின் இலக்கணம்?

உயரிய ஒரு பொருளை உலகிற்குப் போதித்து அவர்களை நல்வழிப்படுத்தக் கருதுபவர், அவர்கட்கு, 'இங்ஙனம் செய்; அங்ஙனம் செய்,' எனக் கட்டளையிடுதலைக்காட்டிலும், அவ்வறத்தைத் தாமே செய்து காட்டுதல் சிறந்ததும், மற்றவர் திருந்தி நல்வழி அடைதற்குத் தக்க நெறியுமாகுமன்றோ? இம்முறையில் கண்ணனை அடையக் கருதும் ஆண்டாள் மேற்கொள்ளும் நியதிகளை நோக்க வேண்டும். தம் இதச் சொற்களால் எத்தகையோரையும் பரமனோடு பிணைக்கும் புருஷகார வன்மை இவருக்கிருப்பினும்,

இவரும் அப்பரமனை அடைய வழி கோலுங்கால், முறை தவருமல் வாயில் காப்பான், நந்தகோபன், யசோதை, பலராமன் இவர்களைப் புருஷகாரமாகப் பற்றியுள்ளார். இஃதொருபுறமிருக்க, அவ்வவதாரத்தில், கண்ணனுக்கு மிக்க அன்புடையவளாய்த் திகழ்ந்த நப்பின்னையைத் தமக்குப் பற்றுக் கோடாகப் பற்றிய சிறப்பியல்பு பாராட்டற்குரியதாகும். 'திருப்பாவை' முப்பது பாசுரங்களோடுங் கூடிய ஒரு சிறிய நூலேனும், அஃது, ஓர் ஆன்மா இறைவனை அடைந்து இன்புற்று வாழ்வதற்கேற்ற இன்றியமையாத அரிய பொருள்கள் யாவற்றையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கிறதென்பது வெள்ளிடைமலை. இவற்றுள் உயர்ந்தது புருஷகாரம் என்பதும், இதையே இந்நூல் உயிர்நிலையாகக் கொண்டு, இதன் சீரிய தத்துவங்களை எளிய நடையில் ஒவ்வொருவர் மனத்திலும் பசுமரத்தாணி பதியுமாறு தெளிவுறுத்துகிறதென்பதும் ஒருவராலும் மறுக்கற்பாலனவல்ல. 'பாம்பின் கால் பாம்பறியும்;' என்பது போன்று, புருஷகாரத்தின் நுட்பதிட்பங்கள் புருஷகாரியால்தானே அறிய முடியும்!

ஆண்டாள் இவ்வறத்தைத் திருப்பாவையில் மட்டுமன்றி, தாமியற்றிய மற்ருெரு நூலாகிய திருமொழியிலும் நிலை நாட்டியுள்ளார்: இவர் கடலைக் காண்கிருர். அஃது இமை நேரமும் ஓயாது இறைச்சலுடன் அலைகளை மோதிக்கொண்டேயிருக்கிறது. அந்நிலை இவருக்கு, 'இதுவும் நம்மைப் போன்றே எம்பெருமானை அடைய முடியாமையின் இங்ஙனம் அலைந்துகொண்டுள்ளது!' என்னும் எண்

ணத்தைத் தோன்றுவிக்கின்றது. ஆதலின், அதனை நோக்கி, "கடலே, உன்னைக் கற்களையும் மண்ணையும் இட்டுத் தூர்த்தும், மலையை நாட்டிக் கடைந்து உன்னிடமுள்ள அமுதத்தைக் கவர்ந்துகொண்டும் உன்னைக் கைவிட்டதைப் போன்றே, எம்பெருமான், என் உடலிலும் புகுந்து, என் உயிரையும் மற்றப் பொருள்களையும் கொள்ளை கொண்டு, என்னையும் நெகிழ விட்டான். ஆயினும், அவனை அடையவே என் நெஞ்சம் விரைகின்றது. ஆதலின், அப்பெருமானிடம் இதைப் பணிக்குமாறு, என் துயரங்களை அவன் படுக்கையான திருவனந்தாழ்வானிடம் நீ தெரிவிப்பாயாக. அவ்வாழ்வான் புருஷகாரத்தினாலேனும் எனக்கொரு நன்மை உண்டாகட்டும்,"[1] என்று திருவனந்தாழ்வானைப் புருஷகாரமாகப் பற்றுகிறார்.

இன்னும், தம் நிலையைக் கண்டு பெரிதும் வருந்தும் தோழியை நோக்கி, "நீ கவலை கொள்ளற்க. அவனே, திருவனந்தாழ்வானைப் படுக்கையாக உடையவன்; திருமகளுக்குத் தலைவன்; பரம்பொருள். நாமோ, சிற்றறிவும், சிறு தொழிலுமுடைய அற்ப மனிதர். அவனுக்கும் நமக்கும், எத்துணையோ ஏற்றத்தாழ்வுள்ளன. மிகத் தாழ்ந்த நாம், யாங்ஙனம் அவனை அணுக முடியும்! அங்ஙனமாயின், அவனை இழக்க வேண்டுவதுதானே என்னில், இல்லை. அவனை இழக்காமல் பெறுதற்கு ஒரு சிறந்த வழியுள்ளது. அப்பரமன் நமக்கு வசப்படாவிடினும், நம் தந்தையாரான பெரியாழ்வார்க்கு வசப்படாமலிருக்க அவனால் இயலாது. அவருக்

1. நாய்ச்சியார் திருமொழி, 10 : 9.

குப் பரதந்தரனாக நின்றே செயல் புரிவன். பெரியாழ்வாரோ, அப்போதைக்கப்போது மலர் சூடுதற்கும், நீராடுதற்கும், உண்பதற்கும் அக்கண்ணனை அழைப்பர். அவ்வமயம் அவன் பதறிவந்து நிற்பன். அவ்வழியாலே அவனை நாம் எளிதில் பெற்று இன்புறுவோமாக!" என்கிறார்.[1] இவற்றால் இவர் நிலமகளேயாயினும், இவ்வுலகஇயல்பிற்கேற்பப் புருஷகாரத்தை முன்னிட்டே பரமனை அடைய வழி கோலுகிறார். இம்முறையில் கோதையார்,

"ஒழிவில் காலமெல் லாம்உட னாய்மன்னி
வழுவி லாஅடி மைசெய்ய வேண்டும்நாம்"[2]

என்று எம்பெருமானுக்கு என்றும் எப்போதும் தொண்டு புரிதலையே விரும்பி நிற்கும் பரம பாகவதனை ஆதிசேஷனையும், தமக்குத் தந்தையாராயும், ஆசாரியராயும் ஒளிர்ந்த பெரியாழ்வாரையும் தமக்குப் புருஷகாரமாய்க் கொண்டமையின், இப்புருஷகாரத்திற்குப் பாகவதரும் ஆசாரியரும் உரியவர் என அறிகின்றோம். இது நிற்க.

பரமன் அவரவர் நல்வினை தீவினைகளுக்கேற்ப, சில பொருள்களை உண்டாக்கி, அவற்றை அவர்தம் கனவில் தோற்றுவித்து, அவர்கட்கு இன்பத்தையோ, துன்பத்தையோ உண்டாக்குகிறான் என்பது எம்பெருமானார் கருத்து என்பதை முன்னரே கூறியுள்ளோம். இக்கனவும் காதலருக்குப் புருஷகாரமாய் இருந்து நலமிழைக்கிறது. இவ்விஷயத்

1. நாய்ச்சியார் திருமொழி, 10 : 10.
2. திருவாய்மொழி, 3 : 3 : 1.

தில் சீதாபிராட்டியாரைவிட ஆண்டாளே வெற்றி பெற்றுள்ளார்.

பிராட்டியார் பெருமானைப் பிரிந்திருந்தபோது' அவர், "கனவிலேனும் நம் காதலரைக் காணும் நலங் கிடைக்கின், சிறிது மன அமைதியுறலாம்," எனக் கருதினர். ஆனால், அக்கனவும் அவருக்கு அப் பெருமானைக் கொணர்ந்து காட்டிற்றிலது. ஆதலின் பிராட்டியார், "என் அவஸ்தை அறிந்து முகங் காட்டாமைக்கு அவரே அன்றிக்கே இதுவும் (இக் கனவும்) என்னை நலிய வேணுமோ!" என வருந் தினரென, **பெரியவாச்சான்பிள்ளை** இயம்புகிருர். ஆண்டாளோ, கண்ணன் தம்முன் தோன்றி விதி முறையின்படி தம்மை மணந்துகொண்டதாய்க் கனவு கண்டு, அளவற்ற ஆனந்தமுற்றனர். இக் கனவு, கோதையாரின் பிரிவு என்னும் அனலை அணைப்பதற்கு ஒரு கருவியாயிருந்து, அவ்வமயம் சிறிது ஆறுதலை உண்டாக்கிற்று. உறக்க நிலையி லேனும் இருவரும் சேர்ந்து இன்புறுதற்கு இக்கனவு காரணமாயிருந்தமையின், இதையும் புருஷகாரபூதை எனப் பகரலாமன்றோ! இதிலும் பிராட்டியாரைவிட ஆண்டாளே சீர்மை வாய்ந்தவர் எனக் கூறலாம்.

## பாவனை

### 1. பாவனையின் பண்பு:

பாவனை என்பதற்குச் சிந்தனையின் முதிர்ச்சி என்பது பொருள். இச்சிந்தனையின் முதிர்ச்சியே மற்றொருவர் செய்யும் செயலையும் பேசும் பேச்சையும் அங்ஙனமே அநுகரிக்க இடந்தருகின்றது. இம்முறையில் பாவனை அநுகாரம் என்னும் சொற்கள் ஒரே பொருளைத் தருவனவாகும்.

பாவனையின் இயல்பு, எப்போதும் யாவருக்கும் நன்மையே தருகின்றதென்பதற்கில்லை; சில போது ஒவ்வொருவருக்குத் தீமையும் பயப்பதுண்டு. இது கூட்டுறவைப் பொறுத்துள்ளது. இதனுற்றான் அவ்வையார், "சேரிடமறிந்து சேர்," என்னும் அரிய சொற்றொடரை இளைஞர் கற்பதற்கென அமைத்து வைத்தார். உயரிய ஞானமுடைய அறிஞரும், ஒருவரை ஊன்றி நோக்கியே அவரோடு பழகத் தொடங்குகின்றனர். பல வகையிலும் ஒருவருடைய குணஞ்செயல்களை ஆராய்ந்து நட்புக் கொள்ளாதவனுக்கு அந்நட்பு முடிவில் அவன் இறப்பதற்குக் காரணமான துன்பத்தினைக் கொடுக்குமென்பது ஆன்றோர் வாக்கன்றோ![1] தம் ஆய்விஞல் நல்லவர் எனத் தெளிந்தபின்பு அவரோடு பழகுங்கால், அவர் தம் செயல் சொற்களைத் தாம் பின்பற்றுவதனுல் குற்றமேற்படுதற்கு வழியில்லை. இவற்றையே சான்றோர் போற்றுகின்றனர். ஆயினும், செயலும்

---

1. "ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்." —திருக்குறள்

சொற்களும் நல்லனவாயிருப்பினும், அவற்றை ஒரு வர் போன்று மற்றொருவர் பாவித்தல் என்பது யாவருக்கும் அமைதல் இல்லை. அவ்வியல்புள்ள சிலருக்கே அது பொருந்துகின்றது. அத்தகைய செயலில் யாவருக்குமே சுவை உண்டாதல் அருமையன்றோ!

காரியங்களை ஒருவர் செயலால் செய்வதற்கும், பாவனையால் செய்வதற்கும் மிக்க வேறுபாடுண்டு. செயலால் செய்வதற்கு அத்துணை மனத்தொடர்பு வேண்டற்பாலதன்று. பாவனையால் இயற்றுதற்கோ, ஊன்றிய எண்ணமும், மனத்தின் ஒருமைப்பாடும், அது பயன் அளிக்கும் என்னும் நம்பிக்கையும், இறுதி மட்டும் அதை விடாது பற்றும் உறுதியும் வேண்டும்.

சிலர், ஒருவரைப் போன்று பேசுதல் நடத்தல் முதலியவற்றை விளையாட்டாக மேற்கொள்வர். இப்பாவனை மேற்போக்கில் ஒருவரிடம் சின்னாட்கள் அமையுமேயன்றி, ஆழப்படிந்து நீடித்தற்கு வழியில்லை. இதனால் நன்மையோ தீமையோ விளைதலும் இல்லை.

இப்பாவனையைச் சிலர் போலி நடிப்பு எனவுங் கூறுவர். அங்ஙனமும் உண்டு. அரிச்சந்திரன் நாடகத்தில், தன்னைச் சந்திரமதியைப் போன்று பாவித்த ஒருத்தி, இறந்த மகனைக் கையில் ஏந்தி கண்டவர் கலங்குமாறு வாய்விட்டரற்றுகின்றாள். இஃது ஊன்றிய பாவனை ஆகுமா? ஆகாது. ஏன்? நடிக்கும் போதே பெரும்பான்மையும், அவள் தன்னைச் சந்திரமதியினும் வேறுபட்டவள் என்றே நினைத்திருக்கின்

ருள். ஆயினும், இ∴தும் ஒரு வகையான பாவனை யையே சாரும். இது நிற்க.

ஊன்றிய பாவனையால் பல அரிய செயல்கள் நிகழ்கின்றன. ஒருவனை நல்ல பாம்பு தீண்டுகிறது. அவன் நஞ்சு தலைக்கேறி மதி மயங்கிக்கிடக்கிருன். கருட மந்திரங்கற்ற ஒருவன் அவனுக்குச் சிகிச்சை செய்யத் தொடங்குங்கால், அவன் தன்னைக் கருடனுகவே முற்றும் பாவிக்கிருன். அப்பாவனையால் அவனிடம் அப்பறவைக்குள்ள உடற்குணங்கள் உயிர்க்குணங்கள் யாவும் அமைகின்றன. கருடன் நிழல் படினும் அரவம் அழியுமன்றே? அம்முறையில் அக்கருடமந்திரமும், அம்மந்திரத்தை உச்சரிக்கும் மனிதனின் கருடத்தன்மையும் அந்நஞ்சை நீக்கி அவனைத் தெளிவிக்கின்றன என்பது சிலர் கண்ட காட்சி. இதனுல், ஆழ்ந்த பாவனை செய்யும் அற்புதத்தை அறிகின்றேமல்லவா?

இப்பாவனை இத்தகைய நலத்தையேயன்றிக் கெடுதியையும் விளைவிப்பதுண்டு. சிலர், தமக்கு ஏதேனும் சிறு நோய் வரினும், தம் மனக்கலக்கத் தால், "பெரிய நோய் நமக்கு வந்துவிட்டது. இது சிறு சிறு சிகிச்சையால் நீங்காது," என்னும் எண் ணம் கொள்கின்றனர். ஆதலின், எச்சிகிச்சையும் அவர்களிடம் பயனற்றதாய், அவர்கள் எண்ணத்தி னுலேயே அப்பிணி நாளுக்கு நாள் வளர்ந்து, பெரிய நோய் ஆய்விடுதலும் உண்டு. இது பாவனையினுல் ஏற்படும் தீங்கே அன்றே? இவை யாவும் பாவனை யின் பண்புகளாகும்.

## 2. யார் யார் பாவனையை மேற்கொண்டனர்?

முன்னர்க் குறிப்பிட்டவாறு சிலரிடம் போலி யாகவும் இப்பாவனை உருக்கொள்ளுகின்றது. ஒரு கால் சூர்ப்பணகை, இராமபிரான் வனப்பில் ஈடு பட்டு, அப்பெருமானை நாயகனுகப் பெற ஆவலுற்ற வளாய், கண்டவர் மனத்தைக்கவரும் அழகியமங்கை வடிவங்கொண்டு அவரிடம் வந்ததும், பிராட்டியைத் தனக்குரிமையாக்கிக்கொள்ளக் கருதிய இலங்கைக் கோன் சன்னியாசி வேடங்கொண்டு அவரிடம் போந் ததும் பொய் நடிப்புகளல்லவா? இந்நடிப்புப் பிறரை வஞ்சித்தற்கே என்பது வெள்ளிடை மலை. இதனுல் ஏற்படும் தீமைகள் பலவாகும். அஃதன்றியும், அப் போலிச் செயலை மேற்கொண்டவர்கட்கு இருமை யினும் துன்பமே விளைதல் திண்ணம். இதற்கு இங்குக் குறித்த இவ்விரு அரக்கர்களே தக்க சான்ருவார்கள். இதை நன்கறிந்திருந்தும் உலகில் போலி நடிப்பை மேற்கொள்ளுகின்றவர்களும், அதை நம்பி மயங்கித் தம் பொருளையும், நற்பண்பு களையும், புகழையும் இழக்கின்றவர்களும் எத்தனை பேர்! இதைக் குறித்த விரிவு இங்கு வேண்டற்பால தன்று.

இனி ஆழ்வார்கள் பாவனையைக் காண்பாம்: ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்மக்களாவே தோன்றி ஞர்கள். ஆண் மக்களுக்குக்கிருக்க வேண்டிய இலக் கணங்கள் யாவும் அவர்களிடம் அமைந்திருந்தன. அந்நாளிலும் இந்நாளிலும் யாவராலும் அவர்கள் ஆடவர்களென்றே கருதப்படுகின்ருர்கள். அறிஞ ரும், ஆழ்வார்கள் அருளிச் செய்தார்கள் என ஆண்

பாலாகவைத்தே இயம்புவதைக் காண்கின்றோம். உலகில் பிறந்து வளர்ந்து வாழும் மற்ற ஆண்மக்களைப் போன்றே அவர்களும் பிறந்து வளர்ந்தார்கள்; மற்றவரோடு கூட்டுறவு கொண்டார்கள்; இன்ப துன்பங்களில் உழன்றார்கள். ஆயினும், அவர்கள் மற்றவர்களிலும் வேறுபட்ட நிலையிலிருந்தற்குக் காரணம் யாது? அவர்களிடம் ததும்பி வழிந்த இறை அன்பேயாகும். இவ்விறை அன்பு அவர்களிடம் மட்டும் உருக்கொண்டதற்கு அப்பரமனுடைய இன்னருளையன்றி வேறெதனைக் காரணமாக இயம்ப முடியும்! அவன் அருள் வெள்ளம் அவர்களிடம் பெருக்கெடுத்துப்பாய்கின்றது! அவன் கண்ணோக்கு முற்றும் அவர்கள்மேல் பதிகின்றது! அவர்கள் உண்மை ஞானம் பெற அவன் சிந்தை கருதுகின்றது! இம்முறையில் அவர்கள் எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப் பெற்று உயரிய ஞானமும் பத்தியும் வாய்ந்து திகழ்கின்றார்கள்.

பத்தி பெருகப்பெருக ஆற்றாமை மீதூர்ந்து அவர்கட்குப் பெண் நிலையைப் பிறப்பிக்கின்றது. அவ்வமயம் அவர்கள் தங்களை நாயகியாகவும், எம்பெருமானை நாயகனாகவும் பாவிக்கின்றார்கள். அப்பாவனையினால் எம்பெருமான் அவர்கள் மனக்கண்ணிற்குத் தோற்றமளிக்கிறான். உடனே அவனைத் தங்கள் புற உறுப்புகளால் தழுவிக் கொள்ள விழைகின்றார்கள். அது கூடாமையின், அவனை அடைதற்பொருட்டுப் பறவைகள் முதலியவற்றைத் தூது விடுதல், கரை கடந்த காதலர் கைக்கொள்ளும் மடலூர்வதாய் எம்

பெருமானை அச்சுறுத்தல் முதலியவற்றை மேற்கொள்ளுகின்றார்கள்.

தாங்கள் பெண் என்னும் எண்ணம் எப்போதெல்லாம், அவர்கட்குண்டாகிறதோ, அப்போதெல்லாம் அவர்கள் பேசும் பேச்சுகளும், செய்யும் செயல்களும் மிக்க வியப்பிற்கிடமானவைகளே. ஒரு சின்னஞ்சிறுபெண், ஒரு பதுமையைத் தன் குழந்தையாகப் பாவிக்குங்கால், தாயார், தன் தம்பி தங்கைகளுக்கு என்னென்ன செய்கின்றனரோ அங்ஙனமே மருந்து புகட்டல், ஏணையிலிட்டுத் தாலாட்டுப் பாடுதல், பாலுண்பித்தல், முழுக்காட்டல் முதலியவற்றைச் செய்வது மட்டுமேயல்லாமல், "என் குழந்தை வயிற்று வலி என அழுகிறது! தூங்கமாட்டேன் என்கிறது! எத்தனை நேரம் தொட்டிலிலிட்டு ஆட்டுவேன்!" என்றெல்லாம் கூறி வருந்தும். இப்போக்குகளை நோக்குங்கால், 'இக்குழந்தை இவற்றை உண்மையாகவே சொல்லுகிறதா, அன்றி விளையாட்டாகப் பாவனை செய்கிறதா!' என்பதை அறிய முடியாமல் மயங்க நேரிடும், அதைப்போன்றே ஆழ்வார்களுடைய செயல்கள் சிலவற்றுள்ளும் சிலருக்கு ஐயம் தோன்றும். ஆனல், அங்ஙனம் தோன்றற்கிடமில்லை. ஏன்? அவ்வுயரிய இறையன்பானது அவர்கட்குப் பெண்மையைப் பிறப்பித்துவிடுகிறது. அவர்கள் பெண்ணே ஆய்விடுகிருர்கள் எனினும், குறையில்லை. அங்ஙனமாயின், அவர்கட்குத் தாம் பெண் என்னும் எண்ணம் தவிர ஆண் என்னும் எண்ணம் தோன்ற இடமேது? அஃதன்றியும், பெண்ணிற்குள்ள அவயவக் கூறுபாடுகளும் தங்களிடம்

அமைந்திருப்பதாயல்லவா அவர்களுடைய உணர்ச்சி உள்ளது! அதை வாய்விட்டும் சொல்லுகின்றார்களே! அதில் அச்சமோ, தயக்கமோ அவர்கட்கேது! உண்மையைப் பகருவதில் பயமேது! இந்நிலைமை அவ்வப்போது மற்ற ஆழ்வார்களுக்கும் ஏற்படினும், இதில் பெரிதும் ஊன்றி நின்றவர் திருமங்கையாழ்வாரும் நம்மாழ்வாருமாவர்.

முன்னர்க் குறித்தவண்ணமே திருமங்கையாழ்வார், தம் புறக்கரணங்களால், எம்பெருமானைத் தழுவிக்கொள்ளக் கருதியபோது அது வாய்க்கப் பெறுமையின், பெண்மையை அடைந்து ஆற்றாமை மீதூர மடலெடுக்க ஒருப்படுகின்றார். இம்முறையில் **'சிறிய திருமடல், பெரிய திருமடல்'** என மடலூர்தலைப் பற்றிப் பேசும் இரு நூல்கள் உருக்கொண்டுள்ளன. அவற்றுள் ஆழ்வார் தம் பெண்மையை வெளிப்படுத்தும் சொற்றொடர்களை நோக்குதல் வேண்டும் :

"ஏரார் இளமுலையீர் என்றனக் குற்றதுதான்
காரார் குழலெடுத்துக் கட்டிக் கதிர்முலையை
வாராக வீக்கி மணிமே கலைதிருத்தி
ஆரா ரயில்வேற்கண் அஞ்சனத்தின் நீறணிந்து
சீரார் செழும்பந்து கொண்டடியா நின்றேன்."[1]

"என்னுடைய பெண்மையும் என்நலனும் மென்முலையும்
மன்னு மலர்மங்கை மைந்தன் கணபுரத்துப்
பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயாவேல்
என்னிவைதான் வாளா எனக்கே பொறையாகி"[2]

---

1. சிறிய திருமடல், கண்ணி, 9, 10, 11.
2. பெரிய திருமடல், கண்ணி, 89, 92.

இத்தகைய உணர்ச்சி ஒருவருக்கு எளிதில் அமையக் கூடியதோ! தாம் பெண் என்னும் எண்ணம் ஒருவர் நெஞ்சில் எத்துணை ஊன்றியிருப்பின், இத் தன்மைகள் அவரிடம் குடி புகும்! இது பாவனையின் ஊற்றமேயன்றோ?

நம்மாழ்வார், ஆழ்வார்கள் பதின்மருள் ஒருவரே யாயினும், அவருடைய வாழ்க்கை மற்றவரினும் வேறுபட்டதாகவே நிகழ்ந்தது. அவர் மற்றவரைப் போன்று உண்டு உடுத்துக் காலங்கழித்தவரல்லர்; இவ்வுலகில் தோன்றியதிலிருந்தே உண்ணுஞ் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனென்றே வாழ்ந்தவர். ஆதலின், ஓர் ஆசாரியரை அடைந்து ஞானம் பெறுதலோ, திருப்பதிதோறும் போந்து, ஆங்காங்கே அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்களின் திவ்விய மங்கள விக்கிரகத்தின் (திருமேனி) வனப்பையும், அந்தந்த இடங்களின் அமைப்பு, சீர்மை, செழுமை முதலியவற்றையும் தம் புறக்கண்களால் கண்டு மங்களாசாசனஞ் செய்தலோ அவருக்கு நேர்ந்தில; முதல் பாசுரம் தொடங்கி 'முனியே நான்முகனே' என்னும் இறுதிப் பாசுரம் வரை நிகழ்ந்தன யாவும், அவருக்கு மனத்தொடர்புற்ற நுகர்ச்சியே (மானசானுபவமே). அவர் பிரபந்தங்களில் தாய், தோழி, தலைவி முதலியவர்களாய் மாறுதல், பறவைகளைத் தூது விடல், மடலேறுவதாய்ப் பாரித்தல் முதலியனவும் அம்முறையிலேயே நிகழ்ந்தன. இதை நுணுகி நோக்குங்கால், தாம் ஒரு திவ்விய திருப்பதியிலோ, நெய்தல் நிலத்திலோ

இருத்தலாகப் பாவிக்கும் போதுதானே, ஆங் காங்கே அந்தந்தச் செயல்கள் நிகழ்கின்றன? இன் றேல், அந்தந்தத் திருப்பதியையும், அங்குள்ள பரம னையும் தாம் வாயார வாழ்த்துதல், பறவைகளைத் தூது விடுதல், முதலியன யாங்ஙனம் இயலும்! ஆதலின், இவற்றையும் பாவனையில் சேர்ப்பதில் குற்றமிலது.

இனி, இவர் தம் பெண்மையை வெளிப் படுத்தும் முறையைக் காண்பாம் :

சடகோபர் எம்பெருமானை இப்போதே அடைய வேண்டும் என்னும் ஆர்வப் பெருக்கினால், பெருமிடற் றுடன் கூக்குரலிட்டுப் பரமனை அழைக்கிறார். யானை யின் அழைப்பையும் பொறுது விரைந்துவந்து அருள் புரிந்தவன் அவர் அழைப்பிற்குச் செவி சாய்த்திலன். இஃது அவரைப் பெருந்துன்பத்திலாழ்த்திற்று. "உரியவனும், தூயவனும், வினைகளைத் துடைப் பவனுமாகிய எம்பெருமான், 'நமக்கு இப்பொருள் வேண்டா' என்றிருப்பின், எனக்கோ இது வேண்டு வது! ஆதலின், அவன் விரும்பாத நானும் என் னுடைமையும் எனக்கும் வேண்டுவதில்லை," எனப் பேசப்புகுந்தவர், "மேன்மேலும் வளரும் ஒளி பொருந்திய திருவாழியையுடையவனும், தேவர் போற்றும் புகழ் வாய்ந்தவனும், வலம்புரிசங்கம் தாங்கியவனுமான எம்பெருமான் விரும்பாத வரிகள் வாய்ந்த வளையல்களினாலும், மேகலையாலும் எனக் கென்ன பயனுண்டு?" எனப் பெண்மையில் அணிந்த அணிகளைக் குறிப்பிடுகிறார்.[1] இங்கு,

1. திருவாய்மொழி, 4 : 8 : 8, 9.

"காதலர் நயந்தது யாமுடை நயப்பே;
காதலர் வேண்டின் யாம்வேண் டினமே;
காதலர் எமைவேண் டாரெனில் யாமும்
வேண்டல மினியே!.

எனக் காதலியின் உறுதியைத் தெரிவிக்கும் சங்கச் செய்யுள் நினைவிற்கு வருகின்றது.

இவர் தம் தோழியினிடம், "தோழி, என் நெஞ்சம் தென்திருப்பேரையில் வீற்றிருக்கும் நம் தலைவன்பால் அன்பு கொண்டு, ஒரு பெண்ணிற்கு இயற்கையாய் அமைந்திருக்க வேண்டிய நாணத்தையும், மன அடக்கத்தையும், யாவரும் போற்றற்குரிய பெண்மையையும் இழந்துவிட்டது!"[1] என்கிருர்.

இவரும் திருமங்கையாழ்வாரைப் போன்றே, தாம் பெண்ணிற்குரிய அங்கங்களைப் பெற்றிருத்தலையும், அவற்ருல் கலவியில் தமக்கு ஏற்படும் இன்ப உணர்ச்சிகளையும் மிக நுட்பமாகத் தெரிவிக்கின்ருர்.[2] இது நிற்க.

ஆழ்வார், எம்பெருமானைப் பிரிந்த துன்பம் தம்மைப் பெரிதும் வருத்த அவ்வாற்ருமையினுல் அவனைப் போல நடித்தும், அவன் இயற்றிய அரியதும், தெய்வத்தன்மை வாய்ந்ததுமான காரியங்களைத் தாம் இயற்றியதாய்ச் சொல்லியும் [3]சிறிது தேறிக் காலங்கழிக்கப் பார்க்கிருர். இதுதான் பாவித்தல் (அநுகரித்தல்) எனப்படும். இவர் போக்கைக் கண்ட

1—2. திருவாய்மொழி, 7: 3: 3, 5; 9: 9: 3; 10: 3: 2.
3. திருவாய்மொழி, 5: 6: 1.

தாயோ, "பகவான் இவள் மாட்டு ஆவேசித்துள்ளான்," எனக் கருதுகிருள்.

3. ஆயர் மகளிரின் பாவனை (அநுகாரம்):

கண்ணனிடம் உண்மைக் காதல் கொண்ட ஆயர் மகளிர் ஆர்வத்தை முற்றுப்பெறச் செய்யக் கருதிய கண்ணன், ஒருகால் தன் தெய்வத் தன்மையால் பல உருவங்களைத் தாங்கி ஒவ்வொரு மங்கைக்கும் நடுவில் ஒவ்வொரு கண்ணனுய் இருந்து ஆடும் ஒரு நடனத்தை (குரவைக் கூத்தை) மேற்கொண்டான். அவர்களுள் ஒவ்வொரு மங்கையும், "கண்ணன் நம் கையை மட்டுந்தான் பற்றி நடிக்கிருன்," என்னும் எண்ணத்திஞல் அளப்பிலா ஆனந்தமடைந்தனள். ஒவ்வொரு சமயம் அளவு கடந்த ஆனந்தமும் ஒருவருக்கு முடிவை உண்டாக்கக் கூடுமாதலின், அக்களிப்பைக் குறைத்தற்பொருட்டுக் கண்ணன் மறைந்தான். அப்பிரிவு அவர்களைப் பெரிதும் கலக்கத்திற்குள்ளாக்கியது. அவர்கள் எங்கும் தேடியும் அவனைக் கண்டிலர். அவர்கட்கு ஆற்ருமை விஞ்சியது அதற்குப் போக்கு வீடாகக் கண்ணன் செய்த செயல்களைத் தாம் செய்வதாகப் பாவிக்கத் தொடங்கினர். ஒருத்தி, "யான் கண்ணன், யான் அவனைப் போன்றே அழகாக நடக்கப்போகின்றேன்; இந்நடையை நீங்கள் காணுங்கள்!" என்ருள். இன்னெருத்தி, "கண்ணனுகியிருக்கிற என்னுடைய அழகான பாட்டைக் கேளுங்கள்!" எனப் பாடத்தொடங்கினுள். மற்ருெருத்தி, வேருெரு ஆயர்மகளைப் பார்த்து, "ஓ கொடிய காளியனே, இங்கு

நில்லு! யான் கண்ணன்!" என்றனள். அங்ஙனமே அவள் காளியனைப் போன்று கிடக்க, தன்னைக் கண்ணனெனப் பாவித்தவள், அவள் மேலேறி நடிக்கப் புகுந்தவள். பாவனையின் மெய்ப்பாட்டால், அவனைக் காளியனென்றே நினைத்துச் சிறிதும் கருணையின்றித் துகைத்தனள். மிதிபட்டவளோ, கண்ணனாகத் தன்னைப் பாவித்த பெண்ணின் கால் பொடி தன்மீது படுவதாயின், தான் பகைவனான காளியனாய் இருந்து மிதிபடினும் குற்றமில்லை எனக் கருதினாள். இதனால் அவ்வாயர் மகளிர் கண்ணன் மாட்டுக் கொண்ட காதலும், அவர்கள் பாவனையில் உண்டான மெய்ப்பாடும் நன்கு புலப்படுகின்றன அல்லவா?

4. ஆண்டாளின் பாவனை:

ஆண்டாளுக்கு இரு நூல்களிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் யாவும் பாவனைகளே (அநுகாரங்களே) ஆகும். இவரிடம் அமைந்த இத்தகைய ஊன்றிய பாவனை வேறொருவருக்கும் உண்டாயிற்றில்லை. "ஆயினும், நோன்பு நோற்றல் முதலியவற்றை நோக்கின், செயலில் நிகழ்ந்தனவாகக் காணப்படுகின்றனவே யல்லாமல், பாவனை என நினைத்ததற்குச் சிறிதும் இடந் தந்திலதே!" எனக் கருதலாம். இதன் உண்மை, பாசுரங்களை ஊன்றி நோக்குவார்க்குத் தெற்றெனப் புலப்படும்.

இன்னும், ஆண்டாள் தம் தந்தையாருடன் இருந்து மலர் பறித்தல், மாலை தொடுத்தல் முதலிய தொண்டுகளைப் புரிந்தாரல்லரா? மலரிடம் மென்மை, அழகு, மணம், நிறம் முதலியன இருத்தல் போன்று, ஆன்மாவினிடமும் ஞானம், ஆனந்தம், சேஷத்துவம்

பாரதந்திரியம் ஆகியன இருக்கின்றன. இம்முறையில் இவர் மலரை இடுவது வாயிலாகத் தம் ஆன்மாவையே இறைவனுக்கு உரிமையாக்கினர் எனக் கொள்ளுதல் வேண்டும். ஆன்மாவை மலர் எனக் கூறும் ஒரு வழக்கும் உண்டு.

இம்மாலைகளை இவர் சூட்டிக்கொள்ளுங்கால், தமக்கு அழகாயுள்ளதா என்பதை நோக்கினரில்லை. "நீர் நுமதென்னும் வேர் முதல் மாய்த்து" என்னும் ஆழ்வார் வாக்கிற்கேற்ப, 'யான் எனதென்னும்' அகங்கார மமகாரங்களை முற்றும் ஒழித்து நின்ற ஆண்டாள், அழிந்துபோகும் சரீரத்தைப் பற்றியா சிந்தித்திருப்பார்? அழியாத ஆன்மாவைப் பற்றித் தானே இவர் நினைந்திருப்பார்? அம்முறையில் அம் மாலைகளைத் தம் குழலிற் சூட்டியிருப்பினும், இவருடைய எண்ணம் உடலோடு நில்லாமல், ஆன்மா வரையும் சென்றிருக்கிறதென்பது தெரியவில்லையா? ஆகவே, அம்மலர் மாலைகளைத் தம் ஆன்மாவிற்குச் சூட்டித் தம் ஆன்மாவைப் பரமான்மாவோடு பொருத்திப் பார்த்தனர் எனக் கொள்ள வேண்டியுள்ளது. இஃது எத்துணை ஊன்றிய பாவனை!

இவரைப் போன்றே தொண்டரடிப் பொடியாழ்வாரும் பெரியாழ்வாரும் எம்பெருமானுக்குப் பூமாலைகளைச் சூட்டியிருப்பினும், அவர்கள் நம் அன்னையாரைப் போன்று இப்பாவங்களுடன் தாம் சூட்டிக்கொண்டு பின்னர் எம்பெருமானுக்கு ஈயும் அத்துணை உரிமையும் அன்பும் பெற்றிருந்தார்கள் இல்லை. ஆதலின், இச்செயலில் அவர்களைக்காட்டிலும் இவர் தலைமை வாய்ந்தவர் என அறிகின்றோம்.

கோதையார் பரமனுக்குப் பூமாலையை எத் தகைய உணர்ச்சியுடன் சூடிக்கொடுத்தனரோ, அத் தகைய உணர்ச்சியுடனேயே பாமாலையையும் பாடிக் கொடுத்தார் எனக் கூறலாம். யாங்ஙனம்? முதலில் எம்பெருமானுடைய கலியாண குணங்கள், தெய்வத் தன்மை, அற்புதச் செயல்கள் முதலியன இவர் மனத் தில் உதிக்கின்றன. அவற்றை இவர் சிந்தை, சிந் திக்கின்றது. இவரது கூர்ந்த அறிவு, இன்னதை இன்ன விதமாகவும், இன்ன சொற்களாலும் வெளிப் படுத்த வேண்டுமெனத் தீர்மானிக்கின்றது. இறுதி யில், அவற்றை இவர் நா அழகிய பாசுரங்களால் வெளிப்படுத்துகின்றது. இக்காரியங்களை ஆன்மத் தொடர்பின்றி ஒருவரால் இயற்ற இயலுமா? இயலா தென்பது உறுதி. இம்முறையில் இவற்றிற்கு ஆன் மாவே அடிகோலி என்பதும், ஆன்ம வன்மையி னாலேயே இக்காரியங்கள் நிகழ்கின்றன என்பதும் தெரிகின்றன அல்லவா?

இங்கு, ஒரு பொருளைப் பார்த்தல், இச்சித்தல், பெற முயலல், அதைப் பெற்று இன்பந்துய்த்தல் என்பவற்றை உதாரணமாகக் கொள்ளலாம். ஒருவ ரால் நிகழும் காரியத்தில் இறுதியில் ஏற்படும் இன் பத்தைத் துய்க்கும் பொருள் எது? ஆன்மாதானே? அங்ஙனமே பரமனைப்பற்றிப் பாடும் பாடல்களினால் ஏற்படும் இன்பத்தையும் ஆன்மாவே அநுபவிக் கின்றது என்னில் குறையாது? இதுதானே உண்மை? இந்நிலையில் பகவானைப் பற்றிய அரிய கருத்துகள் முதலில் ஆன்மாவிற்பதிந்து அதை அழகுபடுத்தித் தானே, பின்பு பரமான்மாவில் பதிந்து அதை அழகு

படுத்துகின்றன? ஆதலின், பாமாலையையும் ஆண்டாள் தம் ஆன்மாவிற்குச் சூட்டி அழகுபார்த்து, பின்னர் எம்பெருமானுக்குச் சூட்டி அழகு பார்த்தனர் என்பதில் குற்றம் என்ன? இப்பாமாலையினால் பாடுதல் கேட்டல் முதலியவற்றால் புறமும், அந்தக் கரணங்களின் தொடர்பு, ஆன்மாவின் பதிவு முதலியவற்றால் அகமுந் தூய்மை அடைகின்றன.

மற்ற இரு ஆழ்வார்களும் தங்கள் பாமாலையை இம்முறையிலே தானே அருளியிருத்தல் வேண்டும்? அங்ஙனமாயின், அவர்களும் பாமாலையைச் சூடிக் கொடுத்தவர்தாமே? இதில் ஆண்டாளுக்கு மட்டும் ஏற்றம் சொல்லுதல் யாங்ஙனம்?

அவர்கள் பரமனுக்குப் பூமாலையைச் சூட்டித் தாராதது போன்றே, பாமாலையையும் சூட்டித் தந்தார்களில்லை என்பது உறுதி. இதைச் சிறிது காண்பாம்: ஈசுவரனையும் ஆன்மாவையும் நோக்குங்கால், ஆன்மா பெண்மை வாய்ந்தது; அதனிடம் பெண்மைக் குணங்கள் அமைந்திருக்கின்றன என்பதைச் சாத்திரங்களால் அறிந்திருப்பினும், அவர்களுக்குப் பெண்ணாகப் பிறக்கும் வாய்ப்போ, தங்களை எப்போதும் பெண்ணாகவே பாவிக்கும் தவமோ கைகூடிற்றில்லை. இம்முறையில் அவர்கள் யாங்ஙனம் ஆண்டாளைப்போன்று பாமாலைகளைப் பெண்மை வாய்ந்த தம் ஆன்மாவிற்குச் சூட்டிக் கொடுத்திருக்க முடியும்! ஆதலின், இதிலும் நாய்ச்சியார் பாவனை தலைமையுற்றதெனக் கொள்க.

## 5. பாவனையில் (அநுகாரத்தில்) ஆழ்வாருக்கும் ஆண்டாளுக்கும் உள்ள வேறுபாடு :

ஆழ்வார்கள் பதின்மராயிருப்பினும், அவர்களுள் சிறந்தவரும், அவர்கட்கு உயிர் நிலையில் உள்ளவருமான நம்மாழ்வாரை மட்டும் இங்கு ஒப்பு நோக்கிக் காணலாம். இவ்வொப்புமை மற்றைய ஆழ்வார்களுக்கும் பொருந்தும்.

ஆழ்வார் தம்மைப் பரமனாய்ப் பாவித்தார். சிற்றறிவும் சிறு தொழிலுமுடைய ஒரு சீவான்மா, பேரறிவும் பெருஞ்செயலும் வாய்ந்த பரமான்மாவாய் அனுகரிப்பின், அவனே ஆதலோ, அவனியற்றும் காரியங்களைப் புரிதலோ, இச்சீவான்மாவிற்கு இயலுமோ? இயலாதென்பது ஒருதலை. இஃது, ஆழ்வார் பின் பகர்ந்த சில திருவாய்மொழிகளில், அவர் ஆற்றாமை பின்னும் பொங்கி நின்ற நிலையைக் காண்பவருக்கு நன்கு புலனாகும். ஆண்டாளோ, தம்மையும் தம் தோழிகளையும் பரமன் தொண்டர்களாகிய ஆயர் மகளிராய்ப் பாவித்து, அவர்கள் இயற்றிய மார்கழி நோன்பைத் தம் மனத்தினால் இயற்றுவதாய்க் குறிக்கொண்டார். அச்சிந்தனையின் ஊன்றுதலால், ஆயர்பாடி அமைப்புகள் யாவும் வில்லிபுத்தூரில் காட்சியளித்தன. அவ்விடைமகளிரின் நடை, உடை, பேச்சு, தயிர் வெண்ணெய்களினலாய ஒரு வகை மணம் யாவும் இவரிடம் அமைந்துவிட்டன. இந் நோன்பினால் இவர் உடனே கண்ணனைப் பெற்று இன்பந்துய்த்தனரல்லரா? இதனால் நம் அன்னையாருடைய சிந்தனையின் முதிர்ச்சி எத்துணை ஆற்றல் வாய்ந்ததாய்ப் பயனளித்ததென்பதை அறிக.

இங்கு, "இவள் தான் ப்ராஹ்மணியாயிருந்து வைத்து, அவர்களைப் போலே அநுகரிக்கும்படி எங்ஙனேயென்னில், யாகத்திலே தீக்ஷித்தவர்கள், தேவதத்தாதி நாமங்களைத் தவிர்ந்து, யாகம் முடியுமளவும், 'யஜமானன்' என்றும், 'அத்வர்யு' என்றும் 'ஹோதா' என்றும் இத்யாதி நாமங்களேயாகிருப் போலே, இவளும், ஸ்ரீவில்லிபுத்தூர் திருவாய்ப்பாடியாகவும், அங்குள்ள பெண்கள் இடைப் பெண்களாகவும், தானும் அவர்களிலே ஒருத்தியாகவும், வடபெருங்கோவில் ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையாகவும், உள்ளே நிற்கிறவன் க்ருஷ்ணனாகவும் அநுஸந்தித்து, தன்னுடைய திருவுள்ளம் திருவாய்ப்பாடியிலே குடிபோய் **பாவநா ப்ரகர்ஷத்தாலே** அநுகாரம் முற்றி, அவை தானேயாய், இடை முடியும் இடைப் பேச்சும் முடை நாற்றமுமாய்விட்டது," எனப் பகரும் பெரியவாச்சான்பிள்ளை வாக்கை நோக்குக.

ஆழ்வார் அநுகாரம் நூலளவில் நிற்பது; தம்மாலோ பிறராலோ செய்ய முடியாதது; தம் காலத்தில் உள்ளவர்க்கோ பிற்காலத்தில் உள்ளவர்க்கோ பயனளியாதது. ஆண்டாள் அநுகாரமோ, நூலில் அமைந்து நிற்பதல்லாமல், தம்மாலும் பிறராலும் செய்து தலைகட்டக்கூடியது; எக்காலத்தவர்க்கும் நன்மையளிக்கத்தக்கது.

ஆழ்வார் தாய் நிலையை அடைந்து தம் அநுகாரத்தைத் தெரிவிக்கிறார். ஆண்டாளோ, தாமான நிலையில் இருந்தே அதை வெளிப்படுத்துகிறார்.

ஆழ்வார்தாம் ஒருவரே இருந்து அநுகரிக்கிறார். ஆண்டாளோ, தம்மினும் தாழ்நிலையில் உள்ள பெண்டிர் பலரையும் கூட்டிக்கொண்டு அநுகரிக்கிறார்.

ஆழ்வாருக்குத் தாம் பாடிய நான்கு நூல்களுள் திருவாய்மொழியில் ஐந்தாம் பத்து ஆறாம் திருமொழியில் மட்டுமே இவ்வநுகாரம் தலைக்கொண்டது. ஆண்டாளுக்கோ, தொண்டர் போக்கையே தம் போக்காகக் கொள்ள வேண்டுமென்னும் உறுதியினால் தொடக்கத்திலிருந்தே இவ்வநுகாரம் இடங்கொண்டது. முன்னர் இயம்பியவாறு இவர் நூல்கள் இரண்டும் அநுகார நூல்கள்தாமே !

ஆழ்வார் அநுகாரம், ஆழ்வார் தம்மை ஈசுவரனாகவே பாவிக்கும் விக்கிரக ஐக்கியம் போலத் தோன்றுகின்றமையின், அத்வைதிகளும், "இது விக்கிரக ஐக்கியந்தான்; ஆழ்வார் எம் கொள்கையுடையவரே," என வாதமிடுதற்கு இடந்தருகிறது. ஆண்டாள் அநுகாரமோ, அவ்வாதத்திற்கு இடமின்றி, விசிஷ்டாத்வைதத்திற்கே உரித்தாயுள்ளது. இன்னும் பல வேறுபாடுகள் உள்ளன. அவை விரிக்கிற் பெருகும்.

**வினா :—**இவை எங்ஙனமாயினும், இவ்வாழ்வார் மற்ற ஆழ்வார்களைப் போன்று ஆங்காங்கே சென்று அங்கங்கு எழுந்தருளியிருக்கும் பெருமான்களைச் சேவித்து மங்களாசாசனம் செய்தவரல்லரே ! தாம் இருந்த இடத்திலிருந்தே தம் ஊன்றிய சிந்தனையினால் நினைக்க, அப்பெருமான்கள் இவருக்குத் தங்கள் உண்மைநிலை விளங்கக் காட்சியளிக்க, அருகில் சென்று சேவித்தது போன்றே அவர்களின் திவ்

விய மங்கள விக்கிரகம், கலியாண குணங்கள், அவ்வந்நாட்டின் சீர்மை முதலியவற்றைப் பரக்கப் பேசியுள்ளனரல்லரா? எத்துணை நினைவின் முதிர்ச்சி (மானசாநுபவம்) இருந்தால், இத்தகைய செயல் இவருக்குக் கைகூடுவதாகும்! இதில் ஆண்டாள் முன்னிற்க முடியுமா?

**விடை:**—இந்நிலையிலும் ஆண்டாள் பிற்பட்டவர் என நினைத்தல் கூடாது. இவருக்கும் இத்தகைய அனுபவம் ஒருபோது உண்டாயிற்று: தம் திருமணம் காரணமாய்ப் பெரியாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதிகளிலுள்ள பெருமாள்களுக்கும், அந்தந்தத் திவ்விய தேசங்களுக்கேற்ப அமைந்திருக்கும் குணங்கள் செயல்கள் முதலியவற்றை எடுத்துரைக்கின்றார். அப்போது ஆண்டாள் அவற்றைக்கொண்டுள்ள அந்தந்தப் பெருமாள்களைத் தம் சிந்தனையால் (பாவனையினால்) ஊன்றி நோக்குகின்றார். அவர்கள் தெள்ளிதின் இவருக்குக் காட்சியளிக்கின்றார்கள். அவர்களின் உள்ளும் புறமுமான சீர்மைகள் யாவும் இவர் மனக்கண்ணிற்பதிகின்றன. இஃது ஆழ்வார் பாவனைக்கு ஒப்புடையதன்றோ! இது நிற்க.

ஆண்டாள் இச்செயலிலும் சிறிது உயர்ந்துசென்றிருக்கிறார் என்றே சொல்லுதல் வேண்டும். ஆழ்வார் செயல், தம்மனக்கண்ணிற்கு முன் தோன்றிய பெருமாள்களுக்கமைந்த சீர்மைகளை நாவாரப் புகழ்தலோடு நின்றது. ஆண்டாள் பாவாணையின் செயலோ, அத்துடன் நின்றிலதே! இவருள் யார் சீரியர்? யார் நமக்குப் பொருத்தமானவர்? யார் நம்மை அங்கீ

கரிக்கும் இயல்பு வாய்ந்தவர் என்னும் சில ஆராய்ச்சிகளிலுமன்றோ நுழைந்தது? இவற்றிற் கேற்ப இவர் திருவரங்கத்துப் பெரிய பெருமாளிடம் சென்று வெற்றியும் பெற்றனரல்லரா! இம்முறையில் இவருடைய பாவனை ஆழ்வார் அநுகாரத்தைக் காட்டிலும் எத்துணைச் சீரிய நிலையிலிருக்கின்றது!

இத்தன்மைகளால் ஆழ்வார் அநுகாரத்திலும் ஆண்டாள் அநுகாரம் பல்லாற்ருனும் சிறப்பு வாய்ந்தது என்பதை அறிந்தோம்.

இறுதியாக ஆயர்மகளிர் பாவனையையும், ஆண்டாள் பாவனையையும் நோக்குங்கால், அவர்கள் கண்ணனிடம் அளப்பரிய அன்பைக் கொண்டிருப்பினும் அவர்களிடமும் 'நான்' என்னும் அகந்தை இடங்கொண்டிருந்தது. ஒவ்வோர் இடைமகளிடமும் ஒவ்வொரு கண்ணனுயிருந்து கைகோத்து நடிக்குங்கால், அவன் யாவருடனும் கலந்திருத்தலைக் காணும் வன்மையற்ற அவர்கள் ஒவ்வொருவரும், "நாம் மற்றவரினும் மிக்க வனப்பு வாய்ந்திருத்தலின், கண்ணன் நம்மோடு மட்டும் இருந்து விளையாடுகின்ருன்", என நினைத்தனர். இஃது அகந்தையின் செயலன்றோ! இத்தகைய செருக்கு நம் கோதையாருக்கு எங்கேனும் தலைகாட்டிற்றே! 'யான் பெரியவன்; யான் உயர்ந்தவன்,' என்னும் எண்ணத்தை வேருடன் களைந்தெறிதலன்ருே ஞானியின் பண்பு? இப்பண்பில் தலை நின்றவர் நம் கோதையார் ஆவர். ஆதலின், பாவனையில், இவர் ஆயர் மகளிரினும் சீரியர் எனக் கொள்க.

—

# ஆண்டாளும் அகப்பொருள் நூல்களும்

## அகப்பொருள் அமைப்பு

ஒவ்வொரு பொருளிடத்தும் அகம், புறம் என்னும் இரு பிரிவுகள் உண்டு. ஒருவருக்கும் புலனாகாதது அகம்; யாவருக்கும் புலப்படுவது புறம். இன்னதன்மையுடையதெனப் பிறருக்கு வெளிப்படையாக எடுத்தியம்புதற்கும், ஒருகால் அனுபவித்தவரே மற்றொருகால் இஃது இந்நிலை வாய்ந்தது என உய்த்துணர்தற்கும் இயலாது அகத்திலே அடங்கிக் கிடப்பது அகம் எனப்பட்டது. இப்பண்பு அன்பினிடமும் உண்டு. 'குடத்துள் விளக்கும் தடற்றுள் வாளும் போன்று மறைந்து ஒளிர்வது' என அன்பின் இலக்கணத்தை அறிஞர் வரையறுத்தனர். ஒத்த வயதும், ஒத்த கல்வியும், ஒத்த அறிவும், ஒத்த பண்பும் அமைந்த தலைவர் தலைவியரிடம் ஏற்படும் அன்பைக் காதல் எனக் கூறுவர். இங்ஙனம் யாவற்றிலும் ஒன்றுபட்ட இவ்விருவர் உள்ளத்தில் உதிக்கும் காதலே உண்மைக் காதல். இஃது என்றும் மறைதல் இல்லை; அழிதல் இல்லை. இதை வெள்ளம் வீழ்த்துமோ? தீ எரிக்குமோ? வாள் வெட்டுமோ? கொடியர் கொடுபோவரோ? இல்லை இல்லை. இம்முறுகிய காதலின் இலக்கணம் இத்தன்மைத்தென்று ஒருவராலும் இயம்புந்தன்மை உடையதன்று. இஃது உயர்வுள்ளது; உத்தமமானது; உயிருள்ளது. இத்துணைப் பெட்பு வாய்ந்த காதலுக்குத் தோற்றுமிடம் எது? இஃது எங்கிருந்து கிளைக்கிறது? பிறர் கண்ணினால் காணற்கு

இயலாத அகத்தினிடமே அன்றோ! இதனாலேயே இவ்வன்பொழுக்கம் '**அகப்பொருள்**' எனவும் '**அகத்திணை**' எனவும் பெயர் பெற்றது.

மற்ற இலக்கண இலக்கியங்களோடு இவ்வகப் பொருள் இலக்கண நிதி ஒன்றும் நம் தமிழ் மொழியை அலங்கரித்துள்ளது. இதைப் பெருநிதி எனக் கூறல் மிகையாகாது. மற்றெந்த மொழியிலும் இது குடியேறிற்றிலது. இச்சிறந்த துறையைப் பெற வேறு மொழிகள் தவமியற்றில போலும்! நம் பழந்தமிழர் வழக்க ஒழுக்கங்களின் பேழையைத் திறந்து காட்டுதற்கு இதுவே தக்க திறவுகோல். தமிழ் நாட்டின் சீர்மையையும், ஒழுக்க முறைகளையும், அவற்றின் பாகுபாடுகளையும் தெள்ளிதின் உணர்த்தும் பெட்பு, மனோதத்துவ நூலாகிய இதற்கே வாய்ந்துள்ளது. ஒரு நாடு உயர்நிலை அடைவதற்கேற்ற சிறந்த வழிகளுள் ஒன்று மணம். இம்மணம் நேரிய முறையில் நடைபெறவில்லையேல், இதனால் மணமக்கள் எப்பயனையும் எய்துதல் இயலாது. தெய்வம் பேணல், விருந்தாதரித்தல், நன்மக்கள் தோற்றம் முதலிய யாவும் மனமொத்த மணத்தினாலன்றோ நிகழும்! இத்துறையில் நம் தமிழ் நாடு எத்துணை நாகரிகத்தைப் பெற்றிருந்தது என்பதை உள்ளங்கை நெல்லிக்கனியெனக் காட்டுவது இவ்வகப்பொருள் நூலேயாகும். இதற்கு இலக்கணம் வகுத்தோர்,

> **"அன்பின் ஐந்திணைக் களவெனப் படுவது**
> **அந்தணர் அருமறை மன்றல் எட்டனுள்**
> **கந்தருவ வழக்கம் என்மனார் புலவர்".**[1]

1. இறையனார் அகப்பொருள், சூத்திரம், 1.

எனச் சாற்றினர். இதனல் அந்தணர் மணம் எண் வகையுள் இக்காதல் மணம் கந்தருவ மணத்தோடு ஒக்கும் என்பதை அறிந்தோம்.

கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றி, ஒத்த குலமும் ஒத்த அறிவும் வாய்ந்த இருவர், அன்பினல் கட்டுப்பட்டுத் தம்முள் கலக்கின்றமையின், இக் காதல் மணம் கந்தருவ வழக்கத்தோடு ஒத்த தாயிற்று. இது தெய்வக் காதல். இத்தெய்வக் காதலுக்குப் புறக்கண்களின் கூட்டுறவு வேண்டுவ தில்லை; அகக்கண்களின் கூட்டுறவே போது மானது. ஏன்? இஃது உடலழகையோ அன்றி உடலமைப்பையோ பற்றி ஏற்படுவதன்றே? உயிர்ப் பண்பையும் உத்தமச் செயல்களையும் கொண்டு தோன்றுவதன்றே? இக்காதலுடையார், தான் என்றும் அவள் என்றும் வேற்றுமை இலர்; தானே அவள், அவளே தான் எனத் திகழ்வர். ஒரு வரை விட்டு ஒருவர் உடல் பிரிந்திருப்பினும், இவர் காதல் பிரிதல் இல்லை. இஃது உயிர்க்காதலன்றே? உயிர் ஒன்றை விட்டு ஒன்று பிரிதல் உண்டோ? இவைகளின் கூட்டுறவு என்றும் நித்தியமாகும். உயிர்க்கிறுதி உண்டாயின் அன்றே இக்காதலுக்கு இறுதி ஏற்படும்? உயிர்க்கு இறுதி ஏது? இது நிற்க.

ஒரு பெண் மகளும் ஓர் ஆண் மகனும் தனித் தனியே வாழுங்கால் தன்னலமுடையராய் இருக் கின்றனர். இந்நிலையில் இவர்கட்குத் தன்னலக் கட்டு அவிழ்தற்கு வழியேது? பிறரிடம் அன்பு பிறத்தல் யாங்ஙனம்? அங்ஙனமின்றி, இவர் இரு

வரும் சேருங்கால், காதலால் கட்டுண்கின்றனர்; இருவரும் அன்பால் ஒன்றுபட்டு ஈருடலும் ஓருயிரு மாகின்றனர். அவ்வன்பு அவனுடைய பொருளை இவளுடையதாகவும், இவளுடைய பொருளை அவனுடையதாகவும் செய்கிறது. இவ்வொன்றுபட்ட அன்பிலிருந்து மகப்பேறு உருக்கொண்டெழுகிறது. இவர் பெற்றோராகித் தம் வாழ்வைத் தம் மகவிற் கென்றே உரித்தாக்குகின்றனர். இவ்வன்பு வளர்ந்து வளர்ந்து மற்றவர் மாட்டும் பரவுகிறது; பின்பு மற்ற உயிர்களையும் தம்மைப்போன்றே கருதும் அருள் நிலையைப் பிறப்பிக்கின்றது. இவ்வருள் நிலையைத் தனித்து வாழும் உயிர் பெற இயலுமா? இதனால், ஒருத்தியும் ஒருவனும் சேர்ந்து நிகழ்த்தும் இன்ப அன்பு வாழ்வே தன்னலக்கட்டை அறுத்து உயிர்க்குறுதியை அளிப்பதற்குத் துணை புரிகிறது என அறிகின்றோமல்லவா? இங்ஙனம் உயிர்த்தளையை நீக்கி அதனை உய்விக்கும் இன்பத்தைச் சிற்றின்பம் எனக் கழிப்பது அறமாகுமா?

அஃதன்றியும், சிலர் கருதுமாறு, சிற்றின்பத்தைக் குறிப்பதோடு நின்றில நம் அகநூல்கள். அவற்றை ஆழ்ந்து நோக்கின், அவை சீவான்மா பரமான்மாக்களிடையே எழும் காதலாகிற பேரின்பத்தை உருக்கொண்டிருத்தலைத் தெள்ளிதின் காணலாம். ஆதலினாற்றான், தமிழர் இந்நூல்களின் உறுப்புகளைப் பலபடப் பன்னிப்பன்னிப் பகர்ந்துள்ளனர். இந்நுட்பத்தை அறியாத சிலர், இது பயனற்றது எனப் பழித்துத் தள்ளுவர். தமிழ் நாட்டு மக்கட்கோ, சிற்றின்பம் போன்று தோன்

றும் இவ்வகப்பொருள் பேரின்பச் சித்திரமாகக் காட்சியளித்தது.

உடற்பிணியை அகற்றும் மருந்தை அங்ஙனமே உண்பதற்கு மறுக்கும் இளம்பிள்ளைக்கு, அதை அவ்வமயம் இனிக்கும் இனிப்புப் பண்டத்தோடு கலந்து தரும் தாயைப் போன்று, பேரின்பப் போக்கில் மனங்கொள்ளா மக்களுக்கு அதை அக்கால் இனிக்கும்பொருட்டுச் சிற்றின்பம் எனக் கருதும் இதனோடு கலந்து ஊட்டுகின்றனர் நம் தமிழர். இவ்வகப்பொருள் சீவான்மாவைப் பரமான்மாவோடு சேர்த்து வைத்தற்குக் கை கண்ட மருந்து. இதை விளக்கும் இலக்கணங்கள் எத்தனை? நீதிநூல்கள், புராணங்கள், சமய நூல்கள் யாவும் இதைக் கற்பிக்க எழுந்தனவே! புறப்பொருளாலும், அகப்பொருளாலும் அளவிட இயலாத சீவான்மா பரமான்மாக்களை ஒன்றுபடப் பிணிக்கும் நெறியை வரையறுத்த நம் தமிழ் மொழியின் சீர்மை என்னே! இம்முறையைப் பின்பற்றிச் சென்று வெற்றி பெற்ற நம் பெரியோரின் மாண்பென்னே! அவர்தம் மன இயலை யாரால் அளந்து கூற இயலும்! இதுவே தமிழ்நாட்டை அழகு செய்யும் அணிகளில் தலை சிறந்ததாகும். இவ்வகப்பொருளே இறையன்பைப் பெறுதற்கு வழி காட்டுவது; இம்மை, மறுமை, வீடு ஆகிய எங்கும் தொடர்ந்து செல்லக் கூடியது. ஆதலின், இதனினும் உயர்ந்தது வேறொன்றுமில்லை. உலகில் தோன்றிய ஒவ்வோர் ஆன்மாவும் இதைப் பெறவே அல்லும் பகலும் முயல்கிறது, ஒவ்வோர் ஆன்மாவும் முயன்று

முயன்று முடிவில் இதைப் பெற்றே தீரும் என்பது திண்ணம். இஃதே ஆன்மாவின் ஆனந்தநிலை; இஃதே இன்பநிலை. இந்நிலை எய்திய பின்பு துன்பம் ஏது? குறைவு ஏது? இதுவே பூரணநிலை எனப்படும். இந்நிலையில் நின்ற மாணிக்கவாசகர், திருமங்கை யாழ்வார், நம்மாழ்வார் முதலிய சான்றோரின் மனப் பான்மையை ஈண்டு நினைவு கூர்க.

அக இன்பம், மனத்தின்கண்ணுள்ள மாசைத் துடைக்கும்; இயற்கைப் பொருள்களின் இன்னலத் தில் நெஞ்சைப் பதிய வைக்கும்; அதன்பால் இறை கலந்திருப்பதைப் புலப்படுத்தும்; இம்முறையில் இஃது உயிர்களுக்கு உறுதுணையாயிருந்து பிறந்த தன்பயனை எய்துவிக்கும். இத்தன்மை வாய்ந்த அக இன்பம் நாய்ச்சியார் திருமொழியின் ஒவ்வொரு பாசுரத்திலும் நிறைந்து வழிவதைக் காணலாம்.

அஃதன்றியும் ஆண்டாள் முற்கூறிய பெரியோர் களுக்கு ஒப்பு எனக் கூறக் கற்றோர் மனம் இடந் தாராது. இவர் யாவரிலும் சீரிய நிலையில் நிற்பவர். மற்றவர்களைப் போன்று, இவர், அகப்பொருள் இலக் கணத்திற்கு ஓர் இலக்கியம் என்னும் அளவோடு நின்றுவிடவில்லை. அவ்விலக்கணத்தில் ஆழமூழ்கி அதன் தத்துவத்தைப் பளிங்கெனச் செயல் முறை யிலும் காட்டியவர் நம் கோதையார் ஒருவரே. இதன் பயனை இவர் கனவில் பெற்றது மட்டுமே அன்றி, நனவிலும் பெற்றார். தெய்வத்தன்மை வாய்ந்த அகப்பொருட்சுவையில் பண்பட்ட இவர் உடல், பத்திமயமாகவே மாறிப் பீடுற்றது போலும்! அன்

றேல், இவரை உடலுடன் ஏற்றுக்கொள்ள எம் பெருமான் இசைவனே!

இன்னும் இத்தெய்வப்பாவையாரின் நூல் அகப் பொருளாகும் மனோதத்துவ சாத்திரத்தையும் கடந்து நிற்பதொன்று. மக்கள் மனத்திற்குப் புலனாகும் பொருள்களைப் பகரும் அகநூல்களோடு, மனத் திற்கும் எட்டாத நுட்பப் பொருள்களை இயம்பும் நம் அன்னையாரின் நூலை வைத்து ஒப்புக் காண யாங்ஙனம் இயலும்? புலிக்குப் பூனையை உவமைப் படுத்தும் முறையிலும் இவற்றைக் கொள்ள இயலாதென்க. ஆயினும், அகப்பொருள் நூல்கள், கேவலம் சிற்றின்பத்தைப் பற்றியவை என்றெண் ணும் பலர் மயக்கத்தைப் போக்கவே, ஆன்மாவிற் கும் பரமான்மாவிற்கும் தொடர்பு படுத்தும் நம் நாய்ச்சியார் நூல்களிலும் இத்துறைகள் அமைந் துள்ளன என்பதை ஈண்டுச் சில சான்றுகளால் பகர முன் வந்தோமேயல்லாமல் பிறிதில்லை.

இனி ஆண்டாள் பாசுரங்களுக்கும் அகப்பொருட் கிளவிகளுக்கும் உள்ள தொடர்பை நோக்குவோம்.

தாம் மணக்கவிருக்கும் நாயகனைத் தவிர எந் நிலையிலும் வேறு தெய்வத்தைத் தொழச் சிறிதும் ஒருப்படாத ஆண்டாள், தாம் விரும்பிய தலைவனை அடைதற்பொருட்டுத் தெய்வத்தைப்பராவி நிற்றல்.

தலைவி தெய்வம் போற்றல்

"தையொரு திங்களும் தரைவிளக்கித்
தண்மண் டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக்கு அலங்கரித்து அனங்கதேவா!

உய்யவும் ஆங்கொலோ என்றுசொல்லி
உன்னையும் உம்பியையும் தொழுதேன்;
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கட வற்கென்னை விதிக்கிற்றியே."
—நாய்ச்சியார் திருமொழி, 1 : 1.

"உரவிப் பெருங்கலித் துன்பங்கள்
போய்முதல் ஊழிஇன்பம்
வரவிப் படிதன்னை வாழ்வித்த
வாணன்தென் மாறைஅன்னுள்
புரவிப் புனைநெடுந் தேர்அண்ண
லே!நின் பொருட்டணங்கைப்
பரவிப் பரவிநின் றேவரம்
வேண்டுதல் பார்த்தருளே.'
—தஞ்சை வாணன் கோவை, 286.

"இடைதெரியா வேள ரிருவருந் தத்தம்
உடைவனப் பெல்லா மிவட்கீந்தார் கொல்லோ!
படையிடுவான் மற்கண்டீர் காமன் மடையடும்
பாலொடு கோட்டம் புகின்"
—முல்லைக்கலி, 109 : 17-20.

**தலைவி தன்பொருட்டு வேறுதெய்வத்தைப் பராவி நிற்றலைக் கண்ட தலைவன் மகிழ்தல்.**

"ஆண்டாள் வேறு தெய்வத்தின் காலில் விழுதல் தன்னை அடைதற்பொருட்டேயாயினும், இவ்வடாத செயல் எம்பெருமான் சினத்திற்கு இடனுகாதோ?' எனில், ஆகாது. அவன் உவப்பிற்கே இடனுகும் என முன்னரே கூறியுள்ளோம். இதற்கு, தன்னைக் காதலித்த தலைவி தன்னைப் பெறுதற்

பொருட்டுப் பிறதெய்வத்தைத் தொழுதலை நோக்கிய தலைவன் உளமகிழும் என்பதற்கு இச்செய்யுள் ஒரு வகையில் சான்றாகும்.

" இவ்வித் தகம்இவட் கெய்திய
தெவ்வணம்? எவ்வவுகும்
வவ்வித் திகழ்புகழ் வாணன்தென்
மாறை மணம்பொருட்டா
நவ்வித் தொகைஇனம் நாணும்மெல்
நோக்கி நறைபுகையாச்
செவ்வித் தகைமலர் தூய்த்தெய்வம்
வாழ்த்தும் திருத்தகவே."

—தஞ்சை வாணன் கோவை, 287.

" நீலக் கடலின் கரைகடைந்
தேநித் திலம்விலைகூர்
கூலத்திற் செல்லும் இருங்கழிச்
சேர்ப்ப!மைக் கூர்விழிவேல்
போலத் திகழ்நங்கை யின்றான்
குருகைப் பொதுப்பெண் டிராஞ்
சீலத்தின் எங்கையர் சேரியி
லேயின்னஞ் சேரியிலே."

—மாறன் கோவை, 459.

" தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும்
தலைவி உணர்ந்து தலைவனொடு புலத்தலும்
பாணன் முதலாப் பாங்கி யீறாப்
பேணிய வாயில் பெரியோன் விடுத்துழி
மறுத்தலும் விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்
டிறையோன் மகிழ்தலும் இறைமகள் விருந்துண்

டொளித்த ஊடல் வெளிப்பட நோக்கிச்
சீறே லென்றவள் சீறடி தொழலுமிஃது
எங்கையர் காணின் நன்றன் றென்றலும்,
அங்கவர் யாரையும் அறியேன் என்றலும்,
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலும்,
தாமக் குழலியைப் பாங்கி தணித்தலும்''
—அகப்பொருள் விளக்கம், 206.

என்னும் இலக்கணமும் நோக்குக.

ஆண்டாள் மிக்க அழகும் உத்தம குணமும் வாய்ந்த தலைவனிடம் கொண்ட நினைவின் ஊன்றுதலாலே கிளர்ந்து வளர்ந்துள்ள தம் அங்கங்களை உலக மனிதருக்கு உரிமைப்படுத்தல் என்னும் வார்த்தை உண்டாகுமாயின் உயிர் வாழ ஒருப்படா திருத்தலை நோக்குக :

தலைவி பிற விலக்குதல்

"ஊனிடை யாழிசங் குத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்தவென் தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படில்
வாழ்கில் லேன்கண்டாய் மன்மதனே!''
—நா. திருமொழி, 1 : 5.

"பொருமால் மதியினைப் போல்மருப்
பியானையில் பொன்னொடின்பம்
தருபால் மொழிவஞ்சி ! சாரவந்
தார்தஞ்சை வாணன்வெற்பின்
ஒருபால் நொதுமலர் என்னவெந்
தீஉலை உற்றசெவ்வேல்
இருபால் மருங்கினும் கொண்டெறிந்
தால்ஒத்த தென்செவிக்கே.''
—தஞ்சை, 226.

எம்பெருமான் ஆண்டாளை நோக்கி வர, அவன் காலந் தாழ்த்து வந்தமைக்கு இவர் ஊடி, அவனை நோக்காதவர் போன்று, வேறு செயலில் மனங் கொண்டிருத்தலை நோக்குக.

தலைவி ஊடுதல்

"வட்ட வாய்ச்சிறு தூதையோடு
சிறுசுளகும் மணலுங் கொண்டு
இட்ட மாவிளை யாடு வோங்களைச்
சிற்றில் ஈடழித் தென்பயன்?
தொட்டு தைத்து நலியேல்கண் டாய்சுடர்
சக்க ரம்கையி லேந்தினாய்!
கட்டியும் கைத்தால் இன்னாமை
யறிதியே கடல் வண்ணனே."

—நா. திருமொழி, 2 : 8.

மெய் தொட்டுப் பயிறல்

"முற்ற மண்ணிடந் தாவி விண்ணுற
நீண்டளந்துகொண் டாய்எம்மை
பற்றி மெய்ப்பிணக் கிட்டக் கால்இந்தப்
பக்கம் நின்றவர் என்சொல்லார்?"

—நா. திருமொழி, 2 : 9.

தலைவி தன் தலைவனோடு கலந்து இன்பந் துய்த்தபோது, தான் தோழிக்குச் சுனையாடி வந்தாய் மறைத்துச் சொல்வதும், தோழி அதை வியந் துரைத்தலும் வழக்கு. அங்ஙனமே ஆண்டாள் சுனையாடச் சென்ற இடத்தில் கண்ணன் அவண்போந்து இருவருக்கும் சேர்க்கையுண்டாயிருப்பது இவர் திருமொழியில் பெறப்படுகின்றது.

தலைவி தன் வேட்கையின் வெப்பம் நீங்கச் சுனையாடல்

"கோழி யழைப்பதன் முன்னம்
குடைந்து நீ ராடுவான் போந்தோம்."
—நா. திருமொழி, 3 : 1.

தலைவனை அச்சுறுத்தல் :

"காலைக்கது விடுகின்ற கயலோடு வாளைவிரவி
வேலைப்பிடித் தென்னைமார்கள் ஓட்டில் என்ன
விளையாட்டோ."
—நா, திருமொழி, 3 : 5.

தலைவி, தலைவன் தன்னை நோக்கி வந்து தன்னோடு அளவளாவுவானா என்பதை அறியக் குறி பார்த்தல் :

கூடலிழைத்தல் :

"காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஓட்ட ராவந்தென் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே!'
—நா. திருமொழி, 4 : 2.

"ஊடல் கூடல் உணர்தல் புணர்தலை,
நீடு நின்ற நிறைபுக ழாய்ச்சியர்
கூட லைக்குழற் கோதைமுன் கூறிய,
பாடல் பத்தும்வல் லார்க்கில்லை பாவமே."
—நா. திருமொழி, 4 : 10.

"ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்."
—திருக்குறள்.

"யான் காதலித்துள்ள எம்பெருமான் என்னைக் காதலித்திலன் போலும்! ஆதலினாற்றான். அவன் இங்கு வந்தானில்லை. ஆயினும், நீலரத்தினம் போன்ற திருமேனியையுடைய அவனை வருமாறு கூவுவாயாக" என்று ஆண்டாள் குயிலை நோக்கி இறைஞ்சுதல்.

தலைவி தலைவனிடம் பறவைகளைத் தூதுவிடல்

"மாதலி தேர்முன்பு கோல்கொள்ள மாயனி
ராவணன் மேல்சர மாரி
தாய்தலை அற்றற்று வீழத் தொடுத்த
தலைவன் வரவெங்குங் காணேன்!
போதலர் காவில் புதுமணம் நாறப்
பொறிவண் டின் காமரம் கேட்டுன்
காதலி யோடுடன் வாழ்குயி லே!என்
கருமாணிக் கம்வரக் கூவாய்"

—நா - திருமொழி, 5 : 3.

"என்புகள் உருகியதுமல்லாமல் வேலன்ன என் கண்களும் நெடுங்காலமாக இமையோடு இமை பொருந்தில. யானோ, தலைவனைப் பெற்று இன்புறாமல் துன்பக் கடலுள் புகுந்து வருந்துகின்றேன். காதலர் பிரிவினால் ஏற்படும் ஆற்றாமையை நன்குணர்ந்த நீ, என் தலைவனை அழைப்பாயாக," எனத் தலைவி குயிலுக்குரைத்தல்:

"என்புரு கியின வேல்நெடுங் கண்கள்
இமைபொருந் தாபல நாளும்
துன்பக் கடற்புக்கு வைகுந்த னென்பதோர்
தோணிபெ றாதுழல் கின்றேன்!

அன்புடை யாரைப் பிரிவுறு நோய்அது
நீயும் அறிதி குயிலே!
பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப்
புண்ணிய னைவரக் கூவாய்.''

—நா - திருமொழி, 5 : 4.

"மென்னடை யன்னம் பரந்து விளையாடும்
வில்லிபுத் தூருறை வான்றன்,
பொன்னடி காண்பதோ ராசையி னாலென்
பொருகயற் கண்ணிணை துஞ்சா!
இன்னடி சிலொடு பாலமு தூட்டி
எடுத்தஎன் கோலக் கிளியை
உன்னொடு தோழமை கொள்ளுவன் குயிலே!
உலகளந் தான்வரக் கூவாய்.

—நா - திருமொழி, 5 : 5.

இங்ஙனமே இத்திருமொழிக்குச் சில ஒப்புமைகளைக் காட்டுவோம்.

தலைவி தன் கவின் அழிவு உரைத்தல்:

எத்திசை யும்அம ரர்பணிந் தேத்தும்
இருடிகே சன்வலி செய்ய
முத்தன்ன வெண்முறு வற்செய்ய வாயும்
முலையும் அழகழிந் தேன்நான்.

—நா - திருமொழி, 5:6.

"உரஞ்செத்து முளனே தோழியென்
நலம்புதி துண்ட புலம்பி னானே.''

—குறுந்தொகை, 133.

வாளினும் நீள்விழி வாள்நுத
லாய்! தஞ்சை வாணன்தெவ் வின்
நாளினும் நாளும் நலம்தொலைவேன்!

—தஞ்சை, 216.

"பொங்கிய பாற்கடற் பள்ளிகொள் வானைப்
புணர்வதோர் ஆசையி னுல்என்
கொங்கை கிளர்ந்து குமைத்துக் குதுகலித்
தாவியை ஆகுலஞ் செய்யும் ;
அங்குயி லே!உனக் கென்ன மறைந்துறைவு?
ஆழியுஞ் சங்கும்ஒண் தண்டும்
தங்கிய கையவ னைவரக் கூவில்நீ
சாலத் தருமம் பெறுதி."

—நா. திருமொழி, 5:7.

"வையை
நுரைப்பால் முகந்தன்ன நுண்துகி
லாய்!இந்த நோய்அவர்க்கின்று
உரைப்பார் உளரேல் உயிர்எய்த
லாம்நமக் கூர்திரைசூழ்
தரைப்பால் வளரும் புகழ்எய்த
லாம்அவர் தங்களுக்கே."

—தஞ்சை. 217

காமம் மிக்க கழிபடர் கிளவி

"பைங்கிளி வண்ணன் சிரீதரன் என்பதோர்
பாசத் தகப்பட்டி ருந்தேன்
பொங்கொளி வண்டிரைக் கும்பொழில் வாழ்குயி
லே!குறிக் கொண்டிது நீகேள் :
சங்கொடு சக்கரத் தான்வரக் கூவுதல்
பொன்வளை கொண்டு தருதல்
இங்குள்ள காவினில் வாழக் கருதில்
இரண்டத்தொன் றேல்திண்ணம் வேண்டும்."

—நா - திருமொழி, 5 : 9.

"ஒண்டுவி நாராய்! நின் சேவலும் நீயுமாய்
வண்டூது பூங்கானல் வைகலும் சேறிரால்;
'பெண்டூது வந்தேம்,' எனவுரைத்தெம் காதலரைக்
கண்டீர் கழறியக்கால் காதலர் கடிபவோ?"

—இறையனாரகப்பொருள், 214.

"அன்றுஅல கம்மளந் தானை உகந்தடி
மைக்கண வன்வலி செய்யத்
தென்றலுந் திங்களும் ஊடறுத் தென்னை
நலியு முறைமை அறியேன்!"

—நா - திருமொழி. 5 : 10.

"பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான்?"

—திருக்குறள்.

எம்பெருமான் கனவில் தோன்றித் தம்மை மணம் புரிந்த செய்தியை ஆண்டாள் தம் தோழிக் குரைத்து மகிழ்தல்:

தலைவி கனவு நிலையுரைத்தல்

"வாரண மாயிரம் சூழ வலம்செய்து,
நாரண நம்பி நடக்கின்றா னென்றெதிர்
பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும்
தோரணம் நாட்டக் கனாக்கண்டேன் தோழீநான்."

—நா - திருமொழி, 6 : 1.

இத்திருமொழி முற்றும் மணச் செய்தியையே தெரிவிக்கின்றமையின், அதை அறிய இவ்வொரு பாசுரமே போதியதெனக்கொண்டாம்.

"நனவினுன் நல்கா தவரைக் கனவினுற்
காண்டலின் உண்டென் ஹுயிர்."

"கனவினுன் உண்டாகும் காமம் நனவினுல்
நல்காரை நாடித் தரற்கு."

"துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து."

"நனவினுன் நம்நீத்தார் என்பர் கனவினுன்
காணுர்கொல் இவ்வூ ரவர்?"

—திருக்குறள்.

ஆண்டாள் எம்பெருமானேடு மிக்க தொடர்பு கொண்டிருக்கும் பாஞ்சசன்னியத்தைச் சிறிது புலவி தோற்ற வாழ்த்துகிருர்.

தலைவி வலம்புரி சங்கினை வாழ்த்தல் :

செங்கமல நாண்மலர்மேல் தேனுகரும் அன்னம்போல்
செங்கண் கருமேனி வாசுதே வனுடைய
அங்கைத் தலமேறி அன்ன வசஞ்செய்யும்
சங்கரையா ! உன்செல்வம் சால அழகியதே !

— நா - திருமொழி, 7 : 7.

"தேனிற வார்கண்ணிச் செம்பியன் மாறன் செழுங்குமரி
மானிற வெண்டிரைமால்கடல்தோன் றினை;மண்ணளந்த
நீனிற வண்ணனும் ஏந்தினன் தம்முன் நிறம்புரைதீம்
பானிற வெண்சங்கம்; யார் நின்னின் மிக்க படிமையரே"

—இறையனுரகப்பொருள், 315.

"மால்வண் டெனமன்னி வாணன்தென்
மாறைமன் னன்புகழே
போல்வண் தமிழ்மன்னர் போற்ற
விளங்குக, பொன்கொழிக்கும்

காலவண்டல் வையைக் கரைமல்கு
மல்லிகைக் கால்முகையின்
மேல்வண் டிருந்தது போல்கரு
மாமுக வெண்சங்கமே!''

—தஞ்சை, 277.

ஆண்டாள், எம்பெருமான் தம்மைவிட்டுப் பிரிந்ததனால், தமக்குண்டாயிருக்கும் பல வகைப்பட்ட துன்பங்களையும் திருவேங்கடத்தில் அர்ச்சையாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீனிவாசனுக்கு அறிவிக்குமாறு மேகத்தைத் தூது விடுதல்:

"ஒளிவண்ண வளைசிந்தை யுறக்கத்தோ டிவையெல்லாம்
எளிமையா லிட்டென்னை யீடழியப் போயினவால்!
குளிரருவி வேங்கடத்தென் கோவிந்தன் குணம்பாடி
அளியத்த மேகங்காள்! ஆவிகாத் திருப்பேனே.''

—நா. திருமொழி, 8 : 3.

'மின்னாகத் தெழுகின்ற மேகங்காள்! வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை தங்கியசீர் மார்வற்கு
என்னாகத் திளங்கொங்கை விரும்பித்தாம் நாடோறும்
பொன்னாகம் புல்குதற்கென் புரிவுடைமை செப்புமினே''

—நா. திருமொழி, 8 : 4.

"சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த
தண்முகில்காள்! மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே
நிரந்தேறிப் பொழிவீர்காள்!

உலங்குண்ட விளங்கனிபோல்
' உள்மெலியப் புகுந்து,என்னை
நலங்கொண்ட நாரணற்கென்
நடலைநோய் செப்புமினே !''
—நா. திருமொழி, 8 : 6.

''சங்கமா கடல்கடைந்தான் தண்முகில்காள்! வேங்கடத்துச்
செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம் :
கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து,ஒரு
தங்குமே லென்னாவி தங்குமென் றுரையீரே.'' [நாள்
—நா. திருமொழி, 8 : 7.

ஆண்டாள் இயற்கைப் பொருள்கள் இறைவனுடைய நிறத்தையும் உருவத்தையும் பெற்றுத் தம்மை வருத்துவதாய்க் கண் கலங்கல் :

தலைவி இளவேனிற்பருவம் கண்டு புலம்பல் :

'' போர்க்களிறு பொரும்மாலிருஞ்
சோலையம் பூம்புறவில்
தார்க்கொடி முல்லைகளும்
தவளநகை காட்டுகின்ற.''
—நா. திருமொழி, 9 : 2

'' தேம்படு சிலம்பில் தெள்ளறல் தழீஇய
துறுகல் அயல தூமணல் அடைகரை
அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்
கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகறல் ஓம்புமின் அறிவுடை யீரெனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல

*மெய்யுற இருந்து மேவர நுவல*
*இன்று ஆகிய காலைப் பொருள்வயின்*
*பிரிதல் ஆடவர்க்கு இயல்பெனின்*
*அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே.*

—*நற்றிணை*, 243

"*இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை*
*இருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை*
*வெருகுசிரித் தன்ன பசுவீ மென்பிணிக்*
*குறுமுகை யவிழ்ந்த நறுமலர்ப் புறவின்*
*வண்டுசூழ் மாலையும் வாரார்*
*கண்டிசிற் றோழி! பொருட்பிரிந் தோரே.*"

—*குறுந்தொகை*, 220

தலைவி கார்ப்பருவம் கண்டு புலம்பல்

"*வாயமுகர் தம்மை யஞ்சுதும்*
*பாவியேன் தோன்றிப் பாம்பணை*
*யார்க்கும்தம் பாம்புபோல்*
*நாவு மிரண்டுள வாய்த்து*
*நாணிலி யேனுக்கே.*"

—*நா. திரு மொழி*, 10 : 3

"*கார்க்கோடல் பூக்காள்!*
*கார்க்கடல் வண்ணனென் மேல்உம்மைப்*
*போர்க்கோலஞ் செய்து*
*போர விடுத்தவன் எங்குற்றான்?*

ஆர்க்கோ இனிநாம் பூச
விடுவது அணிதுழாய்த்
தார்க்கோடும் நெஞ்சந் தன்னைப்
படைக்க வல்லே னந்தோ!

—நா. திருமொழி, 10 : 1

"பொருமா மணிமுடி மன்னரைப்
பூலந்தைப் பூவழித்த
குருமா மணிவண்ணன் கோன்நெடு
மாறன் குமரிமுந்நீர்
அருமா மணிதிகழ் கானலின்
வாய்வந் தகன்றகொண்கன்
திருமா மணிநெடுந் தேரொடு
சென்றதென் சிந்தனையே!"

—இறையனாரகப் பொருள், 145

"அன்றணங்கின்முன்னே
தெளித்தார்; செழுந்தஞ்சை வாணன்ஒன்
னாரின்நம் சிந்தைநைய
ஒளித்தார் அவர்இங்ஙனே; நன்று
நன்றிவ் வுலகியலே!"

—தஞ்சை, 253

"உயர்வையை ஒண்துறை
வாய்உர வோர்தெளித்தும்,
'கரியோர் பிறர்இல்லை,' என்றகன்
றூர்;இனிக் காரிகையாய்!
'பெரியோர் மொழிபிற ழார்,'என்று
தேறுதல் பேதைமையே."

—தஞ்சை, 291

"அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு?"

—திருக்குறள்

"அம்ம வாழி தோழி! காதலர்
நிலம்புடை பெயர்வ தாயினுங் கூறிய
சொற்புடை பெயர்தலோ இலரே; வானம்
நளிகடல் முகந்து செறிதக இருளிக்
கனைபெயல் பொழிந்து கடுங்குரல் பயிற்றிக்
கார்செய்து என்னுழை யதுவே; ஆயிடைக்
கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய
பெருமர வேரடிப் போல
அருளிலேன் அம்ம அளியேன் யானே!"

—நற்றிணை, 289

"இழையணி மகளிரின் விழைதகப் பூத்த
நீடுசுரி இணர சுடர்வீக் கொன்றைக்
காடுகவின் பூத்த ஆயினும் நன்றும்
வருமழைக் கெதிரிய மணிநிற இருப்புதல்
நரைநிறம் படுத்த நல்லிணர்த்து எறுழ்வீ
தாஅந் தேரலர் கொல்லோ சேய்நாட்டுக்
களிறுதைத்து ஆடிய கவிழ்கண் இடுநீறு
வெளிறில் காழ வேலம் நீடிய
பழங்கண் முதுநெறி மறைக்கும்
வழங்கருங் கானம் இறந்திசி னோரே!"

—நற்றிணை, 302

"அருந்துயர் உழத்தலின் உண்மை சான்மெனப்
பெரும்பிறிது இன்மையின் இலேனும் அல்லேன்;
கரைபொருது இழிதரும் கான்யாற்று இகுகரை
வேர்கிளர் மாஅத்து அந்தளிர் போல

நடுங்கல் ஆனு நெஞ்சமொடு இடும்பை
யாங்கனந் தாங்குவென் மற்றே? ஓங்குசெலல்
கடும்பகட்டு யானை நெடுமான் அஞ்சி
ஈர நெஞ்சம் ஓடிச்சேண் விளங்கத்
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே."

—நற்றிணை, 381

"நெறியிருங் கதுப்பும் நீண்ட தோளும்
அம்ம நாளும் தொன்னலஞ் சிதையேல்
ஓராச் செந்தொடை ஒரீஇய கண்ணிக்
கல்லா மழவர் வில்லிடை விலங்கிய
துன்னருங் கவலை அருஞ்சுரம் இறந்தோர்
வருவர் வாழி தோழி! செருவிறந்து
ஆலங் கானத்து அஞ்சுவர இறுத்த
வேல்கெழு தானைச் செழியன் பாசறை
உறைகழி வாளின் மின்னி உதுக்காண்
நெடும்பெருங் குன்றம் முற்றிக்
கடும்பெயல் பொழியுங் கலிகெழு வானே."

—நற்றிணை, 387

"முல்லைப் பிராட்டி நீயுன் முறுவல்கள் கொண்டு எம்மை
அல்லல் விளைவியேல் ஆழிநங் காய்! உன் அடைக்கலம்"

—நா. திருமொழி, 10:4

"பாடுங் குயில்காள்! ஈதென்ன பாடல்? நல் வேங்கட
நாடர் நமக்கொரு வாழ்வுதந் தால்வந்து பாடுமின்;
ஆடும் கருளக் கொடியுடை யார்வந் தருள்செய்து
கூடுவ ராயிடிற் கூவிநும் பாட்டுகள் கேட்டுமே"

—நா. திருமொழி, 10:5

"கணமா மயில்காள்! கண்ணபிரான் திருக்கோலம்போன்று
அணிமா நடம்பயின் றருகின் றீர்க்கடி வீழ்கின்றேன்
பணமா டரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள்
மணவாளர் நம்மை வைத்த பரிசிது காண்மினே."

—நா. திருமொழி, 10 : 6

" கடிதிடி யுருமிற் பாம்புபை யவிய
இடியொடு மயங்கி யினிதுவீழ்ந் தன்றே
வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்
கையற வந்த பையுண் மாலைப்
பூஞ்சினை யிருந்த போழ்கண் மஞ்ஞை
தாநீர் நனந்தலை புலம்பக்
கூஉந் தோழி பெரும்பே தையவே."

—குறுந்தொகை, 391.

" மழையே! மழையே! மண்புறம் பூசியுள் ளாய்நின்று
மெழுகூற்றி னாற்போ லூற்றுநல் வேங்கடத்துள் நின்ற
அழகப் பிரானார் தம்மைஎன் னெஞ்சத் தகப்படத்
தழுவநின்று என்னைத் ததர்த்திக்கொண் டூற்றவும்
வல்லையே!"

—நா. திருமொழி, 10 : 8

" யாணர்க் குழல்மொழி! என்செய்கு
வேன்! கல்வி எல்லைஎல்லாம்
காணப் பிரிந்தவர் காண்கிலரால்..............................
என்வல் உயிரின்
ஊணற்பம் என்னஎண் ணுவரும்
மேகம் உருமுடனே."

—தஞ்சை, 409.

"கேளார் கொல்லோ தோழி! தோள்...............
இலங்குவளை நெகிழ்த்த கலங்கஞர் எள்ளி
நகுவது போல மின்னி
ஆர்ப்பது போலுமிக் கார்ப்பெயற் குரலே."

—நற்றிணை, 214.

"வறங்கொல வீந்த கானத்துக் குறும்பூங்
கோதை மகளிர் குழூஉநிரை கடுப்ப
வண்டுவாய் திறப்ப விண்ட பிடவம்
மாலை அந்தி மாலதர் நண்ணிய
பருவஞ் செய்த கருவி மாமழை
அவர்நிலை யறிமோ ஈங்கென வருதல்
சான்றோர்ப் புரைவதோ அன்றே மான்றுடன்
உரவுரும் உரறு நீரில் பரந்த
பாம்புபை மழுங்கல் அன்றியும் மாண்ட
கனியா நெஞ்சத் தானும்
இனிய அல்லநின் இடிநவில் குரலே."

—நற்றிணை, 238.

"வன்பாற் றெள்ளறல் பருகிய இரலைதன்
இன்புறு துணையொடு மறுவந் துகளத்
தான்வந் தன்றே தளிதரு தண்கார்
வாரா துறையுநர் வரனசைஇ
வருந்திநொந் துறைய இருந்திரோ வெனவே."

—குறுந்தொகை, 65.

"கடலே! கடலே! உன்னைக் கடைந்து கலக்குறுத்து
உடலுள் புகுந்து நின்றூற லறுத்தவற்கு, என்னையும்
உடலுள் புகுந்து நின்றூற லறுக்கின்ற மாயற்குஎன்
நடலைக ளெல்லாம் நாகணைக் கேசென் றுரைத்தியே!"

—நா. திருமொழி, 10:9.

ஆண்டாள் திருவரங்கச் செல்வனிடம் ஆர்வங் கொள்ளல்:

தலைவர் தம் பொருள்களைக் கவர்ந்து தம்மை விட்டு நீங்கியமையைத் தெரிவித்தல்.

"தாமுகக்கும் தம்கையில் சங்கமே போலாவோ
யாமுகக்கும் என்கையில் சங்கமு மேந்திழையீர்!
தீமுகத்து நாகணைமேல் சேரும் திருவரங்கர்
ஆமுகத்தை நோக்காரால் அம்மனே! அம்மனே!"
—நா. திருமொழி, 11:1.

"உள்ளார் கொல்லோ தோழி! கொடுஞ்சிறை
உள்ளடி பொறித்த வரியுடைத் தலைய
நீரழி மருங்கின் ஈரயிர் தோன்ற
வளரா வாடை உளர்புநனி தீண்டலின்
வேழ வெண்பூ விரிவன பலவுடன்
வேந்துவீசு கவரியிற் பூம்புதல் அணிய
மழைகழி விசும்பின் மாறி ஞாயிறு
விழித்திமைப் பதுபோல் விளங்குபு மறைய
எல்லை போகிய பொழுதின் எல்லுறப்
பனிக்கால் கொண்ட பையுள் யாமத்துப்
பல்லிதழ் உண்கண் கலுழ
நில்லாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே."
—நற்றிணை, 241.

"எழிலுடைய அம்மனைமீர்! என்னரங்கத் தின்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
எழுகமலப் பூவழகர் எம்மானார் என்னுடைய
கழல்வளையைத் தாமும் கழல்வளையே ஆக்கினரே!"
—நா. திருமொழி, 11:2

" தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை."

—திருக்குறள்.

" இறையிறந்
திலங்குவளை நெகிழச் சாஅய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே."

—குறுந்தொகை, 50.

" தன்போல் சினத்துரும் ஏந்திய
கோன்கன்னித் தாழ்துறைவாய்ப்
பொன்போல் மலர்ப்புன்னைக் கானலும்
நோக்கிப் புலம்புகொண்ட
என்போல் இரவினெல் லாம்துயி
லாதுநின் றேங்குதியால்
அன்போ டொருவற் கறிவிழந்
தாயோ அலைகடலே!"

"பொன்றான் பயப்பித்து நன்னிறம்
கொண்டு புணர்ந்தகன்று
சென்றார் உளரோ நினக்குச்சொல்
லாய்செந் நிலத்தை வெம்போர்
வென்றான் வியனில வேந்தன்
விசாரிதன் வெல்கழல்சேர்ந்
தொன்றார் முனைபோல் கலங்கித்துஞ்
சாயால் ஒலிகடலே!"

—இறையனாகப் பொருள், 234, 255.

"கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார் காவிரிநீர்
செய்ப்புரள வோடும் திருவரங்கச் செல்வனார்

எப்பொருட்கும் நின்றார்க்கும் எய்தாது நான்மறையின்
சொற்பொருளாய் நின்றாரென் மெய்ப்பொருளும்
[கொண்டாரே !"
—நா. திருமொழி, 11 : 6

" யானே யீண்டை யேனே ; என்னலனே
ஏனல் காவலர் கவணொலி வெரீஇக்
கானயானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலின் நிவக்கும்
கானக நாடனொ டாண்டொழிந் தன்றே."
—குறுந்தொகை, 54

" முகைமுற் றினவே முல்லை ; முல்லையொடு
தகைமுற் றினவே தண்கார் வியன்புனம் ;
வாலிழை நெகிழ்த்தோர் வாரார்
மாலை வந்தன்றென் மாணலங் குறித்தே."
—குறுந்தொகை, 188

" கண்ணாலங் கோடித்துக் கன்னிதன்னைக் கைப்பிடிப்
திண்ணார்ந் திருந்த சிசுபாலன் தேசழிந்து [பான்
அண்ணாந் திருக்கவே யாங்கவளைக் கைப்பிடித்த
பெண்ணாளன் பேணுமூர் பேரு மரங்கமே."
—நா. திருமொழி, 11 : 9

" வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கும் அளி."
—திருக்குறள்.

" தம்மை யுகப்பாரைத் தாமுகப்பர் என்னுஞ்சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பா ராரினியே !"
—நா. திருமொழி, 11 : 10

"பெரியோர் மொழிபிற பூாரென்று
தேறுதல் பேதமையே."

—தஞ்சை, 291

"நீர்வார் மருங்கின் நீரணி திகழ
இன்னும் வாரார் ஆயின் நன்னுதல்!
யாதுகொல் மற்றவர் நிலையே? காதலர்
கருவிக் காரிடி இரீஇய
பருவ மன்றவர் வருதுமென் றதுவே."

—அகநானூறு, 139

"வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்
தாழ்சினை உறங்கும் தண்டுறை ஊர!
விழையா உள்ளம் விழைவ தாயினும்
என்றும், "கேட்டவை தோட்டி யாக மீட்டாங்
கறனும் பொருளும் வழாமை நாடித்
தன்தக வுடைமை நோக்கி மற்றதன்
பின்னா கும்மே முன்னியது முடித்தல்;
அனைய பெரியோர் ஒழுக்கம்; அதனால்
அரிய பெரியோர்த் தெருங் காலை
நும்மோர் அன்னோர் மாட்டும் இன்ன
பொய்யொடு மிடைந்தவை தோன்றின்
மெய்யாண் டுளதோஇவ் வுலகத் தானே!"

—அகநானூறு, 286

"நெய்யொன்று வேல்நெடு மாறன்தென்
னாடன்ன நேரிழையிம்
மையொன்று வாள்கண் மடந்தை
திறத்திட் டறம்திரிந்து

பொய்யொன்று நின்கண் நிகழுமென்
றுல்பின்னைப் பூஞ்சிலம்பா!
மெய்யொன்றும் இன்றி ஒழியுங்கொல்
லோஇவ் வியலிடமே!"

"திரைப்பால் இரும்புனல் சேஊர்
எதிர்நின்ற சேரலர்கோன்
வரைப்பால் அடையச்செற் றுன்வையை
அன்றுள் திறத்துவண்டார்
விரைப்பால் நறுங்கண்ணி யாய்!பொய்மை
நீசொல்லின் மெய்ம்மையென்ப
துரைப்பார் பிறரினி யாவர்கொல்
லோஇவ் வுலகினுள்ளே!"

—இறையனாரகப் பொருள், 159, 160

"மற்றிருந் தீர்கட் கறியலாகா
மாதவ னென்பதோ ரன்புதன்னை
உற்றிருந் தேனுக் குரைப்பதெல்லாம்
ஊமைய ரோடு செவிடர்வார்த்தை
பெற்றிருந் தாளை யொழியவேபோய்ப்
பேர்த்தொரு தாயில் வளர்ந்தநம்பி
மற்பொருந் தாமற் களமடைந்த
மதுரைப் புறத்தென்னை யுய்த்திடுமின்."

—நா. திருமொழி, 12 : 1

"பாடில கலிழுங் கண்ணொடு புலம்பி
ஈங்கிவண் உறைதலும் உய்குவ மாங்கே
எழுவினி வாழியென் னெஞ்சே! முனாது

குல்லைக் கண்ணி வடுகர் முனையது
பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசின் அவருடை நாட்டே.''
—குறுந்தொகை, 11

''வன்கண் கொண்டு வலித்துவல் லுநரே
அரவுநுங்கு மதியினுக் கிவணோர் போலக்
களையா ராயினுங் கண்ணினிது படீஇயர்
அஞ்சல் என்மரு மில்லை யந்தில்
அளிதோ தானே நாணே
ஆங்கவர் வதிவயி னீங்கப் படினே!''
—குறுந்தொகை, 395

''நாணி யினியோர் கருமமில்லை;
நாலய லாரும் அறிந்தொழிந்தார்;
பாணியாது என்னை மருந்துசெய்து
பண்டுபண் டாக்க உறுதிராகில்
மாணி யுருவாய் உலகளந்த
மாயனைக் காணில் தலைமறியும்
ஆணையால் நீரென்னைக் காக்கவேண்டில்
ஆயப்பாடிக் கேஎன்னை உய்த்திடுமின்.''
—நா. திருமொழி, 12 : 2

''காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.'' —திருக்குறள்.

ஆண்டாள் நாணத்தை முற்றுந் துறந்து, கண்ணன் எழுந்தருளியிருக்கும் இடங்களுள் ஏதாவதொன்றில் தம்மைக் கொண்டுபோய் விடுமாறு அருகிலுள்ளவரை வற்புறுத்தல்:—

தலைவி நாணிழந்து வருந்துதல்

"அங்கைத் தலத்திடை ஆழி கொண்டான்
அவன்முகத் தன்றி விழியே னென்று
செங்கச்சுக் கொண்டு கண்ணாடை யார்த்துச்
சிறுமா னிடவரைக் காணில் நாணும்
கொங்கைத் தலமிவை நோக்கிக் காணீர்
கோவிந்த னுக்கல்லால் வாயில் போகா
இங்குத்தை வாழ்வை யொழிய வேபோய்
யமுனைக் கரைக்கென்னை யுய்த்திடுமின்"
நா. திருமொழி, 12 : 4

"உயிரினும் சிறந்தன்று நாணே : நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று."
—தொல்காப்பியம், களவியல், 22

"ஆர்க்குமென் நோயி தறிய லாகா
தம்மனை மீர்துழ திப்படாதே,
கார்க்கடல் வண்ணனென் பானொருவன்
கைகண்ட யோகம் தடவத் தீரும்
நீர்க்கரை நின்ற கடம்பை யேறிக்
காளிய னுச்சியில் நட்டம் பாய்ந்து,
போர்க்கள மாக நிருத்தம் செய்த
பொய்கைக் கரைக்கென்னை யுய்த்திடுமின்".
—நா. திருமொழி, 12 : 5

ஆண்டாள், தம் காதலனிடம் செல்ல வன்மை யற்றுள்ள தமக்கு, தம்மை உள்ளத்தோடு காதலி யாத அக்கண்ணனுடைய தொடர்புற்ற ஏதேனும் ஒரு பொருளைக் கொணர்ந்து கொடுத்துத் தம்மை ஆற்றுவிக்குமாறு பிறரை இறைஞ்சுதல் :

தலைவி காதலை மிகுதியும் உரைத்தல்

"கண்ண னென்னுங் கருந்தெய்வம்
காட்சிப் பழகிக் கிடப்பேனை
புண்ணிற் புளிப்பெய் தாற்போலப்
புறநின் றழகு பேசாதே
பெண்ணின் வருத்த மறியாத
பெருமா னரையிற் பீதக
வண்ண வாடை கொண்டென்னை
வாட்டம் தணிய வீசீரே."

—நா. திருமொழி, 13 : 1

"ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்."
"நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்."

—திருக்குறள்

"ஆரே யுலகத் தாற்றுவார் ஆயர்பாடி கவர்ந்துண்ணும்
காரே றுழக்க வுழக்குண்டு தளர்ந்தும்
முறிந்தும் கிடப்பேனை !"

நா. திருமொழி, 13 : 4

"குற்ற மற்ற முலைதன்னைக்
குமரன் கோலப் பணைத்தோளோடு
அற்ற குற்ற மவைதீர
அணைய அமுக்கிக் கட்டீரே."

—நா. திருமொழி, 13 : 7.

"பின்னை முன்வந்த பேதைதன்
காமப் பெருங்கடற்கு
பின்னை மன்றியுண் டோபுணை
ஆவது நீந்துதற்கே !"

—தஞ்சை 245

"ஓங்குமலை நாடன் சாந்துபுல ரகலம்
உள்ளின் உண்ணோய் மல்கும்
புல்லின் மாய்வ தெவன்கொல் அன்னாய்!"

—குறுந்தொகை, 150

"வேரல்வேலி வேர்க்கோட் பலவின்
சார லுடை செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெருபழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது; காமமோ பெரிதே!"

—குறுந்தொகை, 18

"உள்ளே யுருகி நைவேனை உளளோ இலளோ என்னாத
கொள்ளை கொள்ளிக் குறும்பனை."

—நா. திருமொழி, 13 : 8

"செம்மை யுடைய திருமார்பில்
சேர்ந்தா னேலும் ஒருநான்று
மெய்ம்மை சொல்லி முகநோக்கி
விடைதான் தருமேல் மிகநன்றே"

—நா. திருமொழி, 13 : 9

"நசைஇயார் நல்கா ரெனினும் அவர்மாட்
டிசையும் இனிய செவிக்கு."

—திருக்குறள்.

ஆண்டாளை அரங்கநாதன் ஏற்றுக்கொள்ள அன்னையார் மறைந்தார். அதை அறிந்த பெரியாழ்வார் தம் மகளாரின் பிரிவிற்குப் பெரிதும் வருந்திப் பலபல சொல்லிப் புலம்புகிறார்; எம்பெருமான் ஆறுதல் சொற்களால் ஸ்ரீ வில்லிபுத்தூர் திரும்பித் தம் இல்லத்தை அடைகிறார். அல்லியும் தாமரையும் பனியினால் இதழ்களை உதிர்த்து நிற்க, அதனால்

அழகிழந்த தாமரைப் பொய்கை போன்று தம் இல்லம் அழகற்றிருந்தது; இருந்தவர் யாவரும் குடிபோனது போன்று வெறிதே காணப்பட்டது. மயில் போன்று உலவிக்கொண்டும், குயில் போன்று பாடிக்கொண்டும் இருந்த தம் மகளாரை எங்கும் கண்டிலர். அத்துன்பம் பொருத ஆழ்வார் வருந்துகிறார்.

"நல்லதோர் தாமரைப் பொய்கை
நாண்மலர் மேல்பனி சோர,
அல்லியும் தாது முதிர்ந்திட்
டழகழிந் தாலொத்த தாலோ,
இல்லம் வெறியோடிற் றாலோ
என்மக ளையெங்குங் காணேன்!
மல்லரை யட்டவன் பின்போய்
மதுரைப் புறம்புக்காள் கொல்லோ!"

—பெரியாழ்வார் திருமொழி, 3 : 8 : 1

"ஐதே காமம் யானே ஒய்யெனத்
தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து
ஓரை ஆயமும் நொச்சியும் காண்தொறும்
நீர்வார் கண்ணேன் கலுழும் என்னினும்
கிள்ளையும் கிளியெனக் கூஉம் இளையோள்
வழுவிலள் அம்ம தானே குழீஇ
அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர்
இன்னா இன்னுரை கேட்ட சின்னாள்
அறியேன் போல உயிரேன்
நறிய நாறுநின் கதுப்பென் றேனே."

—நற்றிணை, 143

# ஓவியமும் காவியமும்

**கலைகள் :**—கலை என்பது என்ன? இதற்குப் பல பொருள்கள் உண்டு. ஆயினும், இதற்குச் சிறப்பாக அமைந்த பொருள் கல்வி என்பது. இது கலைக்குப் பொருளாக இருத்தல் மட்டுமேயன்றி, அதற்கு அடிகோல் எனவுங் கூறலாம். ஒரு மரத்திற்கு வேர் எங்ஙனம் ஊன்றுகோலோ, அங்ஙனமே கலைகளுக்குக் கல்வி ஊன்று கோலாகும். மக்கள் கல்வியை எவ்வளவுக்கெவ்வளவு ஆழ்ந்து கற்கின்றார்களோ அவ்வளவுக்கவ்வளவு இஃது உலகறிவு, நூலறிவு, பொது அறிவு முதலிய பல அறிவுகளை வளரச் செய்கின்றது; அவ்வறிவின் தொகுதி வளரவளர, மனத்தை ஆராய்ச்சியில் நுழைக்கின்றது; அவ்வாராய்ச்சி ஆழ்ந்து செல்லச்செல்ல, பொருள்களின் உண்மைத் தத்துவங்களை அறிய வேண்டுமென்னும் அவாவை மிகுவிக்கின்றது; அந்த அவா, சுவைதரும் பொருள் ஒன்றிலோ பலவிலோ சிந்தையைச் செலுத்துமாறு தூண்டுகின்றது. அங்ஙனமே அவற்றில் அழுந்துபவர் சின்னாட்களில் சிறந்த கலைஞராய்த் திகழ்கின்றனர். கலைகள் எங்ஙனம் பலவோ, அங்ஙனமே கலைஞரும் பல திறத்தினராவர். இம்முறையிலேயே நம் நாட்டில் கலைகள் பல உருக் கொண்டெழுந்தன. இதற்குக் காரணம், அவரவர்க்கு ஏற்படும் சுவையும், அவரவர் கல்வியின் ஆழமுமே யாகும்.

இத்தகைய கலைகள் அறுபத்து நான்கு என்பர். இக்கலை குடியேறாத இடமும், இதைப் பெறாத உயி

ரும் இல்லையென உறுதியாக உரைக்கலாம். எறும்பு முதல் யானை ஈறுக உள்ள பிராணிகளிடத்தும், குழவி முதல் ஞானி ஈறுக உள்ள மக்களிடத்தும், மற்ற எல்லாப் பொருள்களிடத்தும் இக்கலை ஒவ்வொரு முறையில் அமைந்துள்ளது என்பது மிகையன்று. ஆயினும், மக்களிடத்தில் கலைகள், நாளுக்கு நாளும், நாட்டிற்கு நாடும், சமுதாயத்திற்குச் சமுதாயமும் வளர்ந்துகொண்டே போதல் போன்று, மாக்களிடத்தில் காணுதற்கியலாது. அவை அவற்றினிடம் இயற்கையாயமைந்து எக்காலத்தும் ஒரே தன்மையில் நிகழ்கின்றன: மயில், பல நிறங்களமைந்த தன் தோகையை விரித்து ஆடுகின்றது; குயில், அழகாகப்பாடுகின்றது; தூக்கணங்குருவி, உயர்ந்த கலை வல்லுநரும் வியக்குமாறு தன் கூட்டை அமைக்கின்றது; வேங்கை, பல அடித்தொலைவை ஒரே பாய்ச்சலில் பாய்ந்து கடக்கின்றது; நரி, தந்திரத்தினல் தன்னினும் வன்மையுள்ள பிராணிகளையும் வெல்லுகின்றது. இங்ஙனமே பல சான்றுகளைப் பகரலாம். பிறந்த மகவு, அன்றே மறுநாளோ, தாய்ப்பாலை உண்ண முயன்று, அதைச் சுவைக்கத் தொடங்குகின்றதே! இஃதொரு சிறந்த கலையன்றே! பின்னர் அதனிடம் படிப்படியாய் உருக்கொண்டெழும் கலைகள் எத்தனை? இம்முறையில் அவரவர் பண்பு, கல்வி, அறிவு, கூட்டுறவு முதலியவற்றிற்கேற்பக் கலைகள் அவரவர்களிடம் பொருந்துகின்றன. விரிவு இங்கு வேண்டற்பாலதன்று.

இக்கலைகளே நாட்டை அணி செய்வன; நாட்டிற்கு உயிரும் இவைகளே. எந்நாட்டில் உயரிய கலைகள் இல்லையோ, அந்நாடு நாடாகாது. ஒரு நாட்டின் கலைகளிலிருந்துதான் அதன் மேன்மை, பண்பு, நாகரிகம் முதலியவற்றை அறிதல் வேண்டும். இத்தகைய கலைகள் முதன்முதலில் கால் கோள் விழாக்கொண்டது நம் தமிழ் நாட்டிலேயே. வானசாத்திரம் போன்ற அரிய கலைகள் நம் தமிழ் நாட்டிற்கே உரியவை. இக்கலைகளை நம் பண்டைத் தமிழர் வெற்றுடலோடு சேர்த்துக்கண்டாரில்லை. இவற்றை உயிரோடு கலந்து இன்பந்துய்த்தனர். அவர்கட்கு இக்கலைகள் வளரவளரப் புறமனம் ஒடுங்கியது; அகமனம் ஒளிவிட்டு வளர்ந்தது. அத்தகையோர், உடல் தத்துவத்தையும், உயிருண்மைகளையும் தெள்ளிதின் உணர்ந்தனர்; பிணியை ஓட்டினர்; ஆயுளைப் பெருக்கினர். இறை வடிவம் அவர்தம் கண்முன் நின்றது. தம் மனத்தூய்மையினுல் யாவரையும் திருத்தினர். அவருடைய இனியவார்த்தைகள் மற்ருேரை வசப்படுத்தின. அன்னுர் தன்னலங்கருதாது காலங்கழித்தனர். அவர்கள் வாழுமிடமட்டுமேயன்றி, எல்லா இடங்களும் அவர்களை நோக்கியே வாழ்ந்தன. அவர்கள் எங்கும் தலைமை பெற்றுத் திகழ்ந்தார்கள். அவர்களிடையில் ஒற்றுமை தவழ்ந்தது. கலை வல்லுநரிடையே போர் ஏது? மாறுபாடு ஏது? இங்ஙனம் கலைகள், மக்களுக்கு அறிவையும் அன்பையும் ஊட்டி, மதிப்பையும் உண்டாக்கின.

அக்கலைகளுக்கும், இக்காலக் கலைகளுக்கும் எத்துணை வேறுபாடுள்ளது! பெரிதும் வளர்ந்தோங்கிய விஞ்ஞானக்கலைகளினால் இப்போது ஏற்பட்டுள்ள பயன் யாது? மிருகத்தன்மையும், கொலையும், கொடுமையுமே அல்லவா? அந்தோ! இக்கலைகளினால் தெய்வத்தன்மையைக் காணும் காலம் எப்போது வருமோ, அறியோம்! முற்கூறியவாறு மக்கள் மனத்தைப் பண்படுத்தி, ஆன்ம அறிவை ஊட்டும் கலைகளுள் ஓவியக்கலையும் காவியக்கலையும் சிறந்தனவாகும். அக்கலைஞருள் முன்னவரை ஓவியர் எனவும் பின்னவரைக் கவிஞர் எனவும் வழங்குகின்றோம்.

**ஓவியக்கலை:**—ஓவியரும் உயரிய கலைஞரே. அவர் வரையும் ஓவியமும் ஒரு சிறந்த கலையே. ஓவியத்தில் துறை போய ஒருவர், அழகிய மரமடர்ந்த காட்டையோ, அழகிய மங்கையையோ, இறையின் அருளுருவத்தையோ வரைகிறார். அதனைக் காண்போர்க்கு அவ்வுருவப் பொருளை நேரில் காண்பது போன்றே ஓர் உணர்ச்சி உண்டாகிறது. அவற்றின் உண்மை உருவங்கள், காண்போர் முன் நிற்கின்றன. அவர் நெஞ்சம் உவகை கொள்ளுகிறது; அவர் அவ்வோவியத்தின் ஒவ்வொரு பகுதியையுங் கண்டு கண்டு களிக்கின்றனர். பொதுமக்களுக்கு வெற்றுணவை அளிக்கும் அவ்வோவியம், அதன் நுட்பமுணர்ந்தவருக்கு விருந்துணவை அளிக்கிறது. அவர்கள் நெஞ்சம் அவ்வோவிய அளவிலேயே நிற்குமோ? நில்லாது. அஃது ஓவியரிடம் செல்லும்; அவரிடம் நன்மதிப்புக் கொள்ளும்; அவரது திறனைப்

பேசிப் பேசி மகிழும்; அவரையும் அவர் கலையையும் வாழ்த்தாநிற்கும். எத்தனை வகை ஓவியங்கள் நம் நாட்டில் இன்னும் காட்சியளிக்கின்றன! சிற்பமும் ஓவியத்தில் ஒரு பகுதியேயாகும். நம் ஆலயங்களிலும் பொது இடங்களிலும் எத்தனை அழகிய சிற்பங்களைக் காண்கின்றோம்! மகாபலிபுரத்தின் சிற்பக் கலையைக் கண்டு மகிழாதார் யார்? அது மாணவருக்கும் மற்றோருக்கும் இன்பமூட்டுகின்றது அல்லவா! அஜந்தாக் குகை ஒரு சிற்பக் கூடமாக வன்றோ காட்சி அளிக்கின்றது! மேல் நாட்டார் அதைப் பெரிதும் வியந்து பாராட்டுகின்றனர். அவற்றின் பெருமையை நம்மவரைக்காட்டிலும் அவர்கள் நன்குணர்ந்துள்ளார்கள். இத்தகைய சிற்பங்களை இயற்றுதற்கு எவ்வளவு பொறுமை வேண்டும்! எத்துணை நுண்ணறிவு தேவை! போலிக் கலைகளில் நெஞ்சம் ஊன்றி நிற்கும் இக்காலத்தில் இத்தெய்வக் கலைக்கு வழி ஏது? இதில் சிந்தை செலுத்தல் யாங்ஙனம்? பொறுமை ஏது? ஆதரிப்பவர் யார்? இதைக் கண்டுகளிக்கும் நுண்ணறிவுடையார் தாம் எங்குள்ளார்? இவை யாவும் வறண்ட இக்காலத்தில் உயர்ந்த ஓவியக்கலை எங்கேனும் சென்று ஒளியாமல் என் செய்யும்!

**காவியக்கலை:**—கவி எனினும், பா எனினும் ஒன்றே. பா எங்கு உண்டாகும்? மக்கள் மனத்தைக் கவரும் அழகிய தோற்றங்கள் எங்கெங்கு உண்டோ, அங்கங்கெல்லாம் பாக்களும் உண்டு. பாவலர் உள்ளத்தில் மலை, கடல், மரங்கள், புற்றரைகள், பறவைகள் முதலிய இயற்கைத் தோற்றங்கள் பதிகின்றன.

அவர்கள் நுட்பமதியால் அவைகள் உடை உடுத்து, அணி அணிந்து புறப்படுகின்றன. அவை முதலில் ஒலி வடிவத்தைப் பெறுகின்றன; பின்பு வரி வடிவை அடைகின்றன. இம்முறையில் பாக்கள் உருக் கொண்டு ஒளிர்கின்றன. இத்தகை புலவரையே இயற்புலவர் எனக் கூறுகின்றோம்.

இங்ஙனச் சிறப்பு வாய்ந்த ஓவியக்கலையும் ஆதித்தன் முன் திங்கள் போன்று, காவியக் கலையின் முன் ஒளி இழந்து நிற்கும். அறிவுடையோர் வரைந்த ஓர் ஓவியம், அப்படத்தில் அமைந்தவரின் உடற்கூறுகளையும், அவற்றின் அழகுகளையும் மட்டுமே அல்லாமல், அவர் கல்வி, அறிவு, ஆண்மை, பண்பு முதலியவற்றையும் எடுத்துக் காட்டுமோ? ஓவியர் ஒரு மலர்வனத்தை வரைய எத்தனை நாட்கள் தேவை! எத்தனை துணைக்கருவிகள் வேண்டும்! பொருட்செலவு எவ்வளவு! நற்புலமை வாய்ந்த கவிஞருக்கோ, அதைத் தம் கவியில் அமைக்கச் சில விநாடிகளே போதுமல்லவா? அன்றியும், பல கருவிகளைத் தன்னுட்கொண்ட காவியம் பல வகை உருவ அமைப்புக்களைக் கொண்ட ஓவியத்தைப் போன்று ஒரு முறை பார்த்து மன நிறைவைக் கொள்ளக்கூடிய தன்றே! பன்முறையும் நுணுகி நோக்கி நோக்கி அதன் நுட்பங்களைக் காணவேண்டும் என்னும் அவாவை எழுப்பாநிற்குமே! எத்தனை முறை நோக்கினும், ஒவ்வொரு முறையும் இரண்டொரு புதிய பொருள்கள் தோன்றிக்கொண்டே இருக்குமல்லவா? அப்போதைக்கப்போது புதிய நீர் சுரந்துகொண்டே இருக்கும் ஊற்றிற்கன்றோ அதை ஒப்பிடுதல் வேண்

டும்! இத்தன்மையை வாய்க்கப் பெருத ஒன்றை உயரிய காவியம் எனக் கூறுதற்கு இடனேது? இயற்கைப் புலவரிடமிருந்து ஒரு நாளைக்கு எத்தனையோ கவிகள் தோன்றுநிற்கும். ஆனுல், அவை யாவும் வரி வடிவில் அமைதல் இல்லை. புலவர் மனம் காவியக் கூடம்; அவர்கள் நா, கவிகளைத் தோற்றுவிக்கும் யந்திரம், அந்நா, விரைந்து பல கவிகளை வெளிப்படுத்தும்! இச்செயல் ஓவியக்காரருக்கு இயலுமோ? அவர் ஒன்றிலேயே ஊன்றியன்றே பன்னுட்களைக் கடத்துவர்! இவையல்லாமல், கவியில் ஓவியத்தைக் காணலாம்; ஓவியத்தில் கவியைக் காண இயலுமோ?

**அருட்கவிஞர்** :—இத்தகைய கவிக்கும் கல்விக்கும் மிக்க தொடர்புண்டு. கற்க வேண்டியவற்றைத் தெளியக் கற்றுப் புலமை வாய்ந்தவரே கவி பாட இயலும் என்பது வழக்கு. புலமையுற்ருேர் என்பதற்குக் கவிஞர் என்றே பொருள் கூறுவர். பெரும்பான்மையும் கற்ருேரே கவி இயற்றுவதையும் காண்கின்ருேம். இங்ஙனம் பல காரணங்களினுல் கல்விக்கும் கவிக்கும் மிக்க தொடர்பிருப்பினும், கவி இயற்றுதற்குக் கல்வியே இன்றியமையாத காரணம் என இயம்புதற்கு அறிஞர் ஒருப்படார். ஏன்? உயரிய கல்வியுடையோர் யாவரிடமிருந்தும் சொற்சுவை பொருட்சுவை முதலியன அமைந்த கவிகள் வெளிவரக் கண்டிலோம்; நல்ல புலமை வாயாத சிலரும் கற்போர் கேட்போர் நாவும் செவியும் இனிக்கப் பல பாடல்கள் பாடுவதைக் காண்கின்ருேம். இதற்குக் காரணம், புலவருடைய பாடல்களைப் படித்துப்

படித்து அவ்வோசையும் அச்சொற்களும் நாவில் அமையப் பெற்றதே எனச் சிலர் கருதுகின்றனர். "சித்திரமும் கைப்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம்" என்னுமாறு இஃதும் ஒரு காரணமாயிருக்கலாம். ஆயினும், இத்தகையோர் எச்சொற்களில் எத்தகைய பாடல்களில் பழகினரோ, அவ்வளவில் நிற்க முடியுமேயல்லாமல், இடம் பொருள் காலங்களுக்கேற்ப நயம் இனிமை சுவைகள் நிறைந்த பாடல்களை அப்போதைக்கப்போது ஆக்க இயலாதென்பது உறுதி. அவர்கள் நெஞ்சமும் இயற்புலவரைப் போன்று, பா நிரம்பிய பேழையாகவிருந்து, எப்போதும் கிளர்ச்சியையும் குதுகுலத்தையும் அடைதலும் இல்லை. இஃதொரு புறமிருக்க, முன்னர்ச் செப்பியவாறு நன்கு புலமைவாய்ந்தவருள் யாவரும் கீழ்க் கூறிய சுவைகள் அமைந்த கவிகளைக் கழறுகின்றனர் எனச் சொல்லுதற்கில்லை. அங்ஙனமாயின், 'சுவை ததும்பும் இனிய கவிகள் இயற்றுதற்குச் சிறந்த மூலந்தான் யாது?' என்னும் வினுப் பிறக்குமன்ரு? இதைத்தான் சிறிது ஆழ்ந்து நோக்கவேண்டும், அப்போதே உண்மை புலனுகும். கல்வியறிவோ, சான்ருேர் கூட்டுறவோ பெருது, உலகச் சூழலில் சிக்குண்டு, ஒரு தேவதாசியின்பால் கொண்ட காதலினுல் அவளுக்குத் துணை சென்று, காளி கோயிலில் உறங்கிக்கிடந்த காளிதாசரும், தடாகத்தில் நீராடச் சென்ற தந்தையாரின் உடன் போந்த மூன்ருண்டுடைய திருஞான சம்பந்தரும், தோன்றியதிலிருந்து உலகத்தார் தொடர்பையோ கல்வியையோ பெருத நம்மாழ்வாரும் அவ்வப்

போதே கவிபாடத் தொடங்கினரே! இதற்குக் காரணம் யாது? இவர்கள் சாமானிய கவிஞர்களா? இவர்கள் கவிகளுக்கு முன்னர் எத்தகையோர் கவிகளை ஒப்புப்படுத்த இயலும்! இக்கவிஞரோடு எக்கவிஞரைத்தான் ஈடுபடுத்த இயலும்! தெய்வக்கவிஞர்களல்லரா இவர்கள்! இவர்களிடமிருந்து ஒன்ரு, பத்தா, ஆயிரக்கணக்கான பாடல்களல்லவா வெளிப் போந்துள்ளன! இவை இவ்வுலகையும் இவ்வுடலையும் பற்றியவையா? இல்லையே! அவ்வுலகினையும் ஆன்மாவையும் பற்றியனவல்லவோ! இவற்றிலுள்ள சொல்லின்பத்தையும், பொருளின் பத்தையும், அமைப்பின்பத்தையும் துய்த்தலல்லவா பிறவியின் பயன்! இவை எங்கும் எக்காலத்தும் நிலைத்து நின்று பயனளிப்பன அல்லவா! மக்கள் பிறவிப் பிணிக்கு இவற்றிலும் மருந்து வேறென்றுளதோ! இவற்றைத் தெவிட்டாத தேவாமிர்தம் என்னில் குறை யாது? இதற்குத் தெய்வ அருளை அன்றி வேறெதனைக் காரணமாகச் சொல்ல இயலும்! வேறு எதுதான் இத்துணைப் பெறுப் பேற்றை அளிக்கும்! ஊற்றிலிருந்து மாருமல் தூய நீர் சுரத்தல் போன்றன்றே, கவிஞர்கள் நெஞ்சகத்திலிருந்து இடைவிடாமல் நயமுடைய பாக்கள் வெளி வருகின்றன! நீரூற்றை எங்ஙனம் அடக்க முடியாதோ, அங்ஙனமே அவர்கள் மனக்கிளர்ச்சியையும் தடுக்க எவர்க்கும் இயலாதென்பது திண்ணம்! அதனாலன்ரே அவர்கள் ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடிப்போந்தார்கள்? ஊற்றுநீர் உலகிற்குப் பெரும் பயனளித்தல் போன்று, அவர்கள் பாடல்களும் மக்

களுக்கு உற்ற நலமளிக்கின்றன என்பதை அறியா தார் யார்? இவற்றால் சிலர் பொருள் செறிந்த பாக்களைப் பாடுதற்கு இறைவன் அருளே சிறந்த மூலம் என்பதும், அவன் அருளைத் துணையாகக்கொண்டே அச்சீரியர் பாடுகின்றனரென்பதும் புலனுகின்றன. ஆயினும், இந்த அளவில் நிற்றற்கும் அறிஞர் அகம் இடந்தருதல் இல்லை. அவர் இன்னும் சிறிது ஆழச் செல்கின்றனர், "பாடுவித்தால் யாரொருவர் பாடா தாரே!" என்றவாறு, இறைவனே அறிஞர் உள்ளத்திலிருந்து பாடுவிக்கிறான். எல்லாம் அவன் செயலே. ஒருவன் ஒரு பதுமையில் கயிற்றைப் பிணைத்து எவ்வாறெல்லாம் ஆட்டுகின்றானே, அவ்வாறெல்லாம் அது நடிப்பது போன்று, பரமன் நம் செயல்களாகிய (கன்மமாகிய) கயிற்றைப் பற்றி அசைக்கும்போது அதற்கேற்ப நாமும் அசைந்துகொண்டிருக்கின்றோம்! அங்ஙனமன்றி, நாமே நிகழ்த்தும் ஒரு செயலேனும் உண்டோ? அவ்வாறுளதாயின், எத்தனையோ பேர் தாம் விரும்பிய காரியங்களை முற்றுறச் செய்து இன்பத்தில் திளைப்பரே! அதற்கு வழியில்லாமையாற்றானே, துன்பமும் கவலையும் உலகில் சூழ்ந்துள்ளன? அதை வலியுறுத்தவன்றோ,

> "ஒன்றை நினைக்கில் அது ஒழிந்திட் டொன்றாகும்;
> அன்றி அதுவரினும் வந்தெய்தும்;—ஒன்றை
> நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்;
> எனையாளும் ஈசன் செயல்."

என்னும் நீதிச் செய்யுள் எழுந்தது? இங்கு எடுத்துக்காட்டிய இறையன்பர்களுள் நம்மாழ்வாரும் இதற்குச் சான்று பகர்கிறார்: "என் நாவில்

வந்து நுழைந்து நல்லனவும் இனியனவுமான கவி களால் தன்னைச் சொல்லிக்கொண்ட என் அப்பனை, யான் மறக்க முடியுமோ!" என்று தாம் இறைவனைத் துதித்துப் பாடியதற்கு அவன் அருளே காரணமென் பதைச் சில பாசுரங்களால் வலியுறுத்துகிறார்.[1] இவற்றால் கவி இயற்றுதற்கு இறைவன் அருளே காரணமென்பதும், அவ்வருளால் பாடப் பெற்றவை களே என்றும் நிலை பெற்று மக்கட்கு அழியா இன் பத்தையும் பயனையும் ஈயுமென்பதும், அவர்களே அருட்கவிஞர் எனப் பெயர் பெறுவர் என்பதும் அறிந்தோம்.

இத்தகைய அருட்கவிஞருள் ஒருவரே நம் பெண் ணரசியார். இவர் பாக்களுள் யமகம் திரிபு என்னும் சொல்லணிகளும், நாகபந்தம் முதலிய சித்திரக் கவி களும் இடம் பெற்றில. இவர் எதுகை மோனை களில் பெரிதும் மனத்தைச் செலுத்திலர். இவர் கவிகள் கேவலம் யாப்பையா அடியாகக் கொண் டுள்ளன! கண்ணன் அழகு, பண்பு, செயல் ஆகிய வற்றையல்லவா ஊன்று கோலாய்ப் பெற்றுத்திகழ் கின்றன! இத்தகையோர் இலக்கணக் கோட்பாடு

---

1. "ஆமுதல் வன்இவ னென்றுதன் தேற்றிஎன்
நாமுதல் வந்து புகுந்துநல் லின்கவி
தூமுதல் பத்தர்க்குத் தான்தன்னைச் சொன்னஎன்
வாய்முத லப்பனை என்று மறப்பனோ!"

"இன்கவி பாடும் பரம கவிகளால்
தன்கவி தான்தன்னைப் பாடுவி யாது,இன்று
நன்குவந்து என்னுட னாக்கிஎன் னால்தன்னை
வன்கவி பாடும்என் வைகுந்த நாதனே."
—திருவாய் மொழி—7: 9: 3. 6.

களைக் கூர்ந்து நோக்குதல் யாங்ஙனம்! அதற்கு இவர் சிந்தையில் சிறிதிடந்தான் ஏது? ஆயினும், அவை எழுத்து, சொல், சீர், தளை முதலியவற்றிற் கேற்ப நன்கமைந்துள்ளனவே என்னில், அவை இவர் முயற்சியினுல் பொருந்தியனவல்ல. அவற்றிற்கென இவர் செயலாற்றியவருமல்லர். பரமனை அடைந்து இன்பந்துய்க்க வேண்டுமென்பதில் இவருக்குண்டான ஆற்ருமையே அவ்வமைப்பிற்கு வழிகோலிற்று என்பதுதான் பொருந்தமுடையதாகும். செவ்விய முறையில் கவிபாடுதற்கு இறைவன் அருளே சிறந்த காரணமாதலின், நம்மாழ்வாரைப் போன்றே எம் பெருமானே இவருள்ளிருந்தும் பாடுவித்துக்கொண்டனன் எனச் செப்பவும் இடமுண்டன்ருே! ஆயினும், இத்துடன் நிறுத்திச் செல்ல இவர் இயல்பு இடந்தந்திலது. ஏன்? இவர் ஆழ்வார்களினும் ஒருபடி உயர்ந்தவரல்லரா? அதற்கேற்பவன்ருே இவர் செயலும் நிகழும்! அதை எடுத்துக் காட்டுவதுதானே சிறப்புடைமை? கவி இயற்றும் தன்மை சிறிதும் பெருத வான்மீகி முனிவருக்கு, ஆண் பறவையை இழந்த பெண் கபோதத்தின் துயர நிலையைக் கண்டு தாங்காது சொல்லிய சொற்களல்லவா அழகிய கவியாய் அமைந்தன! அக்கவியின் அமைப்பையும், அழகையும், பொருட்செறிவையும் போற்ருதார் யார்? முனிவர், ஸ்ரீராமபிரானது சீரிய வரலாற்றைப் பெருங் காப்பியமாய்ச் சொற்றற்கும் அஃதேயன்ருே அடிகோலி! நான்முகன் அருளைப் பெற்ற அவருக்குச் சிறு பறவையின் துயரங்கண்டு தாங்காத ஆற்ருமை காரணமாய் ஒரு சீரிய காவியம் முறையின்படி

அமைந்ததெனில், கண்ணனைப் பிரிந்த ஆற்றுமையி ஞல் அவன் அருளைப்பெற்ற ஆண்டாளுக்குச் சொற் சுவை பொருட்சுவை பொருந்திய கவிகள் முறை யின்படி அமைதல் என்பது வியப்பிற்கிடமானதோ! இது நிற்க.

இவர் பாசுரங்களில் ஒவ்வொரு சொல்லும் ஒவ் வொரு மணியென மிளிரும்; பொருளோ, பல மணி களை முறையின்படி அமைத்து உருப்படுத்திக் காட் டும் பொன்னென மிளிரும். இந்நிலையில் மணியின் ஒளியைப் பொன்னும், பொன்னின் ஒளியை மணி யும் மிகுதிப்படுத்திக் காட்டும் செவ்விய அணியைப் போன்று, இவருடைய கவிகளில் சொற்களும் அவற் றின் பொருளும் ஒன்றின் சீர்மையை மற்றென்று மிகுதிப்படுத்திக்கொண்டிலங்கும் சிறப்புத்தெய்வப் புலவர்க்கல்லால், மற்றவருக்கு எடுத்தியம்பும் தரத் ததோ! இம்முறையில் எம்பெருமானுகிய செம் பொருள் இவர் பத்தி வலையிற்சிக்குண்டு, இவர் ஞானக் கண்ணிற்குக் காட்சி அளிக்கிறது; அக் காட்சி அன்னையாரை ஆர்வக் கடலில் ஆழ்த்து கிறது; அவ்வார்வம் உள்ளடங்காமல் பொங்கி வழி கிறது; அஃது அச்செம்பொருளின் உயர்நிலை களைப் புகழ்ந்து போற்ற இவரை ஊக்குகிறது. இவர் கவிகள் சான்றேர் உள்ளம் போன்றும், களங்கமற்ற நீரோடை போன்றும் தெளிவுடையவை; இனிய ஓசையும், பொருட்செறிவும், ஆழ்கருத்தும் பெற் றுள்ளவை; எளிய நடையையும், உயர்பொருளை யும் தம்மகத்தே கொண்டிருத்தல் மட்டுமே யல்லா மல், இனிமையையே உருவெனக்கொண்டவை. இத்

தன்மையில் இவர் பாக்களை இனிய மதுரகவி எனல் மிகையாகாது. அவை முத்தையும் பொன்னையும் வாரி இறைக்கும் மலையருவியைப் போன்றன்றோ அரிய பொருள்களை அள்ளி அள்ளித் தருகின்றன! அத்தகைய சீரிய கவிகள் கல்வி கற்றதனாலேயே ஒரு வருக்கு அமையும் எனக் கூறல் பெருமயக்கே! இறைவன் இன்னருளே இவற்றிற்குக் காரண மாகும். நம்மனோர் இன்பந்துய்க்க, தாம் எம்பெரு மான் அருளை மாந்தித் தமிழ் ஓவியம் அமைந்த பாக் களை நமக்கீந்த அன்னையாரின் அருட்டிறமென்னே! இவர் பாசுரங்களில் சொற்பொருளினும் குறிப்புப் பொருளே விஞ்சி நிற்கும். அவை இயற்கைப் பொருள்களை உடலாகவும், அவற்றின் அழகை உயி ராகவும் அவற்றினுள் உறையும் இறையை உயிருக் குயிராகவும் பெற்றுத் துலங்கும்.

**காவியத்தில் ஓவியம்:**—முற்கூறியவற்றால் ஓவியமும் காவியமும் இத்தன்மையன என்பதும், ஓவியத்திலும் காவியமே சிறந்ததென்பதும் அறிந் தோம். இரண்டும் தனித்தனிப் பொருள்களேயாயி னும், மேல் செப்பிய வண்ணம் ஓவியத்தில் காவியத் தைக் காண இயலாவிடினும், அறிஞர் காவியங்களில் பல இயல்புகள் வாய்ந்த ஓவியங்களைக் காண இய லும். காவியம் உயர்ந்தது என்பதற்கு இஃதும் ஒரு காரணமெனத் தெளிக. ஓவியர் தம் படத்தில் தீட் டும் உருவத்தைக்காட்டிலும், கவிஞர் தம் பாவில் அமைக்கும் உருவம் செம்மை வாய்ந்தது; எப்பொரு ளாலும் அழியாதது; என்றும் அழுக்கேறாதது; உள் ளுறைகளைத் தெளித்துக் காட்டுவது; ஓவியருக்கும்,

கவிஞருக்கும், மற்றையோருக்கும் விருந்தளிப்பது. இம்முறையில் பாவலருக்கு ஓவியமும் கைவந்துள்ள தென்பது அறியலாம்.

ஆயினும், இங்ஙனம் காவியத்தில் ஓவியத்தை அமைக்க யாவருக்கும் இயலுதல் இல்லை. தம் அறிவை இயற்கை அழகுகளிடத்தில் பதிய வைத்து, அவற்றின் இன்னலங்களை உய்த்துணர்பவருக்கே இ∴து கூடுவதாகும். அவருள்ளும் சிலரே, இயற்கையின் புற அழகில் மட்டும் நில்லாமல், அதன் அகத்தில் அமைந்து உருக்காட்டும் இறைமட்டும் செல்வர். அவர் மனக்கண்ணிற்கு, இறையின் உருவம், பண்பு, நிறம் முதலியன அதில் காட்சி அளியாநிற்கும், அவற்றைத் தம் காவியத்தில் இறக்குவர். அவை ஓவியமாக உருக்கொண்டெழும். அவற்றுள் சொல்லோவியங்கள் சில; பொருளோவியங்கள் சில. மக்களுடைய புறமனமும், புறப்பொருளைக் காணும் நிலையிலேயே எப்போதும் நிற்பதில்லை. அது தன் முயற்சியால் புறத்திலிருந்து சிறிது உள் நுழைகிறது. இது புறத்திற்கும் அகத்திற்கும் இடைப்பட்ட நிலை. இந்நிலையில் அம்மனம் காவியத்தில் சொல்லோவியத்தைக் கண்டு மகிழ்கிறது. அம்மனத்திற்குப் பொருளோவியத்திற்குச் செல்ல வன்மை ஏது? இன்னும் துருவிச் சென்ற உள்மனம் இச் சொல்லோவியத்தால் இன்புறுதல் இல்லை. அதற்குப் பொருளோவியமே தக்க விருந்து. அகமனம் ஆழ்ந்த பொருளைத்தானே காணும்! அப்பொருளோவியங்களிலும் பல, உலக இயல்புகளையும், உயிரியல்களையும் வரைந்து காட்டுவனவே. சிலவே,

இறையையும் இறைப்பண்புகளையும் தீட்டிக் காட்டும். அவையே உயிர்களுக்கு உறுதுணை! ஆன்மாவைக் கடைத்தேற்றுவனவும் அவையே! அவற்றையே ஞானிகள் நாடிச் செல்வார்கள். நம் மனத்தை உருக்கு வனவும் பண்படுத்துவனவும் அவைகளே!

**ஆண்டாள் தீட்டும் இருவகை ஓவியங்கள்:** இத்தகைய ஓவியங்களைத் தம் காவியங்களுள் தீட்டிக் காட்டியவருள் நாயன்மார்களும் ஆழ்வார்களுமே சிறந்தவர்கள். அவர்களுள் நம் கோதையாரும் ஒருவர்.

இனி அன்னையாருடைய இரு வகை ஓவியங்களையும் காணலாம்:

நம் கோதையார் இடக்கரத்தில் சங்கத்தைத் தாங்கி இருக்கும் எம்பெருமானைக் காண்கிறார். அவன் திருமேனியோ, காளமேகத்தையும் நீலோற்பலத்தையும் ஒத்த கருநிறத்தைப் பெற்றுள்ளது; அவன் திருவதரமோ, சிவந்த தாமரையைப் போன்றுள்ளது; அச்சங்கமோ, வெண்மை நிறம் வாய்ந்துள்ளது. அது சிறு பொழுதும் நீங்காமல் அவன் திருக்கரத்திலேயே தங்கி, அப்போதைக்கப்போது அவன் வாயமுகத்தை உண்டும், அவனுக்கு ஏதோ மந்திரத்தை உபதேசித்தல் போன்று, அவன் செவியின் அருகில் வதிந்தும் இன்புற்றுள்ளது. அக்காட்சி இவரை வியக்கச் செய்கிறது! அவனைச் சேர்ந்து இன்பந்துய்க்கப் பன்னாட்களாய் அலறிக் கொண்டிருந்தும் தமக்குக் கிட்டாத பேறு அச்சங்கத்திற்குக் கிடைத்திருப்பதை நோக்கியதும், இவர் நெஞ்சம் புழுங்குகிறது. அதைத் தம் இன்ப வாழ்

வைக் கவர்ந்துகொள்ள வந்த பங்காளி எனக் கருது கிறார். அதிகம் கூறியென்! ஓர் உத்தம இல்லாளுக்குச் சகக்களத்தியினிடம் ஏற்படும் அழுக்காறு, நம் கோதையாருக்கு அச்சங்கினிடம் கிளர்ந்தெழுகிறது! அதை, பௌர்ணமியன்று உதயகிரியில் வந்துதித்த சந்திரனுக்கும், செவ்விய தாமரை மலர்மேல் தேனருந்த வந்த அன்னத்திற்கும் உவமைப்படுத்தி, "ஓசங்கமே, சிவந்த திருக்கண்களையும், கறுத்த திருமேனியையும் பெற்ற கண்ணபிரானுடைய அழகிய திருக்கரத்தில் உன் மேன்மை தோன்ற வீற்றிருத்தல் மட்டுமேயன்றி, அவ்விடமே உறக்கமுங்கொள்ளுகின்றாய்! உனக்கு வாய்ந்த இத்தகைய செல்வம் எத்துணைச் சிறந்தது! செல்வத்தில் இந்திரன்தான் உனக்கு இணையாவானோ?"[1] என்கிறார்.

"தடவரையின் மீதே சரற்கால சந்திரன்
இடையுவா வில்வந் தெழுந்தாலே போல்நீயும்
வடமதுரை யார்மன்னன் வாசுதே வன்கையில்
குடியேறி வீற்றிருந்தாய் கோலப் பெருஞ்சங்கே!

"சந்திர மண்டலம்போல் தாமோ தரன்கையில்
அந்தர மொன்றின்றி யேறி யவன்செவியில்
மந்திரங் கொள்வாயே போலும் வலம்புரியே!
இந்திரனும் உன்னோடு செல்வத்துக் கேலானே!"

—நா. திருமொழி, 7: 3, 4.

இவர் தம் நோக்கை இன்னொரு புறம் செலுத்து கிறார். அங்கு மலர்களின்மேல் வண்டினங்கள் மொய்த்துக்கொண்டும், நீர்ச்சுனைகளில் செந்தாமரை மலர்கள் மலர்ந்தும் இருக்கின்றன. அவ்விரு இயற்கைக் காட்சிகளும் நம் அன்னையாரின் மனத்தைக் கவர்

கின்றன. அவை இவருக்கு எவற்றை நினைப்பூட்டு கின்றன? கண்ணபிரானுடைய காளமேகம் போன்ற வடிவையும், செந்தாமரை போன்ற திருக்கண்களை யுமே! இந்நினைப்பு இவரை எம்மட்டும் ஈர்த்துச் செல்லுகிறது? அவை ஞானமற்ற பொருள் என ஓராமல் தம் ஆற்றாமை நீங்குதற்கு அவற்றினிடம் அடைக்கலம் புகுமாறு செய்துவிடுகிறது![1]

இங்கு அழகமைந்த இன்னுமோர் ஓவியத்தையும் நோக்குக. திருப்பாவைச் செல்வியார், ஆயர்மகளி ருடன் கண்ணனிடஞ் செல்லுகிறார்; தாம் வந்த காரி யத்தை நன்கு ஆராய்ந்து, அருளுதற்கு ஓர் அரியா சனத்தைக் கண்ணனுக்கு அமைக்கிறார்; அதில் எழுந் தருளித் தாங்கள் வந்த காரியத்தை ஆழ்ந்து நோக்கி, அதற்கேற்ப அருள் புரிய வேண்டுமென இறைஞ்சு கிறார். அவன் மேற்கோள்ள வேண்டிய முறைக்கு வீரம் வாய்ந்த சிங்கத்தின் செயல் ஓவியமாக அமை கிறது.[2]

---

1. "துங்க மலர்ப்பொழில்சூழ் திருமாலிருஞ் சோலைநின்ற
செங்கட் கருமுகிலின் திருவுருப் போல்மலர்மேல்
தொங்கியவண்டினங்காள்! தொகு பூஞ்சுனைகாள்! சுனையில்
தங்குசெந் தாமரைகாள்! எனக்கோர்சரண் சாற்று
மினே!"

—திருவாய்மொழி, 9: 5.

2. "மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து,
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா! உன்
கோயில்நின்று இங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த
காரியம் ஆராய்ந் தருள்"

—திருப்பாவை, 23.

இவர், கண்ணனுடைய திருவுருவம், நிறம் முதலியன, மலர்கள், மயில்கள், குயில்களாகிய இயற்கைப் பொருள்களிடம் அமைந்திருத்தலைக் கண்டு, அவற்றைச் சித்திரித்துக் காட்டுகிறார்.[1] இத்தகைய சித்திரங்கள் இவர் நூல்களில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன. இத்திறம் யாவருக்கும் அமைவதொன்றோ?

ஒன்றின் உருவத்தைக் கல், மரம், துணி முதலியவற்றுள் ஏதாவதொன்றில் வரைந்து, காண்போர்முன் நின்று காட்சியளிக்கச் செய்யும் ஓவியர் போன்று, கவிஞரும் ஓர் உருவத்தின் நிலை, இயல்பு, செயல் முதலியவற்றை அவற்றிற்கேற்ற சொற்களைக்கொண்டு உருப்படுத்திப் பலர்முன் நிறுத்துகின்றனர். இவ்வோவியம், கற்றோருக்குப் பலவிதத் தோற்றங்களைக் காட்டி, அவரவர் கல்வி அறிவு ஆராய்ச்சிகளுக்கேற்ப இன்பமீந்து ஒளிருகின்றது. ஆண்டாள் நூல்களில் இத்தகைய சொல்லோவியங்கள் பல இடங்கொண்டிருப்பினும், விரிவிற்கஞ்சி மிகச் சிலவற்றையே இங்குக் காட்டினோம்.

---

1. "கருவிளை யொண்மலர்காள்! காயாமலர்காள்! திருமால்
உருவொளி காட்டுகின்றீர் எனக்குய்வழக்
கொன்றுரையீர்."

"பைம்பொழில் வாழ்குயில்காள்! மயில்காள்! ஒண்
கருவிளைகாள்!

வம்பக் களங்கனிகாள்! வண்ணப்பூவை நறுமலர்காள்!
ஐம்பெரும் பாதகர்காள்! அணிமாலிருஞ் சோலைநின்ற
எம்பெருமானுடையநிறம் உங்களுக்குஎன்செய்வதே?"

—நா. திருமொழி, 9: 3: 4.

கவிஞர் கைத்திறம் இத்துடன் நிற்றல் இல்லை. அவர் பொருளையும் ஓவியமாகத் தீட்டிக் காட்டும் வன்மை பெற்றுள்ளனர். அவருள் முன்னணியில் நின்ற அன்னையாரின் பொருளோவியங்கள் சில வற்றை இங்குக் காணலாம் :

பொருளோவியம் எத்தகையது? சொல்லோவி யத்தில் சொற்கள் உருப்பெற்றுக் காட்சியளித்தல் போன்று, பொருளோவியத்தில் பொருள் உருப் பெற்றுத் திகழும்.

ஆண்டாள் தம் மங்கைப் பருவத்தையும், அதற் கேற்பத் தமக்குச் சில அங்கங்கள் பருத்துக்கிளர்ந்து வளர்ந்திருத்தலையும், அந்நிலையில் தமக்குண்டா யிருக்கும் காதற்பெருக்கையும் நோக்குகின்றார். "இவை யாருக்கென உருக்கொண்டுள்ளன? யாருக் குப் பயன்படுதல் வேண்டும்? அங்ஙனமின்றேல், நம் வாழ்க்கை என்னாகும்?" என்னும் எண்ணங்கள் ஒன்றன் பின்னொன்றாக இவர் உள்ளத்தில் கிளர்ந் தெழுகின்றன. அஞ்ஞான்று இவருக்குச் சோர்வும், வெறுப்பும், தளர்ச்சியும் உண்டாகின்றன. அத் தகைய தம் நிலையைப் பிறருக்கு வெளிப்படுத்தாம லிருத்தற்கு இவர் நெஞ்சம் இடந்தந்திலது. ஆத லின், பெரியாழ்வார் திருமாளிகையில் பரம பாகவ தர் கூட்டுறவில் வளர்ந்து வருதற்கேற்ப, ஆண்டாள் நாடோறும் தம் கண் முன்னிலையில் நிகழும் செய லாகிய ஒரு தக்க சான்றுடன் தம் பொன்னனைய கருத்தைப் புலப்படுத்துகிறார்: "அந்தணர் தம் வேள் வியில் தேவர்களுக்கு ஈதற்பொருட்டு உண்டாக்கின தேவருணவை (அவிசை)க் காட்டினில் திரியும் நரி

புகுந்து தனக்கு ஆக்கிக்கொள்ளுதல் எத்துணைக் குற்றமுடையதோ, அத்துணைக் குற்றமுடையதாகும் ஆழி சங்கங்களைத் தன் திருக்கரங்களில் தாங்கி வனப்புடன் மிளிரும் புருஷோத்தமனுக்கெனக் கம்பீரத்துடன் வளர்ந்துள்ள என் அங்கங்களை அவனுக்கு உரிமைப்படுத்தாமல் இவ்வுலக மக்களுக்கு உரிமைப்படுத்துதல். ஆகவே, என்னை மக்களுக்கு மணஞ்செய்வித்தல் என்னும் வார்த்தை உண்டாகுமாகில், யான் உயிர் வாழமாட்டேன்! அப்போதே இறந்துபடுதல் உறுதி!"[1]

"சில போது கொதுகுகள் விளாம்பழத்தின் உள் நுழைந்து, அப்பழத்தையெல்லாம் உண்டு பயனற்ற ஓட்டை மட்டும் விட்டுவிடுதல் போன்றே, கண்ணன் என்னும் கருந்தெய்வம் என்னுள் புகுந்து என்னுடைய மடம், நாணம், அச்சம், பயிர்ப்பு ஆகிய பெண்மைப் பண்புகள் யாவற்றையும் கவர்ந்து கொண்டு என் வெற்றுடம்பைமட்டும் விட்டுச் சென்றான். ஆதலின், யான் இருந்தும் யாதொரு பயனுமற்றவளாயுள்ளேன். மேகங்களே, இந்த என்

1. "வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்தஅவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப
ஊனிடை யாழிசங் குத்தமர்க்கென்று
உன்னித் தெழுந்தவென் தடமுலைகள்
மானிட வர்க்கென்று பேச்சுப்படின்
வாழகில் லேன்கண்டாய் மன்மதனே!"

—நா. திருமொழி, 1:5

நிலையை அந்த எம்பெருமானுக்குத் தெரிவியுங்கள்.'' 1

"திருமாலிருஞ் சோலையின் கொன்றை மரங்களில் பொன்னிறமான மலர்கள் பூத்துத் தொங்கினும், வைணவர்களோ அவற்றைத் திருமாலுக்குச் சூட்டுதல் இல்லை; சைவர்களோ, அவண் போதராமையின், அவை சிவபிரானுக்கும் பயன்படுதலில்லை. இம்முறையில் அவை எங்ஙனம் எவர்க்கும் பயனற்றுக் கிடக்கின்றனவோ, அங்ஙனமே யானும் எம்பெருமானுடைய எத்தகைய அங்கீகாரத்தையும் பெறுமலும், பரமனையே நாடி இருக்கும் யான் உலகத்தாருடைய கூட்டுறவைப் பெற மனமின்றியும் வாணுட்களை வீணுட்களாகக் கழிக்கின்றேன்,''2 என இம்மூன்றினுலும் தம் உண்மை நிலையைத் தெரிவிக்கிருர் ஆண்டாள்.

---

1. ''சலங்கொண்டு கிளர்ந்தெழுந்த
தண்முகில்காள்! மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே
நிரந்தேறிப் பொழிவீர்கள் !
உலங்குண்ட விளங்கனிபோல்
உள்மெலியப் புகுந்துஎன்னை
நலங்கொண்ட நாரணற்குஎன்
நடலைநோய் செப்புமினே!''

—நா. திருமொழி, 8: 6.

2. ''கோங்கலரும்பொழில் மாலிருஞ்
சோலையில் கொன்றைகள்மேல்
தூங்குபொன் மாலைக ளோடுட
னய்நின்று தூங்குகின்றேன்.''

—நா. திருமொழி, 9: 9.

இம்மூன்று சான்றுகளும் பரமனைப் பெறக் கருதித் தோன்றிய அன்னையார் அவனை அடைய வழியின்றிப் பயனற்று நிற்கும் தன்மையை ஒவ்வொரு வகையில் குறிக்கின்றன. இது நிற்க.

இவற்றைப் பொருளோவியம் என்பது யாங்ஙனம்? முதலோவியத்தில், வேள்வி, தேவருணவு, நரி ஆகியவைகளும், ஆழி சங்கங்களை ஏந்திய பரமன், மங்கைப்பருவத்திற்கேற்ப அங்கங்களைப் பெற்று வனப்பு மிக்கொளிரும் ஆண்டாள், அழியுந்தன்மை வாய்ந்த மானிடர் ஆகியோரும் அமைந்துள்ளனர்.

இரண்டாம் ஓவியத்தில், கொதுகுகளின் கூட்டமும், உட்பொருளற்று ஓட்டளவில் தோன்றும் விளாம்பழமும், பெண்மைக் குணங்களை இழந்த ஆண்டாளும் தோற்றமளிக்கக் காணலாம்.

மூன்றும் ஓவியத்தில், பொன்னிற மலர்கள் மலர்ந்துள்ள கொன்றைமரம், எம்பெருமான் கூட்டுறவைப் பெருமையின் பயனற்றுக்கிடப்பதாய்க் கருதும் ஆண்டாள் காட்சியளிக்கின்றனர். ஆனல், இவ்வுருவங்களைச் சொற்களினுல் நம் முன் தோன்ற வைக்காமல் பொருளைக் கொண்டு நாம் உய்த்துணர அமைத்துள்ளமையின், இவை பொருளோவியங்கள் எனக் கூற வேண்டியதாயிற்று. இவற்ருல் சொல்லோவியத்திற்கும் பொருளோவியத்திற்கும் உள்ள வேறுபாட்டைக் கூர்ந்து நோக்குக.

ஆன்மாவின் பெண்மைக்கேற்ப உடலையும் பெண்ணுய்ப் பெற்றுயர்ந்த நம் அன்னையார், சில பாக்களில் பிராட்டியின் பெருமையையும், ஆன்ம உய்விற்கு அப்பிராட்டியின் இன்றியமையாமையை

யும், இவ்விரு சீவான்மாக்களுக்கும் உள்ள தொடர்பையும் நன்கு விளக்குகிறார். அவை பெண்மைப் பண்புகள் பல அமைந்த ஓவியங்களாய்த் திகழ்கின்றன.

இயற்கைப் பொருள்களில் ஆண்மையும் பெண்மையும் கலந்துள்ளன. இவ்வியற்கையின் உள்ளுறையும் இறையினிடத்தும் இவ்விரு கூறுகளும் உண்டு என்பதைத் தெள்ளிதின் உணர்ந்தவர்கள் நம் ஆழ்வார்கள். அவர்கள் இறையைப் பற்றிப் பேசும் பல இடங்களிலும் பெண்மையைத் தாய் எனவும், ஆண்மையைத் தந்தை எனவும் போற்றுகின்றார்கள். இறையின்கண்ணுள்ள பெண்மையை ஒவ்வொருவரும் இன்றியமையாது பேணுதல் வேண்டும். ஏன்? ஆண்மையில் பெண்மைப் பண்புகளாகும் பொறுமை தியாகம் முதலிய குணங்கள் பொருந்துதலும், அருள் கனிந்த உள்ளம் அமைதலும் அருமை. ஆன்ம உய்விற்கு உதவி புரிவதும், ஆன்மாக்களைத் திரட்டிக் கொண்டுபோய் ஆண்மையினிடம் சேர்ப்பதும் இக்குணங்கள் அமைந்த பெண்மையேயாகும். பெண்மை இன்றேல், எங்ஙனம் நில உலகம் இல்லாதொழியுமோ, அங்ஙனமே இறையில் பெண்மை இன்றேல் நித்திய உலகமும் இல்லாதொழியும். ஏன்? ஆண்மை, சுதந்தரமும் கடின உள்ளமும் உடையதாதலின், அஃது உயிர்களின் தீவினையைப் போக்கி, ஓர் ஆன்மாவையும் ஏற்றுக்கொள்ள முன் வாராது. இன்னும் ஆய்ந்து கூறின், எத்துணைத் தூய ஆன்மாவும் இறையினிடம் அணுக இயலாதெனவே இயம்பிவிடலாம். இதை

உண்மைப்படுத்தப் பல புராணக் கதைகள் உண்டு. இத்தகைய மேன்மைகள் வாய்ந்த பெண்மையை, ஆண்மையில் நின்ற ஆழ்வார்கள் வழிபடுதற்கும், பெண்மையையே இயற்கையாகப் பெற்ற நம் திலக மணியார் பேணுதற்கும் வேறுபாடு இல்லாமற் போதல் யாங்ஙனம்? பெண்ணுலகில் தோன்றி, பெண்ணுடலைத் தாங்கி, பெண்ணுலகில் கலந்து, பெண்மைக் குணங்கள் வாய்ந்து வாழ்ந்த இவர், இறையினிடம் உள்ள பெண்மையின் இனிமையை நன்கு உணர்வாரல்லரா? இன்னும் ஊன்றிக் கூறின் இவரே அப்பெண்மையைப் போற்றும் வகை அறிபவர்; அப்பெண்மையிலிருந்து அடையும் பயனை உணர்பவர்; அதனோடு கூடிக் குலாவும் நேர்மையைக் காண்பவராவர். அப்பெண்மையைக் கொண்டே ஆண்மையை வசப்படுத்தும் வகை இவருக்கே தெரியும். அதைத் துணைபற்றியே ஆண்மையினிடம் போதருவார்; அதை ஏவியே ஆண்மையை விழிக்கச் செய்வார்; அதன் உதவியி னாலேயே, ஆண்மையின் அருளைப் பெற்று இன்பந் துய்ப்பார். இம்முறையில்

"நந்தகோ பாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தங் கமழும் குழலீ! கடைதிறவாய்;
வந்தெங்கும் கோழி அழைத்தனகாண்; மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்;
பந்தார் விரலி! உன் மைத்துனன் பேர்பாடச்
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்து." —திருப்பாவை, 18.

என்னும் இவ்வோவியத்தில் பெண்மை ஒளிர்வதைக் காண்க.

# திருப்பாவை

திருப்பாவை நம் கோதையார் அருளிச் செய்த நூல்கள் இரண்டனுள் முதல் நூலாகும். இதில் தேவர்களுக்கு விடியற்காலை என்று சொல்லப் படும் மார்கழி மாதத்தில் நம் ஆண்டாள் கண்ணனை அடைதற்பொருட்டு நோற்ற நோன்பைக் குறித்துச் சொல்லப்படுகிறது. மற்றெல்லா மாதங்களைக்காட் டிலும், மார்கழி மாதத்திற்குப் பல சிறப்புகள் உண்டு. எல்லா ஆலயங்களிலும், பத்திமான்கள் இல்லங்களிலும் சிற்றஞ்சிறுகாலையில் வழிபாடு நடைபெறும். தெய்வ வழிபாட்டிற்கேற்ற **வைகுண்ட ஏகாதசி** முதலிய சில சிறந்த விரத நாட்கள் இம்மாதத்தை அழகு படுத்துகின்றன. சீரிய பொருள்கள் சிலவற்றைத் தானெனக் குறித்த கண்ணன், மாதங்களில் மார்கழிமாதம் தான் என்று குறிக்கின்றான். ஆழ்வார்கள் யாவருக்கும் உயிரெனத் திகழும் சடகோபர் அருளிச்செய்த **திருவாய் மொழி**க்குச் சீரிய திருவிழா ஒன்று இம்மாதத்தில் நடைபெறுகிறது. இதனைத் **'திருவாய்மொழித் திருவிழா'** என்றே வழங்குவர். இவை எங்ஙன மாயினும், ஆண்டாள் கண்ணனைப் பெற முயன்று அவனைப் பெற்று இன்புற்ற மேன்மையே இதற்குப் போதியதன்றோ! இது நிற்க.

## (அ) பாவை நோன்பு

ஆண்டாள் தாம் நோற்ற நோன்பிற்குப் **'பாவை'** எனப் பெயர் சூட்டுகின்றார். இதை, **"நாமும்நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்"**, **"பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார்"**,

**"எம்பாவாய்"** என்பவற்றால் அறியலாம். 'பாவை' என்பதற்குப் பல பொருள்கள் உண்டு. அவை இங்கு வேண்டற்பாலனவல்ல. பண்டு மகளிர், மழை பெய்தற்பொருட்டு ஒரு பதுமையை அமைத்து அதைப் பெண் தெய்வமெனக் கொண்டு சின்னாட்கள் நோன்பியற்றித் தாம் கருதிய பயனைப் பெற்றனர் என நூல்கள் நுவல்கின்றன, இங்ஙனம் பாவையைக்கொண்டு நோன்பியற்றியமையின், அ∴து இருமடியாகுபெயராய் (பாவையின் பெயர் நோன்பிற்காய், [illegible]று அந்நோன்பைப்பற்றிக் கூறும் நூலிற்கு ஆகி) வந்தது. அக்காலக் கொள்கையையே நம் ஆண்டாளும் கைக்கொண்டனர்.

இந்நூலில் பாயிரமும், தோழியரையும் மற்றோரையும் துயிலுணர்த்தலும், எம்பெருமானை அடைந்து பயன் துய்த்தலும் ஆகிய மூன்று பகுதிகள் உள்ளன.

**பாயிரம்:** இவற்றுள் பாயிரமே ஒரு நூலிற்கு உயிர்நிலை. அது நூற்பொருளைத் தெளித்துக் காட்டும் ஓர் ஆடி எனலாம். இந்நூலில் முதல் ஐந்து பாசுரங்களும் பாயிரம். இது முதற்பகுதி. "ஆயிர முகத்தான் அகன்றதாயினும் பாயிரமில்லது பனுவலன்றே" என்கிறார் நன்னூலார். திருப்பாவையின் முதற்பாசுரம் மற்றப் பாசுரங்களின் பொருளைத் தன்னுள் அடக்கிக்கொண்டுள்ளது. அன்றியும், வைணவர் இன்றியமையாது அறிய வேண்டுவன **அஞ்சர்த்தங்கள்**.[1] அந்த ஐந்தையும் விளக்கமாகக்

1. **அஞ்சர்த்தங்கள்:** சேஷத்துவம், பாரதந்திரியம், **விரோதி, உபாயம், உபேயம்.**

கூறுவது **திருமந்திரம்**, அத்திருமந்திரத்தின் பொருளை இம்முதற்பாசுரம் தெள்ளிதின் விளக்கு கிறதென்பது அறிஞர் கருத்து.

இத்திருப்பாவை முப்பது பாசுரங்களிலும் சுருக்கமாகச் சொல்லப்படும் பொருள், 'ஓர் ஆன்மா பற்ற வேண்டிய உபாயம் இன்னது; அடைய வேண்டிய பயன் இன்னது' என்பதாகும். இதில் "**மார்கழித்திங்கள்**" என்பது தொடங்கி, "**சிறு மீர்காள்**" என்பது வரையும் பயனும், "**கூர் வேல்**" என்பது தொடங்கி, "**படிந்து**" என்பது வரை உபாயமும் சொல்லப்படுகின்றன எனக் கொள்க. இன்னும் சிறிது விரித்துக் கூறின், எம் பெருமானோடு சேர்ந்து இன்பந்துய்த்தற்கு 'நீராட' என்றும்; இப்பயனை அடைதற்கு இச்சையுடைய வர்களே அதிகாரிகள் ஆதலால், 'நீராடப்போதுவீர்' என்றும்; உபாயம் பரமனே ஆதலால் 'நாராயணனே' என்றும்; அவ்வுபாயத்தைப் பற்றுதற்கு உரியவர் உண்மை ஞானமுடையவரே ஆதலின், 'நமக்கே' என்றும் பிரித்துப் பிரித்துக் காட்டுகிறார். இவற்றால், திருப்பாவையின் முதற்பாசுரத்தில் மற்றப் பாசுரங்களின் பொருள் அடங்கி இருத்தலை அறி கிறோம்.

திருப்பாவைக்குப்பாயிரமாக அமைந்துள்ள மற்றைய நான்கு பாசுரங்களிலும், நோன்பிழைக்குங் கால் மேற்கொள்ள வேண்டும் நற்செயல்களும், விடவேண்டும் தீச்செயல்களும் இன்னின்னவை என்றும்; நோன்பு நோற்றற்கு அனுமதி தந்தவர்க் கும், அவர்கள் வாழும் நாட்டிற்கும் நீங்காத செல்வம்

உண்டாக வேண்டுமென்றும்; ‘ஊர் செழிக்குமாறு நீ இன்னின்னபடியே மழையைக் கொட்டவேண்டும்’ என்று வர்ணனுக்குக் கட்டளை இட்டனர் என்றும், எம்பெருமானை அடைவது தவிர வேறு பலனைக் கருதாது, அன்புடன் அவன் திருவடிகளில் மலர்களைத் தூவி, அவன் கலியாணகுணங்களை வாயினாற் பாடி, மனத்தினால் அவனைச் சிந்திக்கில் முன்புண்டான தீவினைகளும், பின்னர்த் தன்னை அறியாது ஏற்படும் தீவினைகளும் நெருப்பிலிட்ட பஞ்சு போன்று உருமாய்ந்துபோம் என்றும் சொல்லப்பட்டுள்ளன.

(ஆ) ஆயர் மகளிரைத் துயிலுணர்த்தல் :

திருப்பாவையின் ஆறும் பாசுரத்திலிருந்து பதினைந்தாம் பாசுரம் வரை, ஆண்டாள், தமக்கு உற்ற தோழியராகப் பாவித்த ஆயர் மகளிர் பதின்மரை அவரவர் செயல், போக்கு, இயல்பு, பண்பு முதலியவற்றைக் குறிப்பித்துத் துயிலுணர்த்துகிறார் என மேலேழுந்தவாரியாய்ச் சொல்லப்படுகிறது. இங்குத் தோழியர் என்பது, பாகவதரைக் காட்டும் என நம் பூர்வாசாரியர் கருதுகின்றனர்; ஆழ்வார் பதின்மரைக் குறிக்கும் என்பதும் அறிஞர் கோட்பாடு. இது திருப்பாவையின் இரண்டாம் பகுதியின் முதற்பகுதி.

“புள்ளும் சிலம்பினகாண்”

இப்பாசுரத்தில் புத்தம்புதிதாய்ப் பரமனுடைய பத்தியில் ஈடுபட்ட ஒரு பாகவதையை எழுப்புகின்றனர் ஆண்டாள். அதனாற்றான், இவளைப் ‘பிள்ளாய்’ (பக்தியில் இளமைவாய்ந்தவளே) என

அன்பு தோன்ற அழைக்கின்றூர். இங்குப் புள் ளும் சிலம்பினகாண் எனக் குறிக்கப்படுவது ஏன்? ஒருவருக்கு எம்பெருமான் தொடர்பை உண்டாக்கு பவர் பாகவதரல்லரா? இளமாணவன் எல்லாக்காரி யங்கட்கும் ஆசாரியரைப் பின்பற்றிச் செல்வது தானே முறை? அவர்தாமே இவனுக்கு வழி காட்டி?

**விஞ:**—இச்சொற்ருெடர் பாகவதரைக் குறித் தல் யாங்ஙனம்?

**விடை:**—பறவையினுடைய இரு சிறகுகள், ஆசாரியர் (அல்) பாகவதர் ஆகியவர்களின் ஞான அனுஷ்டானத்தையும், அன்னம் முதலியவற்றின் வெண்மை நிறம், அவரது சாத்துவிகக் குணத்தை யும், அது பாலில் கலந்த நீரை ஒதுக்கிப் பாலே மட் டும் உண்ணும் தன்மை, அவர் பயனற்றவற்றைத் தள்ளிப் பயனுடைய பொருளேயே மனத்திருத்தும் உயரிய ஞானத்தையும் குறிக்கும் என நூல்கள் சாற்றுகின்றமையானும், இன்னும் சில ஒப்புமைக ளாலும் பறவைகளே மேற்குறித்த ஆன்ருேர் நிலேயில் வைத்துக் கூறுதல் வழக்கு.

**விஞ:**– பறவைகளின் ஆரவாரத்தைக் குறிக் கும் "சிலம்பின" என்னும் சொல் பாகவதருக்குப் பொருந்துதல் யாங்ஙனம்?

**விடை;**—பறவைகள் இரவு முற்றும் ஒருங்கு சேர்ந்து, கூடிக்குலாவி இன்புற்றிருந்தன. பொழுது புலர்ந்ததும் அவை ஒன்றை விட்டு ஒன்று பிரிந்து இரை தேடச் செல்ல வேண்டுமன்ருே? அக்கால் பிரிய மனமெழாத அவை திரும்பவும் சேரும் வரை யும் ஆறியிருத்தற்பொருட்டு, அன்பு ததும்பிய வார்ச்

தைகளைப் பேசிக்கொள்ளுகின்றன என்னும் கருத்தைத் தெரிவிப்பதாகும் 'சிலம்பின' என்பது. இதை மனத்திற்கொண்டு, அறிவிற்சிறந்த பெரியாரை நோக்குதல் வேண்டும். அவர்தம் நல்லொழுக்கத்தையும், அரிய பொருள்களைப் பிறருக்கெடுத்துரைக்கும் திறனையும் அறிந்த யாவரும் அவரைக் கண்டதும் அன்பு கொண்டு அவரோடு கலந்து உறவாடுவர். அவரைப் பிரிய நேருங்கால், "இனி எப்போது இவரைக் காண்போம்!" என நினைத்துப் பெரிதும் வருந்துவர். அவ்வமயம் இவ்விரு திறத்தினரிடையிலும் பேரன்பு வாய்ந்த பேச்சுகள் பல உருக்கொண்டெழும். இதுவே கற்றறிந்த பெரியாரின் (ஆசாரியரின்) சிறந்த செயல் என்கிறுர் மாதானுபங்கியார். இதை.

"உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்."

என்னும் குறட்பாவிஞல் அறிக. தன்னையும் பரமனையும் பற்றிய உண்மைத் தத்துவங்களை அறிவதுதானே சீரிய புலமை எனப்படும்? இந்நிலையில் நிற்பவர் பாகவதரும் ஆசாரியருந்தாமே? ஆதலின், இங்குப் புலவர் என்னுஞ் சொல் ஆசாரியரைக் குறிக்கும் என்னில் குறை ஏது?

**விஞ:**—பெரிய திருவடிக்குத் தலைவஞன எம்பெருமான் கோயிலில் வெள்ளை நிறமும், யாவரையும் அழைக்குந்தன்மையும் வாய்ந்த சங்கத்தின் பெரிய ஒலி கேட்கப்படுகின்றது என்பதற்குக் கருத்து யாது? "புள்ளரையன் கோயிலில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?" என்னும்

சொற்களுக்கும் இப்பாசுரத்தில் எழுப்பப்படும் பாகவதைக்கும் உள்ள தொடர்பு என்னே?

**விடை :**—எம்பெருமானுக்குக் கோயில் திருமந்திரம்; சங்கு, அத்திருமந்திரத்தின் முதல் பதமாகிய பிரணவத்தைக் குறிப்பதாகும். அப்பிரணவம், சீவான்மா, பரமான்மாவிற்கே சேஷபூதன் என்பதையும், இவன் பகவானுக்குக் கைங்கரியஞ் செய்யக் கடமைப்பட்டவன் என்பதையும் காட்டுவதாகும். அப்பிரணவத்தின் ஒலியை 'அரவம்' என்றும் 'பேரரவம்' என்றும் இரண்டாகப் பிரித்துக் காட்டுகிறார். இங்கு 'அரவம்' என்பது முற்கூறிய ஆன்மாவின் சேஷத்துவநிலையையும், 'பேரரவம்' என்பது ஆன்மாவின் பாரதந்திரியநிலையையும் குறிக்கின்றன. ஆக, இச்சொற்றொடரினால், "பாகவதச் சிறுமியே, திருமந்திரத்தின் முதற்பதமான பிரணவத்தினால் உன் ஆன்ம நிலையைத் தெள்ளத்தெளிய அறிந்த நீ, வைகறையிலெழுந்து எம்பெருமானைத் துதியாமல், இன்னும் உறங்குவது தகுதியாமா?" எனப் பாகவதைக்கும் பாசுரத்திற்கும் தொடர்பிருத்தலைக் காண்க.

"பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்து"

என்னும் இச்சொற்களால் "மாயையினால் ஏற்படும் அகங்கார மமகாரங்களையும் அவற்றின் நச்சுத் தன்

மையையும் போக்கி, காமக் குரோதங்களையும் ஒழிப் பித்த எம்பெருமானை முனிவரும் யோகியரும் அரி என்று வழுத்துகின்ற பேரொலி, எங்கள் நெஞ்சிற் புகுந்து குளிர்ந்ததனுல், நாங்கள் விழித்துக்கொண் டோம். அங்ஙனமே நீயும் விழிப்பாயாக,' என அவ் விளம்பாகவதையை எழுப்புகின்றனர்.

**இதில் பெரியாழ்வாரைத் துயிலுணர்த்துகின்றனர்.**

**"கீசுகீ சென்றெங்கும் ஆனைச்சாத் தங்கலந்து"**

இப்பாசுரத்தில் பகவானை இப்போதே சென் றடைய வேண்டுமென்பதை அறிந்திருந்தும் அதை மறந்து உறங்கும் ஒரு பாகவதையை எழுப்புகின் றனர்.

இம்மங்கையை எழுப்புங்கால்; 'பேய்ப் பெண்ணே' என்றும், 'நாயகப் பெண்பிள்ளாய்' என்றும் ஒன்றற்கொன்று மாருன சொற்றொடர்கள் வழங்கப்படுகின்றன. இறை தொண்டிலும், அடியார் தொண்டு சிறந்தது என்பதை உணர்ந்தவர்களுள் இவள் முதன்மையுற்றிருந்தமையின், 'நாயகப் பெண்பிள்ளாய்' [1] என்றும், அதை மறந்து உறங்கு கின்றமையின், 'பேய்ப் பெண்ணே' [2] என்றும் அழைக்கின்றனர் எனக் கொள்ளுதல் வேண்டும். மனமொத்த நாயகி நாயகர் கலப்பில் வசைச்சொற் களும், இசைச்சொற்களும் பிழையெனத் தோன்று தது போன்று, உயிர்த்தோழிகளாகிய இவர்களிட மும் இவை குற்றத்தின்பாற்படுதல் இல்லை.

---

1. நாயகப் பெண்பிள்ளாய் - பெண்களுக்கெல்லாம் தலைமை வாய்ந்தவளே.

2. பேய்ப் பெண்ணே - அறிவற்றவளே.

முதல் இரண்டடிகளுக்கும் முன் பாசுரத்தின் "புள்ளும் சிலம்பினகாண்" என்னும் சொற்றொட ருக்குக் கொண்ட பொருளேயே கொள்க.

"காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்திஞல்
ஓசை படுத்த தயிரரவங் கேட்டிலேயோ?"

என்பதில் இரண்டு அணிகளைக் குறிக்கும் 'காசும் பிறப்பும்' என்பது, இரண்டு வாங்கியங்களாய் அமைந்துள்ள மந்திர இரத்தினமாகிய துவயத்தைக் குறிப்பதெனச் சொல்வர். முதல் வாக்கியத்தின் பொருள், "பெரிய பிராட்டியோடுஞ் சேர்ந்துள்ள பகவானுடைய இரண்டு திருவடிகளையும் உபாயமா கப் பற்றுகிறேன்," என்பது. இரண்டாம் வாக்கியத் தின் பொருள், "இவ்விருவரும் சேர்ந்திருக்கும் சேர்த்தியில் கைங்கரியம் புரிவேஞக," என்பது.

இவ்விரண்டு அணிகளும் முறையே 'அச்சுத் தாலி, முளைத்தாலி' எனச் சொல்லப்படுகின்றன. இவற்றிற்குத் தாலி எனப் பெயரமைந்திருத்தலின், இவற்றை மங்கலநாண் எனக் கொள்ளலாம். மங்கல நாணை அணிபவர் யார்? கணவஞேடு சேர்ந்து இன் புடன் வாழ்கின்ற மங்கையரே அல்லரா? இதைக் கருத்திற்கொண்டு துவயத்தை நோக்கலாம். இது சீவான்மாவிற்கு மங்கல நாண் எனக் கூறுத லின், எங்ஙனம் ஒரு மங்கைக்கு மங்கலநாண் இருப் பின், மற்ற நலங்களை எல்லாம் பெறுதற்கு வாய்ப் புண்டாகின்றதோ, அங்ஙனமே சீவான்மாவிற்கும் இம்மங்கலநாண் இருந்தால்தான், மற்ற ஆன்ம நலங்கள்யாவற்றையும் பெறுதற்கு வழியுண்டாகும்.

ஆதலின், இப்பாகவதையை எழுப்பச் சென்ற கோதையார், ஸ்ரீ வைஷ்ணவர்கள் அநுசந்திக்கும் துவயத்தின் ஒலிக்குறிப்பைக் (கலகலப்ப) 'கேட்டிலையோ' என்கிறார்.

**"வாசநறுங்குழல்"**: இதை 'குழல், நறுங் குழல் வாச நறுங்குழல்' எனப் பிரித்துக்கொள்ள வேண்டும். ஒரு மங்கைக்குக் கூந்தல் அழகுக்கு இருப்பிடமாயிருக்கிறது. கூந்தலும் அழகும் ஒன்றாதலால், கூந்தலையே அழகு எனவும் சொல்லிவிடலாம். இம்முறையில் ஆன்மாவிற்கு அழகு தருவது எது? தன் ஆன்மாவின் இலக்கணத்தை (சொரூபத்தை) அறிவதன்றோ? இது மட்டும் போதியதாமா? இந்த ஆன்மா எதை உபாயமாகப் பற்ற வேண்டும், இதற்குப் பலன் (புருஷார்த்தம்) என்ன என்பவற்றையும் அறிதல் இன்றியமையாததன்றோ? ஆக, இங்கு ஆன்ம ஞானத்தைக் 'குழல்' என்றும் உபாய ஞானத்தை 'நறுங்குழல்' என்றும், பலத்தின் ஞானத்தை 'வாசநறுங்குழல்' என்றும், உருவகப் படுத்தியுள்ளார் எனக் கொள்க.

"ஆய்ச்சியர் மத்தினால் ஓசைபடுத்த தயிரரவம்
கேட்டிலையோ?"

ஆய்ச்சியர் என்பது பாகவதரைக் குறிக்கும்.

**வினா** :—எவ்வாறு?

**விடை** :—பாகவதர் என்பவர் யார்? பகவானை எப்பொழுதும் தம் மனத்தாமரையில் இருத்தி அவனையே தியானித்துக்கொண்டும், கனவிலும் நனவிலும் அவனையே பற்றிக்கொண்டும், அவனையே கண்

களாரச் சேவித்துக்கொண்டும், வாயார வழுத்திக் கொண்டும், அவன் தொடர்பு சிறிது நீங்கினும் ஆற்ருமையால் அலறிக்கொண்டும் இருப்பவர் அல்லரா? இப்பண்புகளில் ஒன்றேனும் ஆய்ச்சியரிடம் குறைவுபட்டிருந்ததா? இல்லையே! அங்ஙனமாயின், இவர்களை ஏன் பாகவதர் எனக் கூறுதல் கூடாது? இம்மங்கையர் கண்ணன் பத்தியில் கரை கண்டவர் என்பதை அறிஞர் மறுப்பரோ!

இம்மங்கையர் மத்தினுல் தயிரைக் கடைந்து ஒலியை உண்டாக்குகின்றனர் எனச் சொல்லப்படுகிறது. இங்கு, **"மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டுமாப் போலே, மூன்று வேதத்திலும் மூன்று அக்ஷரத்தையும் எடுத்தது"** [1] என்னும் திருமந்திர சூத்திரம் நினைவிற்கு வருகிறது. இதில் மூன்று தாழிகள் மூன்று வேதத்திற்கும், தயிரின் சாரமாகிய வெண்ணெய் மூன்று அட்சரத்திற்கும் ஒப்பிடப் பட்டுள்ளதை அறிகின்ருேம். இங்கோ, மத்தினைத் திருமந்திரத்திற்கும், தயிரைத் துவயத்திற்கும், ஒலியைச் சரமசுலோகத்திற்கும் ஒருவாறு ஒப்பிடலாம். ஏன்? திருமந்திரத்தின் விரிவு துவயம் என்பதும், துவயத்தின் விரிவு சரமசுலோகம் என்பதும், பின்னுள்ள இரு இரகசியங்களுக்கும் திருமந்திரமே மூலம் என்பதும் நாம் அறிந்தனவே. இம்முறையில் மத்தினுலேயே தயிர் கடைதல், ஒலி உண்டாதல், வெண்ணெய் திரளல் ஆகியவை ஏற்படுகின்றமையின், மத்தின் செயலே இவ்விரண்டிற்கும் காரணம்

1. திருமந்திரம், வாக்கியம் ,33

என்பதும், இவ்விருகாரியங்களுக்கும் மத்தே காரண மாயிருக்கின்றதென்பதும் அறியக் கிடக்கின்றமை யின், மத்தைத் திருமந்திரத்திற்கு ஒப்பிடலாம். இது நிற்க.

இம்மூன்று இரகசியங்களுள் துவயம் சிறந்த தென்றும், 'மந்திர ரத்தினம்' என்றும் சொல்லப்படு கிறது. அன்றியும், ஆன்ம உய்விற்கு இன்றியமை யாது வேண்டுவனவாகிய பிராட்டியோடுங் கூடிய பகவானுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றுதல், பிராட்டியும் பெருமானும் சேர்ந்த சேர்த்தியில் கைங் கரியம் புரிதல் ஆகிய இரண்டையும் வற்புறுத்திக் கூறுவது எது? துவயமே அன்றோ? ஆதலின், மேற் குறிப்பிட்ட மத்து, தயிர், ஒலி ஆகிய மூன்றனுள் சிறந்ததும், இன்றியமையாது வேண்டற்பாலதும் தயிராய் இருத்தலின், இதைத்துவயத்திற்கு ஒப்பி டலாம். தயிரின்றேல், மத்துப் பயன் படுதலும், ஒலி பிறத்தலும் உண்டாகாமை போனறு, துவயம் இன்றேல், ஸ்ரீமந் நாராயணனைப் பற்றுதலும், இருவருக்கும் கைங்கரியம் புரிதலும் நிகழா எனக் கொள்க.

இந்த இரகசியங்களுள் சரமசுலோகம், சேத னன் காரியத்தையும், பகவான் செயலையும், அத னால் சேதனன் அடையும் பலத்தையும் சொல்வதா கும். மற்ற இரு இரகசியங்களும் சேதனன் புரிய வேண்டுவனவற்றை இயம்பினவே அல்லாமல், சரமசுலோகத்தைப் போன்று, மேற்கூறிய மூன்றை யும் சொல்லிற்றில்லை. இவற்றுள் சேதனன் பெறும் பலத்தை வரையறுத்துப் பேசுவது சரம

சுலோகமாயிருத்தலின், இதை ஆயர் மங்கையர் துயிலுணர்ந்து, பகவானுடைய கைங்கரியமாகிய பலத்தை அடைதற்குக் காரணமாயிருக்கும் ஒலிக்கு ஒப்பிடலாம். அரவமின்றேல், எங்ஙனம் ஆயர்மகளிர் விழித்துப் பகவானைப் பாடிப் பயன் பெற முடியாதோ, அங்ஙனமே சரமசுலோகமின்றேல் மற்றத் தருமங்களை விட்டு உண்மைத் தருமமாகிய அவனையே பற்றி வீட்டின் பேற்றைப் பெற முடியாதென்க.

**'தேசமுடையாய் திற':**—'மிக்க உடலொளியும், ஆன்ம ஒளியும் வாய்ந்தவளே, இவற்றால் எங்களுக் கெல்லாம் தலைமையுற்றவளே நீயே வந்து கதவைத் திறவாய்,' என்கிறார். பகவத்பத்தியில் ஆழ்ந்தவர்களுடைய உடலும் ஆன்மாவும் ஒளி விட்டு மிளிரும் என்பது வழக்கு.

இங்ஙனம் இப்பாசுரத்தில் துவயத்தை மங்கல நாணாகப் பூண்டு, ஆன்ம சொரூபம், உபாயசொரூபம், பலசொரூபம்ஆகியவற்றை அறிந்தஆய்ச்சியராகிய பாகவதர், திருமந்திரமாகிய மத்தைக்கொண்டு, துவயமாகிய தயிரைக் கடைந்து, சரமசுலோகமாகிய அரவத்தைக் கிளப்பி, நாராயணனாகிய கேசவனைப் பாடும் தொண்டைப் புரிதற்கு, உடலொளியும் ஆன்ம ஒளியும் வாய்ந்த மற்றொரு பாகவதையை எழுப்புகின்றனர் என அறிகின்றோம்.

**இதில் குலசேகரர் எழுப்பப்படுகின்றனர்.**

'கீழ்வானம் வெள்ளென்று'

எல்லோரும் திரண்டுவந்து அழைக்குமாறு கண்ணனால் வேண்டற்பாடுடைய (மிக்க விருப்புடைய) பாகவதையை எழுப்புகின்றனர்.

இவளைத் தம்முடன் கூட்டிச் செல்வதன் பொருட்டு வந்த மகளிர், இப்பெண்மணியைக் **'கோதுகலமுடைய பாவாய்'** என அழைக்கின்றனர். 'கோதுகலம்' என்பது வடமொழி. இதற்கு, சங்கம், அநுராகம், நட்பு, அன்பு, வேட்கை, அவா, காதல் முதலிய பொருள்கள் உண்டு.

இவ்விளியைக் குறித்துச் சிறிது நோக்குவாம்: சேதனரும் பகவானை விரும்புவதுண்டு. பகவானும் சேதனரை விரும்புவதுண்டு. இரண்டனுள் பகவான் அவாவி நிற்பதுதான் சிறந்ததாகும். இதுதான் 'பரகத ஸ்வீகாரம்' (பகவானால் அங்கீகரிக்கப்படுவது) எனச் சொல்லப்படும். இப்பேறு சிற்சிலருக்கே கிடைக்கின்றது. அவர்தாம் தவமுடையவராவர். அத்தகையவருள் ஒருத்தியே இப்பாகவதை. அதனால், இம்மகளிர் யாவரும் சேர்ந்து வந்து, இவளை நோக்கிக் 'கண்ணனுடைய அன்பினால் அழகு வாய்ந்தவளே (பாவையே)' என விளிக்கின்றனர்.

'கீழ்வானம் வெள்ளென்று'

நாம் நம் தலைக்கு மேல் உள்ள வானத்தை எப்போதும் காண்கின்றோம்; அதன் கீழ்தான் நாம் வாழ்ந்து வருகின்றோம். ஆயினும், அதற்குக் கீழ் வானம் என்னும் பெயர் இல்லாமையின் கீழ்வானம்

என்பது அதனின் வேறுபட்டது என்பது தெரிகிறது. அஃதன்றியும், இதைக் கீழ் வானம் எனச் சொல்லியிருத்தலின், மேல் வானம் ஒன்று இருக்க வேண்டும் என்பதும் புலனாகின்றதன்றோ ?

இங்குக் 'கீழ்வானம்' என்பது நம்முடைய இருதயகமலத்தையும், 'மேல்வானம்' என்பது வாத்ஸல்யம் முதலிய குணங்களோடுங்கூடி அதில் எழுந்தருளியிருக்கும் பகவானையும் குறிப்பனவாகும்.

**வினா:**—அங்ஙனமாயின், 'வெள்ளென்று' என்பதற்குப் பொருளென்னை ?

**விடை :**—நம் இருதய கமலத்தில் எழுந்தருளியிருக்கும் பகவான் சத்துவகுணமே வாய்ந்தவனாதலின், அவன் வீற்றிருக்கும் மேல் வானம் எப்போதும் வெளுத்திருக்கும். கீழ் வானமாகிற நம் இருதய கமலமோ தாமசம், இராசசம், சாத்துவிகம் ஆகிய முக்குணங்களும் வாய்ந்ததாதலின், சிலபோது கறுத்தும், சிலபோது சிவந்தும், சிலபோது வெளுத்தும் இருக்கும். வெண்ணிறமுடைய தூய இருதயத்திலே தான் எம்பெருமான் இன்பத்தோடு வீற்றிருப்பான். மற்றவர் இருதயத்தில் அவன் இருப்பினும், அவ்விருப்பு அவனுக்கு முள்மேல் இருப்புப் போன்று துன்பத்தையே தருவதாகும். ஆதலினாற்றான் ஆயர் மகளிர், "கீழ்த்திசை வெளுத்த இந்தச் சாத்துவிகக் காலத்தில், பாகவதர்களுடைய இருதயகமலங்கள் எல்லாம் பகவான் இன்புடன் எழுந்தருளுவதற்குத் தகுதியாக ஞான ஒளியைப் பெற்றுள்ளன. இவ்வமயத்தை நீ வீணில் கழியாமல் எழுந்து வந்து எங்களோடு கலந்துகொள்," என்கின்றார்கள்.

"எருமை சிறுவீடு மேய்வான் பரந்தனகாண்"

இங்கு இயற்கையாய்க் கறுத்த நிறத்தை யுடைய எருமையைக் குறிக்கின்றார். வெண்மை ஞானத்தையும், கருமை அஞ்ஞானத்தையும் காட்டு வனவல்லவா? ஆதித்தன் உதித்ததும் இருள் இரிதல் போன்று, ஞானம் பரவியதும் அஞ்ஞானம் இருந்த இடந்தெரியாமல் ஓடுமன்றோ? அம்முறையில் அறியாமை, தாமதம் இராசசம் நிறைந்த சிற்றினத்தினரின் இருதயங்களைத் தேடிக்கொண்டு சென்றது என்பதை இச்சொற்றொடரால் தெரிவிக்கின்றனர்.

"மிக்குள்ள பிள்ளைகளும், போவான், போகின்றாரைப்
போகாமல் காத்துஉன்னைக் கூவுவான் வந்துநின்றோம்."

மேற்குறித்த அறியாமை பல வகைப்படும். '**எருமை சிறுவீடு**' என்ற இடத்தில் யாவருக்கும் பொதுப்பட அமைந்த அறியாமையைப் பேசினார். 'மிக்குள்ள பிள்ளைகளும்' என்ற இங்கு, பாகவதரிடம் சிறப்பாக அமைந்துள்ள அறியாமைகளைப் பகர்கின்றார். இதற்கு, 'மிக்குள்ள - மிகுதியாகஉள்ள, பிள்ளைகளும் - அறியாமைகளும், போவான் - போதற் பொருட்டு' எனப் பொருள் கொள்க.

**வினா :**—பாகவதருக்குச் சிறப்பாக உள்ள அறியாமைகள் யாவை?

**விடை :**—பாகவதரை முன்னிடாமல் தாமே பகவானைச் சேவிக்கச் செல்லுதல்; எம்பெருமான் சந்நிதிக்குச் செல்லுவதே பயன் எனக் கொள்ளாமல், வேறு பயனை நாடி அவனிடம் போதல்; அங்குச் சென்று அவனைக்கூப் பல்லாண்டு [illegible]

தன்நலன்கள் சிலவற்றை நாடிநிற்றல் ஆகிய இவை போன்றவைகள், பரமனிடமே நெஞ்சைப் பதித்திருக்கும் பாகவதருக்கு அறியாமைகள் ஆகும். அவை நீங்கியதைத்தான் இச்சொற்றொடரால் தெரிவிக்கிறார். "கண்ணனை இப்போதே அடையவேண்டுமென்னும் ஆர்வத்தினால் இக்குற்றங்களை நோக்காமல் போகின்றவரை, பாகவதையாகிய உன்னை முன்னிட்டுக்கொண்டே போகவேண்டும்," எனச்செப்பிச் "சிற்றின்பத்தைத் துய்த்தற்குச் செல்கின்றவரைத் தடுத்தல் போன்று, அவர்கள் போக்கை ஒழித்து, உன்னை அழைத்தற்பொருட்டு யாவரும் திரண்டு வந்து உன் வாயிலில் நிற்கின்றோம்," என்கிறார். ஆக இப்பாசுரத்தால் "கீழ்வானமாகிய இருதயகமலம் பரமன் வீற்றிருத்தற்குத் தக்க முறையில் ஞான ஒளிபெற்றுள்ள இவ்வைகறையில் அறியாமை நீங்கி, சிறப்பாகப் பாகவதருக்குள்ள பேதைமைகளும் ஒழிந்தன," என்பதும், "பாகவதையாகிய உன்னை எழுப்பிக்கொண்டு போதலே எங்களுக்குப் புருஷார்த்தம்," என்பதும் புலனாகின்றன.

**இது நம்மாழ்வாரைக் குறித்ததாகும்.**

### 'தூமணி மாடத்து'

இப்பாசுரத்தில், "கண்ணன் வருங்கால் வரட்டும். நம் இயல்பை உணர்ந்து வந்து அனுவித்தலும் அவன் காரியமன்றோ?" எனத் தன் பேற்றையும் அவன்பாலே ஆக்கிக் கவலையற்றுத் துயிலும் ஒரு பாகவதையை எழுப்புகின்றார்கள்.

**'தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய':** இப்பாகவதை உறங்கும் இடம் ஆய்ந்தெடுத்த தூய நவமணிகளால் ஆக்கப்பட்ட மாடம் என்பது தெரிகிறது. பாகவதைக்கு ஏற்ப இம்மாடத்தை, பகவானுக்கும் நமக்குமுள்ள ஒன்பதுவிதத்தொடர்பு களைத் தெரிவிக்கும் திருமந்திரத்திற்கு ஒப்பாகக் கூறலாம்.

**வினா :—**மாடத்தைத் திருமந்திரத்திற்கு ஒப்புப் படுத்தின், இம்மாடத்தில் அமைந்துள்ள விளக்கு கள், மணப்பொருள்களின் புகை, பஞ்சணை இவற்றை எவற்றிற்கு ஒப்பிடுவீர்?

**விடை :--**இவற்றை ஒவ்வொன்றாக விளக்க வேண்டும். விளக்கு என்பது ஞானத்தைக் குறிப்ப தன்றோ? ஒரு சேதனன், பரமான்மா, சீவான்மா, சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கரியம் முதலிய வற்றைப்பற்றிய ஞானங்களை எதனால் பெறுகிறான்? திருமந்திரத்தினாலல்லவா? அங்ஙனமாயின், இதில் பல விளக்குகள் ஒளிர்ந்துகொண்டிருக்கின்றன என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

'தூமம் கமழத் துயிலணைமேல் கண் வளரும்'

ஒருவருக்குத் திருமந்திர ஞானம் மட்டும் இருத் தல் போதியதாமா? ஆகாது. அதைச் செயலளவில் கொணர்ந்து, ஆன்ம உய்வைப் பெறுதற்குத் துவய ஞானமும் வேண்டும். இது மலருக்கு மணம் போன்று, சொரூப ஞானத்திற்கு நலமளிப்பதாகும். துவயத்திற்கு மணமுண்டு என்பதை, கீழ்க்குறிப் பிடும் சரிதத்தினால் அறியலாம்.

பட்டர் திருவவதரித்ததும், பாஷ்யகாரர் அக்குழ வியைக் கொணருமாறு எம்பாருக்குப் பணித்தன ராம். அவர், துவயத்தை அனுசந்தானம் செய்து கொண்டே அக்குழவியைத் தாங்கிவந்து இராமானுச ரிடம் காட்டினராம். எதிராசர் அக்குழவியை உற்று நோக்கி, "இம்மகவின் முகத்தில் துவயம் மணக் கின்றதே! துவயானுசந்தானமோ?" என இயம்பி மகிழ்ந்தனராம். இதனால் துவயத்திற்கு ஒரு வகை மணமுண்டு என்பது தெரிகின்றதன்றோ? இச்செய் தியை முன்னரும் வேறொரு சான்றுக்காகக் கூறியுள் ளோம்.

இன்னும் இம்மங்கைக்கு என்ன அமைந்திருக் கிறது? அமைதியுடன் உறங்குவதற்கேற்ற பஞ்சணை யாகும். இப்பஞ்சணை என்பது அர்த்தபஞ்சக ஞானத்தைக் குறிப்பதாயிருப்பினும், இங்கு இதைச் சரமசுலோகத்திற்கு ஒப்பிடுதலே பொருத்தமுடைய தாகும். ஏனெனில், மெத்தென்ற படுக்கை ஒருவ ருக்கு என்ன உதவியைச் செய்கிறது? கவலையற்று இன்பத்துடன் தூங்கச் செய்வதன்றோ? அங்ஙனமே எல்லாத் தருமங்களையும் விட்டு எம்பெருமானையே உபாய உபேயங்களாகக் (பற்றுக் கோடாகவும், பயனாகவும்) கருதிய ஒருவருக்கு இச்சரமசுலோகம் யாதொரு கலக்கமும் அச்சமுமின்றி அவனையே பற்றி வாழ்வதற்கு இடந்தருகின்றது. ஆதலின், பஞ்சணை சரமசுலோகத்தை ஒக்கும்.

'அவனே வந்து நம்மை அங்கீகரிப்பன்,' என்னும் உறுதியுடன் நிற்கும் பாகவதையை எழுப்பும் இப்பாசுரத்தின் முதலிரண்டடிகளிலும் சூடிக்கொடுத்

தார் எத்துணைப் பொருத்தமான சொற்களை அமைக்கிறார் என நோக்குதல் வேண்டும்!

"மாமான் மகளே, மணிக்கதவம் தாள்திறவாய்."

அந்தணர் குலத்தில் தோன்றிய ஆண்டாள் ஆயர் குலத்தில் தோன்றிய மகளிரிடம் உறவு பாராட்டுகின்றனர்.

"பழுதிலா ஒழுக லாற்றுப் பலசதுப் பேதி மார்கள்,
இழிகுலத் தவர்க ளேலும் எம்மடி யார்க ளாகில்,
தொழுமினீர் கொடுமின் கொள்மின் என்றுநின் னோடு
மொக்க
வழிபட அருளி னய்போன்ம மதிள்திரு அரங்கத்தானே!"

என்னும் தொண்டரடிப் பொடியார் பாசுரத்தின் கருத்தை இவர் செயலில் கொணர்ந்தனர் போலும்! இப்பாகவதப் பெண்மணியை ஆன்ம உறவாகக் கொண்ட இவருடைய எண்ணத்தின் உறுதி, உடலுறவைப் பாராட்டுமளவும் இவரைக் கொணர்ந்து விட்டதை நோக்குக.

இன்னும் 'மாமான்' என்பதற்கு 'அம்மான்' என்னும் வேறொரு பொருளுமுண்டு. அம்மான் என்பது மாமனை மட்டுமேயல்லாமல், தந்தையையும் குறிப்பதாகும். இம்முறையில் 'மாமான் மகளே' என்பது ஈன்றோனாகிய பகவானுடைய மகளாகிய பாகவதையைக் குறிக்கும்.

பூர்வாசாரியர்கள் தங்கள் சிஷ்யர்களுக்குக் கதவடைத்துக்கொண்டு, இரகசியங்களையும், அவற்றின் பொருளையும் உபதேசித்தல் போன்று, திருமந்திரமாகிற மாடத்தில் பல ஞான விளக்குகள்

எரிய, துவயமாகிற தூபம் கமழ, சரமசுலோகமாகிற பஞ்சணையில் பள்ளி கொண்டிருக்கும் இப்பாகவதை, அழகியதும் உயரியதுமான அவற்றின் வியாக்கியானச் சுவையை, கண் திறவாமலும், அதனாலாய ஒலி பிறர் செவியில் நுழையாவண்ணமும் தானே துய்த்துக்கொண்டிருக்கின்றாள். இத்தன்மைகளைக் காட்டுவனவாகும் மணிக்கதவும், தாழ்ப்பாளும். மணி என்பதற்குக் கண்விழி, ஒலி என்னும் பொருள்களும் உண்டு.

'*தாள் திறவாய்*' என்பது, "பகவானுடைய மகளாகிய பாகவதையே, நீ மட்டும் அவற்றின் இன்பத்தைத் துய்க்க வேண்டுமென்னும் குறுகிய எண்ணத்தைக் கொள்ளாமல், உன் விழியைத் திறந்து, எங்களைப் பார்த்து, உரத்த ஒலியுடன் அவ்வர்த்தங்களை எங்களுக்கும் உரைத்து, நாங்களும் ஆனந்தத்தில் ஆழுமாறு செய்வாயாக," எனச் செப்புவதைக் குறிக்கும்.

"ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?"

உள்ளிருக்கும் பாகவதை, துவயத்தை அனுசந்தித்துக்கொண்டும் முற்கூறியவாறு அவ்வர்த்தங்களையே சிந்தித்துக்கொண்டும், அந்த இன்ப அனுபவத்திலேயே ஊன்றி இருத்தலின், 'வெளியில் என்ன நடக்கிறது? யார் வந்துள்ளனர்? அவர்கள் என்ன சொல்லுகின்றார்கள்?' என்பவற்றைச் சிறிதும் அறியாளாய் இருக்கின்றனள்.

இத்தகைய இன்பப் பெருக்கில் மூழ்கியிருக்கும் பாகவதையைத் துயில் உணர்த்துதற்பொருட்டுப்

பெண்களைத் தன் வசப்படுத்தும் பகவானுடைய மாயச் செயல்களையும் பிராட்டியை விடாது பற்றி நிற்கும் அவனுடைய இயல்பையும், எல்லாரிலும் மேன்மைப்பட்ட அவன் பெருமையையும் விளக்கப் படுத்தும், **மாமாயன், மாதவன், வைகுந்தன்** என்னும் அவனுடைய திருநாமங்களை வாயார வழங்கினார்கள். மூர்ச்சித்துக்கிடக்கும் ஒருத்தியைப் பனி நீர் தெளித்துத் தெளிவித்தல் போன்று, இத்திருநாமங்களின் ஒலி, தன்னைத்தான் மறந்த நிலையிலிருந்த இவளை உணர்ச்சிக்குக் கொணர்ந்தது. இவளுடைய சிந்தையும் செவியும் அவர்கள்பால் சென்றன. உடனே எழுந்து கதவைத் திறந்து அவர்களுடன் கலந்துகொண்டனள்.

'தூமணி மாடம்' என்னும் இப்பாசுரத்தினல், இப்பாகவதை திருமந்திரமாகிய மாடத்தில் உள்ளாள் என்பதும்; அம்மாடத்தில் பரமான்மா, சீவான்மா, சேஷத்துவம், பாரதந்திரியம், கைங்கரியம் முதலிய ஞானவிளக்குகள் ஒளிர்ந்துகொண்டிருக்கின்றன என்பதும்; இவள் அங்குத் துவயத்தின் மணங்கமழக் கவலையற்றுச் சரமசுலோகமாகிற பஞ்சணையில் உறங்குகின்றாள் என்பதும்; உயர்ந்த அந்தணர் குலத்தில் தோன்றிய ஆண்டாள் தாழ்குலத்தில் தோன்றிய ஆயர் மகளிரை ஆன்ம பந்துக்களாகவும், உடலுறவினராகவும் கொள்ளுகின்றனர் என்பதும்; இப்பாகவதை மேற்கூறிய மூன்று இரகசியங்களின் அரிய பொருட்சுவையைக் கண் விழியாமலும், வாய் திறவாமலும் தானே துய்த்துக்கொண்டிருக்கின்றாள் என்பதும்; இவள் நிலையை

நோக்கிய மற்றையோர், "நீ எங்களை நோக்கி அவற்றின் பொருளை எங்களுக்கு உரைத்து எங்களையும் உய்விக்க வேண்டும்," என இறைஞ்சுகின்றனர் என்பதும்; பின்னர், அவர்கள் பகவானுடைய திருநாமங்களை வாயார வாழ்த்தி இவளைத் தங்களோடு கலந்து கொள்ளுமாறு செய்தார்கள் என்பதும் சொல்லப் பட்டன.

**இது திருமழிசைப்பிரானைத் துயிலெழுப்புவதாகும்.**

## 'நோற்றுச் சுவர்க்கம்'

திருவாய்ப்பாடியிலுள்ள பெண்கள் யாவருக்கும் தலைவியாய், கண்ணனோடு கலப்பதற்கு மற்றவரினும் சதுரப்பாடுடையவளாய், கண்ணன் இல்லத்திற்கு அயல் இல்லத்தில் வதிபவளாய், மற்ற மகளிர் கிருஷ்ணனுடைய பெயரைக் கேட்ட மாத்திரத்தில் அவனை அடைய வேண்டுமென எத்துணைப் பாடுபடுவரோ, அத்துணைப் பாட்டைக் கண்ணன் இவள் பெயரைச் செவியேற்றதும் படக்கூடிய பெருமை வாய்ந்தவளாய், வருந்திக் காரியங்களைச் செய்யாமலே பயன் கைவரப் பெற்றவளாய் உள்ள பாகவதை ஒருத்தியை எழுப்பும் பாசுரமாகும் இது.

இம்மங்கைக்கு, **"நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய், ஆற்ற அனந்தல் உடையாய், அருங்கலமே,"** என்னும் பட்டங்களை அளிக்கின்றனர்.

'நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்' என்பதற்கு மூன்றுபடியாய்ப் பொருள் கூறுவர்:

1. "தவமும் தவமுடையார்க்காகும்" என்பதனால், 'முற்பிறவிகளில் தவஞ்செய்தவர்க்கே இப்போது மேற்கொள்ளும் தவம் குறைவின்றிச் செவ்வனே முற்றுப்பெறும்,' என்பர். அதைப் போன்று நீ, "நாம் முன்னரே நோன்பிழைத்துச் சுவர்க்கம் என்னும் சொல்லிற்குப் பொருளான கிருஷ்ணனுடைய அனுபவத்தைக் கைக்கொண்டோம்," என்றிருக்கின்றனை போலும்! அந்தோ! அதற்குமாறாய் அதை இழந்தன்றோ இன்னும் துயில்கின்றாய்! 'கண்ணனை அடைதற்கு நாமெல்லாரும் வைகறையிலேயே எழுந்து நோற்கலாம்,' என்று நீ உறுதியுடன் கூறிய வார்த்தைகள் யாவும் பயனற்றனவே!

2. "நோன்பியற்றி முடித்தவர் போன்று, 'நாம் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்துவிட்டோம்; கண்ணனுடைய அனுபவமும் நமக்குக் கிடைத்துவிட்டது,' என்று மனநிறைவுடன் இருக்கின்றனையோ!

3. "நோற்றுப் பெறக்கூடிய கிருஷ்ணனுடைய அனுபவத்தை எங்களைப் போன்று நோற்க வேண்டிய துன்பமின்றியே எப்போதும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றனை போலும்!"

**அம்மனை:**—"தாயைப் போன்று எங்களுக்கெல்லாம் தலைமையுற்ற பரமபாகவதையே, நீயே இங்ஙனம் துயிலில் மயங்கி இருப்பின், இளையவர்களாகிய எங்கள் நிலைமை யாதாகும்?"

**வினா:**—இப்பாகவதை, கண்ணனால் பெரிதும் விரும்பப்பட்டவள் என்றும், உங்கள் யாவருக்கும் தலைமையுற்றவள் என்றும் சொன்னீர்கள்! அத்

தகையவள், ஒன்றையும் செய்யாமலே செய்துவிட்ட தாயும், என்றும் பெருத ஒன்றைப் பெற்றுவிட்ட தாயும் நினைத்தல் அறியாமையின்பாற்படு மன்ரே! இஃது உயரிய பாகவதையின் இயல்பிற்குச் சேருமா?

**விடை:**—இதை மேற்போக்காக நோக்கில் சேராதெனவே தோன்றும். ஊன்றி நோக்கின், இதன் உண்மை விளங்கும். இப்பாகவதைக்குத் தோன்றும் இவ்வெண்ணங்கள் இவள் மனத்திலிருந்து தோன்றுவன அல்ல. அங்ஙனமாயின், இவளிடம் குறை கூறலாம். இவளிடம் மிக்க அன்பு கொண்ட கண்ணன் இவற்றை இவளுக்குத் தோற்றுவிக்கின்ருன். "நினைப்பித்தால் யாரொருவர் நினையாதாரே" என்பதை ஓர்க. அவர்களே மேற்குறித்த சொற்றொடருக்கு, 'எங்களைப் போன்று நோற்க வேண்டிய துன்பமின்றியே கிருஷ்ணுநுபவத்தைத் துய்த்துக்கொண்டிருக்கின்ருய் போலும்!' என்னும் ஒரு பொருளையும் இயம்புகின்ருர்களல்லவா? இஃதும் இக்கருத்தை வலியுறுத்துமன்ரே?

**வினு:**—அங்ஙனமாயின், மற்றைய மங்கையர் ஏன் சிறப்புற்ற இப்பாகவதையை இழித்துப் பேசுதல் வேண்டும்?

**விடை:**—கண்ணனல் பெரிதும் விரும்பப்படுகின்ற இவளோடு கலந்துகொள்ளின் இவள் வாயிலாகத் தாங்களும் அவன் அன்பைப் பெறலாமென நினைத்த அவர்கள் நினைப்பிற்கு மாருகப் பலரும் இருந்து பொதுவாகத்துய்க்க வேண்டிய இன்பத்தை இவள் மட்டும் தனியே இருந்து துய்க்குங்கால்

"நாமும் இவள் பெற்ற பேற்றைப் பெறுதற் கில்லையே!" என்னும் பொறாமை உண்டாகிறது. இங்கு ஆண்டாள், எம்பெருமான் வலக்கையில் தாங்கியிருக்கும் சங்கைப் பார்த்து இயம்பிய,

"பதினாறு மாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
மதுவாயில் கொண்டாற்போல் மாதவன்தன் வாயமுதம்
பொதுவாக உண்பதனைப் புக்குநீ யுண்டக்கால்
சிதையாரோ! உன்னோடு செல்வப் பெருஞ்சங்கே.!"[1]

என்னும் பாசுரம் சிந்திக்கத் தக்கது.

"ஆதலின், உன் அனுபவம் உத்தமமானதும் உண்மையானதுமன்று. கானற்சலம் போன்று பொய்யானது." எனச் சொல்லி அவளை மயக்குகின்றார்கள். அஃதன்றியும், அவர்கள் ஒன்று சேர்ந்து கூடிக் குலாவும் நட்பினராதலின், ஒருவருக்கொருவர் பகடி பண்ணிக்கொள்ளுகின்றார்கள் என்றும் சொல்லலாம். நட்பினருக்குள் இங்ஙனம் நடத்தல் இயல்புதானே!

**வினா:**—அறிவுடையவர் பொறாமை கொள்ளார் என்றும், அவர் நலங்களைக் கெடுத்தற்கு அவர் கொள்ளும் பொறாமையே போதியதென்றும், இஃது இம்மைச் செல்வத்தையும் மறுமை இன்பத்தையும் கெடுக்கும் என்றும் நூல்கள் சாற்றுகின்றமையின், உயரிய ஆன்ம அறிவில் துறைபோய அவர்கள் இப் பொறாமையைக் கொள்ளுதல் பொருந்துமா?

**விடை:**—பொறாமையை, பிறரைக் கெடுத்தற்காகக் கொள்ளும் பொறாமை, பிறர் உயர்ச்சிக்குக்

---

1. நாய்ச்சியார் திருமொழி, 7: 9.

குறைவு நேராமல் தாம் முன்னேறுதற்காகக் கொள்ளும் பொறுமை என இரு பகுதியாகப் பிரித்துக் கொள்ளல் வேண்டும். இவ்விரண்டனுள் முன்னது குற்றமுடையதேயன்றி, பின்னது அதன்பாற் படாது. அன்றியும், இதற்குப் பொறுமை என்னும் பெயரைச் சூட்டுதலும் தவறு. ஏனெனில், பிறர் உயர்ச்சியில் அவர்களுக்குண்டான இவ்வெண்ணம், அவர் நிலையை அழிக்க வழி தேடுதல் இல்லையே! அவரை அவ்வுயரிய நிலையிலேயே இருத்தித் தன்னையும் அந்நிலைக்குக் கொண்டு செல்லவன்றோ முயல்கிறது! ஆதலின், இதற்கு 'அவர்களைப் போன்றே நாமும் ஆக வேண்டும்,' என்னும் **ஆர்வம்** எனப் பெயரிடுதல் ஒருவாறு பொருத்தமுடையதாகும். கல்வி, அறிவு, கேள்வி, பத்தி முதலியவற்றில் உயர்ந்தவர்களைக் காணுங்கால், 'நமக்கும் இவை அமைந்திலவே!' எனப் பொறுமை கொண்டு, அவற்றிற்காகத் தாமும் முயன்று முன்னேறுதல் அறிவார் தொழில் என நூல்கள் அறைகின்றன. இவற்றால் அவர்கள் இப்பாகவதையினிடம் கொண்டது தீய பொறுமை அன்று என்பதை அறிக.

இனி, '**ஆற்ற அனந்தலுடையாய், அருங்கலமே.**' என்னும் சொற்களை நோக்குவாம்: இதன் பொருள், 'மிக்க சோம்பலுடையவளே, எங்களை அழகு செய்யும் அணி போன்றிருப்பவளே,' என்பதாகும். "எல்லாத் தருமங்களையும் விட்டு என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று," எனத் தேர்த்தட்டில் இருந்த கண்ணன் அர்ச்சுனனுக்கு இயம்பியதை மனத்திற்கொண்டு, "நம் ஆன்ம உய்விற்கு நாம்

செய்ய வேண்டுவது ஒன்றுமிலது. நம் உய்வும் அவனைச் சார்ந்ததேயாகும்,'' என நினைத்து, **"களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்,"** என எல்லாப் பொறுப்புகளையும் அவனிடமே ஒப்படைத்து, தம் நலத்திற்கு அவனையே எதிர் நோக்கியிருக்கும் பிரபன்னரே சோம்பர் எனச் சொல்லப்படுவர். "உன் கடைத்தலை இருந்து வாழும் சோம்பரை யுகத்தி போலும்,'' என்னும் தொண்டரடிப்பொடியாழ்வார் வாக்கும் இத்தகையவரைப் பற்றி எழுந்ததேயாகும். இப்பாகவதை அந்நிலையிலுள்ளவளாதலாற்றான், இவளை 'ஆற்ற அனந்தலுடையாய்,' என்கின்றார்கள். இங்ஙனம் விளித்து முடித்தார்களோ இல்லையோ, உடனே 'அருங்கலமே' என்னும் விளி இவர்கள் திருவாக்கிலிருந்தே புறப்படுகிறது. இவ்விளி தங்கத்தால் செய்த ஒரு மாலையில் பெரியதும் மிக்க ஒளி பொருந்தியதுமான ஓர் இரத்தினத்தைப் பதித்தால், எங்ஙனம் அம்மாலை முன்னினும் ஒளி பெற்றுத் துலங்குமோ, அங்ஙனமே பொன்னரத்தைப் போன்ற எங்கள் குழுவினில் இரத்தினம் போன்ற நீ வந்து கலப்பாயாகில், யாங்கள் இப்போதினும் மிக்க ஞான ஒளியைப் பெற்று விளங்குவோம்,'' என்னும் கருத்தைக் கொண்டதாகும். இச்சொற்றொடரை நோக்கினும், இதற்குமுன் விளிக்கும் விளி 'சோம்பலுடையவளே' என்னும் பொருள் கொள்ள இடந்தாராதல்லவா?

இங்ஙனம் இம்மங்கை, உயிருள்ளன உயிரற்றன ஆகிய யாவற்றிற்கும் ஆதாரமாகவுடையவன்,

இவை ஒவ்வொன்றிலும் பூரணமாக நிறைந்திருப்ப வன் என்னும் பொருளைக் கொண்ட 'நாராயணன்' என்னும் திருநாமத்தை வகித்த பகவானே நம் ஆன்ம உய்விற்குக் காரணன் என்னும் ஊன்றிய எண்ணம் உடையவளாயும், பாகவதருக்கு அணி போன்றவ ளாயும் இருத்தலினுற்ருன், கண்ணன் இவள் பெய ரைக் கேட்டதும் இவளை அடையத் துடிக்கின்ருன் என்பது சொல்லப்படுகிறது.

இத்தகையவருடைய பத்தி அவனளவுமட்டும் நில்லாது, அவன் தொடர்பற்ற பொருள்கள் வரை யும் செல்லும். அங்ஙனம் செல்லவில்லையேல், இஃது ஊன்றிய பத்தி ஆகாது. இங்கு,

> "கோலால் நிரைமேய்த் தாயனுய்க்
> குடந்தைக் கிடந்த குடமாடி
> நீலார் தண்ணந் துழாய்கொண்டுஎன்
> நெறிமென் குழல்மேல் சூட்டீரே !"[1]

என ஆண்டாள் இயம்புவதைக் காண்க. இன்னும் பகவான் குணங்களையும் கொண்டாடிப் பாராட்டு வது இவர்கள் இயல்பாகும்.

ஆக, இப்பாசுரத்தினுல், இதன் முதலடிக்கு மூன்று விதமாகப் பொருள் கொள்ளலாமென்றும்; இப் பொருளினுல் தேறும் பொருள் இன்னதென்றும்; மற்றைய மங்கையர் இப்பாகவதையை ஏளனம் செய்தற்குப் பொருமையே காரணம் என்றும் : இப்பொருமை பிறருக்குத் தீமை விளைவிப்பதாய் இராமல், அவரைப் போன்றே தாமும் இறையருளை

1. நாய்ச்சியார் திருமொழி, 13 : 2.

அடைதற்கு அடிகோலியாயிருத்தலின், இதைத் தீக் குணத்தில் சேர்த்தல் கூடாதென்றும்; 'சோம்பர், அருங்கலம்' என்னும் சொற்களுக்குப் பொருள் இன்னதென்றும் ; இவள் இயல்பிற்கேற்பவே இப் பாசுரத்தில் பகவானுக்குத் திருநாமங்கள் அமைந் திருக்கின்றன என்றும் அறிகின்றோம்.

இது பேயாழ்வாரைப் பற்றியது.

## 'கற்றுக் கறவை'

இது, கண்ணபிரான் எங்ஙனம் அவ்வூர்க்கெல் லாம் ஒரே பிள்ளையாய் யாவராலும் போற்றி வளர்க் கப்பட்டானே, அங்ஙனமே ஆயர்களுக்கெல்லாம் ஒரே மகளாய்ச் சிறப்புடன் வளர்க்கப்படுமவளாய், கண்ணனோடு கலந்து இன்பந் துய்த்தற்கேற்ற பரு வமுடையளாய், "அவனை அடைதற்கு யானோ நோற்பேன்? என்னைப் பெற அவனன்றோ நோற்க வேண்டும்?" என்னும் உறுதியுடன் படுக்கையில் சாய்ந்திருக்கும் ஒரு பாகவதையைத் துயிலுணர்த் தும் பாசுரமாகும். இதனால், இவள் பகவானே வந்து தன்னை ஏற்க வேண்டும். அதுவே தன் உய் விற்குத் தவறாத உபாயம் எனப் பரகதசுவீகா ரத்தை எதிர்பார்த்திருப்பவள் என அறிகின்றோம்.

இப்பாகவதையை,

"குற்றமொன் றில்லாத
கோவலர்தம் பொற்கொடியே!
புற்றர வல்குற் புன்மயிலே!
செல்வப் பெண்டாட்டி"

என்னும் சொற்களால் விளிக்கின்றார்கள்.

'கோவலர்தம் பொற்கொடி' என்னும் இச் சொற்றொடரை, கொடி, பொற்கொடி, கோவலர்தம் பொற்கொடி என மூன்றாக இயைத்துப் பொருள் கூறலாம். பொதுவாகப் பெண்களைக் கொடியாக உருவகப்படுத்தும் வழக்கு இலக்கியங்களில் பல இடங்களிலும் உண்டு. இன்னும் பரமான்மாவாகிய புருஷதத்துவத்தைக் கோலாகவும், சீவான்மாக்களாகிய பெண் தத்துவங்களைக் கொடிகளாகவும் உருவகப்படுத்தும் முறையை நம் ஆழ்வார்களிடம் காணலாம். இதற்கு,

"கோல்தேடி யோடுங் கொழுந்ததே போன்றதே
மால்தேடி யோடும் மனம்." [1]

என்னும் பாசுரத்தைச் சான்றாகக் கொள்ளலாம்.

கொடி படர்தற்கும், செழித்து வளர்தற்கும் ஒரு கொம்பின் உதவி இன்றியமையாது வேண்டும். ஒரு கொம்பு கொடியைத் தாங்கி நிற்கவில்லையேல், அஃது உறுதியும் அழகும் பெற்று ஒளிராமையே யன்றி, அதனாலாய பயனையும் பிறர் பெறுதற்கியலாது. இதனால் கொம்பே, கொடியும் மற்றவரும் நலம் பெறச் செய்யும் கருவி என்பது அறியக் கிடக்கின்றதன்றோ?

இம்முறையில் இப்பாகவதப் பெண்மணி யாவராலும் விரும்பப்படுதற்கேற்ற அழகும் மென்மையும் உடையவளாயிருத்தலின் கொடி என்றனர். இத்துடன் நின்றதா? பொற்கொடி என்கின்றனர். இவளுடைய உயரிய ஞானத்தினால் உடல் பொன்

1. இரண்டாந்திருவந்தாதி, 27.

போல ஒளி விட்டுப் பிரகாசிக்கின்றது! அப் பிரகாசம், இவர்களை இங்ஙனம் அழைக்கச் செய் கின்றது!

**விஞ:** இங்கு உயரிய ஞானம் என்பது எதை?

**விடை:** "பகவானைப் பெறுதற்கு யான் ஒரு முயற்சியும் செய்யமாட்டேன், அஃது என் இயல் பிற்கு (சொரூபத்திற்கு) ஏற்றதன்று, என்னைப் பெறுதற்கு அவனே விரைந்து வந்து நிற்பன். அக் கொழு கொம்பு என்னை வந்து தாங்கவில்லையேல், யான் உயிர்வாழேன்! '**ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன் யான்**'[1] என்றன்றோ யானிருப்பது! அங்ஙனம் இருக்கும் என்னை அவன் எங்ஙனம் கைவிட முடியும்!" என ஊன்றிய நம்பிக் கையுடன் நிற்கும் நிலையே இங்கு உயரிய ஞானம் எனக் கூறப்படுகின்றது! இதனைக்காட்டிலும் சீரிய ஞானம் வேறொன்றுளதோ? வெறுங்கொம்பில் படரும் கொடியை வெறுங்கொடி எனச் செப்பலாம். ஆண்மை நிரம்பிய ஒரு (ஆண் மகனாகிய) கொம்பில் படரும் பெண்மை நிறைந்த ஒரு கொடியைப் பெண் கொடி என்னலாம். லீலா விபூதி, நித்திய விபூதி ஆகிய இரண்டையும் தன்வயப்படுத்தி வீரம்விளங்க ஆளும் (பரமான்மாவாகிய) மாணிக்கக் கொம்பில் படரும் (ஜீவான்மாவாகிய) கொடியைப் பொற் கொடி என்றுதானே சொல்ல வேண்டும்?

அதற்கு மேலும் 'கோவலர்தம் பொற்கொடி' என் கின்றனர். கோவலர் என்பது இடையருக்கு அமைந்த பெயர். பகவான் எப்படி உயிர்களைக் காக்கின்றனனோ, அங்ஙனமே இக்கோவலர் பசுக்

களைக் காக்கின்றனர். பகவான் எங்ஙனம் முதலில் உயிர்களை வாழ்வித்து, பின்பு தான் வாழவேண்டு மென நினைக்கின்றனனே, அங்ஙனமே கோவலரும் பசுக்களை உண்பித்துப் பின்பு தாம் உண்ணுகின் றனர் என்னும் 'பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்து' என்னும் ஆண்டாள் வாக்கியத்தை வற்புறுத்தும். எவ்வாறு பகவான் தன் அன்பரிடம் வஞ்சனையற்றவனாய்ப் பரதந்திரனாய்ப் பழகுகின்ற னனோ, அவ்வாறே கோவலரும் தாம் வளர்க்கும் ஆக்களிடம் கள்ள நெஞ்சின்றிப் பவ்வியமாய்ப் பழகுகின்றனர். இங்ஙனம் பகவானுக்கும் கோவல ருக்கும் ஒற்றுமையுள்ளது. இவற்றை நெஞ்சிருத் தித்தான் ஆண்டாள் இப்பாகவதையைக் 'கோவ லர்தம் பொற்கொடியே' என்கிறார். கோவலன் அல்லது கோபாலன் என்பது கண்ணனுடைய ஒரு பெயரன்றோ!

**கண்ணன்றன் பொற்கொடியே:** இதற்கு "உலகிலுள்ள உயிர்களாகிய எல்லாக் கொடிகளும் நாமாகிற கொம்பில் வந்து படர்தல் வேண்டும்" என அவன் தவங்கிடக்கின்றான். அதன்பொருட்டு அவன் செய்யும் முயற்சிகள் அளவிலடங்குவனவல்ல. எத்தனை அவதாரங்கள் எடுத்தான்! நம் பிறப்பிற் கேனும் கணக்குண்டு, அவன் பிறப்பிற்குக் கணக் குண்டோ! எத்தனை திவ்விய தேசங்களில் நின்றும், இருந்தும், கிடந்தும் படுகாடு கிடக்கின்றான்! எத்தனை இல்லங்களில் அவரவர் அமைத்த உருவங் களில் தன்னை அமைத்துக்கொண்டு, அவர்கள் கொடுத்ததை உடுத்து, இட்டதை உண்டு, அவர்கள்

விரும்பியதை ஈந்துகொண்டு திருத்தியுடன் வதி கின்றான்! இத்தனையும் எதன்பொருட்டு? 'ஓர் ஆன்மக் கொடியேனும் நாமாகிற கொழுகொம்பில் வந்து படர்ந்து, நாமே உபாயம் என்னும் மலரினு லும், நாமே உபேயமென்னும் காயினுலும் தன்னை அலங்கரித்துக்கொண்டு, அக்காய் மற்றக் காய்களு டன் கலந்து, சான்றோருக்கு உணவுப் பொருளாக நிற்பது போன்று இவ்வான்மாவும் மற்ற நித்திய சூரிகளுடன் கலந்து நமக்கு உணவுப் பொருளாக நின்று நலம் பெருதா?' என்னும் எண்ணத்தைக் கொண்டேயாகும். அத்தகைய உயரிய எண்ணத் தைப் பெறச் செய்த இக்கொடியைக் கண்ணன்றன் பொற்கொடி (ஞானக்கொடி) என்றுதானே இயம்பு தல் வேண்டும்? இதைக் கண்ணனுகிற கொம்பி லேயே சென்று படரும் ஞானக்கொடி எனக் கொள்க.

"**கோவலர்தம் பொற்கொடியே**":— தம் ஆன்ம உய்விற்குத் தாமோ, வேறு தேவதைகளோ உபாயமென்றும், செல்வமோ, கைவல்லியமோ தமக்குப் பயன் என்றும் கொள்ளும் குற்றங்களை ஒழித்து, எம்பெருமானே தமக்கு உபாயமென் றும், அவனுக்குப் புரியும் தொண்டே தமக்குப் பயன் என்றும் கருதும் இடையரின் பொன்போன்ற எண்ணத்தை மேன்மேலும் ஒளிரச் செய்யும் இயல் புடையவளாதலால், இவளை, "கோவலர்தம் பொற் கொடியே" என்கிருர். மற்ற முதலடிகள் இரண்டும் அக்கோவலருக்கு அடைமொழிகளாய்ச் செப்பி இருக் கின்றன.

"புற்றரவல்குல் புனமயிலே, போதராய்": 'தன்னிடமாகிய புற்றில் வாழும் அரவம் போன்ற அகன்ற நிதம்பத்தையும், வனத்தில் தன் பிரியப்படி மகிழ்வுடன் வாழும் மயில் போன்ற சாயலையும் உடையவளே,' என்கின்றனர்.

எங்ஙனம் மயில் தனக்குப் பிறர் மனத்தைக் கவரக்கூடிய அழகிய தோகை இருப்பினும், தனக்கு ஆனந்தம் உண்டான போதே அதை விரித்தாடி மற்றவருக்கு மகிழ்வை உண்டாக்குகின்றதோ, அங்ஙனமே, பாகவதர்கள் பிறர் ஆன்மாவை உய்யச் செய்யக்கூடிய பல அரிய பொருள்களை அறிந்திருப்பினும், தமக்கு இன்பமூட்டத்தக்க சில சான்றோர் தம்மை வந்தடைந்தபோதே அவ்வரிய பொருள்களை அவர்கட்கு உபதேசித்து, அவர்களைக் கடைத் தேற்றுகின்றனர். இன்னும், மயிலின் நிழல் பட்டவுடன் அரவம் அடங்கி நசிக்கும். பாகவதர்கள் பார்வை பாய்ந்தவுடன் தீய விஷயங்களாகிற விஷப் பூச்சிகள் நசித்துப்போகும். மயிற்பீலி எங்ஙனம் கண்ணன் திருமுடியை அழகு செய்கின்றதோ, அங்ஙனமே பாகவதருடைய பத்தி நிரம்பிய சொற்களும் அவன் திருமுகத்தை அலரச் செய்யும். பகவான் மேகவண்ணனாதலின், பாகவதர் மயிலாகத் தானிருப்பர். இப்பாகவதையின் ஞானத்தைப் 'பொற்கொடி' என்னும் சொல்லாலும், பத்தியைப் 'புற்றரவல்குல்' என்னும் சொல்லாலும், பரமபத்தியால் உண்டாகும் வைராக்கியத்தைப் 'புனமயிலே' என்னும் சொல்லாலும் தெரிவித்தார்.

**செல்வப் பெண்டாட்டி :**—'கண்ணனோடு கலந்து வாழ்தலாகிற செல்வத்தைப் பெற்ற பெண் பிள்ளையே.' என்பது இதன் பொருள். மற்றவர்கள் இப்பாகவதையை நோக்கி, "நீ பகவானுடைய கலியாண குணங்களை ஒருமடையாக அனுபவித்தல் மட்டுமேயல்லாமல், 'அவனுக்கே நாம் பரதந்திரியமானவள்,' என்னும் எண்ணத்துடன் இருக்கும் பெருஞ்செல்வத்தையும் பெற்றிருக்கின்றனை ! இப் பெரும்பேறுகளைப் பெற்றிருக்கின்ற உன்னோடு சேர்வதே எங்களுக்குப் பெருஞ்செல்வமாகும். மற்றச் செல்வங்களைப் போன்றனவா இவை? ஆன்மாவை அழகுபடுத்துவனவும், என்றும் அழியாத இன்பப் பேற்றை அளிப்பனவுமான இவையே அல்லவா உண்மைச் செல்வங்கள்?" என அவளைப் புகழ்ந்து பாராட்டித் துயிலுணர்த்துகின்றார்கள்.

இப்பாசுரத்தில் இப்பாகவதை, 'பொற்கொடி, புனமயில், செல்வப் பெண்டாட்டி' என்னும் விளிகளால் அழைக்கப்படுகின்றாள். இவற்றுள் முன்னைய இரண்டும் இவளுடைய உடலழகையும், பின்னைய ஒன்று பாரதந்திரியமாகிய ஆன்ம அழகையும் குறிக்கின்றன. இது நிற்க.

இதில் கண்ணன், முகில்வண்ணன் எனச்சொல்லப்படுகிறான். இச்சொற்றொடர் கண்ணனுடைய திவ்விய மங்கள விக்கிரகத்தையும், அவன் திவ்வியாத்தும சொரூபத்தின் அழகாகிய அருட்டிறத்தையும் சொல்லுகிறது. இம்முறையில் இப்பாகவதைக்கும் கண்ணனுக்கும் எத்துணை ஒற்றுமை உள்ளது என்பதை நாம் நோக்குதல் வேண்டும்.

இன்னும் 'மேகமன்ன அழகிய நீலநிறத்தையும் கொடைக்குணத்தையும் உடையவன்' என்றும் பொருள் கொள்ளலாம். இங்கு ஆண்டாள் பாகவதையை மயிலென உருவகப்படுத்தியதற்கேற்ப, கண்ணனை மேகமென உருவகப்படுத்திய பொருத்தத்தை நோக்குதல் வேண்டும். மயிலுக்கு மேகத்தைக் கண்டபோதன்றோ மகிழ்வுண்டாவது? அப்போதுதானே அது தன் தோகையை விரித்தாடும்? மேகம் தன்னைச் சூழ்ந்தவுடன் மயில் ஒளி செய்யுமன்றோ? அங்ஙனமே கண்ணனருள் தம்மேல் பாய்ந்தவுடன் பாகவதர் என்றுமில்லாத இன்ப ஒளி விட்டுத் துலங்குவர் என்பது திண்ணம்.

இப்பாசுரத்தால், பகவானே உபாயம் உபேயம் என்றிருக்கும் ஒரு பாகவதையை எழுப்புகின்றார் என்பதும், இவளைக் 'கோவலர்தம் பொற்கொடியே, புற்றரவல்குல் புனமயிலே, செல்வப்பெண்டாட்டி' என்னும் சொற்றொடர்களால் விளிப்பதற்குக் காரணம் இன்னதென்பதும்; இவ்விளிகள் இவளுடைய உடலழகையும், பாரதந்திரியமாகிய ஆன்ம அழகையும் குறிக்கின்றன என்பதும்; கண்ணனுக்கு அமைந்த முகில் வண்ணன் என்னும் திருநாமமும், அவனுடைய திவ்விய மங்கள விக்கிரகத்தையும், அவன் திவ்வியாத்தும சொரூபத்தின் அழகாகிய அருட்டிறத்தையும் குறிக்கின்றது என்பதும்; இதனால், இவ்விருவருக்குமுள்ள ஒற்றுமையின் ஏற்றம் புலனாகின்றதென்பதும்; பொதுவாக இப்பாகவதையை மயிலெனவும், கண்ணனை மேகமெனவும் உருவகப்படுத்தியது மிகச் சிறப்புடையதென்பதும் அறிந்தாம்.

**இது பூதத்தாழ்வாரை எழுப்புவதெனக் கொள்க.**

## 'கனைத்திளங்கற்றெருமை'

இதில் நாட்டில் வதிந்தபோதும், காட்டில் திரிந்த போதும் ஸ்ரீராமபிரானையே நோக்கிக்கொண்டும், அவருக்கே பணி செய்துகொண்டும் போந்த இலக்கு மணரைப் போன்று, கண்ணபிரானையே நோக்கிக் கொண்டும், அவனையே பின் தொடர்ந்துகொண்டும், அவன் பக்கலிலேயே மிக்க அன்பு கொண்டும் வாழ்ந்த ஒருவனுடைய தங்கையாயும், மிகுந்த சிறப்பு வாய்ந்தவளாயுமுள்ள ஒரு பாகவதையை எழுப்புகின்றனர். இவளை,

"கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லஞ் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!"

என விளிக்கின்றனர். ஆக்கள் பல. அவற்றின் மடியினின்று பால் பெரிதும் சுரந்து பிலிற்று கின்றது. அப்பால் இல்லத்தை ஈரமாக்கிச் சேறாக வும் செய்கிறது. பதினாறு செல்வங்களுள் பசுச் செல்வமும் ஒன்றேயாயினும், இஃது இடையருக்கு உரிய செல்வமாகும். ஆக்களைக்கொண்டே இவர் களுடைய செல்வத்தை அளவிடுவர். இவ்விடைய னுக்குக் கறவைகள் மிகுந்திருத்தலினாற்றான், இவ் வாயர் மகளைச் 'செல்வன் தங்காய்' என்றனர்; அத்துடன் நின்றனரா? இல்லை. 'நல்' என்னும் அடைமொழியையுஞ் சேர்த்து, 'நற்செல்வன் தங்காய்' என்றழைக்கின்றனர். இந்த 'நல்' என்பது எதைக் குறிக்கின்றது? இதற்குப் பல பொருள் கள் உண்டு. ஆயினும், அவை யாவும் இங்கு

வேண்டற்பாலனவல்ல. சிறப்பாகப் பாலை ஞான மெனக் கொள்ளல் மரபு. அந்த ஞானம், 'கண்ணனே நமக்கு இரட்சகன்' என்னும் எண்ணத் திஞல் மனத்தை நனைக்கிறது. பின்னர் அவனிடம் செல்லும் பத்தி அந்நெஞ்சைச் சேருக்கிக் குழையச் செய்கிறது. அக்குழைவு அக்கண்ணனை விட்டுத் தனித்து நிற்க முடியாத தன்மையை உண்டாக்கு கிறது. குழைந்த பொருள் தனித்திருத்தல் யாங் ஙனம்? அத்தன்மை தமயனேடு நில்லாமல், அவன் தங்கையளவும் பாய்கிறது. அதனுல், அவளும் தன் தமயனைப் போன்றே கண்ணனையே பற்றிக் கொண்டு, அவன்மாட்டே ஆர்வமுடையவளாயு மிருக்கின்ருள்; இத்தகைய பாகவதையே இப்பா சுரத்தில் காட்சியளிக்கின்ருள். இதில் சொல்லும் இப்பாகவதன் இன்று நாளை அழியும் செல்வத்தைப் போலன்றி, என்றும் அழியாத கண்ணனுடைய கைங் கரியமாகிற செல்வத்தைப் பற்றியவனுதலால், இளையபெருமாள் அரசச் செல்வத்தைத் துறந்து மரவுரி அணிந்து பெருமாளோடு காட்டிற்கேகிய போது "லக்ஷ்மி ஸம்பந்ந:" என்னும் பட்டப் பெயரைப் பெற்றதைப் போன்று, இவனும் 'நற் செல்வன்' என்னும் பட்டப் பெயரைப் பெற்ருன். இலக்குமணருக்கோ, அப்பட்டம் முனிவரால் கிடைத் தது. இப்பாகவதனுக்கோ, இப்பட்டம் ஆண்டா ளால் கிடைத்தது. முனிவரால் தந்த விருது அவர் மட்டில் நின்றது. ஆண்டாள் தந்த விருது அவன் மட் டில் நில்லாமல் அவன் சந்ததி வரையும் செல்லுகிற தன்ருே? அஃதன்றியும், விளக்கிலிருந்து கொளுத்தப்

பட்ட தீவர்த்தி, விளக்கைக்காட்டிலும் மிக்கு ஒளிர்தல் போன்று, தமயனிடமிருந்து பாயப்பெற்ற பரமன் பத்தி தமயனிலும் தங்கையினிடம் மிக்கு மிளிர்கின்றது. அதனாற்றான், இம்மங்கையருக்கு இவனிடம் பெருமதிப்பு ஏற்பட்டுள்ளது.

இங்கு, "உன் தமயன் தன்னையே பற்றிக் கொண்டிருக்கும் ஆக்களைக் கறத்தல் முதலிய காரியங்களைச் செய்தாலல்லவா, அவன் தங்கையாகிய நீயும் உன்னையே நோக்கிக்கொண்டிருக்கும் எங்களுக்குக் கதவைத் திறத்தல், எங்களோடு சேர்ந்து செயல் புரிதல் ஆகியவற்றைச் செய்வாய்? இஃது உனக்குக் குலப்பண்பாய் அமைந்துள்ளது? நீ என்ன செய்வாய் பாவம்!" எனக் கண்ணனையே நாடி நிற்கும் நிலையைக் குறைத்துப் பேசுகின்றனர் எனக் கொள்ளவும் இடந்தருகின்றது. ஒன்றைப் பற்றியவர் மற்றொன்றை விடுதல் இயல்புதானே? இக்குடும்பம், உடலுக்கானவற்றை விட்டு, ஆன்மாவிற்கானவற்றையே பற்றியிருக்கிறது போலும்! இம்முறையில் இவள் உயரிய பாகவதக் குடும்பத்தைச் சார்ந்தவள் என அறிகின்றோம்.

இங்குப் பரமனை, "**சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற, மனத்துக்கினியான்**" எனச் செப்புகின்றனர்.

இப்பாகவதையின் தமயன் இளையபெருமாளைப் போன்றவனாதலால், அவன் இராமனைத் தானே பற்றியிருப்பான்? இன்னும் அம்மங்கையர், "எப்போதும் குறும்பு செய்து, பெண்களைத் துடிக்கவிட்டு வேடிக்கை பார்க்கும் கண்ணனை நாம்

பற்றியதனுற்றுன், நாம் இரவு முற்றும் துயிலின்றி வைகறையிலேயே எழுந்து இங்ஙனம் அல்லலுறுகின்ருேம்! இவள் நம்மைப் போன்றல்லாமல், மன அமைதியுடன் இன்னும் துயில்கின்றமையின், இவள் பெண்களுக்கு நன்மையே புரிபவனும், அவர்கள் மனத்திற்கு இனியவனுமான இராமபிரானைப் பற்றியிருப்பாள்'' எனத் தீர்மானித்து அவனைப்பற்றிப் பேசுகின்றனர். இங்கு ஆண்டாள்,

'' கொந்தள மாக்கிப் பரக்கழித்துக்
குறும்புசெய் வானோர் மகனைப்பெற்ற
நந்தகோ பாலன் கடைத்தலைக்கே
நள்ளிருட் கண்என்னை உய்த்திடுமின்.''[1]

எனவும், **''வெற்ற வெறிதே பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே''**[2] எனவும் கண்ணனைப்பற்றிக் கூறும் வெறுப்புச் சொற்களை நோக்குக.

ஆக இப்பாசுரத்தில், செல்வன் தங்காய், நற்செல்வன் தங்காய் என இப்பாகவதையை எழுப்புதற்குக் காரணங்கள் இன்னவை என்றும்; இஃது அவனுக்கு ஆண்டாளால் தரப்பட்ட பட்டப்பெயர் என்றும்; இப்பட்டப் பெயரின் சிறப்பு அவனேடு நில்லாமல், அவன் சந்ததிவரையும் பாய்கிறதென்றும்; இது பாயப்பெற்ற அவன் தங்கை அவனிலும் பத்தியில் சிறந்து விளங்குகின்ருள் என்றும்; இவள் பாகவதக் குடும்பத்தைச் சார்ந்தவள் என்றும்; இக்குடும்பம் உடற்காரியங்களை அசட்டை செய்து உயிர்க் காரியங்களையே பற்றி நிற்கிறதென்றும்; இங்குக் கண்ணனைக் குறித்துப் பேசாமல், இராமனைப்பற்றிப் புகழ்தற்குக் காரணம் இன்னதென்றும் அறிந்துகொண்டோம்.

**இது பொய்கையாழ்வாரைக் குறித்ததாகும்.**

1-2. நா.திருமொழி, 12 : 3 ; 13 : 7

"புள்ளின்வாய் கீண்டானை"

இப்பாசுரத்தில் தன் கண்ணழகை மனத்திற் கொண்டு, "மிக்க கண்ணழகு வாய்ந்த என்னை நாடி யாவரும் இவண் போதர வேண்டுமேயல்லாமல், நானே அவர்களைத் தேடிப் போவேன் !" என்றிருப்பாள் ஒருத்தியை எழுப்புகின்றனர்.

**வினா :** இங்ஙனம் தன்னைத் தான் மதித்துப் பெருமையுற்றிருத்தல், சொரூபஞானம் பெற்ற இப்பாகவதைக்குத் தகுதியாமா ?

**விடை :** இங்குக் 'கண்ணழகு' என்பது வெளியில் தோன்றும் கேவலம் ஊனக்கண்ணின் வனப்பைக் குறித்ததன்று, இது ஞானத்தைக் குறிக்கும் உட்கண்ணைக் காட்டுவதாகும். சீவாத்துமா பரமாத்துமாக்களின் உண்மைத்தன்மைகளை உணர்ந்த இவள், என்ன கருதுகின்றாள்? "யானோ பரதந்திரை. எனக்கென ஒரு காரியத்தைச் செய்தற்கும் எனக்கு உரிமை இல்லை. என் நலத்தைத் தேடுகின்றவர் கண்ணனும் பாகவதருமேயாவர். ஆதலின், அவர்களே இங்கு வந்து அழைக்கில் அவர்களோடு சேர்ந்துகொள்ளலாம்," எனத் தன் சுதந்தரமற்ற நிலையை நினைத்துக்கொண்டு இருக்கின்றாள். இது சொரூப ஞானத்தைச் சேர்ந்ததுதானே? இதைக் குற்றமெனக் கூறுதல் யாங்ஙனம்?

இம்மங்கையைப் "**போதரிக் கண்ணினாய் பாவாய்**" என்று விளிக்கின்றனர். இவற்றுள், 'போது அரிக் கண்ணினாய்' என்பது மலரையும் வண்டையும் ஒத்த கண்களையுடையவளே என்றும், 'பாவாய்' என்பது பதுமையைப் போன்ற அழகு

வாய்ந்தவளே என்றும் பொருள்படும். ஆக, இவ் விளிகளால் இவள் கண்ணழகும் உடலழகும் வாய்ந் தவள் என்பது கூறப்படுகின்றது.

இவற்றுள் போது என்பதை வெள்விழிக்கும், வண்டு என்பதைக் கருவிழிக்கும் ஒப்புப்படுத்தி, ஒரு மலரில் வண்டு படிந்திருத்தல் போன்ற கண்ணுடை யவள் எனக் கூறினும் கூறலாம். மலர் அழகும் மணமுமுடையது. வண்டு அம்மலரில் படிந்து அதன் தேனைக் கவரக் கூடியது.

**வினு :** அங்ஙனமானல், இவ்வழகு, மணம், தேன் இவற்றைக் கண்ணிற்கு ஒப்புப்படுத்தல் யாங்ஙனம் ?

**விடை :** 'கண்ணிற்கணிகலம் கண்ணேட்டம்' (பார்வை) என்று சொல்லப்படுகிறது. இதனல், கண்ணிற்கு அழகு அருட்பார்வை எனவும், அதற்கு மணம் அன்புப் பார்வை எனவும் அறிந்தாம். இவளு டைய அருட்பார்வை பாகவதர்மாட்டும், அன்புப் பார்வை ஆசாரியர்மாட்டும் செல்லுகின்றன. இன்னும் வண்டு எங்ஙனம் சாரமற்ற பொருளை விரும்பாமல், இனிமையான தேனையே நாடுகின் றதோ, அங்ஙனமே இவளுடைய வண்டொத்த கரு விழி, பயனற்ற இவ்வுலகப் பொருள்களை நோக்கா மல், பயனுடைய ஆன்ம பரமான்மாக்களையே நோக்குகின்றது.

'பாவாய்' என்பதற்கு, வைத்த இடத்திலேயே கிடக்கும் பாவையைப் போன்று, ஆசாரியரும் பகவானும் கற்பித்த நெறியை விட்டுச் சிறிதும் விலகாமல் அதன் வழியிலேயே நின்றெழுகி, அவர்

கள் இட்ட வழக்காகவே இருக்கும் ஆன்ம அழகு வாய்ந்தவள் என்பது உட்பொருளாகும்.

**வி௵ :** பாவை ஞானமற்ற அசேதனப் பொருளாதலால், அ∴து இட்ட இடத்திலேயே இருக்கலாம். ஞானம் வாய்ந்த சேதனப்பொருள் பிறரிட்ட வழக்காகவே வாழ்தல் கூடுமா? அது தனக்கெனச் சில இச்சைகளும் செயல்களும் உடையதாகாதோ?

**விடை :** தங்கள் ஆன்ம சொரூப ஞானத்தை உணராதவர்கள் அங்ஙனம் இருத்தல் கடினந்தான். ஆனால், அதை நன்கு அறிந்த ஞானிகளுக்கு அ∴து அருமையன்று. அவர்கள் அம்முறையிலேதான் வாழ்வார்கள். எங்ஙனம் சாமானிய மக்கட்குத் தங்கள் சுதந்தரத் தன்மையை விடமுடியாதோ, அங்ஙனமே இந்த ஞானிகளுக்கும் தங்கள் பாரதந்திரிய நிலையை விட இயலாது. குழந்தைகளும், ஞானிகளும் ஒரு திறத்தனரல்லரோ? குழவிகள் எவ்வாறு யாவற்றிற்கும் தாயை எதிர் நோக்கியே நிற்கின்றனவோ, அவ்வாறே ஞானிகளும் யாவற்றிற்கும் பகவானையே நோக்கி நிற்பார்கள். இவர்களுடைய ஞானம் பகவான் இட்ட வழக்காக நிற்பதற்கே பயன்படுகிறது. இவர்களுக்கெனத் தனித்த இச்சைகளும் செயல்களும் இல்லை. பகவானுடைய இச்சையே இவர்கள் இச்சை. பகவானுடைய செயலே இவர்கள் செயலாகும். ஆதலின், இவை ஞானிகளுக்கு இயல்பெனக் கொள்க.

இப்பாகவதை இவ்வியல்புகள் வாய்ந்தவள். ஆதலின், இவளை அவ்வணிகளால் விளித்து, " கண்ணனை நாமே தனித்து அனுபவிக்க வேண்டும்

என்னும் வஞ்சனையை விட்டு எங்களோடு கலந்து அனுபவிக்க எழுந்திருப்பாயாக," என அழைக்கின்றனர்.

இப்பாகவதை, அகங்கார மமகாரமற்றவளாயும், அருள் நிறைந்தவளாயும், பாரதந்திரிய நினைவுடையவளாயும் இருப்பவளல்லளா? இவளுக்கு, அகங்கார மமகாரங்களே உருவெனக் கொண்டவராயும், ஒரு சிறிதுட் கண்ணோட்டமற்றவராயும் சுதந்தர நினைவுடையராயும் இருக்கும் கொடியரை திருத்தி, அவர்கள் ஆன்மாவை நல்வழிப்படுமாறு செய்தல் தானே இனிமையைத் தருவதாகும்? ஆதலின், மற்றைய பெண்கள், இவளைத் துயிலுணர்த்துங்கால், "**புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக் கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை** பாடிக்கொண்டு எல்லாப் பெண்களும் நோன்பு நோற்குமிடத்திற்குச் சென்றூர்கள், உன்னை அழைத்துச் செல்லவே நாங்கள் இங்கு வந்தோம்," எனக் கூறுகின்றூர்கள்.

இப்பாசுரத்தினுல், "நம் கண்ணழகில் ஈடுபட்ட கண்ணனும் கோபிகளும் நம்மிடத்திற்கு வருவார்கள்," எனக் கவலையற்றிருக்கும் ஒரு பாகவதையை எழுப்புகின்றூர்கள் என்பதும்; இங்குக் கண்ணழகு என்பது பரதந்திர ஞானத்தைக் குறிக்கின்றது என்பதும்; இம்மகளைப் 'போதரிக் கண்ணினுய், பாவாய்' என விளிப்பதற்குக் காரணங்கள் இன்னவை என்பதும்; முதல் விளியால் பெறப்படும் அழகு, மணம், வண்டு இவைகள் இன்னின்ன முறையில் இவள் கண்ணுக்கு ஒப்

பாகும் என்பதும்; பாவையைப் போன்று பகவான் இட்ட வழக்காக ஒழுகுதலே ஞானிகளுக்கு இயல்பும் அழகும் என்பதும்; இப்பாசுரத்தில் கண்ணனுக்கு இவ்வீரச் செயல்களை இயம்புதற்குக் காரணம் இன்னதென்பதும் தெரிந்துகொண்டோம்.

**இதனால் தொண்டரடிப்பொடியாழ்வாரை எழுப்புகின்றனர்.**

"உங்கள் புழக்கடைத்தோட்டத்து வாவியுள்"

இதனால், ஆய்ச்சியருக்குத் தலைவியாய், இவர்கள் மேற்கொண்ட காரியங்களுக்கெல்லாம் முதன்மையுற்றவளாய், தானே முன்னெழுந்து வந்து யாவரையும் எழுப்புவதாய் வாக்களித்து அதன்படி செய்யாது உறங்குகின்ற ஒருத்தியைத் துயிலுணர்த்துகிறார்கள்.

இவளை,

"எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்! எழுந்திராய்; நாணாதாய்! நாவுடையாய்!"

என விளிக்கின்றனர்.

இவை, "வாயினால் மட்டும் சொல்லிச் செயலில் கொணராத நங்கையே, நாணமற்றவளே, பேசுந் திறம் வாய்ந்தவளே," என்னும் பொருள்களைத் தரும்.

**வினா:** நங்கை என்பதற்கு, பெண்களுட் சிறந்தவள், குணபூர்த்தியுள்ளவள் என்பன அல்லவா பொருள்? "யான் யாவருக்கும் முன்பு எழுந்து உங்களை எழுப்புவேன்," என்று சொன்ன வார்த்தை சொல்லளவிலே நின்றதன்றிச் செய

லளவில் நிகழ்ந்திலது என இவளை இழித்துக் கூறும் இடத்தில் நங்காய் என்னும் இச்சொல்லைப் பயன் படுத்தல் தகுதியுடையதாமோ?

**விடை:** முதலில், "இவள் சொன்ன சொல்லைத் தவறினளே!" என்னும் சினம் அவர்கட்குத் தோன்றுகின்றது. ஆதலின், 'எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும்' என்றார்கள். உடனே வேறொன்று அவர்கட்கு உதித்தெழுந்தது! இப் பெண்மணி, தனக்கு அணையாக உள்ள அரவத்தைப் போன்று இரு நாவுகளை உடைய கண்ணனுடன் பழகியவள் அல்லளா? அவன் நா இன்று ஒன்று சொல்லும், நாளை வேறொன்று சொல்லுமன்றோ! 'இனி உன்னை விட்டுப் பிரியேன்' என்பான்; உடனே பிரிவைக் குறிப்பிடுவான். இஃது அவனுக்கு இயல்பாய் அமைந்தது. இதனாற்றானே அவனை, "**பாம்பணையார்க்கும், தம் பாம்புபோல் நாவும் இரண்டுளவாயிற்று,**" எனக் கூறவேண்டியதாயிற்று? நம்மைக்காட்டிலும் அவனுடன் நெருங்கிப் பழகிய இவள் பின்னை எவ்வாறிருப்பாள்? அவனோடு பழகிய பழக்கம் இவளையும் இந் நிலையில் கொணர்ந்துவிட்டது போலும்! இவ் விஷயத்தில் இவளை எப்படிக் குறை கூற முடியும்! சேரிடத்திற்கேற்ற செயல்கள்தாமே ஒருவரிடம் அமையும்! ஆயினும், கண்ணனோடு நெருங்கிப் பழகுவதாகிய வாய்ப்பு ஒன்று இவளுக்கு அமைந்திருக்கின்றதன்றோ! அவ்வாய்ப்பை நாம் பெற்றோமில்லையே! இப்பாகவதையிடம் எத்துணைக் குண பூர்த்தி இருந்தால், அக்கண்ணன் இவளோடு

சேர்ந்து பழகுதற்கும், அப்பழக்கத்தினால் இவளுக்கும் அவன் குணம் அமைதற்கும் இடம் ஏற்படும்! இம்முறையில் இவள் நம் யாவரினும் சிறந்தவள் எனக் கூறுதற்குத் தடை யாது?" எனக் கருதுகின்றனர். உடனே அவர்கள் நா இவளை 'நங்காய்' என அழைக்கின்றது. இதுவே பொருளில் மாறுபட்ட சொற்கள் கிளம்புவதற்குக் காரணமாகும்.

**வினா:** இஃதிருக்கட்டும். 'நாணாதாய்' என்பதன் பொருளென்னை?

**விடை:** இச்சொல்லை மேற்போக்காக நோக்குங்கால், "சொல்லியவாறு செய்தோமில்லையே என்னும் நாணம் சிறிதும் கொள்ளாதவளே," எனப் பொருள்படும். ஆனால், இங்கு, இப்பாகவதையின் நிலைக்கேற்பக் காணுங்கால், இவள் கண்ணனோடு சேர்ந்திருத்தல், அவனையே சிந்தித்திருத்தல், அவன் கலியாண குணங்களையே பகர்ந்துகொண்டிருத்தல் தவிர மற்றொன்றிலும் மனம் வையாதவள்; உலகப் போக்கிற்கு மாறுபட்டிருக்கின்ற தன்னைப் பற்றி யார் என்ன வசை கூறினும், அதைச் செவியிலும் ஏற்றுக்கொள்ளாதவள் என்பது தெரிகிறது. இவளுக்கு, யான் எனது என்னும் எண்ணம் இருப்பினன்றோ, மற்றப் பொருள்களிலும், மற்றவர் கூறும் வார்த்தைகளிலும் நெஞ்சம் செல்லும்? இவை இரண்டும் அற்ற நிலைதானே அகங்காரமமகாரங்கள் அற்ற நிலை எனச் சொல்லப்படுகிறது? ஆதலின், இங்கு 'நாணாதாய்' என்பது இவ்வகங்காரமமகாரம் அற்ற நிலையையே காட்டுவதெனக் கொள்ளவேண்டும்.

இங்கு, '**சங்கொடு சக்கரத்தான்**' என்பது வீரத்தையும், '**பங்கயக் கண்ணன்**' என்பது பரத்துவத்தையும் காட்டுவனவாகும். இவ்வீரத்திற்கும் பரத்துவத்திற்கும் தோற்றே இம்மங்கை, அவனை அடைவதற்கேற்ற சொற்களைச் சொல்லுந் திறத்தையும், நா வன்மையையும், கண்ணனுக்கும் தனக்கும் விரோதமாய் யார் என்ன கூறினும், அதைச் சிறிதும் மனத்தில் கொள்ளாத இயல்பையும் பெற்றிருக்கிறாள் என்பதைக் குறித்தற்பொருட்டே பகவானை இங்குச் 'சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன், பங்கயக் கண்ணன்' எனச் சிறப்பித்துள்ளது.

இப்பாசுரத்தினால், யாவருக்கும் தலைமையுற்றவளாய், தானே முதன்மையில் விழித்து யாவரையும் எழுப்புவதாய் உறுதி மொழி கூறி, அங்ஙனம் செய்யாத ஒரு பாகவதையை எழுப்புகின்றார்கள் என்பதும்; இம்மங்கைக்குக் கொடுத்திருக்கும் அடைமொழிகள் மூன்றும் ஒன்றற்கொன்று மாறுடையனவாயிருப்பினும், இன்ன முறையில் இவற்றிற்குப் பொருத்தமுள்ளது என்பதும்; இப்பாசுரத்தில் பகவானுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அடைமொழிகளால், அவனுடைய வீரமும் பரத்துவமும் வெளியாகின்றமையின், அவற்றிற்குத் தோற்றே இப்பாகவதை இவ்வியல்புகளைப் பெற்றவள் என்பதும் அறிந்தோம்.

**இது திருப்பாணாழ்வாரைத் துயிலுணர்த்துகிறது.**

"எல்லே இளங்கிளியே"

இதனால், பகவானிடம் மிக்க பத்தி வாய்ந்த பாகவதைகளின் கூட்டத்தை ஒருங்கே காணவேண்டுமென்று ஆர்வங்கொண்ட ஒருத்தியை எழுப்புகின்றார்கள்.

மற்ற மகளிர் இம்மங்கையை 'இளங்கிளியே' என்று விளிக்கின்றனர். கிளி அழகு வாய்ந்தது; கொஞ்சிக் கொஞ்சிப் பேசும் இயல்புடையது. இதன் வாயிலிருந்து வெளிப்படும் சொற்கள் யாவும் இனிமையுடையனவாயிருக்கும். மழலைச் சொற்களும், கிளிச்சொற்களும் ஒரே தன்மை வாய்ந்தன. எத்தகையவரும் இச்சொற்களைக் கேட்க விரும்புவர். "சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை" என்னும் ஒரு பழமொழிக்கேற்ப நாம் சொல்லுவதைத் திருப்பிச் சொல்லும் தன்மை கிளிக்குண்டு. இன்னும் பகவானுக்கு எங்ஙனம் பச்சை நிறம் வாய்ந்த திவ்விய மங்கள விக்கிரகமும், சிவந்த இதழ்களும் அமைந்துள்ளனவோ, அங்ஙனமே கிளிக்கும் பச்சை நிறமும் பவளம் போன்ற அலகும் பொருந்தியுள்ளன. இவண் இவளைக் 'கிளி' என்னாது 'இளங்கிளி' என்பதை நோக்குதல் வேண்டும். இவ்விளமை இம்மங்கையின் இளம்பருவத்தைக் குறிப்பதாகும்.

இதில் துயிலெழுப்பும் பாகவதை, பிறர் சொல்வதைத் திருப்பிச் சொல்லி இன்பந்துய்த்தல், பகவானைப்போன்று உடலழகு பெற்றிருத்தல், இளமையோடிருத்தல் ஆகியவை வாய்ந்திருக்குமவளாதலின், இவளை 'இளங்கிளியே' என்றெழுப்புகின்றனர்.

**வினு:** இவள் ஒருவர் சொல்வதைத் திருப்பிச் சொல்பவள் என்பது எதனுல் தெரிகிறது?

**விடை:** இவளுடைய இல்லத்திற்கு முன் இல்லத்தில் இருந்தவளை மற்றப் பெண்கள், "சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன், பங்கயக்கண்ணனைப் பாட" என்று பாடி எழுப்பினர்களல்லவா? அப்பாசுரத்தைச் செவியேற்ற இவள், அதைத் திருப்பி இனிமையாகப் பாடத்தொடங்கினள். இவ்வினிமையைச் செவியேற்ற மற்றவர்கள், "சொல்வதைத் திருப்பி இனிமைபடச் சொல்லும் கிளியே," என்கின்றனர்.

**வினு:** இம்மங்கை வனப்பில் மட்டுந்தான் பகவானுக்கு ஒப்பாக இருக்கின்றனளா?

**விடை:** இல்லை இல்லை. இவள் இயல்பிலும் பகவானுக்கு ஒப்புடையவளாய் இருக்கின்ருள்.

**வினு:** பகவானுடைய இயல்பு யாது?

**விடை:** பகவானுடைய உண்மை இயல்பு, எல்லா உயிர்களும் தன்னை வந்தடைந்து உய்ய வேண்டுமென்பதேயாகும். இவற்றுள் ஒன்று குறையினும் அவன் மனம் நிறைவு பெறுதல் இல்லை. அங்ஙனமே இப்பாகவதையும் பகவான் அருளைப் பெறுதற்கு ஒருவர் குறையாமல் எல்லா மங்கையரும் திரண்டு வருதல் வேண்டும் என இருக்கின்றமையின், இவளை எம்பெருமானுக்கு ஒப்பிட்டுக்கூற வேண்டியதாயிற்று.

**வினு:** கிளியைப் போன்று அழகுடையவள் என்பதேனும் ஒருவாறு பொருந்தலாம். கிளியன்ன சொற்களையுடையவள் என்பது யாங்ஙனம்

பொருந்தும்? கிளி குழறிக் குழறியன்றோ பேசும்? அது கிளிக்கு இயற்கை. இளங்குழந்தையின் கொச்சைச் சொல் எங்ஙனம் இனிக்கின்றதோ, அங்ஙனமே கிளி நிறுத்தி நிறுத்திப் பேசும் சொற்களும் இனிக்கும். இங்ஙனம் பேசுதல் மகளிருக்கு இயற்கை அன்றே! அன்றியும், இப்பேச்சுத்தான் பிறருக்குச் சுவையை உண்டாக்குமா? இதை விரும்புபவர் தாம் யார்?

**விடை:** இம்மங்கையின் பேச்சு, கிளிப்பேச்சில் உள்ள குழறலுக்கன்றி, அதன் இனிமைக்கே ஒப்புக் கூறியதாகும்.

**வினா:** இளங்கிளி என்பதிலுள்ள இளமை இவளுடைய பருவத்தைக் குறிக்கும் எனக் கூறினீர். இவர்கள் இங்குப் பாகவதையினுடைய பருவத்தைக் குறிக்க வேண்டிய அவசியம் என்ன?

**விடை:** மற்றவரோடுஞ் சேர்ந்து காரியத்தை ஊக்கத்துடன் செய்தற்கும், அழகுடன் மிளிர்தற்கும், சாதுர்யமாய் (நயமாய்)ப் பேசுதற்கும் இளமையே சிறந்த காலமன்றோ? தம் இளமைக்கேற்ப இவள் இப்பண்புகளைப் பெற்றிருக்கின்றாளாதலின், அவற்றைக் கண்டு மகிழ்ந்த மற்றப் பெண்கள் இவள் பருவத்தைக் குறிக்க முற்பட்டார்கள்.

இவற்றால் அழகிலும் சொற்களிலும் கிளிக்கு ஒப்புடையவளாய், யாவரையும் உய்விக்க வேண்டும் என்னும் எண்ணத்தில் பகவானைப் போன்றவளாய், ஊக்கத்துடன் செயல் இயற்றுவதில் இளமையுடையவளாய் இருக்கும் பாகவதையை எழுப்புகின்றனர் என அறிகின்றோம்.

பகவான், இப்பாகவதைக்குள்ள பெண் என்னும் அபிமானத்தையும், தானே பகவான் அருளைப் பெற்று வாழ வேண்டுமென்னும் தன்னலத்தையும் போக்கி, இவளுடைய இனிய சொற்களிலும் இனிமையிலும் தோற்று நிற்கின்றமையின், இப்பாசுரத்தில் பகவானை, **'வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க வல்லானை மாயனை'** என்னும் சொற்களால் சிறப்புப்படுத்துகிறார் ஆண்டாள். இச்சொற்கள், பகவான், தானென்னும் அகங்காரங் கொண்டிருந்த குவலயாபீடத்தையும், பெண்கள் கண்ணனோடு சேர்ந்து வாழக்கூடாதெனக் கருதிய இடையர்களின் எண்ணத்தையும் போக்கி, ஆயர் மகளிருக்கு வசப்பட்டிருந்தான் என்பதைத் தெரிவிக்கின்றன.

இப்பாசுரத்தினால் யாவரையும் ஒருங்கே காண வேண்டுமென்றிருந்த பெண்ணை எழுப்புகின்றனர் என்றும், இதில் எழுப்பப்படும் பாகவதை, இனிய சொற்கள், அழகு, இவற்றைப் பெற்றிருத்தலின், இவளைக் கிளியே என விளிக்கின்றனர் என்றும்; கிளியைப் போன்று, இவள் மற்றவர் சொன்னவற்றைத் திருப்பிச் சொல்லி இன்பந்துய்க்கின்றாள் என்றும்; இவள் பகவானைப் போன்ற இயல்பு வாய்ந்தவள் என்றும்; 'கிளியே' என்னாது 'இளங் கிளியே' என விளிப்பதற்குக் காரணம் இன்னதென்றும்; இதில் பகவானுக்குத் தந்திருக்கும் திருப்பெயர்க்கும் இப்பாகவதைக்கும் உள்ள தொடர்பு இன்னதென்றும் அறிந்தோம்.

**இது திருமங்கையாழ்வாரைப் பற்றியதாகும்.**

இரண்டாம் பகுதியின் இரண்டாந்தொகுதியில் ஆண்டாளும் தோழியரும் நந்தகோபனுடைய அரண் மனையையும், உள்வாயிலையும் காவல் புரிகின்றவர் களை, "கோயில் காப்பானே, கொடித்தோன்றும் தோரண வாயிற்காப்பானே" என எழுப்புகின்ற னர். எம்பெருமானிடம் செல்லுங்கால் பாகவதரை யும், அவண் காவல் புரிகின்றவரையும் முன்னிட்டு அவர்கள் அனுமதி பெற்றே போதர வேண்டுமென் பது கோட்பாடன்றோ! அதைச் சிறுமியராகிய இவர்கள் அறிந்திலரேனும், பரமன் அருளால் அது தன்னடையே இவர்களிடம் அமைகிறது. உட் சென்ற மகளிர், கண்ணனைப் பிறர் களவாடாவண் ணம் முன்னும் பின்னுமாய்க் காத்துக்கொண் டிருந்த நந்தகோபனையும், யசோதையையும், உல களந்த உத்தமனையும் (கண்ணனையும்), வீரக்கழ லணிந்த பலராமனையும் துயிலுணர்த்துகின்றனர். தன்னை அடைந்தார்க்கு அப்போதே அருள் செய்யும் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றுத போது தாங்கள் எம்பெருமானை அடைந்து இன்பந் துய்த் தல் இயலாதெனக் கருதி, "ஈசுவரனுடைய சுதந் தரத்திற்கு நீங்கள் அஞ்சவேண்டா" என்று எங் களுக்கு அபயங்கொடுப்பதும், எப்போதும் கண் ணனோடு சேர்ந்திருப்பதனால் கழலாத வளையல்களை உடையதுமான உன் கையினால் வந்து திறக்க வேண் டும்" என்கின்றனர். பின்னர் ஒருவர் திறப்பதை மற்றொருவர் தடுத்துக்கொண்டிருக்கும் கண்ணனை யும், நப்பின்னையையும் உணர்த்தி, நப்பின்னைப் பிராட்டியின் உடற்குணங்களையும், உயிர்(ஆன்ம)ப் பண்புகளையும் பரக்கச் சொல்லி அவளைத் துயி

லுணர்த்துகின்றூர்கள். அப்போதே நப்பின்னையும் இவர்களுடன் கலந்துகொள்ள, யாவரும் சென்று, "உன்னைப் பற்ருதவர் உன் வீரத்திற்குத் தோற்று நிற்றல் போன்று, நாங்கள் உன் நீர்மைக்குத் தோற்று நிற்கின்ருேம்," என்கின்றனர். "உன்னைத் தவிர வேறு கதியற்ற யாங்கள் முன் பட்ட அல்லலெல்லாம் நீங்க உன்னிடம் வந்து சேர்ந்தோம். எங்கள்மாட்டுக் கொண்ட கருணையினுல் சிவந்த கண்களைச் சிறிது சிறிதாகத் திறந்து எங்களை நோக்கின், நாங்கள் அனுபவித்தே கழிக்க வேண்டிய துன்பங்கள் யாவும் எங்களை விட்டு நீங்கிப்போகும்," எனப் போற்றுகின்றனர்.

"மகளிராகிய இவர்கட்கு நாமே முதலில் சென்று அருள் புரிய வேண்டியிருக்க, இவர்கள் நம்மிடம் போதருமாறு செய்தோமே!" என நாணங்கொண்ட கண்ணன், "உங்கட்கு யான் செய்ய வேண்டுவன யாவை?" என மிக்க அன்புடன் வினவினுன். பெண்கள், "நீ நின்ற நிலையில் கேட்கில் யாங்கள் விரும்புவனவற்றைத் தெரிவியோம். மலைக்குகையில் தன் பேட்டுடன் சேர்ந்து உறங்கும் சிங்கம் கண்விழித்து, உளமயிர் சிலும்ப நாற்புறமும் புடைபெயர்ந்து, நிமிர்ந்து, முழங்கிக்கொண்டு அதனின்றும் புறப்படுதல் போன்று, நப்பின்னையுடன் உறங்கும் காயாமலர் நிறம் வாய்ந்த நீ, அவ்வறையிலிருந்து வெளிப்போந்து பிறர் விரும்புவனவற்றை ஈயக்கூடிய சீர்மையுடைய இச்சிம்மாசனத்தில் எழுந்தருளி, யாங்கள் வந்த காரியத்தை ஆராய்ந்து அருள் புரிதல் வேண்டும்," என விண்

ணப்பித்தனர். அவன் அங்ஙனமே அரியாசனத்தில் எழுந்தருள, அவர்கள் தாங்கள் வந்த காரியத்தை மறந்து, அவன் நடையழகில் ஈடுபட்டு, அவனுக்குப் பல்லாண்டு பாடி, பின்னர் "உன்னை அடைதற்கு இடைச்சுவராயிருக்கும் தீவினைகளைப் போக்கி எங்களை அங்கீகரிக்கவேண்டும்," என இறைஞ்சினர்.

மூன்றும் பகுதி : "உங்களுக்கு வேண்டுவன யாவை?" எனக் கண்ணன் வினவ, மகளிர், "எங்களுக்கு, தம் ஓசையால் உலகத்தை நடுங்கச் செய்வனவும், பால் போன்ற நிறத்தை உடையனவும், பாஞ்சசன்னியத்திற்கு ஒத்தனவுமான சங்கங்களும், பெரிய வாத்தியங்களும், பல்லாண்டு பாடுவோரும், மங்கள விளக்குகளும், கொடிகளும், மேற்கட்டிகளும் அருளுதல் வேண்டும்," என்றனர். கண்ணனோ, "நீங்கள் விரும்பிய பாஞ்சசன்னியம் முதலியவற்றைக் கொடுக்கிறேம். அவற்றைப் பெற்றுச் செல்லுங்கள்," என்றான். ஆயினும், மகளிரோ அவற்றுடன் மன அமைதியை அடைந்தார்களில்லை. ஆதலின், அவர்கள் கண்ணனை நோக்கி, "யாங்கள் மார்கழி நீராடப் போம்போது வேண்டுவன அவை. நோற்ற பின்பு நாங்கள் உன்பக்கல் பெறுவன சில உண்டு: நாட்டார் புகழுமாறு சூடகம் (கைவளை), தோள்வளை, தோடு, கர்ணப்பூ, பாடகம் முதலிய அணிகளை நீயும் நப்பின்னையுமாக இருந்து எங்களுக்குப் பூட்டுவதுடன், நீ எங்களுக்குச் சேலைகளை உடுத்தல் வேண்டும். இதுகாறும் உன்னைப் பிரிந்திருந்த துன்பம் யாவும் நீங்குமாறு நீயும் யாங்களும் கூடியிருந்து நிறைய நெய் பெய்த பாற்சோற்றை

உண்டு இன்புறல் வேண்டும். உன்னை அடைதற்கேற்ற புண்ணியம் எங்களிடம் சிறிதுமில்லை. ஆயினும், உன்னை எங்கள் குலத்தவனுகப் பெறும் சீரிய தவத்தைச் செய்துள்ளோம். அம்முறையில், உன்றன்னேடு எங்களுக்குள்ள உறவை உன்னலும் ஒழிக்க இயலாது; ஆதலின், எங்களுக்கு உபாயனை நீயே எங்கள் விருப்பத்தை முற்றுப்பெறச் செய்தல் வேண்டும். அது யாதெனின், அதிகாலையில் நாங்கள் யாவரும் சேர்ந்து வந்து உனது திருவடிகளுக்குப் பல்லாண்டு பாடுதற்குக் காரணம், நலமந்தமில்லதோர் நாட்டி(பரமபதத்தில்)லோ, இவ்வுலகத்திலோ எங்கு இருப்பினும், எக்காலத்திலும், உன்னேடு சேர்ந்தே இருத்தல் வேண்டும்; உனக்கே அடிமை செய்தல் வேண்டும். அங்ஙனம் உன்னேடு கலந்து உறவாடுங்கால் ஏற்படும் இன்பம் எங்களைச் சாரவேண்டுமென்றே, அன்றி, அஃது எங்களுக்கும் உனக்கும் பொதுவாயிருக்கவேண்டுமென்றே நினையாமல், அவ்வின்பம் உனக்கே ஆனந்தமளிப்பதாய், அவ்வானந்தத்தைக் கண்டு யாங்கள் இன்புறுவதாய் இருத்தல் வேண்டும்," எனப் பரமன் முகமலர்த்தியே (உவப்பே) தங்கள் தொண்டிற்குச் சிறந்த பயன் என வரையறுத்து, கண்ணனிடம் அதனைப் பெற்று மகளிர் இன்புற்றனர்.

இங்ஙனம் முப்பகுதிகளோடுங் கூடிய இத்திருப்பாவை சிறுமிகளின் மனஇயல்பையும், போக்கையும், செயலையும், சொல்லையும் வடித்துக் காட்டும் நிழற்படமாய் அமைந்துள்ளது. விளையாட்டும், விநோதமும் கலந்த சொற்களை இடத்திற்கேற்ப இவர் பெய்திருக்கும் தன்மை வியக்கற்பாலது!

"மாமான் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்;
மாமீர்! அவளை எழுப்பீரோ? உன்மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ?
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?"[1]

"கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கருணனும்
தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ?"[2]

"எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?
சில்லென் றழையேன்மின் நங்கைமீர்! போதர்கின்றேன்
வல்லை! உன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்!
வல்லீர்கள் நீங்களே; நானேதான் ஆயிடுக!"[3]

இவ்விறுதிப் பாசுரத்தில் வாக்குவாதத்தின் அழகை நோக்குக!

தாம் அடைய விரும்பும் உயர் பொருளை மனத்திற்கொண்டு, அதன்பொருட்டு இவர் அடி கோலுதலும், இவர்சொல்லும் முறையும், முடிக்கும் முடிவும் கற்றோர் மனத்தைக் கவராமலிரா. இந்நூல், சிறுவர் விளையாட்டின் மூலமாகவே இறை அன்பைப் பெறுதற்பொருட்டு இயற்றப்பட்டதோ எனக் கருதுதற்கும் இடமுள்ளது. இதன் மேற்போக்கான பொருளைச் சிறுவர்க்குக் கூறுங்கால், அவர்களுக்கு உண்டாகும் மகிழ்வும் நகையும் உற்சாகமும் நேரே கண்டவரே அறிவர். அங்ஙனமாயின், அதன் உட்பொருளை அறிந்தவர் அடையுந்தன்மைகள் நம்மால் கூறுந்தரமுடையனவோ? ஏனெனில், இதன் பொருள் இத்துடன் முடிந்துவிட்டதென நாம் கருதுதல் கூடாது. இஃது, எடுக்க எடுக்கக் குறையாத தெய்வநிதி போன்று, ஆயஆய அரும்பொருள்களை ஈந்துகொண்டே இருக்கும் ஒரு புதையலாகும்.

1-3. திருப்பாவை, 9, 10, 15.

அவரவர் அறிவிற்கும் அநுபவத்திற்கும் தக்கவாறு பொருள் காணக்கூடிய பெட்பு இதற்கமைந் துள்ளது. ஞானியரும், கலைஞரும் உய்த்துணரக் கூடிய பொருள்களும் இதிலுண்டு.

இத்திருப்பாவையை ஊன்றி நோக்கின், நம் கோதையார், வானக் கலை, சோதிடக் கலை, மருத்து வக் கலை, விஞ்ஞானக் கலை, ஓவியக் கலை முதலிய கலைகள் யாவற்றிலும் வல்லுநர் என்பது புலனாகும்.

இந்நூலுக்குப் **பெரியவாச்சான் பிள்ளை**, மேற்போக்காகக் காணப்படும் பொருள் ஒன்றும், உள்ளூறக் காணப்படும் பொருள் ஒன்றும் ஆக இரு பொருள்களைச் செப்பிப் போந்தனர். இவை முறையே **அந்யாபதேசம்**, **ஸ்வாபதேசம்** எனக் கூறப்படுகின்றன. இன்னும் இதற்கு **அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்** ஆறாயிரப்படி வியாக்கியானமும், **ஆய்** என்கிற **ஜநந்யாசார்ய ஸ்வாமிகள்** நாலாயிரப்படி வியாக்கியானமும் செய்துள்ளனர். பொன்னும் முத்தும் கலந்து இழைத்த இத்திருப்பாவை என்னும் அழகிய மணி யாரத்தின் ஊடே ஊடே மாணிக்கமன்ன வைஷ்ண வத் தத்துவங்கள் பதிந்திருப்பதை அறிஞர் அறியாமலிரார்.

திருப்பாவைப் பாசுர இல்லம் அமைந்திருக்கும் அழகமைப்பை நாம் நோக்க வேண்டும். ஆண்டாள் ஸ்ரீ வில்லிபுத்தூரை ஆயர் பாடியாகவும், தம்மை இடைப் பெண்டிராகவும், தம் தோழியரை ஆயர் மங்கையராகவும், வடபத்திர சாயியின் சந்நி தானத்தை நந்தகோபன் இல்லமாகவும், அதிலுள்ள

பெருமானைக் கண்ணனாகவும் பாவனை செய்து கொண்டார். இடைமாதர் நோன்பு தொடங்கிய 'மார்கழித்திங்கள் மதி நிறைந்த நன்னாளே' கோதையார் பாவனை நோன்பிற்கும் அமைகிறது. எம்பெருமான் கலியாண குணங்களாகிற தடாகத்தில் மூழ்கிப் பேறு பெற்றுய்தற்குத் தவம், யோகம், யாகம் ஒன்றும் வேண்டற்பாலதன்று; விருப்பம் ஒன்றே போதியதாகும். இதுவே சேதனரை உய்விக்கும் சிறந்த கருவி. இது வைணவத் தத்துவத்தின் உயிர் நிலை. இவ்வுயிர் நிலையை "நீராடப் போதுவீர் போதுமினோ" என முதல் பாசுரத்திலேயே அமைக்கிறார். இவர் நோன்பிற்கு ஏற்படுத்திக்கொள்ளும் நியதிகளைக் காண வேண்டும்; வருணன் மழை சொரிய இவர் ஏவல் கேட்டு நிற்கிறான். பத்து வித இயல்புடைய தோழிகளும் பொழுது புலர்ந்ததை அறிந்து, அன்னையாரிடம் வந்து சேர்கின்றார்கள். நந்தகோபன் அரண்மனை வாயிலில் பெண்களின் பெருங்கூட்டம் நிற்கிறது. வாயிற்காப்போர், நந்தகோபன், யசோதை, பலராமன் முதலியோர் ஒல்லென விழிக்கின்றனர். நப்பின்னை நங்கையாரின் அழகு என்னே! அவர் கைவளைகள் ஒலிக்கின்றன. அவர் கதவைத் திறந்து இவர்களுக்குக் கண்ணனைக் காட்டுகின்றார். கோதையாரின் மனத்திண்மை கண்ணனைச் சிம்மாசனத்தில் அமரச்செய்கிறது. சூடிக்கொடுத்தார் வாக்கால் கண்ணன் பல்லாண்டு பெறுகிறான். இவர் கண்ணனிடம் எவற்றைப் பெற விரும்பினரோ, அவற்றைப் பெறுகிறார்; கண்ணனோடு கூடியிருந்து மனங்களிக்கிறார். இவையாவும் பாவனையினாலேயே நடைபெற்றன.

# நாய்ச்சியார் திருமொழி

இது நம் ஆண்டாள் உள்ளமாகிய ஊற்றி லிருந்து ஆர்வத்துடன் கிளர்ந்தெழுந்த இரண்டாவது நூல். பெரியாழ்வார் திருமொழி, பெரிய திருமொழி எனத் திருமொழிகள் சில இருத்தலின், அவற்றிலிருந்து பிரித்துக் காட்டக் கோதையார் இயற்றிய இதை **'நாய்ச்சியார் திருமொழி'** என்பர். இது 'திரு+மொழி' என்னும் இரு சொற்களால் ஆகிய சொற்றொடராகும். திரு என்பதற்கு, திருமகள், அழகு, செல்வம், தெய்வத் தன்மை முதலிய பொருள்கள் உண்டு. உயிர்களுக்கு உறுதுணையாயிருந்து நலம் புரிதலில் இலக்குமிக்கு ஒப்பாகிய கோதையாரால் ஆக்கப் பட்டதனுலும், ஒரு நூலிற்கு அமைய வேண்டிய சொற்சுவை பொருட்சுவை முதலிய அழகுகள் அமைந்திருத்தலினுலும், மனிதராய்த் தோன்றியவர்க்கு இறைவனைப் பற்றி இன்பந்துய்த்தற் கேற்ற செல்வச் சிறப்புகள் குடிகொண்டிருத்தலினுலும், ஆசாரியர்களும் பிரபன்னரும் பாராட்டக் கூடிய தெய்வத்தன்மை மிளிர்வதனுலும் 'திரு' என்னும் அடைமொழி இந்நூலிற்குப் பொருத்த முடையதாகும்.

இனி, 'மொழி' என்பதை நோக்குவாம்: மொழி என்பதற்குச் சொல் என்பது பொதுப் பொருள். மக்கள் கூட்டுறவு கொண்டு வாழ்தற்கு மொழியே காரணம். இஃதின்றேல், விலங்கு முதலியவற்றின் வாழ்க்கைக்கும் மக்கள் வாழ்க்

கைக்கும் வேறுபாடு காணல் அரிது. மொழி தெரியாத வேறு நாட்டிற்குச் செல்லும்போதே, மொழியின் அருமையும் பயனும் நமக்குப் புலனாகின்றன. அவர்களோடு பண்ட மாற்றுச் செய்தற்கோ, கூடிப் பழகுதற்கோ, அவர்களிடமுள்ள நற்பண்புகளை அறிதற்கோ இடமின்றி எத்துணைத் துன்பங்களுண்டாகின்றன! அவண் இரண்டொரு நாட்கள் தங்குவதற்கும் நம்மனம் இசைவதில்லையே! இம்முறையில் மக்களுக்கு மொழி எத்துணை இன்றியமையாததென்பதை அறிக.

## 1. திருமொழியும் தமிழும்

ஆயினும், அந்தந்த நாட்டிற்கேற்ப மொழிகள் வேறுபட்டுள்ளன. தமிழ் நாட்டில் வழங்கும் மொழி தமிழ் மொழியாகும். 'திரு' என்பதற்கு முன்னர்க் கூறிய பொருள்களேயல்லாமல் மங்களம் என்பதும் ஒரு பொருள். மக்களுக்கு இன்பமூட்டும் செயல்களையே மங்களச்செயல் என்கின்றோம். இம்மங்களம் எதைத் தன்னுள் கொண்டுள்ளது? இனிமையையன்றோ! இதனால் 'திரு' என்பதற்கு இனிமை எனவும் பொருள் கூறலாம். ஆக, இனிய மொழியில் வெளிப்படுத்திய நூலுக்குத் திருமொழி எனப் பெயர் சூட்டினர் போலும்! மிக்க இனிமை வாய்ந்த மொழி தமிழ் மொழியேயன்றோ? தமிழ் என்பதற்கே இனிமை என்பது தானே பொருள்? தமிழிலிருந்து தோன்றிய மொழிகள் தவிர மற்றெந்த மொழியும் இத்துணை இனிமையுடையதன்று என்பதை யாவரும் அறிவர். 'தமிழ் ஆயுந்தோறும் இன்பம் தரும்,' என்பது பெரியார்

வாக்கன்றே? தமிழின் ஒலியும் இனிமை! சொல்லும் இனிமை! பொருளும் இனிமை! செயலும் இனிமை! எங்ஙனம் மக்களுக்குக் கடுமை செயற்கையோ, அங்ஙனமே தமிழிற்கும் கடினச் சொற்கள் செயற்கை எனக்கொள்க. தெய்வ அருள் வாய்ந்த பொருள் யாவும் இனிமையுடையனவே! இயற்கைப் பொருள்கள் எத்துணை இனிமையுடையன! அங்ஙனமாயின் அவ்வினிய இயற்கைப் பொருள்களைத் தனக்கு உடலெனக் கொண்ட இறையின் இனிமையைக் கூறுதலும் வேண்டுமோ! இங்ஙனம் இனிமை வாய்ந்த இறைவனை எச்சொற்களால் வாழ்த்துதல் வேண்டும்? எம்மொழியில் வழுத்தின் இறைவன் உள்ளங்குளிரும்? இனிமை வாய்ந்த மொழியாலன்றோ? அஃது எது? தமிழே என்பதை மறுப்பவர் யார்? இதனாற்றான் நாயன்மார்களும் ஆழ்வார்களும் தமிழ்ப் பாசுரங்களினாலேயே இறைவனை வழுத்தினார்கள். இவர்களுள் ஆண்டாளும் ஒருவராவர். ஆனால், அவர்களைக்காட்டிலும் இவர் உயர்ந்தவர் எனக் கொள்க. ஏன்? அவர்கள், தம் பாக்களைத் தமிழில் பாடியதாகக் கருதினார்களே அல்லாமல், இவரைப் போன்று தமிழே தம் பாசுரங்கள் எனச் செப்பினார்கள் இல்லை. தமிழும் தம் பாசுரங்களும் வேறல்ல என்பது இவர் கருத்து. இதற்கு,

"கோதை வாய்த் தமிழ் வல்லவர்"
" தூய தமிழ்மாலை ஈரைந்தும் வல்லவர்"
"கோதை தமிழ் ஈரைந்தும்"
"செந்தமிழ் பத்தும் வல்லார்"

"புதுவையர்கோன் கோதை தமிழ்"

என இவர் இயம்பும் சொற்களே தக்க சான்றுகளாகும்.

தமிழ் அன்னைக்கு மணிமேகலையும் சிலப்பதிகாரமும் முறையே மேகலாபரணமாகவும், காற்சிலம்பாகவும் உள்ளன என்னும் ஒரு வழக்குண்டு. கவிச்செல்வியார் நூல்களோ, இங்ஙனம் ஒப்புப்படுத்தும் முறையில் இல்லை. இவர் சொற்கள் தமிழன்னையின் வடிவம். அச்சொற்களின் பொருள் தமிழன்னையின் உயிர். தமிழன்னை வேறு, இவர் நூல்கள் வேறு எனப் பிரித்தற்கியலா நிலையிலுள்ளது. இந்நூல்களில் அமைந்துள்ள அகப்பொருள் தத்துவங்கள் தமிழ்த்தாய்க்கு உயிருக்குயிராய் இலங்குகின்றன. கோதையார், இயற்கையில் படிந்து படிந்து எத்தனை நிற ஆடைகளைத் தமிழன்னைக்கு அணிவிக்கிறார்! வீரம், சான்றாண்மை, சீர்திருத்தம், காதல் முதலிய எத்தனை அணிகளை அவருக்குப் பூட்டுகிறார்! இவற்றைப் பெற்ற தமிழன்னை நம் ஆண்டாள் நூலால் மகிழும் மகிழ்வு என்னே! இங்ஙனம் நம் கோதையார் ஒழுகிக்கொண்டதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. தமிழ்த்தாய் இவர் மருங்கிலே அன்றோ வளர்கிறாள்! இதற்கு,

"ஏன மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள்." [1]

என்னும் புலவர் வாக்கை நோக்குக.

1. வில்லிபாரதம்.

இத்தமிழ், "**இயல், இசை, நாடகம்**" என முத்திறப்படும். இம்மூன்றும் சேர்ந்தபோதே தமிழ் முற்றுப் பெறுகிறது. நம் தமிழ் நாட்டில் ஒரு காலத்தில் இசையும் நாடகமும் சீரிய குறிக்கோளுடன் உயர்நிலை பெற்று விளங்கின என்பது அறிஞர் அறிந்ததே. பல காரணங்களினால், இடைக்காலத்தில் இவற்றிற்கு வீழ்ச்சியும் இழிவும் ஏற்பட்டன. இவை இப்போதுள்ள நிலையிலிருந்து உயர்ந்து புத்தம்புதிய உருவத்தைப் பெற்றுத் துலங்க வேண்டும் என்பது கற்றோர் கருத்து. நம் கோதையார் நூலில் இவை மூன்றும் விரவியிருத்தலைக் காணலாம்.

"மற்ற ஆழ்வார்களின் சீரிய அமைப்பு வாய்ந்த பாக்களைக்காட்டிலும், நம் கோதையார் பாக்கள் உயர்வும், அழகும், சீர்மையும், இனிமையும் வாய்ந்து நுட்பப் பொருளைப் பொதிந்துகொண்டிருப்பன என்பதை யாவரும் ஒப்புக்கொள்ளுவர். ஆதலின், இவர் நூல்கள் இயற்றமிழிற்கும் இருப்பிடம் எனக் கூறுவதில் குறையில்லை.

உலகம் இசையால் ஆக்கப்பட்டுள்ளது. காற்றில் இசை உண்டு; கடலில் இசை உண்டு; மழையில் இசை உண்டு; மரத்தில் இசை உண்டு. இசை இல்லாத இடமுமுண்டோ? இறைவன் இசைக்குக் கட்டுப்பட்டவனல்லனோ? **நம்பாடுவான்** இசையைப் பாடிப் பேறு பெற்றதை அறிந்த ஆண்டாள், தாமும் இறைவன் இன்னருளைப் பெறத் தம் நூல்களை இன்னிசையோடுங்கலந்து பாடியருளினர் என்னும் ஒரு சரிதமும் வழங்கப்படுகிறது. இன்னும் நம் அன்னையார் தம்முடைய பாசுரங்களை இசைத்

தமிழெனவும், இசையோடு கலந்தே அவற்றைத் தாம் செப்பியுள்ளதாகவும் இயம்புகிறார்.

"இன்னிசையால் சொன்னமாலை ஈரைந்தும்" [1]

"இன்னிசையால் சொன்ன செஞ்சொல்மாலை" [2]

இவர் நூல்களுள் நாடக அமைப்புகள் முற்றும் அமைந்துள்ளன. நாடகத்திற்கு வேண்டுவனவாகிய ஒன்பது சுவைகளும் இந்நூல்களுள் உண்டு என்பதை ஆராய்பவர் அறிவர். இவர் எம்பெருமானைக் காளியன் உச்சியாகிய நாடகமேடையில் ஏற்றி நடிக்கச் செய்கிறார். அவனைக் கூத்தனென்றே இவர் நா வழங்குகிறது. மயில்கள் கண்ணன் கோலத்தைக் கொண்டு தம்முன் நடிப்பதை இவர் கண்டு கண்டு மகிழ்கிறார். இம்முறையில், இவருக்கு நாடகத்தில் இருக்கும் சுவையையும், இவர் தம்நூலில் நாடகத்தைப் பொருத்தும் இடத்தையும், அதைப் பண்படுத்தும் நேர்மையையும் நோக்குக! விரிப்பிற் பெருகும்.

"குதிகொண் டரவில் நடித்தாய்!" [3]

"வாய்த்த காளியன் மேல்நட மாடிய கூத்தனார்." [4]

"கணமா மயில்காள் கண்ணபி ரான்திருக் கோலம் போன்று
அணிமா நடம்பயின் றாடுகின்றீர்." [5]

என்னுந் தொடர்களை நோக்குக.

இதனால், நம் சூடிக்கொடுத்தார் நூலில் முத்தமிழும் கலந்துள்ளன என அறிந்தோம். இம்மூன்றும் கலந்தபோதே தமிழிற்கு ஒரு குறைவற்ற உருவம் ஏற்படுகிறது. பண்டைய சங்கங்கள் இம்முத்

1-5. நாய்ச்சியார் திருமொழி, 3:10, 12:10, 3:2, 4:4, 10:6.

தமிழையும் தனித்தனி பிரித்துக் காணவில்லை. இம் மூன்றையும் சேர்த்தே பார்த்தன; ஆய்ந்தன; இன்பந் துய்த்தன. இம்மூன்றும் ஒன்றே என்பது சங்கத்தி னர் கருத்து. இடைக்காலத்தில் இசை நூல்களும் நாடக நூல்களும் மறைந்தொழிந்தன. தற்சமயம் சிலப்பதிகாரம் ஒன்றுதான், முத்தமிழையும், சங்கத் தின் போக்கையும் காட்டிக்கொண்டு நிற்கிறது. சங் கத்தின் உயர் எண்ணத்தையும், தமிழின் தன்மை யையும் விளக்குதற்பொருட்டே, நம் அன்னையார், தம் நூலில் முத்தமிழையும் பொருத்தி, திருப்பாவை யின் இறுதியில் "சங்கத்தமிழ்மாலை முப்பதும்" எனச் செப்பிப் போந்தார். இதனால், நம் செல்வி யாரின் நூல்கள் தமிழின் முழு உருவத்தையும் பெற்று விளங்குகின்றன என்பதை அறிந்தாம்,

ஆண்டாள் வணங்கிய தெய்வங்கள் எவை? முதன்முதலில் இவர் தமிழின் எல்லை நிலமான வேங்கடமலையில் எழுந்தருளி இருக்கும் திருவேங்க டத்தானுக்கு, அவனைப் போன்ற நிறத்தையும் அவனை ஒத்த கருணையையும் உடைய மேகத்தைத் தூது விடுகிறார்; பின்பு தமிழ் தழைத்தோங்கிய பாண்டி நாட்டு அழகரிடம் செல்லுகிறார்; தமக்குப் புலப்படும் பொருள்கள் யாவும் அழகர் நிறத்தையே கொண்டு ஒளிர்வதாகக் காண்கிறார்; அவருக்கே வெண்ணெயையும் அக்கார அடிசிலையும் ஊட்டு கிறார்; இறுதியில் சோழவளநாட்டில் எழுந்தருளி யிருக்கும் திருவரங்கச்செல்வனை நோக்குகிறார். அவனுடைய நாகணையும், அவன் திருச்சயனமும் இவர் மனத்தைக் கவர்கின்றன. காவை விரிக்கும்

காவிரியும், ஏழு மதில்களும் இவர் நோக்கையும் நெஞ்சையும் இழுக்கின்றன. அவ்வரங்கனிடமே சென்று ஒன்று சேர்ந்து மறைகிறார். இவர் தமிழை யும், தமிழ் நாடுகளையும், தமிழ்த் தெய்வத்தையும் போற்றிய போக்கு என்னே! நம் அன்னையார் நூலும் தமிழும் நிலை நின்று வழங்குவனவாக!

## 2. காதற்பெருக்கே நாய்ச்சியார் திருமொழி

நம் தெய்வப் பாவையார் 'திருப்பாவை' நோன்பைப் பாக்களினாலேயே செய்து முடித்து எம்பெருமானுக்கு இன்பம் ஊட்டினார். ஆயினும், இன்னும் இவர் திருமொழியைக் கேட்டு உகக்கவும், இவர் காதல் வெள்ளம் கரைபுரண்டோடுவதை உல கோர் அறிந்து நலனுறவும் கருதிய எம்பெருமான், இவரை உடனே ஆட்கொண்டிலன்; சிறிது காலந் தாழ்த்தனன். அக்காலத்தாழ்வு, அன்னையாரைப் பெரிதும் வருத்திற்று. என் செய்வார் பாவம்! கொழுகொம்பைக் காணாது அலையும் கொடி போன்று இவர் துவள்கிறார்! தம் நிலையை அறியத்தக்கவர் எவரையும் கண்டிலர். எங்கும் மெய்யல்லா வாழ்க் கையை மெய்யெனக் கொள்வோரும், உண்டி உடை களைத் தேடித் திரிவோருமாகவே காணப்பட்டனர். ஆதலின்,

"பண்டே உயிரனைத்தும் பங்கயத்தாள் நாயகற்கே
தொண்டா மெனத்தெளிந்த தூமனத்தார்க்கு—உண்டோ
பலகற்றும் தம்முடம்பைப் பார்த்தபி மானிக்கும்
உலகத் தவரோடு உறவு ?"[1]

1. ஞானஸாரம், 13.

என, அருளாளப் பெருமாள் எம்பெருமானுர் அருளிச்செய்தவாறு அவரோடு உறவு கொள்ளவும் இவர் மனம் இசைந்திலது. இவர்தம் தந்தையாராகிய பெரியாழ்வாரும் இவர் ஆற்ருமையை அறிந்திலர். அவர் கோதையார் இன்னுர் என்றும், இவரிடம் திருமால் கொண்டுள்ள ஆர்வம் இத்துணைத்தென்றும் உணர்ந்திருப்பினும், இவர் தம் மகளார், சின்னஞ்சிறுமியார் என்று நினைத்திருந்தனரேயன்றி, இவருடைய மங்கைப்பருவத்தின் மாண்பும், காதற்பெருக்கும் ஆழ்வாருக்குப் புலப்பட்டில. பெற்ருேர் தம் மக்களை என்றும் குழந்தைகளாகவே மதித்திருத்தல் உலக வழக்கன்ருே!

"வாயில் பல்லுமெழுந்தில மயிரும்
முடிகூடிற்றில,"[1]

எனப் பெரியாழ்வார் கருதுவதிலிருந்து அவர் கருத்தை அறியலாம்.

ஆயினும், இவரோடு அல்லும் பகலும் கலந்து உறவாடும் தோழியர்மட்டும் இவர் போக்கை ஒருவாறு அறிந்திருந்தனர். அவர்தாம் என் செய்வர்! இவர் விழையும் பொருள், சிறிது துன்பப்பட்டேனும் காணக்கூடிய இவ்வுலகப் பொருளன்றே! அறிஞராலும் அறிய முடியாத அரும்பொருளன்ருே? இவர் காதலோ, சுக்கிலபட்சச் சந்திரன் போன்று நாளுக்குநாள் வளர்வதாயிற்று. எம்பெருமானைக் காணவேண்டுமென்னும் ஆர்வம் பெருகிய போது 'திருப்பாவை' என்னும் நூல் வெளிப்பட்டது போன்று, எம்பெருமானை இப்போதே சேரவேண்

1. பெரியாழ்வார் திருமொழி, 3 : 7 : 2.

டும் என்னும் காதல் உள்ளடங்காமல் மீதூர்ந்த போது 'திருமொழி' என்னும் இப்பிரபந்தம் வெளிப் போந்தது. இஃது ஒருநூற்று நாற்பத்து மூன்று பண்புடைய பாசுரங்களை உடையது. "ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே!" என்பதை நோக்குக. திருப்பாவை செங்காய் நிலையிலும், திருமொழி கனிந்த கனி நிலையிலும் உள்ளன. இக் கனிந்த நிலையன்றோ கோதையாரை எம்பெருமானி டம் கலந்து இன்பந் துய்க்குமாறு செய்தது! 'நாராயணனே நமக்கே பறைதருவான்' எனத் தேற்றேகாரத்தை இட்டுக் கூறி, அவனையே உபாய உபேயமென உறுதி கொண்ட குடியில் பிறந்தவரும், திருப்பாவை முதற்பாசுரத்திலேயே இவ்வுண் மையை வாய் விட்டு வெளியிட்டவருமான நம் அன் னையார், இப்போது எந்நிலையில் உள்ளார்? இவருக் குத் திருமாலிடம் உதித்த ஊன்றிய அன்பு, காதலாக மாறுகிறது! இதற்குப் போக்கு வீட்டை நோக்கு கிறார்; தாமாகவே சென்று தேவதேவனை அடைதல் அருமை என இவருக்குத் தோன்றிற்று. அதற்கு வழி யாதெனச் சிந்திக்கிறார். காதல் தெய்வம் இவர் முன் காட்சி அளிக்கிறது! இவர் உறுதிநிலை சிறிது மாறுகிறது. இத்தெய்வத்தைப் புருஷகாரமாகக் கொண்டேனும் எம்பெருமானைச் சேர்தல் வேண்டு மென்னும் ஓர் எண்ணம் தோன்றுகிறது. அடி யார்க்கு எளியானை அடைய வேண்டும் என்னும் வேட்கையின் முன், வேறு தெய்வங்கள் காலில் விழுதல் கூடாது என்னும் கோட்பாடு உறுதி பெற் றிலது. இவர் விரும்பிய பொருள்தான் எளிமை

யுடையதோ, அன்றி, இவர் காதல்தான் வரையறை செய்யப்பட்டதோ — சாத்திரத்தின்படி வேறு கடவுள் காலில் விழாமலிருத்தற்கு? கடலில் மூழ்கிக்கொண்டிருக்கும் ஒருவன், புல் போன்ற ஓர் அற்பப் பொருளைக் காணினும், "இதுவும் நம்மைக் கரை சேர்க்கும்," என மயங்கிப் பிடித்துக்கொள்வானல்லனோ? அதைப் போன்றே இத்தெய்வப் பாவையாரும் எம்பெருமானுகும் பகலவன் முன் மின்மினியெனத் தோன்றும் மன்மதன் காலில் விழுந்து, தம்மை இறையிடம் கொண்டுசேர்க்குமாறு வேண்டுகிறார். இவர் காதலித்த பொருளின் பெட்பு இவரை இங்ஙனம் ஆட்டி வைக்கிறது.

"முள்ளுமில் லாச்சுள்ளி எரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன் காமதேவா!
புள்ளினை வாய்பிளந் தானென்பதோர்
இலக்கினில் புகஎன்னை எய்கிற்றியே."[1]

"மாசுடை உடம்பொடு தலையுலறி
வாய்ப்புறம் வெளுத்தொரு போதுமுண்டு
தேசுடைத் திறலுடைக் காமதேவா!
நோற்கின்ற நோன்பினைக் குறிக்கொள்கண்டாய்
பேசுவ தொன்றுண்டிங்கு எம்பெருமான்
பெண்மையைத் தலையுடைத் தாக்கும்வண்ணம்
'கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்'
என்னுமிப் பேறெனக் கருளுகண்டாய்,"[2]

இச்செயலைப் பொறுத எம்பெருமான், காட்சி அளிக்கிறன். ஆயினும், காலந்தாழ்த்து வந்த அவனோடு வார்த்தை சொல்ல இவர் மனம் இசைந்திலது.

---

1-2. நாய்ச்சியார் திருமொழி, 1 : 2, 1 : 8,

அதனல், அவனை நோக்காதவர் போன்று சிற்றில் இழைக்கிருர். அதனை அழிக்குமுகத்தான் திருமால் முகங்காட்டுகிருன். அன்னையார் அவனைக் கண்டு பெருங்காதல் கொள்கிருர். அவ்வமயம் இரு திறத்தினர் நெஞ்சும் கலந்து உறவாடுகின்றது.

"பெய்யு மாமுகில் போல்வண்ணு ! உன்றன்
 பேச்சுஞ் செய்கையும் எங்களை
மைய லேற்றி மயக்க வுன்முகம்
 மாய மந்திரந் தான்கொலோ?
நொய்யர் பிள்ளைக ளென்ப தற்குன்னை
 நோவ நாங்க ளுரைக்கிலோம்
செய்ய தாமரைக் கண்ணி னுய் ! எங்கள்
 சிற்றில் வந்து சிதையேலே.''[1]

என்கிருர்.

சிறிது போதில் அவ்விறைவனது உருவெளித் தோற்றம் மறைகிறது. அதனல் அன்னையார் நெஞ்சம் நெகிழ்கிறது. அத்துன்ப வெம்மை தணிதற்பொருட்டுக் குளிர்ந்த நீராடலாம் என்னும் எண்ணம் உதித்தது. அக்காலத்தில் நல்ல வரனை அடைதற்பொருட்டுப் பனி நீராடல் என்னும் ஒரு கொள்கை உண்டு. அதன்படியே இவர் பல மங்கையரோடு விடியற்காலையில் பொய்கை ஆடச் செல்லுகிருர். இவர்கள் நிழலைப் பற்றிச் சென்ற கண்ணன், இவர்கள் கரையில் வைத்த ஆடை அணிகளை வாரிக்கொண்டு குருந்தமரத்தில் ஏறியிருக்கிருன். "கண்ணனே, நீ வானரங்களுக்குத் தலைவன் அல்லையோ? உனக்கு மரமேறுதல் அருமை

1. நாய்ச்சியார் திருமொழி, 2 : 4.

யோ? எங்களைத் துன்புறுத்தற்கே நீ தோன்றினை போலும்! உன் அன்னை யசோதையோ, உன்னைச் சிறிதும் அடக்கி வளர்க்கக் கற்றாள் இல்லை; தீம்பிலேயே உன்னை உருப்படுத்துகிறாள். இஃது எங்கள் பாவமேயாகும்! மற்றவர்கள் காணு முன்னம் எங்கள் ஆடையைத் தந்துவிடு," என எம்பெருமானை இறைஞ்சுகின்றனர். அவனிடம் வழக்கிட்டு ஆடை அணிகளையும், அவன் அருளையும் பெற்றுக் கோதையாரும் மற்ற மகளிரும் வீடு திரும்புகின்றனர்.

"ஏழமை ஆற்றவும் பட்டோம்;
இனியென்றும் பொய்கைக்கு வாரோம்;
தோழியும் நானும் தொழுதோம்;
துகிலைப் பணித்தரு ளாயே,"[1]

"வில்லா லிலங்கை யழித்தாய்! நீ
வேண்டிய தெல்லாம் தருவோம்:
பல்லாரும் காணமே போவோம்
பட்டைப் பணித்தரு ளாயே." [2]

"குரக்கர சாவ தறிந்தோம்
குருந்திடைக் கூறை பணியாய்," [3]

"அஞ்ச உரப்பாள் அசோதை
ஆணாட விட்டிட் டிருக்கும்
வஞ்சகப் பேய்ச்சிபா லுண்ட
மசிமை யிலீ!கூறை தாராய்." [4]

என்னும் பாசுரங்களை நோக்குக.

---

1-4. நாய்ச்சியார் திருமொழி, 3 : 1, 3 : 3, 3 : 4, 3 : 9.

மக்கள் தங்களுக்கு நேரும் நன்மை தீமைகளை அறிந்துகொள்ளக் குறிபார்த்தல் அக்கால வழக்கு. அதன்படியே நம் கோதையாரும் அழகியமணவாளன் எப்போது தம்மை அங்கீகரிப்பான் என்பதை அறிய,

"பழகு நான்மறை யின்பொரு ளாய்மதம்
ஒழுகு வாரணம் உய்ய அளித்தஎம்
அழக னூர்அணி யாய்ச்சியர் சிந்தையுள்
குழக னார்வரின் கூடிடு கூடலே!" [1]

எனக் கூடலிழைத்துப் பார்க்கிறார். அக்கூடல் இவருக்கு ஒரு விடையும் பகர்ந்திலது. அவ்வமயம் தம் வீட்டுப் புறக்கடையின் மலர் வனத்தில் பெடையோடு சேர்ந்து களித்திருக்கும் குயிலைப் பார்க்கிறார். "இன்பத்தில் ஆழ்ந்திருக்கும் குயிலே, பொன்னனைய மேனியுடைய கருடக்கொடி தாங்கிய என் புண்ணியனை வரக்கூவாய்! உலகளந்தவனை வருமாறு நீ அழைப்பாயாகில், இனிய பாலுஞ் சோறும் ஊட்டி வளர்த்த என் அழகிய கிளியை உன்னோடு நட்புக் கொள்ளச் செய்வேன்! அங்ஙனம் செய்யவில்லையேல், இவணிருந்து உன்னைத் துரத்திவிடுவேன்!" என வற்புறுத்துகிறார்; அதன் காலிலும் விழுந்து வணங்குகிறார்.

"பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப்
புண்ணிய னைவரக் கூவாய்" [2]

"இன்னடி சிலொடு பாலமு தூட்டி
எடுத்தவென் கோலக் கிளியை

---

1-2. நாய்ச்சியார் திருமொழி, 4 : 10, 5 : 4.

உன்னொடு தோழமை கொள்வன் குயிலே!
உலகளந் தான்வரக் கூவாய்." [1]
"இன்றுநா ராயண னைவரக் கூவாயேல்
இங்குத்தை நின்றும் துரப்பன்!" [2]

என்னும் பாசுரங்களை நோக்குக.

அஃதும் இவர் எண்ணத்தை முற்றுவிக்கும் வன்மையைப் பெற்றிலது. அல்லும் பகலும் அவன் நினைவிலேயே ஆழ்ந்திருக்கும் அன்னையார் மனத்தில், "என்று இறைவனைக் காண்போம்! என்று அவனை அடைவோம்! என்று உண்மை இன்பந்துய்ப்போம்!" என்னும் எண்ணங்கள் இடைவிடாமல் ஊசலாடிக்கொண்டிருந்தன.

ஒரு நல்ல இரவு! துயிலிற்குச் சென்றது நல்ல நேரம்போலும்! அவ்வுறக்கத்தில் ஸ்ரீ வில்லிபுத்தூரே ஒளியுடன் பிரகாசிக்கின்றது! வீதிகளில் வாழை கமுகு முதலியன நாட்டப்பட்டுள்ளன. நிலம் முழுதும் வெண்மணல், ஆங்காங்கே அழகிய பந்தர்கள், அப்பந்தர்களில் சித்திரவேலைப்பாடுகள், அவற்றுள் மலர்மாலைகள் தொங்கவிடப்பட்டுள்ளன. இந்திரன் முதலாகிய தேவர்கள் கூடியிருக்கின்றார்கள். அந்தணர்கள் தூய தீர்த்தத்தைக் கொணர்ந்து மங்களமுண்டாக வேண்டுமென இவர்மேல் தெளிக்கின்றார்கள். அழகிய இளம்பெண்கள் விளக்குகளையும் பொற்கலசங்களையும் தாங்கி மணமக்களை எதிர்கொண்டழைத்தல் யாவருக்கும் குதுகுலிப்பை ஈந்தது. மத்தளங்களும் சங்கங்களும் முழங்குகின்றன; நாற்புறமும் வைதிகர்கள் வேதஒலி, எங்கும் பர

1-2. நாய்ச்சியார் திருமொழி, 5 : 5, 5 : 10.

பரப்பு, யாவர் முகத்திலும் புன்னகை, ஒவ்வொரு வீட்டு முற்றத்திலும் அலங்கரிப்பு ; தூங்கா விளக்குகள், எங்கும் மாவிலைத் தோரணங்கள். மங்கையரும் சிறுவரும் ஆடை அணிகளால் ஒளிருகின்றனர். ஆடவர் தம் புதிய ஆடைகளை உடுத்து, வீரமும் சுறு சுறுப்பும் தோன்ற உலவுவது உலகத்தையே பெயர்த்துவிடுவார் போலத் தோன்றுகிறது. பல சங்கீத ஒலிகள் கலந்து ஒலிக்கின்றன. இங்ஙனம் அவ்வூரே ஆனந்தத்தில் தவழ்ந்துகொண்டிருந்தது. யாவர் உள்ளத்திலும் உறைந்தொளிரும் ஸ்ரீமந் நாராயணன் ஆயிரம் ஆனைகள் சூழ ஊரை வலமாகச் சுற்றி வருகிறான் ; முத்துப்பவழங்களால் அணிசெய்யப்பட்ட பந்தர்க்குள் அம்மாதவன் புகுகிறான். நம் கோதையாருக்கு மணச்சேலை உடுத்தி, மலர்மாலை சூட்டப்படுகிறது. அறிஞர் ஆண்டாளைக் கண்ணனோடு இருக்கச்செய்து, காப்புநாண் கட்டுகின்றனர். கண்ணன் சூடிக் கொடுத்தார் கரத்தைப் பிடித்துக் கொள்கிறான். மணமக்கள் தீவலம் வருகின்றார்கள். அம்மி மிதித்தல், பொரி அள்ளி இடுதல் யாவும் நடைபெறுகின்றன. குங்குமம் சந்தனம் அணிந்து அழகு துலங்கச் சூடிக்கொடுத்தார் அச்சுதனோடு ஊர் வலம் வருகிறார். வீடு திரும்பியதும் இருவரும் மஞ்சள் நீராடுகின்றனர்.

உடனே தெய்வக்கொடியாகும் நம் அன்னையார் விழிக்கிறார் ; தம் அறை முற்றும் நோக்குகிறார். தாம் துயிலிற்குச் சென்றபோது அஃது எங்ஙனம் இருந்ததோ, அங்ஙனமே காணப்பட்டது ; வேறுபாடு ஒன்றும் தோன்றிற்றிலது. சில விநாடிகளுக்கு

முன்பு தாம் கனவில் கண்ட பொருள் ஒன்றும் இவர் கண்ணிற்பட்டிலது! தம்மை உற்று நோக்குகிறார். மணச் சேலையோ, அன்றி மண அலங்காரமோ தம் மிடம் அமைந்தில்லை. இவர் முன் கொண்ட மகிழ்வு சிறிது சிறிதாகக் குறையத் தொடங்குகிறது. "நாம் துய்த்த இன்பம் யாவும் நனவா, கனவா!" எனச் சிறிதுபொழுது இவர் சிந்திக்கிறார்; இறுதியில் கன வெனத் தெளிகிறார். "என் உவகை இவ்வளவிலா முடிந்தது! அஃது உண்மை இன்பம் என்றன்றோ யான் கருதினேன்! ஆ! மணவறையின் அமைப்பு என்னே! சூழ்ந்திருந்தார் ஆனந்தம் அளவிடற் பாலதோ! மங்கையரின் மாண்பு மதித்தற்கிய லுமோ! என் தோழியரின் குதுகுலிப்பு வரையறைப் பட்டதோ! என்ன ஒளி! என்ன ஒளி! தீபங்களின் விளக்கத்தையும், அணிகளின் பிரகாசத்தையும், என் ஆன்ம நாயகரின் தாமரையை வென்ற முகத்தே ஒளிரும் சோதியையும் எவற்றிற்கு ஒப்பிடுவது! என்றும் குன்றா ஒளிவாய்ந்த வைகுண்டத்திற்கன்றோ அதை ஒப்புக் கூறல் வேண்டும்! ஊர் முற்றும் உகப் பில் ஆழ்ந்திருந்ததே! தனித்தனி இல்லமுமன்றோ மணவீடாய்த் திகழ்ந்தது! இங்ஙனம் என் ஒருத்திக் காக யாவரும் மகிழ்தற்குக் காரணம் யாதாயிருக்கக் கூடும்! எம்பெருமானே எழுந்தருளி என்னை அங்கீ கரித்ததன்பொருட்டா? அன்றன்று! 'நம் பெரியாழ் வார் தாம் வளர்த்த மகளை ஸ்ரீமந் நாராயணனுக்கே ஈந்து உயர்வடைந்தனரே! இவரல்லரோ பத்தர்! இத்தூயரல்லரோ பிரபந்நர்! இவருக்கு ஒப்பாவார் இவ்வுலகில் யார்? இவர் பண்ணிய புண்ணியம்

பலித்தது! இவர் தவம் முற்றுப் பெற்றது! இவரே பெரியாழ்வார் என்னும் பேருக்குத் தக்கவர்! அவ்வுலகிற் சென்றடையக் கூடிய இன்பத்தை இவ்வுலகத்திலேயே அடைந்துவிட்டார்! இனி இவருக்குப் பரமபதம் தேற்றம் என்பதற்கு ஐயம் யாது?' என்னும் உயர் எண்ணங்கள் அல்லவா நாட்டாரை ஆனந்தத்தில் ஆழ்த்தின? பெரியாழ்வார் பெண் கொடியாகத் தோன்றினேனே! இதனாலன்றோ எனக்கு இப்பெருமை! இஃதும் இறைவன் இன்னருளே!'' என உன்னிக்கொண்டிருக்கும் போதே, மறுபடியும் தாம் கண்டன யாவும் கனவு என்னும் கருத்துத் தோன்றிற்று; முகம் சாம்பியது; உள்ளம் உருகியது. ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்கின்றார். இந்நிலையில் தம்மையும், பொழுது புலர்ந்ததையும் முற்றும் மறந்தார். எழுந்து வெளிப் போந்திலர். ஆதித்தன் தன் வெண்ணிறக் கிரணங்களைப் பரப்பி மேற்கிளம்பியும் கோதையார் பள்ளியறை விட்டு வெளிவாராதது தோழியருக்குக் கலக்கத்தை உண்டாக்கிற்று. "கோதையாருக்கு உடல் நலமில்லையோ! இரவு தூக்கமின்றி இப்போது தான் துயில்கின்றாரோ! காரணம் வேறு யாதாயிருக்கும்!'' என அச்சமுற்றனர்; மெல்லெனச் சென்று வாயிற்படியருகில் நின்றனர். சிறு அரவமும் இல்லை. கதவின் தொளை வழி நோக்கினர். ஒன்றும் புலப்பட்டிலது. அவர்கள் நெஞ்சம் பின்னும் பதைபதைத்தது. மனம் விரைந்ததேயன்றி, அவர்கள் உடல் விரைந்து காரியம் இயற்ற இடந்தரவில்லை. செல்வச் சிறுமியாரிடம் பெருந்தகைமை

யோடு நடந்துகொள்ளவேண்டும் அல்லவா? அவர்கள் ஓதை இன்றிக் கதவைத் திறந்தார்கள். கோதையார் விழித்துக்கொண்டே படுக்கையில் சாய்ந்திருந்தார். இவர் நோக்கு அவர்கள் மாட்டுத் திரும்பவே இல்லை. அவர்கள் வரவை இவர் அறிந்திலர். இவர் சிந்தை எதை எதையோ சிந்தித்துக்கொண்டிருந்தது. தோழியரும் இவர் நிலையை ஒருவாறு தெரிந்து அடிமேலடி வைத்து அருகில் சென்றனர். அதையும் இவர் உணர்ந்திலர். ஒருத்தி சிறிது குனிந்து இவர் முகத்தை நோக்கி, நகை செய்தாள். அப்போது தான் இவர் உணர்ந்தார்; காணும் பொருள்களைக் கண்டவர் போன்று, மிரண்ட பார்வையுடன் தோழியரை நோக்கினர். இது, நீண்டநேரம் உணர்வற்றிருந்த ஒருவர் உணர்வைப் பெற்றது போன்று காணப்பட்டது. தோழியர் அன்னையாரை நோக்கி, "அம்மணி, என் ஆழ்ந்த சிந்தனை? இங்ஙனம் மெய்ம்மறந்திருப்பதற்குக் காரணம் யாது? துயில் உணர்ந்தும் படுக்கையிலேயே இருத்தல் ஏனோ! உங்கள் கண்ணையும் மனத்தையும் ஒருங்கே கவர்ந்த மாண்புற்ற பொருள் எதுவோ? எங்கட்குத் தெளியக் கூறுதல் நலம்," எனப் பணிவுடன் இறைஞ்சி நின்றனர்.

சிறிதுபோழ்து கோதையார் நா ஒரு வார்த்தையையும் வழங்கிற்றிலது. பின்பு, "என் அருமைத் தோழியரே, யான் இன்று கண்ட காட்சியும், துய்த்த இன்பமும் செப்புந்தரமுடையனவோ! இன்னும் சிறிது போதேனும் அவ்வின்பத்திலேயே இருக்கப் பெற்றிலேனே! அளப்பிலா ஆனந்தவாழ்

வில் அமர்ந்திருக்கும் ஒருவரைக் கொடுங்கூற்றம் கொடுபோதல் போன்றன்றோ. இவ்விழிப்பு என் எல்லையற்ற இன்பத்தைக் கொள்ளை கொண்டு விட்டது! இப்பேற்றைக் கனவிலேனும் பெற்றேனே! இழந்த கண்ணைப் பெற்று மறித்தும் இழந்தது போன்றன்றோ என் நிலை ஆயிற்று! ஏன் இன்னும் சில விநாடிகளேனும் துயிலாதொழிந்தேன்? எம்பெருமான் என் கரத்தைப் பிடிக்கும் பேற்றைப் பெற்றும், அவர் செவ்வாய் திறந்து இயம்பும் ஒரு வார்த்தையையேனும் கேட்கும் தவமியற்றிலேனே! இன்னும் சிறிது நேரம் விழியாதிருப்பின், அப்பேறும் கிடைத்திருப்பினும் கிடைத்திருக்கலாம்! பறவைகளின் ஒலியும், மலர்களின் மணமும், வேத ஒலியும், பகலவன் பாரிப்பும் அல்லவா எனக்குப் பகைகளாய் நின்றன! எந்த இயற்கைப் பொருள்கள் ஒருகால் எனக்கு இன்பமூட்டினவோ, அவைகளே இன்று என்னைத் துன்பத்தில் ஆழ்த்திவிட்டனவே! அந்தோ! இனி ஒரு முறையேனும் இத்துணைச் சீரிய கனவு எனக்கு உண்டாகுமா? அவ்வமயம் தோன்றிய காட்சிகள் கனவேனும், அவற்றுள் ஒன்றுகூட இன்னும் என் மனத்தை விட்டு அகன்றிலதே! இப்போதும் அவை நடைபெறுதல் போன்றல்லவா என் கண்முன் காட்சியளிக்கின்றன! இப்பெரும்பேற்றை என்று உண்மையாகப் பெற்று உய்வேன்! அது கைகூடாதென்பதுதான் என் துணிபு! ஏன்? அவர் எவ்வளவு உயர்ந்தவர்! யான் எவ்வளவு தாழ்ந்தவள்! இம்முறையில் இருவருக்கும் தொடர்பு உண்டாதல் யாங்ஙனம்?

"என் அருமைத் தோழிகளே, இப்புண்ணிய இரவில் யான் கனவில் கண்ட காட்சிகளை உங்களுக்குக் கழறின் அல்லால் நீங்கள் அதன் சுவையை உணரமாட்டீர்கள். என்னோடு நீங்களும் இன்பந் துய்க்க வேண்டாவோ?

"மைத்துனன் நம்பி மதுசூதன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழீநான்."[1]

"செம்மை யுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழீ!நான்."[2]

"அரிமுகன் அச்சுதன் கைம்மேலென் கைவைத்துப்
பொரிமுகந் தட்டக் கனாக்கண்டேன் தோழீ! நான்."[3]

"அங்கவ னோடும் உடன்சென்றங் கானைமேல்
மஞ்சன மாட்டக் கனாக்கண்டேன் தோழீ!நான்."[4]

எனத் தோழியர் ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு விஷயத்தைப் பகர்ந்து உவகை கொள்ளுகிறார்.

"எம்பெருமானை என்று காண்போம்! என்று அவனோடு சேர்ந்து உறவாடுவோம்!" என்னும் ஆற்றாமையில் அலறிக்கொண்டிருந்த ஆண்டாளுக்கு, பரமனை நேரில் காண்பதும், நெருங்கி உறவாடுவதும், கனவாயிருப்பினும், தாம் விழிக்குமளவும் உண்மை அனுபவமென்றே ஆனந்தத்தில் திளைத்திருப்பதாகக் கிடைத்த பேறு யாவருக்கும் அமைவதொன்றோ! இந்நிகழ்ச்சியை அன்னையார் எத்துணை அழகு தோன்ற வரன்முறையாக எடுத்துரைத்துள்ளார்! இத்திருமொழியின் ஒவ்வொரு பாசுரமும் கோதையாரின் உள்ளுணர்ச்சியோடுங்

1—4. நாய்ச்சியார் திருமொழி, 6 : 6; 6 : 8; 6 : 9; 6 : 10.

கூடிய உவகையைத் தன்னுள்கொண்டு ஆனந்தம் பொங்கி வழியும் பாண்டமாயும், ஆன்ம பரமான்மாக் களின் கூட்டுறவைத் தெரிவிக்கும் பளிங்காயும், கற்போர் மனத்திற்குக் களிப்பையூட்டும் கலனுயும் இருத்தலின், இதைச் சிறிது விளக்கமாக எழுதப் புகுந்தோம்.

கனவில் கண்டவற்றுள் ஒன்றும் நனவில் புலப்படாமையின், இவருக்கு அடக்கொணுத் துயரம் ஏற்படுகிறது. இவர் துயரைச் சிறிது குறைக்க எண்ணிய திருமால், தன் திருவாயில் இருத்திய பாஞ்சசன்னியத்தோடு உருவெளித்தோற்றத்தில் சேவை சாதிக்கிருன். இக்காட்சி இவருக்குப் பொருமையையும், ஆற்ருமையையும் உண்டாக்குகிறது. அச்சங்கிற்குண்டாயிருக்கும் சீரும் சிறப்பும் பெருமையும் இவர் மனத்தைக் கவர்கின்றன. "ஆ, என்னமேன்மை! என்னமேன்மை! உனக்குக் கிடைத்துள்ள பேறு நான்முகனுக்கும் கிடைத்தல் அரிதே! அப்போதலர்ந்த செந்தாமரை மலர்மேல் படிந்து தேனைப் பருகும் அன்னப்பறவை போன்று, சிவந்த திருக்கண்களும், கறுத்த திருமேனியும் வாய்ந்த கண்ணபிரானது அழகிய கரத்திலிருந்து கண்வளரும்[1] பாஞ்சசன்னியமே, நீ பெற்ற செல்வம் மிக உயரியதுகாண்! சங்கமே, நீ உண்பதோ, உலகளந்த எம்பெருமானது திருவாய் அமுதமாகும். நீ உறங்குவதோ, அவன்

1. "செங்கமல நாண்மலர்மேல் தேனுகரும் அன்னம்போல்
செங்கண் கருமேனி வாசுதே வனுடைய
அங்கைத் தலமேறி யன்ன வசஞ்செய்யும்
சங்கரையா! உன்செல்வம் சால அழகியதே!"
—நா. திருமொழி, 7 : 7.

திருக்கரமாகும். நீ அடைந்திருக்கும் இப்பேறுகளை நோக்கிய பெண்களோ, 'யாங்கள் துய்க்க வேண்டிய இன்பத்தை இவனே கொள்ளை கொள்ளுகிறான்,' என்று கூக்குரலிடுகின்றார்கள். இங்ஙனம் அவர்கள் வருந்துமாறு நியாயமற்ற செயல்களைச் செய்கின்றாய்! இஃதுனக்குத் தகுதியாமா?"[1] எனத் தம் சினந்தோன்றப் பகர்கின்றார்.

அது கார் காலமாதலால் மேகங்கள் மின்னி முழங்கிக்கொண்டு வந்து தோன்றின. எம்பெருமான் தம்மை விட்டுப் பிரியுங்கால் கார் காலத்தில் போதருவதாகச் சொல்லிச் சென்றது இவர் நினைவிற்கு வந்தது. ஆதலின், இம்மேகங்களோடு அவனும் வந்திருக்கக்கூடுமென்று, "வானம் முற்றும் நீல விதானம் போர்த்தது போன்று காணும் மேகங்களே, திருவேங்கடத்துத் திருமாலும் போந்தானோ? கண்ணீர் கால வருந்தும் என் பெண்மையை அழித்தல் அவனுக்குப் பெருமையைத் தருவதாய் இருந்ததோ? அவனிடம் யான் படும் துன்பங்களைத் தெரிவித்து எனக்கு அருள் புரியு

1. "உண்பது சொல்லில்
உலகளந்தான் வாயமுதம்;
கண்படை கொள்ளல்
கடல்வண்ணன் கைத்தலத்தே;
பெண்படை யாருன்மேல்
பெரும்பூசல் சாற்றுகின்றார்
பண்பல செய்கின்றாய்
பாஞ்ச சன்னியமே!"
—நாய்ச்சியார் திருமொழி, 7 : 8.

மாறு செய்தல் வேண்டும்'[1] என்கிருர். இவர் இங்ஙனம் மேகத்தைத் திருவேங்கடத்தில் அர்ச்சாவதாரமாக எழுந்தருளியிருக்கும் எம்பெருமானிடம் தூது செல்ல விடும் செம்மை என்னே!

தக்க பருவம் அடைந்த நம் கோதையார் தம் திருமாளிகையின் பின் புறம் அமைந்த தோட்டத்துடன் நின்றிலர்; தம் தோழியருடன் வெளிப்புறம் உள்ள மலர்வனம் செல்கிருர்; அவண் அழகிய மலர்களேயும், கொடிகளேயும், குன்றுகளேயும், குயில் மயில் போன்ற பல அழகிய பறவைகளேயும் காண்கிருர். மலர்கள் இதழ்களே விரிக்கின்றன; மணத்தை வீசுகின்றன; அழகிய நிறத்தோடு மிளிர்கின்றன; தேனைத் துளிக்கின்றன; பறவைகளுள் சில ஆடுதலேயும் பாடுதலேயும் செய்கின்றன. இவை அன்னேயார் மனத்தைக் கவர்கின்றன. இவர் இவ்வியற்கை இன்பத்தில் தோய்ந்து நிற்கிருர். அது போது உலகப்பெண்டிர் என் செய்வர்! அவற்றின் மேலெழுந்த அழகாலும், மணத்தாலும், இனிய குரலாலும் அழகிய சாயலாலுமே கவரப்பட்டுத் தம் வசம் இழந்து இன்பந்

1. "விண்ணீல மேலாப்பு
விரித்தாற்போல் மேகங்காள்!
தெண்ணீர்பாய் வேங்கடத்தென்
திருமாலும் போந்தானே?
கண்ணீர்கள் முலேக்குவட்டில்
துளிசோரச் சோர்வேனேப்
பெண்ணீர்மை ஈடழிக்கு
மிதுதமக்கோர் பெருமையே?"
—நாய்ச்சியார் திருமொழி, 8 : 1

துய்ப்பரல்லரோ? ஆனால், நம் தெய்வப்பாவை யாரோ, அத்துடன் நின்றுவிடவில்லை. இவருடைய கூர்ந்த நோக்கமும், ஆராய்ச்சியும், சமயப்பளிங் கும் இவரை எங்கு அழைத்துச் செல்கின்றன? அவ் வியற்கைப் பொருள்களின் உள்ளுறை பொருளி னிடத்தேயாகும். இவரது கூர்ந்த நோக்கும் ஆராய்ச்சியும் இவரைச் சிறிது தொலைவு அழைத் துச்சென்று நிறுத்துகின்றன. சமயப்பளிங்கு இவருக்கு எவற்றைப் பிரதிபலித்துக் காட்டுகின் றது? இயற்கைப் பொருளில் காணும் அவ்விறை வனது உருவம், நிறம், வார்த்தை ஆகியவற்றையே! சூடிக்கொடுத்தார் இயற்கைப் பொருள்களைக் கேவலம் அஃறிணை என நினைத்திலர்; இயற்கை யின் உயிரையும், அவ்வுயிர்க்குயிராய்த் திகழும் இறைவனையும் இவர் காண்கின்றனர். இயற்கை இறைவனுக்கு உடலென்பதே இவர் கருத்து.

"கருவிளை ஒண்மலர்காள்! காயா மலர்காள்! திருமால்
உருவொளி காட்டுகின்றீர்" [1]

"பைம்பொழில் வாழ்குயில்காள் !
மயில்காள்! ஒண் கருவிளைகாள் !
வம்பக் களங்கனிகாள் !
வண்ணப்பூவை நறுமலர்காள் !
ஐம்பெரும் பாதகர்காள் !
அணிமாலிருஞ் சோலைநின்ற
எம்பெரு மானுடைய
நிறமுங்களுக்கு என்செய்வதே !" [2]

---

1-2. நாய்ச்சியார் திருமொழி, 9 : 3, 4.

'சோலை மலைப்பெருமான் துவராபதி யெம்பெருமான்
ஆலினிலைப்பெருமான் அவன்வார்த்தை உரைக்கின்றதே!"[1]

என்னும் பாசுரங்களை நோக்குக.

அத்துடன் நின்கின்றனரா? இயற்கைப் பொருள்களில் இறைவன் ஒன்றியிருத்தலை நன்குணர்ந்த நம் அன்னையார் அவற்றினிடம் சரண் புகுகின்றார். அன்றியும் அவையே தம் ஆவியைத் தொலைத்தற்குக் காரணம் எனவும் கருதுகின்றார்.

"முல்லைப் பிராட்டி! நீ உன்முறுவல்கள் கொண்டுஎம்மை
அல்லல் விளைவியேல் ஆழிநங்காய்! உன்னடைக்கலம்"[2]

"கோவை மணாட்டி! நீ உன் கொழுங்கனி கொண்டுஎம்மை
ஆவி தொலைவியேல் வாயழகர்தம்மை யஞ்சுதும்"[3]

இங்ஙனம் எம்பெருமானை அடைய முடியாத ஆற்றாமையினால் துன்பத்தில் துவளும் ஆண்டாள் நிலையை நோக்கிய உயிர்த்தோழி, "அந்தோ! அலமாப்பைத் தீர்த்து இவளை ஆற்றுவிப்பது யாங்ஙனம்?" என்று பெரிதும் வருந்துகின்றாள். அவளை நோக்கிய அன்னையார், "என் அருமைத் தோழியே, நீகவலற்க. அவனை அடைதற்கேற்ற வழி ஒன்று எனக்குத் தோன்றியுள்ளது. நாம் விரும்பும் பரமனோ, அறப்பெரியவன்; அனந்தசாயீ; திருமகள் நாயகன். அத்தகையவனை மிக்க தாழ்நிலையிலிருக்கிற நாம் எங்ஙனம் அடையமுடியும்! நம் நிலைக்கும் அவன் நிலைக்கும் எத்துணையோ ஏற்றத்தாழ்வுள்ளன! ஆதலின், நம்மால் அவனை அடைதல் அருமையினுமருமையே! ஆகிலும், அப்பீடுடையன் நம்

1-3. நாய்ச்சியார் திருமொழி, 9 : 8; 10 : 4; 10 : 3.

தந்தை பெரியாழ்வாருக்கு வசப்பட்டவன். அவர் நம் பெருமானை, 'பூச்சூட்ட வாராய்; காப்பிட வாராய்,' என்று அழைப்பர். அவ்வமயம் வாராமலிருக்கவோ, தாழ்த்து வரவோ அவனால் முடியாது; விரைந்து வந்து சேருவன். அக்கால் அவனை நாம் எளிதில் கண்டு கண் குளிரச் சேவித்து இன்புறலாம்,'' என்கிறார். [1]

"யான் விரும்பும் எம்பெருமான் மிக்க தொலைவில் இல்லை. அருகில் உள்ள திருவரங்கத்திலேயே எழுந்தருளியுள்ளான்; அவன் குழல், அதரம், கண், நா முதலியன ஒன்றையொன்று தோல்வியுறச் செய்யும் அழகு வாய்ந்தன. அவற்றைக் காட்டியே என்னைத் தன் வசமாக்கி, கழல் வளை என இடு குறிப்பெயர் பெற்ற அவற்றைக் கழன்றொழியும் வளை என்று காரணப் பெயர் பெறுமாறு செய்து விட்டான். [2]

"அந்தோ! என் கை வளைகள் எங்குச் சென்றன? அவற்றைக் கவர்ந்தவர் யார்? அவை என்னிடம் தெரிவித்தேனும் சென்றனவா? அவை என்னை ஒரு பொருளாகவே மதித்திலவே! செங்கோல்

---

1. ''நல்லவென் தோழி! நாகணைமிசை நம்பரர்
   செல்வர்; பெரியர் சிறுமானிடவர்நாம் செய்வதென்?
   வில்லி புதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை
   வல்ல பரிசு வருவிப்ப ரேலது காண்டுமே.''

2. ''எழிலுடைய அம்மனைமீர்? என்னரங்கத் தின்னமுதர்
   குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
   எழுகமலப் பூவழகர் எம்மானார் என்னுடைய
   கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கினரே?''
   —நாய்ச்சியார் திருமொழி, 10 : 10; 10 : 2

செலுத்தும் செல்வரை — மகானுபாவரை — அத் துணைச் சீரியரை நாடியன்றோ அவை சென்றன ! அவற்றைக்கொண்டு அவர் குறைகள் நிறை வுறுமோ ?

"இங்ஙனமாயின், என்னிடமிருந்து கொள்ளை கொண்ட வளைகளாலேனும் அவர் நிறைவு பெற்றுப் போகட்டும் ! அவரே சுகமாக வாழட்டும் !"[1]

"நாள் செல்லச் செல்ல என் கவலை பெருகு கின்றது ! உணவிலோ, உறக்கத்திலோ என் மனம் சென்றிலது. ஊணும் உறக்கமுமின்றி எத்தனை நாட்களுக்கு என் உடல் வன்மை பெற்றிருக்கும் ! ஓரிடத்திலிருந்து வேறோரிடத்திற்குக் கால் எடுத்து வைக்கவோ, அன்றி இருந்த இடத்திலிருந்து எழவோ வன்மையற்றுள்ளேன். இன்னும் சின்னாட் களில் வார்த்தை சொல்லவும் வன்மையற்றவள் ஆவேன் போலும் ! அவரை அடைதற்குக் கைம் முதல் ஒன்றுமற்ற எனக்கு இவ்வுடல் ஒன்றுதான் கைம்முதலாயுள்ளது. இதையும் விரைவில் கொள்ளை கொள்வார் போலும் !"[2]

---

1. "செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்
   எங்கோல் வளையால் இடர்தீர்வ ராகாதே !"

2. "கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார்
   எப்பொருட்கும்நின்றார்க்கும் எய்தாது நான்மறையின்
   சொற்பொருளாய் நின்றாரென் மெய்ப்பொருளும்
   கொண்டாரே ?

   "நல்லார்கள் வாழும் நளிரரங்க நாகணையான்
   இல்லாதோம் கைப்பொருளும் எய்துவா
   னொத்துளனே !"

   —நாய்ச்சியார் திருமொழி, 11 : 3, 6, 5.

கோதையாரின் கையறு நிலையைக் கண்ட தோழியரும் இவருடன் சேர்ந்து வருந்துபவராய் முடிந்தனர். "அந்தோ! என் செய்வேன்! எனக்கு நலம் புரிபவரும் துன்பத்தில் ஆழ்ந்தனரே! யான் இயற்றிய கன்மம் யாதோ! என் நிழல் என்னோடு நில்லாமல் என்னைச் சூழ்ந்தவரையும் பின் தொடர் கிறதே! எனக்கு முன் அவர்களல்லவா சோர்கின் றார்கள்! என் இன்னலைப் போக்க வல்லாரும், எனக்குத் துணை புரிபவரும் இல்லாமற் போயி னரே!" எனக் கலுழாநின்றனர். பின்னர்த் தோழி யருள் சிலர் தேறி, இவருக்கு முகங்காட்டாநின் றனர். அவர்களை நோக்கித் திருவரங்கன் பல உருவங்களுடன் எழுந்தருளியிருக்கும் எந்தத் திவ் விய க்ஷேத்திரத்திலேனும் தம்மைக் கொண்டுபோய் விடுமாறு பணிவுடன் இறைஞ்சுகிறார்.

"காலிக ளுய்ய மழைதடுத்துக்
கொற்றக் குடையாக வேந்தி நின்ற
கோவர்த் தனத்தென்னை உய்த்திடுமின்." 1
"சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும்
துவரா பதிக்கென்னை உய்த்திடுமின்." 2

என்னும் பாசுரங்கள் இங்கு நினைவுகூர்தற்குரியன.

இவர் வேட்கை மிகுதியினால் இங்ஙனம் உரைப் பினும், அருமைத் தலைவியரை எங்கேனும் ஓரிடத் தில் கொண்டுபோய்த் தன்னந்தனியே விட்டுவரத் தோழியர் மனம் இசையுமோ? அச்செயலை உலகந் தான் ஏற்றுக்கொள்ளுமோ? ஆயினும், இவர்

1-2. நாய்ச்சியார் திருமொழி. 12 : 8, 9

நிலையோ, அவர்கள் நெஞ்சை உருக்குகின்றது. என் செய்வார்கள் பாவம்! முதலில் அதற்கு ஒரு விடையும் பகர அவர்களால் இயலவில்லை. சிறிது நேரம் சிந்தித்தாராய், "எங்கள் குலக்கொழுந்தே, நீ இங்ஙனம் துரிதப்படுதல் கூடாது! பெண்மையைப் பேணிக்கொளல் வேண்டும்! நாட்டார் பழிப்பர். கருணை வள்ளலாகிய அவன் விரைவில் வந்து உன்னை ஆட்கொள்வான். நீ வருந்தற்க!" என ஆறுதல் வார்த்தைகள் பல புகன்றனர். அவ் வார்த்தைகள் இவரைப் பெரிதும் துன்புறுத்தின. "என் இயல்பிற்கு முற்றும் மாறான தன்மை வாய்ந்த உங்களால் இ∴தெங்ஙனம் அறிய இயலும்! மாதவர்பால் மால் கொண்டுள்ள எனக்கு நீங்கள் உரைப்பன யாவும், ஊமையரும் செவிடரும் சேர்ந்து பேசிக்கொள்வன எங்ஙனம் பயனற்றனவோ, அங்ஙனமே வீணாகும். ஐயோ! என் நிலையை நீங்கள் அறிந்தீர்கள் இல்லையே! இன்னும் யாரிடம் சென்று என் குறையைக் கூறுவேன்! என் துன்பம் தொலைவதுதான் யாங்ஙனம்? தலைக்கு மேல் வெள்ளம் புரண்ட பிறகு காத்தல் எப்படி? என் நிறம் வேறுபட்டது! நெஞ்சம் சோர்ந்தது! அறிவும் சுருங்கியது! இந்நிலையில் யான் யாது செய்ய வல்லேன்! நீர் என் துன்பத்திற்குப் பரிகாரம் தேடவில்லையேல், யான் தனியே சென்றேனும் அவரை அடைய வேண்டி வரும்! அவ்வமயம் 'தந்தையும் தாயும் மற்றோரும் இருக்க இவள் தனி வழி போயினாள்!' என்னும் பழிப்பு ஏற்படும்! பின்பு அப்பழிப்பைப் போக்குதற்கு முடியாது!" எனக் கதறுகிறார். ஈண்டு,

"மற்றிருந் தீர்கட்கு அறிய லாகா
மாதவ னென்பதோர் அன்பு தன்னை
உற்றிருந் தேனுக் குரைப்ப தெல்லாம்
ஊமைய ரோடு செவிடர் வார்த்தை,"[1]

"தந்தையும் தாயும்உற் றாரும் நிற்கத்
தனிவழி போயி னாள்என் னுஞ்சொல்
வந்த பின்னைப் பழிகாப் பரிது
மாயவன் வந்துருக் காட்டு கின்றான்."[2]

என இயம்பும் நம் அன்னையாரின் மொழிகளை நோக்குக.

தாமே சிறிதுநேரம் சிந்தித்துத் தம் நெஞ்சைத் தேற்றிக்கொள்ளுகிறார். இந்தக் கையற்ற நிலையில் இவருக்கு ஓர் எண்ணம் உதிக்கிறது. "நான் நாயகரை அடைதற்கு இங்ஙனம் விரைந்து நிற்கலாமா? இது குலப்பெண்களுக்கு அழகாகுமா? யான் உயர் குல திலகரான பெரியாழ்வார் குலத்துதித்த பெண் கொடியன்றோ? பெண்களுக்கு அடக்கமும் பொறுமையும் இன்றியமையாதன அல்லவா? பெற்றோர் என்னை ஒரு நாயகனிடம் ஒப்புவிக்குமளவும் என் காதலை மறைத்துறைதலன்றோ அறிவுடைமை! இன்றேல், என் பெற்றோர்க்கும் என் குலத்திற்கும் இழிவு ஏற்படாதோ? எப்பெண் என்னைப்போன்று துடித்தாள்? யான் விரும்பியது யாரை? உலக ரட்சகரான திருமாலையல்லவா? அவர் வந்து என்னை ஏற்குமட்டும்,

"துரிசற்றுத்
சாதகம்போல் நாதன் தனதுஅருளே பார்த்திருத்தல்
கோதி லடியார் குணம்,"[3]

1—2. நாய்ச்சியார் திருமொழி, 12 : 1, 3.
3. ஞானஸாரம், 2.

என்னுமாறு அவன் அருளை நோக்கியிருத்தல் என் கடமையன்றோ !'' எனச் சிறிது போழ்து தம்மைத் தேற்றியிருந்தார்.

கள்ளைக் குடித்தவர் அக்குடியினால் உண்டாகும் களிப்பை எத்துணைப்போது மறைத்து வைத்தல் கூடும்! அது மறந்தேனும் வெளிப்பட்டுவிடும் அன்றோ? காதல் களிப்பும் அவ்வினத்தைச் சார்ந்ததுதானே? ஆகவே, ஆரணங்கின் அன்பு அணை கடந்தது. இவர் பிறருக்கு அஞ்சிய அச்சம் யாவும் பறந்தோடியது! என் செய்வார்! இவரால் தாங்க முடியவில்லை. பழையபடியே மனம் தடுமாறலானார். "அன்னைமீர், உங்களுக்கும் எனக்கும் நலமீயும் இன்னுமோர் உபாயத்தைச் சொல்லுகிறேன் : யான் இதற்கு முன்பு இயம்பிய வண்ணம் என்னை என் தலைவர் உகந்த இடத்தில் நீர் கொண்டுபோய்ச் சேர்க்கவில்லையேனும், அவர் தொடர்பு வாய்ந்த பீதாம்பரமேனும், திருத்துளவமேனும், திருவடித் துகளேனும் எனக்குக் கொண்டுவந்து கொடுங்கள். அவை என் மனப்புண்ணை ஆற்றும் மருந்துகளாகும். இவை தவிர நீங்கள் இயற்றும் மற்ற உபசாரங்களுள் ஒன்றும் இப்போது எனக்குப் பயனளியாது''[1] என்கிறார்.

---

1. '' பெருமா னரையில் பீதக
வண்ண வாடை கொண்டென்னை
வாட்டம் தணிய வீசிரே.''
"கோலால் நிரைமேய்த்து ஆயனாய்க்
குடந்தைக் கிடந்த குடமாடி
நீலார் தண்ணந் துழாய்கொண்டென்
நெறிமென் குழல்மேல் சூட்டீரே.''
"போட்கன் மிதித்த அடிப்பாட்டில்
பொடித்தான் கொணர்ந்து பூசீர்காள்.''
—நாய்ச்சியார் திருமொழி, 13 : 1, 2, 6.

ஒருவர் எப்போதும் துன்பத்திலேயே துவண்டு கொண்டிருக்க இயற்கை இடந்தாராதன்றே? இம் முறையில் இவருக்கு என்றுமில்லாத ஓர் எண்ணம் உதித்தெழுந்தது. அஃதென்ன? "சொல் தவருத பெருமான், முன் பெரியாழ்வார் சொப்பனத்தில் தோன்றி, 'யான் இவளை அங்கீகரிப்பேன். இவளுக்காக நீர் கவலாதீர்,' என வாக்களித்திருக் கிருரல்லவா? அவ்வார்த்தைகள் இன்னும் ஆழ்வார் செவியிலிருந்து மறைந்துவிடவில்லையே! இறைவன் யாருக்கும் பொய்ப்பினும், பத்திப்பரவசராகிய ஆழ் வாருக்குப் பொய்ப்பாரோ? 'தம்மை விரும்புவாரைத் தாம் விரும்புவார்' என்னும் சொல் பெருமானிடமே பொய்க்குமாயின் பின்பு யார்தாம் அதை நிறை வேற்றுவர்! ஆதலின், இறைவன் நிச்சயமாகத் தம்மைவந்து ஆட்கொள்ளுவான் எனக் கருதுகிருர்.

"செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்
'தம்மை யுகப்பாரைத் தாமுகப்பர்' என்னும்சொல்
தம்மிடையே பொய்யானல் சாதிப்பா ராரினியே!"[1]

எனச் செப்பிச் சிறிது ஆறியிருக்கிருர்.

இங்ஙனம் கோதையார் இடையருது எம்பெரு மானைப்பற்றியே அரற்றிக்கொண்டிருத்தலை எத் தனை நாட்கள் ஆழ்வார் அறியாமலிருக்கக் கூடும்? இவர் திருமாலிடம் ஆர்வங்கொண்டு செய்யும் செயல்களும் இயம்பும் சொற்களும் அவருக்குத் தெரிந்தன. தம் மகளாரின் ஞானமும், இவர் பரம் பொருளை அடைய அவாவும் சீரிய பண்பும் ஆழ்வாருக்கு மகிழ்வை ஈந்தனவாயினும், இவர் அரற்றலும் மனத்தாங்கலும் அவரால் தாங்க முடிய

1. நாய்ச்சியார் திருமொழி, 11 : 10.

வில்லை. "எம்பெருமான் இவளை அங்கீகரிப்பனேல், இவ்வருமை மகள் நம்மை விட்டுப் பிரிவளே !" என நினைக்குங்கால் அவர் நெஞ்சம் பகீரென்றது. "அந்தோ ! என் மகள் ஒன்றும் அறியாத பேதை : சின்னஞ்சிறுமி ; என் மடியில் கிடந்து வளர்ந்த குழந்தை: என் மார்பில் தவழ்ந்து மகிழ்ந்த செல்வி; திருத்தமாக உடுக்கவும் தெரியாள் ; உலகப் போக்கில் பழகி அறியாள். இவளை யான் எத்துணை அன்புடன் வளர்த்தேன் ! இவளுக்குச் சீர்மையாக மணம் புரிந்து என் இல்லிலேயே இருத்தி உவக்கக் கருதினேனே ! என் விருப்பம் முற்றுப் பெறுவதாகத் தோன்றிலதே ! என் கைக்கு அடங்கிய இவள் என் மனத்திற்கும் அடங்காமல் போய்விட்டனளே ! உலகமுண்ட வாயன் எங்ஙனமோ தன் மாயச் செயல்களைக் காட்டி என் மகளை மயக்கிவிட்டனனே! மற்றைப் பெண்டிரும் இவள் மனத்தை மாற்றிவிட்டனரே! சிறிது பொழுதும் அவனை மறந்திலளே? நாராயணன் அடிச்சுவட்டை நாடித் திரிகிருள் ; அவன் நாமங்களையும், கலியாண குணங்களையுமே பேசிப்பேசி வாய்புலருகிருள். என் செய்வேன் !" [1] எனப் பெரியாழ்வார் வருந்துகிருர்.

1. "வாயில் பல்லும் எழுந்தில,
மயிரும் முடி கூடிற்றில"
"பெருப்பெருத்த கண்ணாலங்கள் செய்து
பேணிநம் இல்லத் துள்ளே
இருத்துவான் எண்ணி நாமிருக்க
இவளும்ஒன் றெண்ணு கின்ருள்,"
"ஏழை பேதையோர் பாலகன் வந்து
என்பெண் மகளை எள்கித்
தோழி மார்பலர் கொண்டுபோய்ச்
செய்த சூழ்ச்சியை யார்க்குரைக்கேன் !"
—பெரியாழ்வார் திருமொழி, 3 : 7 : 2; 3 : 7 : 10 ; 3 : 7 : 4.

"ஐயோ! என் மகள் என்ன நைந்துதான் பய னென்னை? அவன் இவள்பால் இரங்கவில்லையேல், இவள் முயற்சியினால் என்ன நலமேற்படப்போகி றது? இவள் இரக்கமன்றோ இன்றியமையாதது! அஃதன்றோ இவள் பேற்றிற்குப் பயனளிப்பது! ஆயினும், அவன் நைதலிலும் ஒரு நன்மை உளது? இவள் நைந்து நிற்கும் நிலை அவன் இரக்கத்திற்குக் காரணமும், அவன் இரக்கம் இவள் பேற்றிற்குக் காரணமுமாகும்.[1] அந்தோ! தாங்கலாற்றாத இத் துன்பத்தால் என் மகள் என்றோ முடிந்திருப்பாள்! 'இன்னம் ஒருகால் அவர் முகத்திலே விழிக்கலா மாகில் அருமருந்தன்ன பிராணனைப் பாழே போக்கு கிறதென்?' என்னும் கருத்தைக் கொண்டன்றோ உயிர் தாங்கியுள்ளாள்! இவள் துக்கம் தொலைவ தென்றோ! என்று இவள் உவகை முகத்தைக் காண் பேனோ! இதற்கு இறையே அருள் புரிய வேண் டும்! அவன் யாவற்றையும் அறிவான்; சிறுமியைப் பெரிதும் அலைக்கழியான்; அடியேனையும், இவளை யும் இன்பத்திலிருத்தல் அவன் கடமையேயாகும்!" என ஒருவாறு மனந்தேறி இருந்தார்.

இவர் இங்ஙனம் இருக்க, பழையபடியே, 'என்று இறைவனைக் காண்போம்! என்று அவனை

1. "இவள் நைவு பேற்றுக்கு உபாயமல்ல;
அவனிரக்கம் பேற்றுக்கு ஸாதநம்.
இவள் நைவு அவன் இரக்கத்திற்குப் பரிகரம்;
அவனிரக்கம் இவள் பேற்றுக்கு ஸாதனம்"
—திருவாய்மொழி ஈடு.

அடைவோம்; என்று உண்மை இன்பந்துய்ப் போம்!" என்னும் எண்ணங்கள் இடைவிடாமல் நம் கோதையார் உள்ளத்தில் ஊசலாடிக்கொண் டிருந்தன. இந்நிலையில் அமைதியற்றிருந்த நம் அன்னையார், 'பட்டி மேய்ந்தோர்' என்னும் பதினன்காம் திருமொழியில் எம்பெருமானை அடைந்து, அமைதி பெற்று இன்பத்தில் திளைத் திருந்தனர்.

கோதையாரால் அருளிச்செய்த மற்றத் திரு மொழிகளிலும் இவ்விறுதித் திருமொழிக்கு ஓர் ஏற்றமுண்டு. மற்றத் திருமொழிகளோ, நம் அன்னையாரின் ஆற்ருமையே உருக்கொண்டா லென இவர் துன்ப நிலையையே காட்டுவனவாகும். இதுவோ, 'தையொரு திங்கள்' தொடங்கி இவர் பட்ட அல்லலெல்லாம் நீங்க, எம்பெருமான் இவர் முன் தோன்றிச் சேவை சாதித்ததையும், அதனல் இவர் கொண்ட உவகையையும், அதை இவர் வாய் விட்டுப் பரக்கப் பேசுவதையும் வெளிப்படுத்துவ தாகும்.

பரமன், ஞானம், சீலம், வீரியம் முதலிய தன் ஆன்ம குணங்களும், அழகு, மென்மை, கந்தம் முத லிய தன் திவ்வியமங்கள விக்கிரக குணங்களும் இவர் முன் ஒளிர வந்து தோன்றினன். இக்காட்சி, மிக்க வறிஞன் பெருநிதியைக் கண்டதைப் போன் றும், பிறவிக் குருடன் கண் பெற்றது போன்றும் இவரை ஆனந்தத்தில் ஆழ்த்திற்று. என்ன செய்வ தென்றும் தோன்ருது தடுமாறுகிருர்; பெருப் பேற் றைப் பெற்றதாய் உவகை கொள்கிருர். தம்

உவகையைப் பாசுரத்திலிட்டுப் பேசத்தொடங்கி ஞர். தம் ஒருவர் கூற்றினலேயே வெளியிட இவர் நெஞ்சம் ஒருப்பட்டிலது. எங்ஙனம் ஒரு பண்டம் புளித்துப் பொங்குங்கால் அதை நிரப்புதற்கு இரு பாத்திரங்கள் வேண்டியுள்ளனவோ, அங்ஙனமே ஆண்டாளின் ஆனந்தம் பொங்கி வழியுங்கால், அதைப்பூரணமாக அனுபவித்தற்கு இருவர் வேண்டற்பாலராயினர். அகநூலில், தன் தலைவனைத் தேடிச் செல்லும் ஒரு காதலி, தன் காதலனை யாரேனுங் கண்டதுண்டா என வழிப்போக்கரை வினுதல் என்னும் ஒருதுறை உண்டு. அம்முறையில் ஆண்டாள், ஈற்றுப் பாசுரம் தவிர மற்ற ஒன்பது பாசுரங்களிலும் முன்னடிகள் 'கண்டீரோ' என முடியும் வினுவாகவும், பின்னடிகள் 'கண்டோம்' என முடியும் விடையாகவும் தாம் ஒருவரே இருவராய் இருந்து அச்செய்தியைப் பகர்ந்து மன அமைதியுறுகிறுர்.

**வினு :**—ஒருவரே ஒரே சமயத்தில் இருவர் நிலையை அடைந்து ஒன்றற்கொன்று மாறுபட்ட இரு வகைக் கூற்றுகளை இயம்புதல் கூடுமா?

**விடை :**—கூடும். பரமனது மிக்க அருளினுல் ஒருவருக்கு ஞானம் நிறைவுறின், கூடாததும் ஒன்றுண்டோ! இந்நிலை, இவர் ஒருவருக்கு மட்டுமேயன்றி, பெரியாழ்வார் திருமங்கையாழ்வார் ஆகியவர்க்கும் நேர்ந்துள்ளது. பெரியாழ்வார் ஆயர்மங்கையர் நிலையை அடைந்து, 'என்னுதன் தேவிக்கு' என்னும் திருமொழியில் உந்தி பறந்த பாசுரத்தால் ஒருத்தி கண்ணனுகவும் இன்னெருத்தி இராமனுக

வும் இருந்து இருவருக்குள் நிகழ்ந்த மாறுபட்ட வரலாறுகளை வினு விடையாய்ப்பேசி இன்பந்துய்த்தார். திருமங்கையாழ்வார் "மானமரு மென்னேக்கி" என்னும் திருமொழியில் ஒரேபோது இரண்டு பிராட்டிமார் தன்மையைக் கொண்டு பேசுகிருர். பரமபதத்தில் நித்தியரும் முத்தரும் ஒரே காலத்தில் பல உடலங்களைப் பெற்றுக் கைங்கரியம் புரிவதாக உபநிஷத்துக்கள் கூறுகின்றன. "இஃது எங்ஙனம் எம்பெருமான் அருளாலே நிகழ்கின்றதோ அங்ஙனமே இவையும் நிகழ்ந்தனவெனக் கொள்ளலாம்," எனப் பட்டர் அருளிச்செய்கிருர்.

தாமொருவரே இருவராய் நின்று பேசினும், பெரும்பான்மையும் வினக்கள் கண்ணன் மாட்டுத் தமக்குள்ள மன எரிவை வெளிப்படுத்துகின்றனவாயும், விடைகள் இயன்றளவும் தம்முடைய மனத்தாங்கலை நீக்கி, கண்ணனுடைய கருணை, அழகு, வீரம், பெருமை, கம்பீரம் முதலியவற்றைத் தெரிவிக்கின்றனவாயும் அமைகின்றன.

அவற்றுள் சிலவற்றை இங்குக் காணலாம்: "பெண்கள் மாட்டுண்டான ஆர்வமே ஒரு வடிவு கொண்டவன்; யாவராலும் விரும்பத்தக்கவன்; முன்னுக்கும் பின்னுக்கும் பொருந்தாத பொய்யுரைப்பவன். இத்தகைய கண்ணனைக் கண்டீரோ?" என வினவும் வினவிற்கு, "ஆதித்தன் வெப்பம் தன் மேல் தாக்கா வண்ணம் புள்ளின் சிறகாகிற மேல் கட்டியின்கீழ் எழுந்தருளாநின்றவனை விருந்தா

வனத்தே கண்டோம்!"[1] என விடை பகருகிருர்· "இரக்கம் என்பதே இன்னதென அறியாதவனுய், குறும்புகளேயே செய்பவனுய், தன் கையில் ஏந்திய வில்லேப் போன்று வளேந்த திருப்புருவங்களால் அழகு பெற்றவனுய் உள்ள கண்ணனேக் கண்டதுண்டா?" என்னும் விஞவிற்கு, "திருமேனி கறுத்தும், முகம் செம்மை பெற்றுமிருத்தலிஞல் உதய பருவதத்தின்மேல் விரிகின்ற சூரியன் போல விளங்கும் அப்பெருமானே விருந்தாவனத்தில் கண்டோம்"[2] என்கின்றனர். இது நிற்க.

முடிவில் பலத்தைச் சொல்லும் பாசுரத்தில், "பருத்த கால்களேயுடைய கஜேந்திராழ்வானுக்கு அருள் புரிந்த பரமனே இவ்வுலகில் விருந்தாவனத்தில் சேவித்தமையைக் குறித்து, விஷ்ணுவைச் சித்தத்தில் இருத்திய பெரியாழ்வாருடைய திருமகளாரான கோதையார் பகர்ந்த இச்சொல்லே, தங்கள் பிறவிப் பிணிக்கு மருந்தாகக்கொண்டு என்றும்

---

1. "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணுளனே
ஏலாப்பொய்களுரைப்பானே இங்கே போதக் கண்டீரே?
மேலால் பரந்த வெயில்காப்பான் வினதை சிறுவன் [சிறகென்னும்
மேலாப் பின்கீழ் வருவானே விருந்தா வனத்தே [கண்டோமே."

2. "தரும மறியாக் குறும்பனேத் தன்கைச் சார்ங்க மதுவே [போல்
புருவ வட்ட மழகிய பொருத்த மிலியைக் கண்டீரே?
உருவு கரிதாய்முகம்செய்தாய்உதயப்பருப்பதத்தின்மேல்
விரியும் கதிரே போல்வானே விருந்தா வனத்தே [கண்டோமே."

—நாய்ச்சியார் திருமொழி, 14 : 3-6.

தம் மனத்தகத்தில் வைத்து வாழ்பவர், பெருமை வாய்ந்த தாள்களை உடைய எம்பெருமான் திருவடிகளின் கீழ் என்றும் பிரிவின்றி வாழ்வார்கள்"[1] எனத் தெரிவிக்கின்றனர். இதிலிருந்து சில குறிப்புகள் புலனுகின்றன : கஜேந்திரன் எங்ஙனம் பன்னுட்கள் முதலையின் வாயிலகப்பட்டுத் துன்புற்று இறுதியில் அவனைத் தரிசிக்கப் பெற்றுப் பேரானந்தத்தைப் பெற்றனனே, அங்ஙனமே ஆண்டாளும் பன்னுட்கள் எம்பெருமான் பிரிவினுல் வருந்தி, பின்னர் அவனைக் கண்களாரச் சேவிக்கப் பெற்று, அவனேடு சேர்ந்து பேரின்பத்தைத் துய்த்தனர் என்பதும், அவ்வின்பம் இவ்வுலகத்திலேயே இவருக்குக் கிடைத்தது என்பதும் இன்னும் சிலவுமாகும்.

இதைக் குறித்துக் கோதையார் சிறிது ஊன்றி நோக்கினர். "நாமோ, அப்பெருமானை அடைதற்குப் பன்னுட்கள் துன்பக்கடலில் துவண்டோம்! பல முயற்சிகளைச் செய்தோம்! அவனிடம் சில போது வெறுப்பும் சிலபோது விருப்பும் காட்டினேம்! இனி அவனை அடைய இயலாது என்னும் கையறு நிலையையும் அடைந்தோம்! இன்னும் நாம் பட்ட

---

1. "பருந்தாட் களிற்றுக் கருள்செய்த
பரமன் றன்னைப் பாரின்மேல்
விருந்தா வனத்தே கண்டமை
விட்டு சித்தன் கோதைசொல்
மருந்தா மென்று தம்மனத்தே
வைத்துக் கொண்டு வாழ்வார்கள்
பெருந்தா ளுடைய பிரானடிக்கீழ்ப்
பிரியா தென்று மிருப்பாரே."

—நாய்ச்சியார் திருமொழி, 14 : 10.

அல்லல்கள் அளவிறந்தனவாகும். மற்றவர் இத் தகைய அல்லல்களைக் தாங்கும் வன்மை பெறு வரோ! அவர்தம் உடலும் நெஞ்சுந்தாம் இவற் றிற்கு இடந்தருமா? இம்முறையில் ஒருவரும் அவனை அடைய இயலாமற்போகுமே! அங்ஙனமாயின், மானிடப் பிறவியினுல் அவர் அடையும் பயன்தான் என்னை?" எனச் சிந்தித்தனர். அவ்வமயம் இவ ருக்கு ஓர் எண்ணம் உதித்தெழுந்தது. "நாம் அவனை விருந்தாவனத்தில் சேவித்து இன்புற்ற தைத் தம் பிறவிப்பிணிக்கு மருந்தாகுமென்று ஆழ்ந்த சிந்தனையுடன் அநுசந்தித்துக்கொண்டு வாழுமவர்கள் ஏன் அவன் திருவடிக்கீழ் என்றும் பிரிவின்றி வாழமாட்டார்கள்? வாழ்வார்கள் என் பது உறுதி. அவன் அருள் கிடைப்பது திண்ணம்," என வரையறுக்கிருர். ஆண்டாளின் பெருந்த கைமை என்னே! எல்லாரும் வாழ வேண்டும் என நினைக்கும் அவர் அருளுள்ளம் என்னே! ஈதன்றே உயிர்களை உய்விக்கத் தோன்றியவருக்குக் கடமை யும் பீடுமாகும்? ஆண்டாள் அருள் வாழ்க!

# ஆண்டாளுக்கும் ஆசார்யர்களுக்கும் உள்ள தொடர்பு

## 1. திருக்கண்ணமங்கையாண்டான்

*"அல்லிநாட் டாமரைமேல் ஆரணங்கின் இன்துணைவி*
*மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள்*
*ஆயர் குலவேந்த னாகத்தாள் தென்புதுவை*
*வேயர் பயந்த விளக்கு."*

1. *பெரிய பிராட்டியாருக்குப் பிரிய தோழியாந்தன்மை*

2. *ஸ்ரீ வில்லிபுத்தூரைத் தம் வயப்படுத்திய மயிலன்ன தன்மை*

3. *மென்மையான இயல்புடைமை*

4. *கண்ணனுக்குப் பொருத்தமுடைமை*

5. *வேயர் குலத்திற்கு விளக்காந்தன்மை ஆகிய ஆண்டாளுடைய ஐந்து இயல்புகள் இப்பாசுரத்திலிருந்து வெளிப்படுகின்றன.*

*இவற்றால் பெறப்படுவது யாது? இறையன்பையே உயிரெனக்கொண்ட பெரியாழ்வாரிடம் தோன்றி, பிறர் துன்பத்திற்காற்றாது ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நாயகியாய் நின்று, பெரிய பிராட்டியாரின் அருள் பெற்று, கண்ணனைப் பொருந்தப் பெற்றவர் என்பதன்றோ? இதிலிருந்து இவருடைய உயர்குடிப் பிறப்பு, சீரிய பண்பு, இங்கித இறைமை, நன்னல நட்பு, செம்மை தோய் சேர்க்கை ஆகியவற்றை அறிகின்றோமல்லவா?*

மணம், மென்மை, அழகு, தூய்மை முதலிய வற்றை இயற்கையாகப் பெற்றுள்ள தாமரையைத் தனக்கு இருக்கையாகக் கொண்ட திருமகள் விரும்பு மவர், 'மண்மகளும் திருவும் நிழல் போல்வனர்' என்றவாறு என்றும் அவளை விட்டுப் பிரியாது சேர்ந் திருப்பவர் என்னில் இவர் பெருமையைப் பேசவும் வேண்டுமோ! இங்ஙனம் பெரிய பிராட்டியோடு கூட்டுறவு கொண்டுள்ள இவருக்கு எச்செல்வத்திற் கேனும் குறைவுண்டோ?

இச்சேர்க்கை, திருமல்லிநாட்டிற்கு அரசிருத்தல், இரக்கக் குணம் வாய்க்கப்பெறுதல், யாவற்றையும் அறியும் ஒளி வாய்ந்த ஞானத்தைப் பெறல், எம் பெருமானுடைய திவ்வியமங்கள விக்கிரகத்தில் பொருந்தல் ஆகிய மற்றவர் ஒருவராலும் அடைய முடியாத செல்வங்கள் பலவற்றையும் இவர் அடையு மாறு செய்கின்றது. இது நிற்க.

ஆசிரியர் இவரைக் காட்டு மயில் அல்லது வயல் மயில் என்னது நாட்டு மயில் என்கிறார். ஏன்? அவை ஆணாயிருந்து, தம் தோகையை விரித்து அங்குள்ள சிலரைத் தம்பாலீர்த்துச் சிறுபோது இன்புறுத்தும். இம்மயிலோ, தான் பெண்ணாயிருந்து, தன் பெண்மைக் குணங்களைப் பரப்பி, அவற்றால் நாடே தன் வசமாகுமாறு செய்ததன்றோ! உண்மைப் பெண்மைக் குணத்தில் ஈடுபடாதவர் யார்? அத னால் கைகூடாத காரியங்களுமுண்டோ?

ஆண்டாள் எம்பெருமானை ஒரிமை பிரியினும், தாங்கலாற்றாது துவண்டு, ஆவியே பிரியக்கூடிய

மென்மை வாய்ந்தவர் என ஆசாரியர் இவர் மென்மைக்கு ஓரளவு கோலுகின்றனர். இங்கு,

"கொம்மை முலைக ளிடர்தீரக்
கோவிந் தற்கோர் குற்றேவல்
இம்மைப் பிறவி செய்யாதே
இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?"[1]

என்னும் இவர் வாக்கை நோக்குக.

இம்மென்மையினால் தம் இளமை வாய்ந்த கொங்கைகளின் இடர் தீர, ஆயர் குலத்தில் தோன்றும் அணிவிளக்கை அணைய விரும்பும் ஒன்றுவேயர் குல விளக்காகத்தானே இருத்தல் வேண்டும்?

"கோலச் சுரிசங்கை மாயன்செவ் வாயின் குணம்வினவு
சீலத் தனள்தென் திருமல்லி நாடி செழுங்குழல்மேல்
மாலைத் தொடைதென் னரங்கருக் கீயும் மதிப்புடைய
சோலைக் கிளியவள் தூயநற் பாதம் துணைநமக்கே."

சங்கம் தன் நிறத்தினால் பெருமாளுடைய திவ்விய மங்கள விக்கிரகத்தையும், பிரணவாகாரத்தால் அவன் திவ்யான்ம சொரூபத்தையும் கண்டவர் மனங்கவருமாறு அழகுபடுத்துகிறது. இதைக் கருதியே ஆசிரியர் இங்கு அதற்கு, கோலம், சுரி என்னும் இரண்டு அடைமொழிகளை அமைத்துள்ளார்.

"மாயன் செவ்வாயின் குணம் வினவு சீலத்தனள்"

கண்ணன், வியக்கத்தக்க காரியங்கள் பல செய்யும் இயல்புடையவனாதலின், ஆசாரியர் அவனை மாயன் என்கிறார். அவனுடைய திருவதரம் நிறத்தில் மட்டுமன்றி, இனிமையும் நடுவுநிலையும் வாய்ந்த சொற்களிலும் பண்பட்டதாகும். அவன் வாயின்

1. நாய்ச்சியார் திருமொழி, 13 : 9

மணம் சுவை முதலியவற்றைத் தெரிந்துகொள்ள ஆண்டாள் விருப்பத்துடன் சங்கினைக் கேட்கின்றாராம்.

சங்கமோ, தன் ஒலியினால் பெருமானின் அன்பரைக் கூட்டவும், பகைவரை அழிக்கவும் எம்பெருமானுக்குப் பயன்படுகின்றது. இவனோ, தன் வாயமுத்தத்தை உண்ணத்தரல், திருக்கரத்தை உறங்கத்தரல் முதலியவற்றால் அதற்குப் பயன்படுகின்றான். இம்முறையில்-இருவரும் ஒருவருக்கொருவர் உதவி புரிந்துகொள்ளும் நிலையில் உள்ளனர்.

எல்லா மணத்தையும், எல்லாச் சுவையையும் பெற்ற பகவானோடு எப்போதும் சேர்ந்து அவனை அனுபவித்துக்கொண்டிருக்க வேண்டுமென்பது நம் அன்னையார் விருப்பம். இப்பண்பைத்தான் ஆசாரியர் சீலம் என்கிறார். இதனினும் உயரிய சீலம் (பண்பு) வேறொன்றுண்டோ?

"தென் திருமல்லி நாடி"

ஆண்டாளை வனப்பு வாய்ந்த திருமல்லி நாட்டிற்குத் தலைமை வாய்ந்தவர் எனக் கூறுகின்றோம். ஒருவருக்கு ஒரு நாட்டின் தலைமை எப்போது சித்திக்கும்? அங்குள்ளாரைக் கட்டுப்படுத்தி ஆளும் போதன்றோ? அங்ஙனமே இவ்வன்னையார் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அருகிலிருக்கும் திருமல்லி நாட்டிலுள்ளவரை இறை பத்தியாகிற கயிற்றால் கட்டுப்படுத்தித் தாம் செல்லும் வழியே அவர்களையும் செல்லச் செய்து ஆளுகின்றமையின், இவருக்கு இப்பெயர் அமைந்தது.

“செழுங்குழல்மேல் மாலைத்தொடை
தென்னரங்கருக்கு ஈயும்”

ஆண்டாளின் கூந்தல் கறுத்தும், அடர்ந்தும் வளர்ந்தும் இருந்தமையின், அதற்குச் ‘செழுமை’ என்னும் அடைமொழி தரப்பட்டது. இங்கு, அடர்தல் என்பது ஞானத்தையும், கறுத்தல் என்பது பத்தியையும், வளர்தல் என்பது வைராக்கியத்தையும் காட்டுவனவாகும். ஆகவே, இவர் கூந்தலே இம்மூன்றையும் தன்னுள் அடக்கிக்கொண்டிருத்தலைக் குறிப்பித்தற்பொருட்டே ‘செழுங்குழல்’ என்கிறார். இது விரிக்கிற் பெருகும்.

இத்துணைச் சீர்மை பொருந்திய கூந்தலில்தான், ஆண்டாள் பெரியாழ்வார் திருக்கரத்தினுல் தொடுக்கப்பட்ட மாலைகளைச் சூட்டி அரங்கநாதருக்கு அளித்தனர்.

மதிப்புடைமை :

மதிப்புடைய என்னும் இச்சொல்லை, மதிப்புடைய மாலைத்தொடை, மதிப்புடைய தென்னரங்கர், மதிப்புடைய சோலைக்கிளி என இம்மூன்றிடங்களிலும் கூட்டலாம்.

மதிப்புடைய மாலைத்தொடை : ஆண்டாள் சூடிக்கொடுத்த அம்மலர்த் தொடையல்களுக்கு இயற்கையாக அமைந்த மென்மை, அழகு, மணம் ஆகியவற்றுடன், ஆண்டாள் தம் ஆர்வமாகிற தேனையும், பத்தியாகிற மணத்தையும் ஊட்டியே எம்பெருமானுக்கு ஈந்தனர். இதனுற்றான் இவை மதிப்புடையவாயின.

மதிப்புடைய தென்னரங்கர்: மற்றைய திவ்விய க்ஷேத்திரங்களில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சாவதாரப் பெருமாள்களைக்காட்டிலும், திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சைக்கு மிக்க மதிப்புண்டு. ஆனால், அது பொது மதிப்பு, ஆதலின், இங்குக் கூற வந்தது அம்மதிப்பையன்று. ஆண்டாள் மற்றப் பெருமாள்களை விட்டு இவரையே மணக்க விரும்பிய மதிப்பும், இவர் திவ்விய மங்கள விக்கிரகத்தில் இரண்டறக்கலந்து மறைந்த மதிப்பும் இத்தென்னரங்கருக்குண்டல்லவா? இதுவே இவருக்குச் சிறப்புடைய மதிப்பாகும்.

மதிப்புடைய சோலைக்கிளி :

கிளி, சோலைக்கிளி, மதிப்புடைய சோலைக்கிளி என இயைக்கலாம். அழகிலும், கொஞ்சிக் கொஞ்சிப் பேசும் இனிமையிலும் இவரைக் கிளி என்றனர். ஆயினும், கனியும், மலரும், மணமும், தடாகமும், தென்றலும் அமைந்த ஒரு மலர் வனத்தில் வளர்ந்த கிளியா ஆண்டாள்? இல்லை இல்லை. தேனும், பாலும், நெய்யும், கன்னலும், அமுதும் ஒத்த எம்பெருமான் திருநாமங்களையே எப்போதும் வாயார வழங்கிக்கொண்டிருக்கும் பெரியாழ்வார் இல்லத்தில் வளர்ந்த கிளி அல்லவா இவர்? இதனால் இவர் சோலைக்கிளியானார். மற்ற ஆழ்வார்களிலும் மதிப்பு மிக்க பெரியாழ்வாரால் மெய்ம்மைப் பெருவார்த்தை கற்பித்து வளர்க்கப்பட்ட கிளி. இவருடைய இடையறாத காதற்பெருக்கத்திற்காக மற்ற ஆழ்வார்கள் கைக்கூப்பித் தொழும் கிளி. இதனால் இவர் மதிப்புடைய சோலைக்கிளியானார். இவையாவும் நம்

அன்னையாருக்குப் பொதுமதிப்புகளாகும். இறையிடம் ஏற்பட்ட பிரேமமிகுதியினால் முறை தவறிப் பல்லாண்டு பாடியவர்; மற்ற ஆழ்வார்கள் பத்தி அணுவளவிலும் தம் பத்தி மலையளவிலும் நிற்குமாறு பத்தியில் விஞ்சியவர்; கண்ணனை நெஞ்சினாலும், கோதையாரைக் கரத்தினாலும் வளர்த்தவர்; பெரிய பெருமானைக் கனவில் காணும் புண்ணியம் வாய்ந்தவர். இத்தகைய பல சிறப்பியல்புகள் வாய்க்கப் பெற்ற பெரியாழ்வார், 'பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை' என்னுமாறு தாம் பெற்று வளர்த்த பிள்ளை எனவும் கருதாமல், இவர் தெய்வத் தன்மையை நோக்கி 'என்னை ஆண்டாள் இவளே' எனத் தழுவிக்கொண்டு, வணங்கும்படியான கிளியாகவல்லவா ஆண்டாள் இருக்கிறார்? பெற்று வளர்த்த தந்தையாரையும் விஞ்சி அவருக்குப் பெருமையூட்டும் சோலைக் கிளியாகவன்றோ இஃதிருக்கிறது? இஃதே ஆண்டாளுக்குச் சிறப்பான மதிப்பாகும்.

அவள் தூய நற்பாதம் :

பாதம், நற்பாதம், தூயநற்பாதம் என இயைக்கலாம். பாதம் – தெய்வத்தன்மை பொருந்திய தாள்கள், நற்பாதம் - உலக மக்களுக்குச் சில உலக நலங்களை விளைவிக்கும் தாள்கள், தூயநற்பாதம் - தம்மை வந்தடைந்தவருக்கு ஆன்ம உய்வை உண்டாக்கக் கூடிய பாதங்கள். இவர் திருவடிகளுக்குத் தூய்மை மட்டுமன்றி, அடைந்தோர் வேறு பயனை விரும்பாதவாறு அவர்களைத் தம்பாலீர்க்கும் இன்பந்தரும் போக்கியப் பொருளாகவுமிருக்கும். இத்திருவடி

களைச் சேதனன், 'அல்லியம்பூ மலர்க்கோதாய் அடி பணிந்தேன்' என்கின்முன். எம்பெருமானே, தன் செம்மை வாய்ந்த திருக்கையால் இத்தாள்களைப் பற்றி அம்மி மீது வைக்கின்முன். இங்ஙனம் சேஷ சேஷிகளாகிய இரு திறத்தினருக்கும் தத்தம் சொரூ பத்திற்கேற்ப இழியுந்துறைகளாகவல்லவா இவை உள்ளன? இத்தகைய நம் அன்னையாரின் திருவடி கள் இம்மை மறுமைகளில் நமக்குத் துணையாகும். நமக்கே என்பதில் உள்ள ஏகாரம் பிரிநிலை பொரு ளைத் தந்து, இவர் திருவடிகளையே துணை என நினைத் திருக்கின்ற நமக்கு நலந்தருவதாகும் எனக் கொள் ளக் கிடக்கின்றது.

2. வேதப்பிரான் பட்டர் :

"கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடந் தோன்றுமூர்—நீதியால்
நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகள் ஓதுமூர்
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்."

"பாதகங்கள் தீர்க்கும் பரம னடிகாட்டும்
வேத மனைத்துக்கும் வித்தாகும்—கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை
வையம் சுமப்பதும் வம்பு."

வில்லிபுத்தூர்ச் சிறப்பை இயம்ப வந்த ஆசிரி யர், சில சிறப்புகளுடன் 'கோவிந்தன் வாழுமூர்' என்னும் சீர்மையையும் கூட்டிப் போற்றுகின்முர். ஆனால், கோவிந்தன் அவ்வூரில் பிறந்ததாகவோ, வாழ்ந்ததாகவோ எங்கும் கூறப்பட்டில. அங்ஙன மிருந்தும் இவர் இவ்வாறு செப்புதற்குக் காரணம்

என்னே? அவ்வூர் ஒளிபொருந்திய மணிகளால் இழைக்கப்பட்ட மாடங்கள் நிறைந்ததாயும், நெறி தவருத செம்மை வாய்ந்த பத்தர்கள் வாழ்கின்றதா யும், நான்கு மறைகளும் எப்போதும் ஓதப்படுவதா யும் இருத்தலின், கண்ணன் அங்கு வாழ விருப்பங் கொண்டுள்ளனனே எனக் கருதுதல் கூடும்? ஆனல், இவை யாவும் சிறந்த காரணங்கள் அல்ல. அவனுக் கென வைத்த மலர் மாலைகளுக்குத் தம் அன்பு மணத்தை ஊட்டுதற்பொருட்டு, அவற்றை முன் னர்த் தாம் சூடிக்கொடுத்த கோதையார் அங்குத் தோன்றினர்; வளர்ந்தார்; தம் இளமை விளையாட்டு களைச் செய்தார்; அக்கோவிந்தனை அடைய வேண்டு மெனத் துடிதுடித்தார்; தம் நிலைக்கும் இயல்பிற்கும் பொருத்தமற்ற பல செயல்களை மேற்கொண்டார். இத்தகைய சீரியர் பிறந்த இடத்தை விட்டுவிட்டு வேறு இடம் செல்ல அவன் நெஞ்சம் இடந்தருமா? ஆதலின், அவ்வூரையே தனக்கு வாழுமிடமாகக் கொண்டு மகிழ்கின்ருன் போலும்! இதுவே சிறந்த காரணமெனக் கொள்க.

இரண்டாம் பாசுரத்தில், கோதை திருவாய் மலர்ந்தருளிய பாசுரங்களைத் தமிழ் எனவே இவ் வாசாரியர் குறிப்பிடுகிருர். ஆண்டாளும் தம் பாசு ரங்களைத் தமிழெனவே கருதுகிருர் என்பதை முன் னரே கூறியுள்ளோம். ஆண்டாள் அருளிய தமி ழிற்கு, பொதுவாகத் தமிழிற்குள்ள அழகு, தூய்மை, இனிமை முதலியனமட்டுமல்லாமல், இன்னும் பல சிறப்புகளுமுண்டு என்கிருர். "நான்மறைகளுக்கும் இது விதையாயுள்ளது. ஆண்டாள், 'மாயனைமன்

னும்' என்னும் திருப்பாவைப் பாசுரத்தில் எம்பெரு மானை வாயினுற்பாடி மனத்தினுல் சிந்திக்க முன்பு இழைத்த தீவினைகளும், இனி நம்மை வந்து சார விருக்கும் தீவினைகளும் தீயினிலிட்ட தூசுபோன்று மாய்ந்துவிடும் எனப் பகருகிருர். இவ்வாசிரியரோ, கோதையாருடைய வாய்மொழி எல்லாத் தீவினைகளை யும் போக்குவதுடன், பரமன் திருவடிகளை அடைதற் கேற்ற வழியையும் காட்டும் என்கிருர். இம்முறை யில் தீவினைகளை மட்டும் போக்கும் எம்பெருமான் திருநாமத்தினும், அவனை அணுகி இன்பமுறவும் செய்யும் இவர் தமிழ் எத்துணைச் சிறப்புடையது! ஆதலினுற்ருன், "கற்பதற்கு எளிமையும் இனிமை யும் வாய்ந்ததும், சுருங்கிய முறையில் முப்பது பாசுரங்களாக இருப்பதுமான இதைக் கற்கா தவர் இல்வுலகத்திற்கே சுமையாயுள்ளனர். உலகம் இவர்களைத் தாங்கிக்கொண்டிருப்பதிலும் பய னின்று" என்கிருர். இதனுல், மக்களாகப் பிறந்த ஒவ்வொருவருடைய நல் வாழ்க்கைக்கும் நம் அன்னை யார் நூல் எத்துணை இன்றியமையாததென்பதை அறிகின்ருேமல்லவா?

### 3. பெரியவாச்சான் பிள்ளை

பெரியவாச்சான் பிள்ளை ஆண்டாள் சீரிய நிலையை யாவரும் அறிதற்பொருட்டு மிக எளிய சான்றைக் கொண்டு நன்கு விளக்குகிருர்.

இவ்வுலகில் பல்லோர் தம் தேகத்தையே ஆன்மா என நினைத்துள்ளனர். 'உடல் பயனற்றது; அழியுந்தன்மை உடையது. உயிரோ, பயனுற்றது,

அழியாதது. உயிருக்காக உடல் உள்ளதேயன்றி, உடலுக்காக உயிரில்லை. ஆதலின், உடலின் பொருட்டு உழைத்தலைக்காட்டிலும், உயிர் நலத்திற்காக முயல்வதே பகுத்தறிவோடுங்கூடிய மக்களாகிய நம் கடமையாகும் என்பதை ஞானிகளே அறிவர். மற்றவர் நிலையற்றதும், உண்மையற்றதுமான இவ்வுடலிற்கே கரைந்துருகுகின்றனர். இத்தகையோரைக் கண்ட குலசேகரர், 'மெய்யில் (உண்மையற்ற) வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளும் இவ்வையந் தன்னொடும் கூடுவதில்லை யான்' என்கிறார். இங்ஙனம் தேகத்தையே ஆன்மா என்று நினைத்திருப்பவருக்கும், ஆன்ம சொரூபத்தை நன்கு உணர்ந்திருக்கும் ரிஷிகளுக்கும் அணுவிற்கும் மலைக்கும் உள்ள வேறுபாடு உண்டு என்றும், அங்ஙனம் ஆன்மாவின் தன்மையை உணர்ந்து, அவ்வான்ம இன்பத்தைத் துய்ப்பதிலேயே ஆழ்ந்திருக்கும் ரிஷிகளுக்கும், அவ்வான்மாவிற்குள் ஆன்மாவாக இருந்து நம்மை நடத்திப்போகும் பரமான்மாவையே நாம் அணுகி, அவனுக்குத் தொண்டு செய்து வாழ வேண்டுமெனக் கருதியிருக்கும் ஆழ்வார்களுக்கும், அணுவிற்கும் மலைக்கும் உள்ள வேறுபாடு உள்ளது என்றும், தம் சேஷத்துவசொரூபம் கெடாதவாறு அளவுபட்ட பத்தியில் நின்று எம்பெருமானுக்குப் பணி செய்யும் ஆழ்வார்களுக்கும், அப்பரமனிடம் தமக்குள்ள அளவு கடந்த பத்தியினால் தம் சொரூபத்தையும் மறந்து, "பரமன் திவ்விய மங்களவிக்கிரகத்திற்கு யாது தீங்கு நேருமோ!" என அஞ்சிப் பல்லாண்டு பாடிய பெரியாழ்வாருக்கும் உள்ள

ஏற்றத்தாழ்வு அணுவிற்கும் மலேக்கும் ஒக்கும் என்றும், அப்பெரியாழ்வாருக்கும், "என்று அவனே அடைவோம்! என்று அவன் கண்ணேக்கத்தைப் பெறுவோம்! என்று அவன் அருள் நம்மீது பாயும்! என்று அவன் திருவடிகளே வருடும் புண்ணியத்தைப் பெறுவோம்!" என ஆற்ருமையினுல் அலறிக்கொண்டிருந்த ஆண்டாளுக்கும், மேற்கூறிய வேறுபாடே உள்ளது என்றும் பெரியவாச்சான்பிள்ளே பகருகிருர். இதை ஒவ்வோரிடத்திலும் மலேயளவாக வளர்ந்து நின்ற அன்பு, இன்னெருவரிடை வருங்கால் அணுவளவாகிறதென நாம் அறிதல் வேண்டும். இதற்குக் காரணம் பல உண்டு; உலகமாயையில் அழுந்தி உறங்கிக் கொண்டிருந்த ஆழ்வார்கள், எம்பெருமான் சென்று அவர்களே எழுப்பித் தன்னேக் காட்டப் பின்னர் ஞானம் பெற்ருர்கள். ஆண்டாளோ, தாமே சென்று எம்பெருமானே எழுப்பித் தன் குறையையும் உலகத்தார் குறையையும் அறிவித்து, அவனே ஊக்கி, கடமையைச் செய்யுமாறு தூண்டிவிட்டனர். அவர்கள் தமக்குத் தக்க வயது வந்தபின்னரே பரமன் இயல்புகளே அறிந்து அவன்மாட்டு அன்பு பூண்டொழுகிஞர்கள். ஆண்டாளோ, இளமையிலிருந்தே பகவானுடைய குணங்களில் மூழ்கி மூழ்கி அவன் மாட்டுக் காதல் பூண்டொழுகினர். அஃதன்றியும், புருஷனேக் கண்டு புருஷன் காதல் கொள்ளுதலேக்காட்டிலும், ஆண் மகனேக் கண்டு பெண்மகள் காதல் கொள்வது சிறந்ததும் தகுதியுடையதுமன்ருே! இத்தன்மைகளினுலெல்லாம் மற்ற ஆழ்வார்களிலும்

ஆண்டாள் ஞானத்தில் சிரியர் எனக் கூறத்தடை யாது?" என்கிறார் பெரியவாச்சான் பிள்ளை.

4. மணவாள மாமுனிகள்

"இன்றோ திருவாடிப் பூரம்! எமக்காக
அன்றோஇங் காண்டாள் அவதரித்தாள்—குன்றாத
வாழ்வான வைகுந்த வான்போகந் தன்னையிகழ்ந்து
ஆழ்வார் திருமகளா ராய்?"

"பெரியாழ்வார் பெண்பிள்ளையாய் ஆண்டாள் பிறந்த
திருவாடிப் பூரத்தின் சீர்மை—ஒருநாளைக்
குண்டோ மனமே! உணர்ந்துபார்: ஆண்டாளுக்கு
உண்டாகில் ஒப்பிதற்கு முண்டு."

"அஞ்சு குடிக்கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சிநிற்கும் தன்மையளாய்ப் - பிஞ்சாய்ப்
பழுத்தாளை யாண்டாளைப் பத்தியுடன் நாளும்
வழுத்தாய் மனமே! மகிழ்ந்து." [1]

ஆழ்வார் ஆசாரியர்கள் பெருமையை எடுத்துரைக்கப் புகுந்த முனிகள், ஆண்டாளின் சிறப்பை முற்கூறிய மூன்று பாசுரங்களால் வெளிப்படுத்துகிறார். அன்னையார் எங்கு வாழ்பவர்? என்றும் குறைவற்ற வாழ்வோடுங் கூடிய வைகுந்தத்தில் என்பது யாவரும் அறிந்ததே! அங்குள்ள இன்ப போகத்தைப் பெற முனிவரும், யோகியரும் முத்தரும், மற்றோரும் விரும்பி நிற்பர். அதைப் பெற்ற பின்னரும், 'ஒருகால் இது நம்மை விட்டு நீங்கி விடுமோ!' என அச்சம் கொள்வரேயல்லாமல், அதை விட எண்ணுபவர் ஒருவருமிரார். அங்ஙன

1. உபதேசரத்தினமாலை, 22, 23, 24.

மிருக்க, நம் கோதையாரோ, அத்தகைய பேரின்ப வாழ்க்கையை விட்டு இவ்வுலகிலுள்ளாரைத் திருத்து தற்பொருட்டுப் பெரியாழ்வருக்குத் திருமகளாராய்த் தோன்றினர். இஃது இவர் கருணையைத் தெரிவிக்கின்றதன்றோ! இதனற்றான், ஆசாரியர் "எமக்காக வன்றோ இங்கு ஆண்டாள் அவதரித்தாள்?" என்கிறார். இங்ஙனம் இவர் தம் நலத்தை இழந்து பிறர் நலத்திற்காகத் தோன்றிய நாள் மிகச் சீரிய நாளன்றோ! ஆதலினற்றான், 'இன்றோ திருவாடிப் பூரம்!' என வியப்பும் அன்பும் தோன்றப் பகர்கிறார்.

நட்சத்திரங்கள் இருபத்தேழு என்பது யாவரும் அறிந்ததே! இவற்றுள் பூரநட்சத்திரமே சிறப்புடையது என்பது ஆசாரியர் கருத்து. ஏன்? அன்று கோதையார் தோன்றியுள்ளார். 'மற்ற ஆழ்வார்களிலும் பெருந்தகைமை வாய்ந்தவர் என்பதைக் குறிக்கும் பெரியாழ்வார் என்னும் திருநாமத்தைப் பெற்ற பெரியாருக்கு மகளாராய்த் தோன்றிய ஆண்டாளுக்கு ஒப்பானவர் இருப்பினல்லவா, இவர் தோன்றிய நாளுக்கும் ஒப்புக் கூற முடியும்!' எனத் தம் மனத்தைப் பார்த்துச் செப்புகின்றார். நன்மைக்கோ, தீமைக்கோ நெஞ்சன்றோ பிறப்பிடம்? உலகச் சூழலில் சுழன்றுகொண்டிருக்கும் நம் நெஞ்சம் உயரிய பொருள்களில் செல்லுதல் அரிதாகும்! ஆதலினற்றான் பெரியார், 'நெஞ்சே, இவ்விஷயத்தை நீ நன்கு ஊன்றிப் பார்த்து, இச்சீரிய அன்னையாரிடம் அன்பைச் செலுத்து,' என்கின்றார்.

எங்ஙனம் பத்துக் குடும்பங்களுக்கு ஒரே மகவு தோன்றின் அப்பத்துக் குடும்பத்தினர் பொருட் செல்வமும் அம்மகவையே வந்தடையுமோ, அங்ங னமே பத்து ஆழ்வார்களுக்கும் ஒரே மகளாராய்த் தோன்றிய இவருக்கும், அவர்கள் ஞானபத்தி வைராக்கியங்கள் யாவும் வந்துசேர்ந்தன. இம்முறை யில் இவர் அவர்களைக்காட்டிலும் விஞ்சியவரல்லரோ? அவர்கள் பத்திக்கடலில் மூழ்கினும், பத்தி வேறு தாங்கள் வேருய் நின்ருர்கள். நம் ஆண்டாளோ, பத்தியையும் தம்மையும் பிரித்தற்கு இயலாநிலையில் பத்தி மயமாகவே நிலைபெற்ருர். அன்றியும், இவ ராலேயே ஆழ்வார்கள் குடி தூய்மை உற்றது; யாவ ரும் கொண்டாடும் நிலையில் சிறப்புற்றது; விளக்க முற்றது. இங்ஙனம் இவர் ஆழ்வார்களின் குடியை விளக்க வந்து தோன்றியமையாற்ருன், 'வேயர் பயந்த விளக்கு' என்னும் சிறப்புப் பெயர் ஒன்று இவருக்கு அமைந்தது போலும்! இவர் ஆழ்வார் களின் மத்தியில் நடுநாயகமாய்த் தோன்றி, அவர் களையும், அவர்கள் பிரபந்தங்களையும் ஒளிரச் செய் தார். தாவரவர்க்கத்திற்குக் கொழுந்து எங்ஙனம் இன்றியமையாததோ, அங்ஙனமே ஆழ்வார் குலத் திற்கு நம் கோதையாராகிய தளிர் இன்றியமையாத தாகும். இது நிற்க.

நம் அன்னையார் இளமையிலேயே இறைவன் காதலில் பண்பட்டுக் கனிந்து நின்றனர். இத்த கைய சீரியரை நாடோறும் மகிழ்வுடன் போற்றின் நாமும் இவரைப் போன்றே எம்பெருமான் அருளை அடைந்து என்றும் அழியாத இன்பப் பேற்றைப்

பெறலாம் எனத் தம் மனத்திற்கு அறிவுரை புகட்டுகிருர் ஆசாரியர்.

5. உய்யக் கொண்டார்

"அன்ன வயல்புதுவை ஆண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.

"சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! தொல்பாவை
பாடி யருளவல்ல பல்வளையாய்—நாடிநீ
'வேங்கடவற்கு என்னை விதி' என்ற இம்மாற்றம்
நாம்கடவா வண்ணமே நல்கு."

முதற்பாவில் ஆண்டாள் அரங்கநாதருக்கு, இன்னிசையோடுங்கூடப் பாடிக்கொடுத்த பாமாலை, அன்புடன் சூடிக்கொடுத்த பூமாலை ஆகிய இருமாலைகளையும் குறித்துப் பேசுகின்றனர். பல்பதியம் என்பது பல பதிகங்கள்[1] அமைந்த நாய்ச்சியார் திருமொழியைக் குறிக்கும்.

இவ்விரு மாலைகளுக்கும் மனத்தொடர்பு இன்றியமையாததேயாயினும், மலர் தொடுக்குங்கால், பெரும்பான்மையும் கண்ணும் கையும் கலந்து தொழில் புரிதல் வேண்டும். மனத் தொடர்போ, சிறிதே போதியதாகும். ஏதாவதொன்றைச் சிந்தித்துக் கொண்டே ஒரு செயலைச் செய்யலாமல்லவா? பாமாலை அங்ஙனமன்று. வாய் பாடுதற்குக் கருவியாயிருப்பினும், மனத்தின் தொடர்பு இன்றியமையாது வேண்டற்பாலதாகும். பரமனுடைய அரிய

1 பதிகம்-பத்துப் பாடல் கொண்ட தொகுதி.

செயல்கள், அவன் திவ்வியமங்கள விக்கிரகத்தின் சிறப்பியல்புகள், ஆன்மசொரூபத்தின்பண்பாடுகள் இவை ஒவ்வொன்றையும் நினைத்து நினைத்தன்றோ பாடுதல் வேண்டும்? இவை நெஞ்சத்தில் தேங்கி நின்றாலல்லவா பின்னர் வெளிக்கிளம்பும்? இவற்றிற்குத்தானே சீரும் சிறப்பும் உண்டு? இவை தம் மனத்தைமட்டும் கவர்தல் போதியதாமா? கற்பவர் கேட்பவர் முதலியோரின் மனத்தையும் கவர்ந்து தம்பாலீர்க்க வேண்டாவா? இன்றேல், இவை உயிரற்ற பதுமைகளுக்கு ஒப்பாகவல்லவா காட்சியளிக்கும்? இதனாற்றான் பாமாலைக்கு ஆசாரியர் **இன்னிசை, நல்** என்னும் அடைமொழிகளைச் சேர்ந்துள்ளனர் போலும்!

இரண்டாம் செய்யுளில் 'சூடிக்கொடுத்த சுடர்க்கொடி' என்கிறார். இவர் எம்பெருமானுக்குப் பூமாலைகளைச் சூடிக் கொடுத்தமையின் பெரியாழ்வாராலும், அர்ச்சகர்களாலும், நாட்டாராலும், பின்னுள்ளாராலும் போற்றப்படும் பெருமையைப் பெற்றார். அப்பெருமான் அவற்றை மிகுந்த உவகையுடன் ஏற்றுக்கொண்டமையின் நித்தியர், முத்தர், தேவர், பிரபந்நர் ஆகிய பல்லோரால் வணங்கப்படும் பேற்றைப் பெற்றார். அதனாற்றான் 'ஒளி பொருந்திய கொடி போன்றவளே' என்றார் ஆசாரியர். கொடியில் மலரும் மலர், அதைத் தாங்கும் கொம்பையும் அலங்கரித்து நிற்றல் போன்று, கோதையாராகிய கொடியில் சூடிய மலர், அதற்குக் களைகணாயுள்ள பரமனாகிய கொம்பையும் அழகு படுத்திற்று. அச்செயல் யாருக்குத்தான் ஆனந்தத்தைத் தாராது! என்றோ ஸ்ரீ வில்லிபுத்

தூரில் நிகழ்ந்த அஃது அறியாமை நிறைந்த அடியாளைப் போன்ற எத்தனைபேர் மனத்தை ஒளிரச் செய்கின்றது!

இன்னும் இச்செய்யுளில் ஆண்டாள் வாழ்க்கை முழுமையையும் சுருங்கிய முறையில் தெரிவிக்கிறார்; இரு மாலைகளையும் எம்பெருமானுக்கு அன்புடன் ஈந்து, 'திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கும் பரமனிடம் என்னைச் சேர்த்துவிடு,' என இறைஞ்சுகிறார். இதுதானே இவர் வரலாற்றின் சுருங்கிய பகுதி? இங்ஙனம் இவர் பெட்பை இயம்புவதுடன் ஆசாரியர் நின்றாரில்லை; "இப்பண்பை நாங்களும் பின்பற்ற வேண்டும். இந்நிலையிலிருந்து நாங்கள் விலகிச் செல்லாவண்ணம் எங்களுக்கு அருள் புரிதல் வேண்டும்," எனக் கோதையாரிடம் விண்ணப்பிக்கின்றார்.

## 6. பிள்ளை லோகாசாரியர்

எங்ஙனம் இந்திரன் முதலிய தேவர்களுக்கென ஆக்கி வைத்த அவிசை (தேவருணவை), அற்பத் தன்மையுடையதும், பார்ப்பதற்கும் தகுதியற்றதும், தாழ்ந்ததுமான நாய்க்கு இடுவது கொடியதோ, அங்ஙனமே எம்பெருமானுக்கே உரித்தான ஆன்மப் பொருளை எல்லா வகைகளிலும் தாழ்ந்த இவ்வுலக மக்களுக்கு உரித்தாக்குதல் கொடியதாகும் என்பதை இவ்வாசிரியர்,

> "தேவர்களுக்கு சேஷமான புரோடாசத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈச்வர சேஷமான ஆத்ம வஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை."

என்னும் சூத்திரத்தால் தெரிவிக்கிறார்.

இக்கருத்தை மனத்திலிருத்தி ஆண்டாளிடம் செல்லலாம். இவர் பகவானையும் தம்மையும் ஊன்றி நோக்குகின்றார். அவ்வமயம் அவனுக்கும் தமக்கு முள்ள தொடர்பு இவருக்குத் தெள்ளிதின் புலப்படுகின்றது. இவ்வுலகில் தோன்றி இவ்வுலகமக்களுள் தாமும் ஒருவராய் வாழ்ந்து வரினும், இவ்வுலகப் போக்கில் இவர் மனம் சென்றிலது. ஈசுவரன் மாட்டுத் தமக்குள்ள தொடர்பிற்கேற்பச் சில காரியங்களை நிகழ்த்துகின்றார். அவற்றிற்குத் தக உயரிய எண்ணங்கள் இவருக்குத் தோன்றுகின்றன. அவ்வெண்ணங்களை வாக்கினால் பல இடங்களிலும் இவர் வெளிப்படுத்துகின்றார்; அந்த இடங்களுள் இஃதும் ஒன்று. ஈசுவரனை எம்முறையிலும் விரைவில் அடைய வேண்டும் என்னும் ஆர்வத்தினால் மன்மதனை வணங்குகின்றார்; அவனிடம் தம் உறுதியான கருத்தை, கல்லில் பொறித்து வைப்பவரைப் போன்று வரையறுத்துக் காட்டுகின்றார். "காமதேவா, என் அங்கங்கள் பகவானுக்கெனவே மிக்க பொலிவு கொண்டு கிளர்ந்து வளர்ந்துள்ளன. அவற்றை அவனுக்கே உரிமையாக்க வேண்டுவது என் கடமை. அங்ஙனமன்றி, வேறு இடத்தில் அவற்றை உரிமையாக்குவது என்னும் வார்த்தை நடையாட நீ இடந்தரினும், இவ்வுலகில் உயிருடன் வாழ என்னால் இயலாது. என் உயிர் உடனே நீங்கும். அப்போது இப்பெண் கொலை உன்னைச்சாரும்," என இப்பாவினால் உறுதிப் படுத்திக் கூறுகின்றார்.

" வானிடை வாழுமவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வருத்த அவி

*காணிடைத் திரிவதோர் நரிபுகுந்து*
*கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப*
*ஊனிடை யாழிசங் குத்தமர்க்கென்*
*றுன்னித் தெழுந்தவென் தடமுலைகள்*
*மானிட வர்க்கென்று பேச்சுப்படில்*
*வாழகில் லேன்கண்டாய் மன்மதனே!"*
*—நாய்ச்சியார் திருமொழி, 1 : 5.*

## 7. எம்பெருமானார்

*திருமாலிருஞ்சோலையில் மலர்ந்த மலர்கள், கனிந்த கனிகள், வண்டுகள், குயில்கள், மயில்கள் முதலியன எம்பெருமான் நிறத்தையும் உருவத்தையும் காட்டிக் கோதையாரை வாட்டின. அதனால், இவருக்கு ஆற்றுமை பொங்கி, தமக்கோர் அடைக்கலவிடத்தைக் காட்டுமாறு அவற்றை இறைஞ்சுகிறார். பரமனை அடைய முடியாமையின், இவர் உடலும் உயிரும் தளர்ந்தன. 'இனி அவனைப் பற்றிக் கைங்கரியம் புரிவது தவிர, நமக்கு உய்வழிவேறொன்றுமிலது' எனத் தீர்மானித்தாராய், "பெரியபிராட்டியோடுங்கூடிய ஸ்ரீமந்நாராயணனுக்குத் தொண்டு புரிவேனாக" என்பதைக் குறிக்கும் துவயத்தின் பின் வாக்கியத்தைச் சிந்தித்தார்; "நாம் இங்ஙனம் அரற்றுவதனாற்பயனின்று. அவனுக்கு அடிமை செய்து காலங்கடத்துவதே நம் கடமை" எனக் கருதினார். ஆனால், தம் சரீரத்தினால் தொண்டு புரிதற்கு இவர் சோர்வு இடந்தந்திலது. ஆதலின், தம் வாக்கினாலாய தொண்டைச் செய்ய முன் வந்தனர்.*

*"மணம் நிறைந்த பொழில்கள் நிறைந்த திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளியிருக்கும் எம்*

பெருமானுக்கு, அடியேன் நூறு தடாக்களில் வெண்ணெயையும், நூறு தடாக்களில் அக்காரவடிசலையும் நிறைத்துச் சமர்ப்பிப்பதாய் வாயினுல் தெரிவித்தேன். மேன்மேலும் வளராநிற்கும் செல்வப் பெருக்குடையவன் இவற்றை இப்பொழுது அமுது செய்தருளுவனே ?''[1] என்கிருர்.

திருமாலிருஞ்சோலை நம்பியிடம் இவருக்கிருந்த ஆர்வத்தினுல், இங்ஙனம் பல பாண்டங்களில் நிறைந்த பொருளை அவனுக்கு ஈவதாய்ச் சொல்லளவில் சொற்றனரேயல்லாமல், செயலளவில் அதை நிகழ்த்திலர். இது நிற்க. நம் அன்னையாருக்குப் பின்னர்த் தோன்றியவரும், இவரிடம் மிக்க அன்பும் பெருமதிப்பும் பூண்டவருமான எம்பெருமானுர், 'நாய்ச்சியார் திருமொழிக்' காலக்ஷேபங் கேட்டுக் கொண்டிருக்குங்கால், இப்பாசுரத்தைச் செவியேற்றனர். கோதையார் இக்கைங்கரியத்தைச் செய்து முடித்தாரில்லை என்பதை அவர் அறிந்து, தாம் திருமாலிருஞ்சோலை போந்து, நூறு தடா வெண்ணெயையும், நூறு தடா அக்காரவடிசலையும் அவ்வழகருக்கு அமுது செய்வித்தருளி அகமகிழ்ந்தனர்.

---

1. ''நாறு நறும்பொழில் மாலிருஞ்
சோலை நம்பிக்குநான்
நூறுதடாவில் வெண்ணெய்
வாய்நேர்ந்து பராவிவைத்தேன்
நூறுதடா நிறைந்த அக்கார
அடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்று
வந்திவை கொள்ளுங்கொலோ ?''

—நாய்ச்சியார் திருமொழி, 9 : 6.

பின்னர் அவர் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி ஆண்டாளை வணங்கி நின்றபோது, தாம் சொல்லளவில் நிறுத்திய சீரிய தொண்டை, அவர் செயலில் நிகழ்த்தித் திருமாலுக்கு மனநிறைவை உண்டாக்கியதை நினைக்க, இவர் உள்ளம் பூரித்தது. தம் உடன் தோன்றிய தமயனல்லாமல், மற்றெவரும் இத்தகைய அன்புப்பணி புரியாராதலின், அர்ச்சையிலிருந்த ஆண்டாள், 'நம் கோயில் அண்ணரே,' என அவரை அன்புடன் தழுவிக்கொண்டதாய் ஒரு வரலாறு உள்ளது. இதனுற்ருன் ஆசாரியர், பல்லாண்டுகளுக்கு முன்னர்த்தோன்றிய ஆண்டாளைப் "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனாள் வாழியே" என வாழ்த்திப் போந்தனர்.

இவர் நாடோறும் உஞ்சவிருத்திக்கு (பிச்சை கொள்ளுதற்கு)ச் செல்லுங்கால், திருப்பாவையையே சேவித்துக்கொண்டு போவாராம். வழக்கம்போல ஒரு நாள் தம் ஆசாரியராகிய பெரியநம்பிகள் அகத்திற்குச் சென்றபோது, அவர் திருக்குமாரியார் போந்து கதவு திறந்ததும், இவர் "செந்தாமரைக் கையால் சீரார் வளையொலிப்ப வந்து திறவாய்" என்னும் சொற்றொடர் முடிவடைந்ததும் ஒரே காலமாயிருந்ததாம். அவ்வமயம் எம்பெருமானுர் அவரை நப்பின்னைப் பிராட்டி எனவே கருதி, மெய்ம்மறந்து, அவர் திருவடியில் விழுந்து வணங்கினராம். இதைக் கண்டு திடுக்கிட்ட அவ்வம்மையார், ஓடோடியுஞ் சென்று தம் தந்தையாரிடம் இச்செய்தியைத் தெரிவிக்க, அவர், "நீ தாளைத் திறந்த காலம், 'உந்து மத களிற்றன்' என்னும் பாசுரத்தின் முடிவாயிருக்கும்.

அதன் விளைவே அச்செயல். அவ்வணக்கம் நப்பின்னைப் பிராட்டியைச் சார்ந்ததேயன்றி உன்னைச் சார்ந்ததன்று,'' எனத் தெரிவித்தனராம். 'நாய்ச்சியார் திருமொழி, திருப்பாவை ஆகிய இவ்விரண்டிலும் நிகழ்ந்த இந்நிகழ்ச்சிகளால், எம்பெருமானாருக்கு ஆண்டாளிடமும், இவர் அருளிய அருளிச் செயல்களிடமும் எத்துணை ஈடுபாடுள்ளது என்பதை அறிகின்றோமல்லவா? இம்முறையில் உலகாசாரியராகிய 'எம்பெருமானார், நம் அன்னையாரிடம் கொண்ட அன்பும் ஆர்வமும் எத்துணைச் சீர்மை வாய்ந்தன!

உயரிய தத்துவங்களையும், இரகசியப் பொருள்களையும் உலகிற்குதவி, பிராட்டியும் பெருமானும் சேர்ந்திருக்கும் சேர்த்தியில் பிரபத்தி செய்து எல்லா உயிர்களையும் வாழ்வித்தவரும், மனத் தூய்மையுடைய முனிவர்களுக்கெல்லாம் தலைமையுற்று வாழ்ந்தவருமான இவ்வெம்பெருமானார், பெருமாள் திருமுடியில் சாத்துகிற மாலையைத் தம் திருக்குழலில் முதலில் சூடி, அன்பு மணத்தையூட்டித்தரும் மேம்பாட்டையுடைய ஆண்டாளுடைய நிலைபெற்ற கருணையால் வாழ்கின்ற பரம தயாளு[1] எனத் திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்தது நோக்கத்தக்கது! இதனால், ஆண்டாளுக்கும் எம்பெருமானாருக்கும் **உள்ள** தொடர்பு புலனாகின்றதன்றோ!

---

1. "அரங்கர்மௌலி, சூழ்கின்ற மாலையைச் சூடிக்
கொடுத்தவள் தொல்லருளால், வாழ்கின்ற வள்ளல்
இராமானுசனென்னும் மாமுனியே''
—இராமாநுச நூற்றந்தாதி, 16

"திருவாடிப் பூரத்தில் செகத்துதித்தாள் வாழியே!
திருப்பாவை முப்பதும் செப்பினாள் வாழியே!
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே!
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே!
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே!
உயரரங்கர்க் கேகண்ணி உகந்தளித்தாள் வாழியே!
மருவாருந் திருமல்லி வளநாடி வாழியே!
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே!"



The Liberty Press, Madras.